கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.



# புவனேந்திரகாவியம்.

இஃது

இராமநாதபுரம் ஸமஸ்த்தானவித்துவானும்,

முதுகுளத்தூர் கர்னம் தெய்வப்புலமை மகா-௱-௱-ஸ்ரீ

நல்லவீரப்பபிள்ளையவர்கள்

பௌத்திரநும், மகா-௱-௱-ஸ்ரீ

இராமசாமிபிள்ளையவர்கள்

புத்திரருமான மதுரகவி மகா-௱-௱-ஸ்ரீ

**சுப்பையாபிள்ளையவர்கள்**

இயற்றி,

இராமநாதபுரம் ஸமஸ்த்தான மஹாவித்வான் துவாத்திரிம்
சதவதானி ஸ்ரீமச்-

சரவணப்பெருமாள்க்கவிராயர் அவர்களாற்

பரிசோதித்து,

ஹிரண்ய கெர்ப்பயாஜி இரவிகுல மகா-௱-௱-ஸ்ரீ ஸ்ரீமான்

M. B. முத்துராமலிங்க சேதுபதி

மஹா ராஜா அவர்கள் பொருளுதவியின் பேரில்

மதுரைத் தமிழ்ச்சங்க அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

கீலக-ஹு ஆவணி-மீ

இதன் விலை] 1908. [ரூபா 2.

உ

திருச்சிற்றம்பலம்.

# சாற்றுக்கவிகள்.

இராமநாதபுரம் சம்ஸ்தானம் மகாவித்துவான் துவாத்திரிம்
தசாவதானி முதுகுளத்தூர் மகா-ள-ள-ஸ்ரீ:
சரவணப்பெருமாட் கவிராயரவர்கள் இயற்றியது.

கலைமகளுக்கொருமகனிங்கிவனெனச்சொலெனதுமருமகனுங்கன்னற்
சிலைமகனுக்கழகுதவும்முதுகுளத்தூர்ச்சுப்பயவேள்தெளிந்துகற்ற
நிலைவிளங்கப்பலகலையினெறியாய்வுற்றொருங்குபடநிரைத்தேமுன்னீ
ருலகமெலாம்புதுமைதரப்புவனேந்திரகாவியமின்றுரைசெய்தானே.

ஷ சம்ஸ்தான வித்துவான், ஷ மைத்துனர்
சோடசாவதானி, ஷயூர், மஹா-ள-ள-ஸ்ரீ.
வேலாயுதக்கவிராயரவர்கள் இயற்றியது.

கல்லார்களெளிதினிற்கற்றிடக்கற்றோரிதுபோலுங்கற்கநாமோ
வல்லாரென்றதிசயிப்பமனுநீதிநெறிக்கிதுவோர்வரம்பாமென்னத்
தொல்லாரும்புவனேந்திரகாவியமென்றொருபுதுநூற்சொற்றான்மற்றை
யெல்லாநூலும்பழநூலெனப்புகலச்சுப்பயவேளிசைவலோனே.

---

ஷ யூர், அட்டாவதானி மஹா-ள-ள-ஸ்ரீ:
கல்யாணசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றியது.

நோக்கியகண்களிப்பேறநுவன்றிநோவினிப்பேறநுவன்மற்றோர்க
ளாக்கியநூல்கசப்பேறப்புவனேந்திரகாவியமின்றறைந்தானெங்கள்
பாக்கியவான்முதுகுளத்தூர்ப்பதிநிலைமைக்குயர்கர்னன்பால்போற்செஞ்
சொல், வாக்கியுயர்சுப்பயவேள்மலர்வேதனுவிலுரைவாணிமாதோ.

——:o:——

ஷ. யூர், வித்தியாசங்கமெம்பர்களிலொருவரும், கொடைக்கானல்
இங்லீஷ்கிளப் ஹெட்மாட்டருமான, சித்திரகவி மகா-ள-ள-ஸ்ரீ:
எம். தெய்வநாயகம்பிள்ளையவர்களியற்றிய
வசன வெண்பாக்கள்.

சேதுசமஸ்தானத்தைச் சேர்ந்த முதுகுளத்தூ
ராதிக்கிராமாந்தரங்களின் வி—வாதங்
களைத்தீர்க்கநின்றதர்ம கர்த்தாவிருத்தங்
களைப்பாடுவதிற்கவி. (௧)

சக்ரவர்த்தியானகம்பனுக்குச்சமானங்கொத்
துக்கணக்குப்பாத்யசுபயோகி—முக்கணனை
யேசிவன்பிர்மாவிஷ்ணுயேசுமகமூதெனும
தாசம்ப்ரதாயச்சமா. (௨)

தானநிர்மாணந்தெரிந்ததத்துவவிசாரியெனம்
மானருமையாய்ப்பெற்றமைத்துனர்ந—வீனகற்பி
தாலங்காரப்ரசங்கி சற்சனர்சினேகரிந்த்ர
சாலவல்லவர்மஹாராஜ. (௩)

ராஜஸ்ரீசுப்பையாபிள்ளையவர்கள்ராஜ
ராஜன்புவனேந்த்ரராஜனது—வீசுபுகழ்
பெற்றகதையைப்ரபந்தமாயியற்றினர்களதைக்
கற்றவர்கண்ணென்றுசொன்னர்கள். (௪)

---

மதுரைத்தமிழ்ச்சங்க வித்துவான்களிலொருவராகிய வெண்பாச்சிலேடைப்புலி, வேம்பத்தூர், மகா-ா-ா-ஸ்ரீ பிச்சுபாரதியவர்களியற்றிய வெண்பா.

சீரார்முதுகுளத்தூர்ச்செல்வனுயர் மால்மருகன்
பேரார்தருசுப்பிரமணிய-னேராரும்
சிலப்புவனேந்திரன்கதையைச்செப்பினன்கூர்
தாலத்தர்கொண்டாடத்தான்.

---

இராமநாதபுரம் ஸம்ஸ்தானவித்துவான், சர்க்கரைப்புலவரவர்கள் மரபிலுதித்தவரும், கோடகுடிச்சேதுப்புலவரவர்கள் குமாரரும், மன்னர்குடி காலேஜ் தலைமைத்தமிழாசிரியருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ:
சர்க்கரை – இராமசாமிப்புலவரவர்கள் இயற்றியது.

முக்கனிதேன்வானமுதெனப்புலவர் முடிதுளக்கிச்செவியேற்கத்
தக்கவர்புகழுமுதுகுளத்தூர்வாழ்தருதமிழுணர்ந்தசற்குணவித்
திக்கெலாம்வியந்துசெப்பிடப்புவனேந்திரன்கதைபாடினன்குகனன்
பர்க்கெலாமினியசுப்பையவேளென்பாலுமிக்குறவுடையோனே.

---

நாகைநீலலோஜினிப்பத்திராதிபரும், தமிழ்ச்சங்கவித்துவானுமாகிய மகா-ா-ா-ஸ்ரீ: சதாசிவம்பிள்ளையவர்களியற்றியது.

பூமணக்கும்புவனேந்திரன்புகழ்மணக்குங்காவியத்தைப்புலவோர்தங்கள்
நாமணக்கச்செவிமணக்கநல்லறிவெலாமணக்கநல்கினன்செந்
தேமணக்குமுதுகுளத்தூர்த்திசைமணக்கும்புகழாளன்செல்வமிக்கு
மாமணக்குஞ்சுப்பையாவாய்மணக்குந்திருப்பெயர்சொன்மகிமையோனே.

---

உ

கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.



சிவகங்கைத்தாலூகா போர்ட்டுமெம்பரும், இராமநாதபுரம் விவ சாயசங்க நிர்வாகசபை மெம்பர்களிலொருவரும், இளையான் குடி மாஜிஸ்பெஷல் மாஜிஸ்திரேட்டும், மதுரை நான்காந் தமிழ்ச்சங்க வித்வான்களில் ஒருவருமாகிய சோதுகுடி

**ஸ்ரீமாந். எம். கே. எம். அப்துல்காதிறு ராவுத்தர்**

அவர்கள் இயற்றியவை.



காமருவுந் தண்டலைவாழ் கவியினங்க ளருந்தி யெஞ்சுங் கனிகைக்கொண்டு
பூமருவுங் கற்பகக்கான் புகுந்தமரா் விருந்தருந்தப் போகட் டன்னு
ரேமருவும் படிபுரிந்து தருமலரைப் பறித்துமண மிலதென் றேச்சி
நாமருவுஞ் சுவைவேட்டு மீட்டுவரும் வளப்பாண்டி நாட்டி னோர்பால். (க)

எந்நாட்டு வேந்தர்களும் போந்துகண்டு பணிந்தேகு மிறைமை மேவிச்
சொன்னாட்டுந் தமிழ்வளர்க்குந் துங்கமணி முடிபுனைந்த தொல்சீ ராளர்
மின்னாட்டுசெங்காவிப்பதாகையொடுகவிகைசெங்கைவிளங்கக்கொண்டோர்
தென்னாட்டுக் கணியாகுஞ் சேதுபதி மன்னரவை சிறப்ப மேவும். (உ)

வண்டமிழ்நா வலர்பலருட் சிறந்தசர வணப்பெருமாள் வலவன் முன்னே
விண்டபுவ னேந்திரனம் மானையெனு முன்னூலை விரும்பி யாய்ந்துட்
கொண்டினைய பெருங்கதையை விருத்தப்பா வாலெடுத்துக் கூற லுற்றூற்
றெண்டிரைசூ ழிப்புவிவாழ் புலவருளங் களிப்பரெனச் சிந்தை செய்து.(ஙூ)

கடலமுதுஞ் சங்கடமே லுறச்செவிக்குஞ் சுவையளித்துக் காமன் கையின்
மடலவிழுங் கன்னலுநாண் பொருந்தமொழி தொறுமினிமைவாய்ந்ததென்
குடமுனியும் பாரதியு முடல்குறுகி நாவடங்கக் குலவி யிந்தப் [பாற்
புடவிமிசை யெல்லவருஞ் சொல்லவரும் படிதமிழாற் பொற்பக் கூறி. (ச)

மற்றதனுக் குற்றபெயர் புவனேந்த்ர காவியமா வழுத்தி முன்னுஞ்
சொற்றபுகழ்ச் சேதுபதி மன்னர்குலப் பாற்கடலிற் றோன்று தோன்ற
லுற்றதரு நிதிமணியா னேருருக்கொண் டெனக்கொடையாலோங்குசீர்த்தி
பெற்றிருந்த பாற்கரரா ஜன்புரிந்த பெருந்தவத்தாற் பிறந்த செல்வன். (டு)

தேசமுழு வதும்புகழுந் தன்மரபு மன்னர்குல தெய்வ மென்றே
நேசமுடன் பணிபுரியும் ராஜரா ஜேசுவரி நெடுந்தாட் கஞ்சம்
வாசமுறு மணமேவி யருள்வாரி யிடைமூழ்கி வளர்தற் கேற்ப
ராஜரா ஜேசுவர துரையென்னப் புகலருமை நாம பூமன். (சா)

மாற்றலார்ஞ் சிந்துரங்கண் மத்தகத்தைக் கிழித்தெழுந்து வல்லே கூவிக்
கூற்றுவர்க்கு விருந்துசெயுந் திறற்சிங்கக் குருளைநிகர் கோமான் மன்னர்
போற்றிசெயும் பொலங்கழலான் புந்தியினுற் கருணையினுற் புகழா லன்பா
லேற்றமிகு மகிபன்முத்து ராமலிங்க சேதுபதி யினிது கேட்ப. (எ)

தண்டமிழ்நா வலர்வியப்ப வரங்கேற்றி யச்சேற்றித் தாணி வாணர்
கொண்டேவப்பத் தந்துபுகழ் கொண்டனன்யா ரெனிலனைய கோமா னாட்சி
மண்டலத்தின் மதிதொறும் மழைபொழியப் புனல்வளத்தின் மல்கு மா
ண்பா, லெண்டிசையு முதுகுளத்தூ ரெனப்பகருந் தென்குளந்தை யிலங்க
வாழ்வோன். (அ)

கங்கைகுல மணியனையான் கமழ்குவளை மாலிகையான் கடனீர் வைப்பின்
மங்குலமுன் புரந்திடவே ளாளமண வைக்கூற்ற வகுப்பி லுற்றுன்
றுங்கமிக மலிசேது பதிகள்சமத் தானவித்து வானென் றெங்கும்
பொங்குபெரும் பேர்படைத்தான் பன்னூலுங் கற்றறிந்த புலமை யாளன்

திருந்துதெய்வப் புலமைநல்ல வீரப்பக் குரிசில்பவுத் திரனுஞ் செம்மல்
முருந்தனைய நகைமடவார் மடலெழுது வடிவழகன் முதியோர் நெஞ்சு
ளிருந்துவளர் தருராம சாமிமகி பதிதவத்தா லெய்து மெய்யன் [கான்.
பொருந்துபெரு மழைவானஞ் சொரிந்ததெனக் கவிமாரி பொழியும் வாக்

குப்பையாம் பிறநூலென் றறிந்தறநூன் முழுதறியுங் குணவான் யாண்டுந்
தப்பையாய் தருபுலவர் தலைவணங்க நவைசிறிதுஞ் சாரா மேலோன்
சுப்பையா பிள்ளையெனுங் கவிச்சிங்க மிவன்பாடற் சுவையை நோக்கி
னெப்பையாங்கண்டதிலையெனப்புவன முழுவதுமின் றுவந்தமாதோ. (கக)



உ

## திருச்சிற்றம்பலம்.

## இந்நூலாசிரியரவர்கள்

இயற்றிய

# முகவுரைச் செய்யுட்கள்.

பூநாறும்புனத்தெயினர்குலமகளிர்தனித்தனியேபுகுந்துநாளும்
வானூறுஞ்சிறுபிறையைவாணுதலுக்கிணைபொருத்திமகிழநீண்ட
தேனூறுந்தமிழ்ப்பொதியவரையுடைத்தவ்வரையினின்றுந்திரைத்துயநீத்தம்
மீனூறும்பொருனைநதிபெருக்கியிருகரைமருங்கும்விளைவமல்க. (௧)

செய்கையினிற்செயிரகற்றித்தவமேற்றிசிலவுலகுசெல்வந்துய்த்திக்
குய்கையினுக்கிதுநெறியென்றுயர்சைவநெறிக்கணுலாய்ந்தொழுகும்வாசப்
பொய்கையினும்பணைகளினும்புனனிரப்பியமிழ்தினுஞ்சீர்பொலியவாற்றும்
வைகையினும்பெருஞ்செல்வமெமக்கெவனென்றழகேந்துமருதம்வாய்த்த.

இந்நாடுதனக்கொருநாடீடுபடாதெனவுலகமெல்லாமேத்தப்
பொன்னாடும்பொன்னாடுமந்தரமென்றவாவிகந்துபுலவோர்பண்ணை
பின்னாடும்பொருள்வேண்டிமுன்னாடும்பொருள்கொண்டுபிறங்கவாழும்
நன்னாடுதென்னாடுநறுஞ்சைவத்தமிழ்ப்பாண்டிநாடுதன்னில். (௩)

பூமருவுங்கற்பகக்காபொலிந்துளபொன்னகரினுக்கும்பொலிவுநீட்டுங்
காமருவுதண்டலையின்கனித்தேனுமாலைநெறிகரும்பின்றேனுந்
தேமருவுமலர்த்தேனும்பன்மூகத்துமொருமுகமாய்த்திரண்டுமீறி
மாமருவும்வயற்சாலிமணிவிளைவித்தரும்போகம்வழங்குமாலோ. (௪)

பொருமுகவைசிறிதுமின்றிப்பொருந்தலர்களுடற்குருதிப்புலவுநாறு
மொருமுகவைநாந்தகங்கொண்டொல்காநல்லறம்பெருக்கியுறுகணீக்கிக்
கருமுகவையன்பவநீக்கியசேதுக்குரியமலர்க்கண்போற்காட்டுந்
திருமுகவைப்பதியிருந்திவ்வுலகமெலாமரசுபுரிதிகிரிவேந்தன். (௫)

தொண்டிமுதற்றுறைகளெலாந்துறைதந்ததிவாரிச்சுமந்துவங்கங்
கொண்டுவந்துகுவித்துமுதுகாற்றிடும்பொன்மணிமுன்றிற்குவியலோடும்
மண்டுதெவ்வர்புறங்கொடுத்துத்தருதிறைப்பொற்குவியலொடுமாறென்
றின்றி, யெண்டிசையோர்தருங்கனகக்குவியலுங்கொண்டண்டர்பிரானென
[னவாழ்வோன். (௬)

தங்களினினிடம்பெறுதாசர்குழாமெதிர்புகுந்துதாழுந்தோறுந்
துங்கமணிமுடியுறிஞ்சியவிர்பசும்பொற்சமலநிகர்துலங்குந்தாளான்
பொங்குகலியிருளகற்றிப்புகழ்க்கதிராயிரங்கோடிபொலிவித்தெய்துஞ்
செங்கதிரின்வருங்கதிரின்குலம்விளங்கவந்தருளுந்தெய்வமன்னன். (௭)

வலியாளர்கண்சிவப்புமெலியவர்கணீருமன்மாற்றிவையம்
நலியாமனுவசையாமணிதூங்கும்வாசலிலென்னுளுந்தூங்கா
வொலியாழியொலியினும்வானுருமினும்மும்முரசதிரவொல்காவீரப்
புலியானின்றொருதுறைச்செம்புனல்குந்தமனுநீதிபுரியுங்கோமான். (௮)

கொங்கேந்துமலர்க்குழற்செவ்வரிக்கருங்கண்மலைமகட்கோர்கூறீந்தெஞ்சும்
பங்கேந்துபாஞ்சுடர்பொற்பதமேந்துஞ்சென்னியினான்பதுமக்கையிற்
சங்கேந்துமாலனையான்றவமேந்தியுலகமெலாந்தன்னையேந்த
கங்கேந்துங்களப்பகைக்குமுளப்பகையொன்றில்லாதகருணையேந்தல். (௯)

சங்கநிதிபதுமநிதிதருமணியான்வறுமையுறத்தமர்போல்யார்க்குஞ்
செங்கனகமழைபொழியும்வள்ளல்கண்மூவெழுவர்களுந்திரண்டுபார்மேற்
புங்கமிகுமோருருக்கொண்டுதித்ததெனவழங்குகொடைப்புகழ்கொண்டேற
வெங்கணும்வெண்குடைபரப்பியெவ்வுயிர்க்கும்பொதுவாகின்றினிமைசெய்
[வோன். (௰)

நாகைமுடியுடல்பொடிப்பநள்ளாரட்டுள்ளார்கணலங்கடுய்ப்ப
வாகைபுனைதடக்குவடுகிடக்குமணிவடப்புயத்தான்மதுகசால
மோகைதருந்தாரலங்கல்வேலொளிருங்கரதலத்தானொழுக்கம்வாய்ந்த
பாகையரசன்வளவன்பரசுமொருவழுதிநிகர்பண்பான்மிக்கோன். (௧௧)

வருமனுமக்கொடிகருடக்கொடிகாவிக்கொடிகோடிமருங்குசூழ
வொருமனுக்கணீதியினானுயர்சேதுதனக்கோடியுவந்தாடுற்றே
பெருமனுக்கண்டடியேத்தமுடியேற்றுவாமேற்றபெருமையேற்றுத்
தருமனுக்கிங்கிவனெனச்சொற்றரமேற்றலப்புவிபரிக்குந்தருமசீலன். (௧௨)

முருந்தரும்புதாளநகைமுகின்முலைச்சிற்றிடைக்கயற்கண்முளரிச்செவ்வாய்
பொருந்தரும்புபவளவிதழ்மடந்தையர்கள்குனிசிலைக்கைப்போர்வேட்கஞ்சி
யிருந்தரும்பிச்சரித்புலம்புற்றெழின்மடலூர்ந்தவாக்கடக்கவெண்ணிநெஞ்சம்
மருந்தரும்பாகெனவிரப்பவாய்ந்தகதிர்வேலனைநேர்வனப்புவாய்ந்தோன். ()

தங்கள்குலதெய்வமெனும்ராஜராஜேசுவரிதாட்பொற்கஞ்சஞ்
செங்கைகுவித்தயர்பணிக்கணிங்காதுபெரும்போகஞ்சேர்ந்துவாழ்வோன்
நங்கள்குடிகொத்தடிமையாகவிலைமுறியெழுதிநவைசோராம [ன்.
லிங்கிருகண்ணிமைபோலும்வேண்டுபொருளுதவியென்றுமினிதுகாப்போ

இத்தகையமகிபன்முத்துராமலிங்கசேதுபதிதன்னையீன்ற
சித்திரபாஸ்கரசேதுபதிராஜன்றனக்குரியசெல்வத்தாதை
முத்தமிழின்கொடிநாட்டிமுதுபுலவோர்குடிபோற்றிமுன்னீர்வைப்பி
லெத்திசையுந்தனதுபுகழ்கொண்டெழுவாகைபுனைந்திருந்தவேந்தன். (௧௫)

அண்ணன்முத்துராமலிங்கசேதுபதிபேரவைக்கணமர்ந்துவாழு
மெண்ணுபலநாவலருளியலிசைநாடகத்தமிழ்தேர்ந்தியாண்டெண்ணான்கும்
பண்ணுமவதானிசரவணப்பெருமாள்புவியினிற்பாரதியேயன்னான்
நண்ணுதமிழ்ப்படைகொடுவெதிர்ப்பவர்கட்கொருசரபநாவலோனே. ()

அன்னவனும்முன்னெவனேசொன்னதொருபூலோகவரம்பைகாதை
யென்னவெழுதித்தருக்கொண்டிருந்தளவோரேடதனையிறைமைவாய்ந்த
மன்னுசந்திர கிரிச்சொக்கலிங்கப்பெத்தண்ணல்தரவாங்கிக்கற்ற
தன்னறிவாலவைகளிலுள்ளனவழுக்களத்தனையுந்தள்ளிமாதோ. (௧௭)

எத்தாலோசிற்சிலநீத்தெஞ்சியதோர்காதையைச்சேர்த்தெடுத்துத்துய்ய
முத்தாலோவலதுபவளத்தாலோவமைத்துளவிம்முதுசொல்லென்ன
சித்தாரமாகியவம்மானைப்பாவாகமுனைஞ்செப்பினான்சம்
பத்தாமென்றரும்புலவோர்பெரும்புவியோர்தினம்விரும்பிப்படிப்பமாதோ.

அங்கதிலுள்ளதுந்தவறிக்கிடந்ததுஞ்சேர்த்தொருங்குபடவமைத்துப்பாரிற்
செங்கரும்பின்சாறுகனிப்பிரசமலர்த்தேனமுதுதீம்பால்போலும் [கெல்லாந்
பொங்குதமிழ்ச்சுவைபெருக்கிபொருள்பெருக்கிநயம்பெருக்கிப்புலவோர்க்
தங்களுளங்களிபெருக்கத்தமிழ்ப்பனுவல்சமைக்குகவென்றன்னோர்சாற்ற.

காம்போசநாட்டரசன்புவனேந்த்ரநகருறைவோன்கவிஞோர்க்கெல்லா
மாம்போகமுதவுவதிலைந்தருபின்னிந்திரனேவனையானென்ன
நாம்போல்வார்சொலுந்தாலபுரந்தரனங்கவர்க்குரியநன்மையாவுந்
தேம்பாவென்றயரமைச்சன்சுமந்திராகரனொடுநற்சிறுவரின்றி. (௨௦)

நற்றவஞ்செய்திருவர்களும்பெற்றெடுத்தபிள்ளைகளினுமவேந்தன்
பெற்றபிள்ளைபுவனேந்த்ரன்புத்திசிகாமணியமைச்சன்பெற்றபிள்ளை
சற்றுமிவர்பகைமையின்றிச்சாத்திரங்கண்முழுதுணர்ந்துதகுந்தகால
முற்றபொழுதிவர்தேசமூடுசென்றுவளம்பார்க்கவுன்னிமாதோ. (௨௧)

இருவருமுற்றரசன்விடையேந்தியிருவாம்பரிமேலேறியந்தத்
திருநகரைப்புறநீத்துத்திசாதிசைசென்றுசாவியொருதிசைக்கணுற்று
வருநெறியிற்சோலையொன்றுவாவியொன்றுகண்டதிலேவதிந்துமற்றுங்
கொருபரிமேலமைச்சனைப்போந்தொல்லையிற்போனகங்கொணரவுரைத்தா
[னன்றே. (௨௨)

அவனேகவிவன்மீதோராழிநிகர்வாவியுளோரரவமூழிச்
சிவணுமென்றெதிர்வரக்கைநாந்தகங்கொண்டவைகடிந்தித்தேயந்தன்னி
லெவனாலுங்கடக்கரியவாவியிற்புக்கருஞ்சுரங்கவெளிதினெய்தி
நவ்ணுறும்பூலோகவரம்பைநலநனிதடைந்தானமைச்சன்நாடி. (௨௩)

காணாமல்மிக்குநெடுங்காடுதொலைநாடடைந்துகலங்கித்தேடி
நாணாளுந்திரிபொழுதிம்மாணாளுந்தானுமொருநாள்போல்வாழ
வீணனவிசையதரன்கைம்மையாலிவனுயிரைவீட்டிமற்றைப்
பூணாளைத்தன்வயத்திற்புகுத்தினன்கண்டமைச்சனங்குபுக்குமாதோ. (௨௪)

தந்திரமாவெளியேற்றிவாவியிற்போயுயிர்மாண்டோன்றன்னைக்கற்ற
மந்திரங்கொண்டெழுப்பியிவர்மூவருமொத்துடன்கூடிவாவிநீத்து
வெந்திறல்சேர்விசையதரன்றனைமாமனொடுபுகுந்தாங்குயிரைவீட்டித்
தந்தையொடுவிரிஞ்சர்பதிதனின்மாதைவாசமலர்த்தாமஞ்சூட்டி. (௨௫)

வருநெறியிற்றுயில்பொழுதின்மாதமைச்சன்புள்ளுரைசொன்மாற்றந்தேறி
யொருபெருங்கான்மண்டபநீத்தூர்புகுந்துபினுநாகத்துயிரையோட்டி
வருகருமம்புகன்றுருக்கல்வடிவாகிமறுபடியும்வாழ்ந்ததீரு
யுரைசெய்கதையத்தனையுமுள்ளபடியாவருக்குமுணர்விலேற. (௨௬)

சொன்னயமும்பொருணயமுமாங்காங்குமினிமைதரத்துலக்கிப்பார்மேன்
மன்னுமறம்பொருளின்பம்வீடுமுதற்றருநீதிவகுத்துச்செய்யு [டும்
ளுன்னுதொண்ணூற்றொன்பதுமூவாயிரமும்படலமைந்தாங்கொருபத்தோ
பின்னுமொருமூன்றுதொகைபெறவமைத்தேனுலகிலென்றும்பேசமாதோ.

——:0:——

# புவனேந்திரகாவியப் படல அட்டவணை.

சிவமயம்.

# புவனேந்திரகாவியம்.

## பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

நேரிசை வெண்பா.

பூமேவுஞ் சீர்சால் புவனேந் திரன்கதையைப்
பாமேவு செந்தமிழாற் பாடவே—நாமேவு
நிந்திப் பிராதகல நீக்கியரு ளாக்குமொரு
தந்திப் பிரான்கமலத் தாள். (க)

பரமசிவன்.

வேறு.

வண்டலை கொன்றை வேய்ந்து மதியணிந் தரவஞ் சூடிப்
பண்டலை புனைந்து மெய்யின் பாதியோர் பாவைக் கீந்து
விண்டலை யமர ருய்ய விடங்களங் கொண்டு வேதன்
வெண்டலை கரத்தி லேந்தும் விமலனை வணக்கஞ் செய்வாம். (உ)

உமாதேவியார்.

வேறு.

ஆதிபராம்பரையாகிச்சத்துச்சித்தோ டானந்தமயமாகி யகண்டமாகிச் சோதிநிறைவடிவாகி மூலோங்காரச் சுழிமுனையின் கொழுந்தாகித்தோற்றமான, வோதியபூதாதிநிறைபுவனமாகி யுற்றசராசரப்பொருளினுண்மையாகிச், சாதிகுலம் பிறப்பிறப்பு மூப்பொன்றில்லாச் சத்திதுணைத்தாட்கமலந்தலைமேற்கொள்வாம். (ந)

விநாயகர்.

வேறு.

குருமதங் கிக்கோர் குமரனாய்த் தனது குளிர்மலர்ச் சேவடி நினைவோர்
கருமதங் கரைக்குங் கருணைவான் முகிலாய்க் காண்டகு மறைநெறிகலந்து
வருமதங்களுக்குத் தலைவனாய்மனமெய் வாக்குமூன்றினுக்கு மெட்டாத
பெருமதங் கவிழ்க்குங் குஞ்சரவதனப் பிள்ளைதாடலைக்கணிபெறுவாம். (ச)

## சுப்பிரமணியர்.

வேறு.

பெருமையிலுஞ்சிறுமையிலுஞ்சமனிலையாயுலகநிலைபெயர்ந்தபோதுங்
கருமையிலாவெண்மைதிகழ்கருத்துடையாருத்தியுறுகனிவுக்கேற்ப
வொருமயின்மேலிருமயில்கொண் டொருமுகமாயாறுமுகத்தொளிகுலாவ
வருமயிலானிருமையிலான்வனசமலர்ச்சேவடிகள்வணக்கஞ்செய்வாம். (ரு)

## சரசுவதி.

வேறு.

கொம்பவளக்குமிழிசிமிழ்குதொவ்வாத குடமுலைமேல்வடமணிந்துகூர்மைகாட்டு, மம்பவளவுந்தருங்கண்மானைத்தேனையாரணங்கைக்காரணங்கண்டறிதற்கெட்டாச், செம்பவளந்தருந்துவர்வாய்மயிலினைத் திகழ்படிகநிறத்தாளைச் சிந்தைசெய்வோர், நம்பவளங்கல்விசெல்வந்தந்தாட்கொள்ளு நாமகளை நாம்பணிந்தெந்நாளும்வாழ்வாம். (சு)

## அவையடக்கம்.

வேறு.

முள்ளிக்குந்தாமரைக்குமுண்டகமென்றுங்கருதிமொழியாவான்சூழ்
வெள்ளிக்குங்கயலுக்குமீனமென்றமிரும்புதங்கமிளிர்பொன்னென்று
முள்ளிக்காசினிபுகன்றவாபோலென்புன்றமிழ்க்குமுணர்வான்மிக்கோர்
தெள்ளிக்கார்நறுந்தமிழ்க்குங்கவியென்பதுளநினைந்துசெப்பினேனால். (எ)

வேறு.

நூலுணர்பவனுமல்லேனூல்வழிநனித்தகேள்விப்
பால்வருபயனையோரும்பக்குவனல்லேன்கற்றோர்
சீலமுந்தெரிந்தேனல்லேன்றிருப்புவனேந்த்ரன்காதை
மூலமிங்குரைத்தேனெஞ்சென்மொழிவழிப்படாமைகொண்டே. (அ)

## நூலுரைத்தற்குக்காரணம்.

பூமலிபுனலிற்பூத்தபூமிசைப்பொருந்திவாழு
மாமகள்வதனம்போல மன்னியபாண்டிநாட்டுக்
கோமகன்குணக்குன்றன்னகுரிசில்பல்லரசகோடி
தாமரைச்சரணம்போற்றத்தனியரசியற்றுந்தோன்றல். (க)

நிதிவினைவேட்டோர்க்கெல்லாநிதியெனவுதவுஞ்சேது
பதிமகாராசன்வாசற்பாவலர்சிங்கம்வேண்டுந்
தநிதமிழுதவும்வாணிசரவணப்பெருமாள்சொற்ற
மதிதருவலியகாதைமுறையெலாமரபாற்றேறி. (கo)

காவலர்முதலாமாந்தர்யாவருங்கனிந்ததீஞ்சொற்
பாவலங்காரமாகப்பாடிநீதருகவென்றிவ்
கோவலில்லாதுசொற்றவாய்மையையுளத்திருடிக்
கேவலப்பிறப்பினேனுக்கிதுவுமோர்கீர்த்தியென்றே. (கக)

திருப்புவனேந்திரன்றன்சீர்திகழ்சரிதமுற்றும்
விருப்பினிற்பனுவலாகவிரித்தனன்விரிமுந்நீர்சூழ்ந்
திருப்புறுமுலகந்தன்னிலினிதுகேட்பவர்கட்கெல்லாங்
கருப்பினர்வராதென்றுள்ளக்கனிவிறைகளிப்புக்கொள்ள. (கஉ)

பாயிரம் முற்றிற்று.

---

# நாட்டுப்படலம்.

கலைமதியறுகுகூவிளங்கடுக்கை கட்செவிகங்கைவெள்ளெருக்கு
தலைமிசையணிந்தவொருமுதலானதனிப்பரம்பொருளினைத்தமர்க்கு
நிலைவிளங்கியசீர்விமலசற்குருவை நினைப்பருங்கூடலிலுறையு
மலைமகளிருகண்மணியையென்னுள்ளமணிதரவணங்கிவாழ்குதுமே. (க)

வேறு.

மறைநிரப்பியமன்னவர்மரபுழியுதித்தே
யுறைநிரப்பியசுரிகையாலுறுபகையொதுக்கித்
துறைநிரப்புமிக்கதைக்கிறைவாழ்வுறுதூய
முறைநிரப்புகாம்போசநாட்டணிசிலமொழிவாம். (உ)

வேறு.

விண்ணவர்க்கிறைவன்களிறெனவானின்மிடைந்தெழுவெண்முகிலினங்க
ணண்ணுதெண்டிரைநீர்க்கருங்கடன்மடுத்தந்நாயகன்வடிவெனநாறி
யெண்ணுமாதிரஞ்சூழ்ந்திடித்துவாய்முழங்கியிரவிவெஞ்சுடர்கெடுத்திருண்டு
தண்ணெடுந்தாரைபொழிந்தனநிமிர்ந்ததடவரைக்குலமுடிதயங்க. (ங)

மைமுகிலினங்கண்மறிகடற்றிரைநீர்வாரிநீண்மலைமுடிதோறும்
பெய்மழைத்தாரையகங்கரித்தெதிர்த்தபெருவலித்தசமுகன்றன்மேற்
பொய்கிறிதறியாப்புரந்தரன்சேனைபொங்கிவஞ்சினம்பலபகன்று
செய்சமருடற்றிக்கைமிகுத்தடங்காச்சிலைவிடுசிலீமுகங்கடுக்கும். (ச)

பொழிந்தவெம்பகழியுடல்பிளந்திடும்வாய்ப்பொங்கிமேல்விரிந்துநாற்புறனு
வழிந்தசெங்குருதிபோலநீண்டுயர்ந்தமலைமுடித்தலைத்தலைகிடந்து [ம்
செழுஞ்சுடர்பரப்புஞ்செம்மணிவான்றித்திசைதொறும்பாந்துமேலோங்கி
யெழுந்தவெள்ளருவித்திரள்கள்செந்நிறமுற்றிழிந்துபாரடைந்தனமாதோ.

கடமலியானைக்கோடுமொவருக்கைகாரகிற்றருமரவங்கோங்
கிடமலிசந்துதாதகிகதலியெடுத்துவான்புடைதொறும்வீசி
கடகடவெனநின்றொலித்துவான்கங்கைகாசினியிடையிழிவதுபோற்
றடமலைமுடிநின்றிழிந்தவெள்ளருவித்தாரைகள்சரிந்தனவெங்கும். (௬)

இருகரையிடந்துபெருகுவானதிநீரெற்றுவெண்டிரைகளாலொதுக்கும்
பொருமணிக்குவியலிடந்தொறும்வேறுபுதுக்கரையாமெனப்பொலியக்
குருகனநாரைவளைகளிருதிசொண்டனின்றதிர்ந்தெனக்குமுறத்
தருவரையுருட்டிவேடுவர்குடிஞைதனிற்புகுந்தடங்கலுந்தடவி. (௭)

முல்லையிற்புகுந்தாங்காய்ச்சியர்காய்ச்சுமுதிர்சுவைப்பாற்குடஞ்சாடிக்
கொல்லையான்றருவைசாய்த்துமேய்ப்பவர்கைக்கோறுணிகம்பளம்பலவு
மொல்லையிற்கவர்ந்துபெருநிலமன்னர்க்குடன்படாச்சிற்றரசரின்மேற்
செல்லுசேனையினின்றார்த்துவெஞ்சுரமேற்சென்றதுசெழுநதிவெள்ளம் (௮)

பகவன்வார்சடைநின்றிழிந்துபாரொழுகும்பகீரதிதனதுமாற்றவளாங்
தகவுறுகாளிபகைத்திவணிருந்ததலமெனநினைத்தவளுழைப்போய்
முகமனன்மொழிதந்தளவளாவுதல்போன்முதிர்தழற்பாலையைச்சுலவிச்
சுகமலர்ச்சோலைவேலிசூழ்மருதந்துருவியோடினநதிவெள்ளம். (௯)

பூகநீண்மருதநிலத்திலத்தலைவன்போர்க்கெழுநாற்பெரும்படைகள்
சேகரித்தீர்த்துவந்ததுபோலத்தேர்சிலையாசுகமதமா
வேகவெம்பரிகாலாளிவைகொண்டுவெண்ணுரைபரப்பியார்த்தப்பாற்
போகுநீர்வெள்ளம்பானலங்கைதைபொலிதருநெய்தலிற்புகுந்தே. (௧௦)

மனவணிபரதர்சிறூர்கரங்கோலிவகுத்தவான்சிற்றிலையெற்றி
யினமணிப்படவுபுரட்டிவார்வலைகளெடுத்துநெய்மீன்பருவாளை
சினவுறுசுறவுதிமிங்கிலங்கலங்கத்தீயவைம்பொறிநிலைகெடுத்தோர்
மனமெனத்தெளிவுற்றாழ்திரைக்கடன்மேன்மண்டினமாரிநீர்மாறி. (௧௧)

பல்லுயிர்தமக்கோர்தாய்பலமுலையாற்பால்சுரந்தளிப்பதுபோல
வெல்லையில்லாதமடுத்தடங்குளங்காலேரிபூவோடைதண்பழன
நல்குரவொழியநிரப்பியிப்புவிக்குநளிர்பயோததியமுதிதுவென்
றல்லல்வீந்துவகைமீறவெந்நாளுமணிவளம்பரப்பினமாதோ. (௧௨)

கரைதகர்த்தோடும்வெள்ளநீர்தேங்கக்கைவகுத்திருஞ்சிறைகோலி
வரைமுகிற்குலநேர்பகடலம்பூட்டிவள்ளைசெங்கிடைகருங்குவளை
விரைநளினஞ்சேதாம்பல்கான்மடக்கவெள்வளையாமைமீன்றுடிப்ப
நிரையுழுதுழுசால்பரம்படித்துழவர்நென்முளைநேர்ந்துவீசுவரால். (௧௩)

மள்ளரேறுழுதவயறொறுஞ்சிதைந்தவனப்பழிதாயரைநோக்கி
யெள்ளிநேர்நின்றுபுகலுதல்போலவெழின்மணிக்கரம்வளைசலிப்ப
வள்ளிலைவேற்கட்கடைசியர்தமதுவழிவருதெய்வதம்பேணி
யள்ளிநாற்றெறிந்துநடவுசெய்துவகையாற்பெருங்குரவையாட்டயர்வார்.

உழுதசாலிடையிற்பூமகளுடல்கீண்டொழுகியகுருதியாமென்னச்
செழுமணிச்சுடரோடளைந்துவான்புனன்மேற்றேங்குறுபணைதொறுமன்ற
பழுதினுக்கிரங்கியாற்றுதல்போலப்பணிலம்வாய்முழங்குறுங்கஞ்ச [ள்
முழுவதுந்தேறல்சொரிவதவ்வருத்தமுன்னிக்கண்பனிப்பதைமானும். (௧௫)

கரும்புடைந்தோடுதேன்பலாக்கனிமாங்கனிகதலிக்கனியுகுதேன்
சுரும்புசூழ்மலர்த்தேன்பருவராலாமைசுரிவளைகுரண்டங்களுகளும் [வி
பெரும்பணைத்தலைப்பாய்ந்துவரொழித்துறுநெற்பெரும்பயிர்வான்முடிதட
வருங்கதிர்தடைபட்டிடநிமிர்ந்தோங்கிவளர்ந்திடவளர்ப்பனமாதோ. (௧௬)

உளந்தடுமாறிப்பகைவராற்றலைசாய்ந்தொதுங்குவார்தம்முளமகிழ [டு
விளம்புமப்பகைவர்தமைத்துரத்துவர்போன்மென்னடைக்கடைசியர்திரண்
தளந்திகழ்நளினவயனெருறுமுனமேதங்களானடவுசெய்திட்ட
விளம்பயிர்வளரவிடர்செயுங்களைகளியாவையும்வேரறவெடுத்தார். (௧௭)

ஆணவங்கெடுத்துநல்லருள்பொருந்தியானந்தநிரம்பிமேலெழுந்த [ந்து
மாணும்யோகியர்போற்செழிப்புறுபைங்கூழ்வான்பொதிதிரண்டுநீண்டுயர்
சேண்முடிதடவிக்கற்புறுமகளிர்சிரங்கவிழ்ந்தச்சமுள்ளுறுத்த
நாணிநிற்பதுபோற்கதிர்க்குலைசாய்த்துவிளைந்தனநறும்பணையெல்லாம். (௧௮)

அன்புறுமதனகலைபயின்மைந்தர்க்கணியிழைமகளிர்பாற்கலவி
யின்புறுபோகம்பலித்ததுபோலுமிருநிலத்தியல் பறியுழவர்
நன்பயிர்முயற்சிக்கொத்தவருள்ளநாடொறுங்களிசிறந்துவப்ப
மின்பொருசெம்பொன்மணியெனப்பழுத்துவிளைந்தனபசுந்தடங்கதிர்கள்.

பிறைமுகவிரும்பாலரிந்தரிதூக்கிப்பிறங்கலிற்போர்பலவேய்ந்து
முறைபகடோட்டித்தெழித்துவைநீத்துமுறங்கொடுதூற்றிநெற்குவித்தாங்
கிறையவர்க்காறிலொருகடனீந்தவ்வாறுமற்றேனையர்க்குதவிக்
குறைதராவதனைப்பண்டியிற்கொடுபோய்க்குலவியமனைதொறுங்குவிப்பார்

வேறு.

வண்டுடாமலர்தோறுமதுத்துளி
கொண்டிருவிடைகூட்டுவதாமெனப்
பண்டுபுன்னிலமல்குபலனெலாங்
கண்டுகொய்துகடிமனையுய்ப்பரால். (௨௧)

கொட்டுவார்முரசால்வரக்கூவியே
கட்டுபாகுபொற்காதணிகண்டிகை
யிட்டுவேண்டும்பொருள்கொடுத்தேற்பவர்க்
கட்டபாலமுதம்படைப்பாரரோ. (௨௨)

வந்துதேன்றருவேடுவமாதருக்
குந்துபொன்மணிபள்ளியருய்ப்பராற்
றந்தபாலினுக்காய்ச்சியர்தாம்பெற
நந்துமுத்தளப்பார்கடனுரியர். (௨௩)

வால்வளைப்புளினத்தடமாப்பணைச்
சேல்பிடிக்குஞ்சிறாரொலிமுல்லையிற்
கால்களிற்குழக்கன்றணைத்தானிரை
பால்கறப்பவரோதைபடுக்குமால். (௨௪)

வள்ளைமென்குழைமங்கையர்தந்நடைக்
குள்ளம்வெள்கியொதுங்குசெங்காலனங்
கள்ளிதழ்க்கமலங்களைக்கண்டவர்
தெள்ளுசீரடியென்றுதியங்குமே. (௨௫)

எவிருந்தகண்ணேழையரெங்கணு
நாவிருந்தெழுநன்மொழிதந்தெதிர்
மாவிருந்துவரவழைத்தாரெனக்
காவிருந்துகருங்குயில்கூவுமால். (௨௬)

வான்செறிந்தமாஞ்செறிகாவெலாந்
தேன்செறிந்த செழுமலரோடைகண்
மீன்செறிந்தவிரிதிலமெங்கணு
மான்செறிந்தெழுபால்செறிந்தாருமே. (௨௭)

தூவிமாமயிலார்குடையுந்தொறூஉ
மாவியன்னபெடையென்றணிதிகழ்
வாவியிற்செழுங்கான்மடமாவனம்
பூவினின்று புலம்பிவருந்துமால். (௨௮)

காரனாவியகான்வரையெங்கணும்
வாரிவெண்டிரைதூற்றும்வளைமணி
நீரனாவியநெய்தலிற்செம்மணி
ஏரவெற்பருவித்திரள்சாய்க்குமால். (௨௯)

தேவண்டுகளார்த்திசைப்பாண்செயப்
போதுசிந்தியபொங்கர்களெங்கணுஞ்
சோதிமென்சிறைதூக்கிவிரித்தின
மாதரென்னமயினடஞ்செய்யுமால். (௩௦)

வானின்மீனினம்வந்துவந்தேபுவி
தான்விழுந்துபின்மீதெழுந்தன்மைபோற்
கானமங்கையரோச்சுங்கவண்மணி
மானமால்வரைவீழ்ந்துவயங்குமால். (௩௧)

காடெலாஞ்செழுங்கற்பகங்கான்மலர்த்
தோடெலாம்பசுந்தேன்றுளிதூங்கி
யாடெலாமணிவால்வளைவான்பணை
நாடெலாம்பொன்விளையுமெந்நாளுமே. (௩௨)

ஈகையில்லையிரவலரின்மையா
லோகையில்லையுறுகண்ணொழிதலால்
வாகையில்லைமருவலரின்மையா
லாகையாலொப்பிதற்கினியாவதே. (௩௩)

வேறு.

மின்னைவாங்கியோவலதுமாற்றுயர்ந்துமீதவிரும்
பொன்னைவாங்கியோவிதிமனம்புண்படநோற்றிங்
கின்னுநாஞ்சொலப்படைத்தனனெனவருமெழிலார்
மன்னுமாமயில்போலுமிந்நாட்டுளமடவார். (௩௪)

திருவுங்கல்வியுஞானமுந்திகழநல்லொழுக்க
மருவும்வாணுதன்மடந்தையர்யாவருமனைக்கண்
வருவிருந்தினிதோம்பலுமகிழ்நர்மேலன்பு
பெருகவாழ்தலுமாவனவவர்கொளும் பெருமை. (௩௫)

வாசநாறுமென்குழலியர்நென்னலின்வனைந்த
காசுபொன்மணிக்கலன்களுங்கல்வையுமலரு
மாசெனக்கழித்தெறிதலிற்றெருக்கடைமலிந்து
வீசுவல்லிருளினும்பெறுவெயிற்கதிர்விரிக்கும். (௩௬)

கற்றமாந்தருக்கனந்தனுங் கவின்செய்மாநிதியம்
பெற்றமாந்தர்க்குத்தனதனும்பெரும்புயவலிமை
யுற்றமாந்தர்க்குவீமனுஞ்சிறியரென்றுரைக்கின்
மற்றிவர்க்கிணையாவரைத்தேடிநாம்வகுப்பாம். (௩௭)

காவிற்றீங்கனிகழனியினெற்பசுங்கரும்பு
பூவிற்றேன்விரைபுனலினிற்புரிவளைசினைமீ
னாவிற்றண்பயமகந்தெளிந்தறிஞராலமைத்த
பாவிற்றீஞ்சொலிந்நாட்டினிலளவிடப்படுமோ. (௩௮)

மண்டுசூல்வளைமுழங்கொலிமலர்தொறுநறுந்தே
னுண்டுவண்டினம்பாடொலியொழுகுதீம்புனலிற்
கெண்டைபாயொலிகிரிசரமாவொலிகெழுமி
யெண்டிசாமுகந்தொறுமழைக்கொண்டலோடிகலும். (௩௯)

ஆய்ந்ததீங்கரும்பதுக்கிநற்சாலிமேய்ந்தவாவுற்
றேய்ந்ததண்டுறைவாவியினீர்புகுந்தினிது
தோய்ந்தமேதிகன்றுள்ளிவான்மடித்தலஞ்சொரிய
வாய்ந்தபாலொடுகழனியிலுகள்வனவாளை. (௪௰)

கிளையினோடரசோதிமந்துயிலெழக்கிளர்தே
னளையும்வண்டினமுழங்குநீள்பகலினுமல்லி
முளரியாமெனமுகைவிரித்தலர்தாமரை
வளைமணிக்குலமதிநிலவெறிப்பனவாவி (௪௧)

கரும்புநீடியதலைதொறுந்தேனிருல்கசியச்
சுரும்பர்சூழ்கிடந்திரங்குவபிரிந்தவர்த்துயர்கூ
ரரும்புவாளிகொண்டருஞ்சமர்புரிவதற்கனங்கன்
விரும்புவிற்பலகுழைப்பனவாமெனவிளங்கும். (சஉ)

தேவர்பூசனைக்காயநற்பொருள்பலசேர்த்துப்
போவதற்றநன்மாண்புடையவர்களைப்போலப்
பூவிளந்தளிர்காய்கனிதேன்சுமைபொறுத்துத்
தூவிரிந்தவானகத்தினிற்செல்வனசோலை. (சங)

வரைவளங்களுங்கானுளவளங்களும்வாவித்
தரைவளங்களும்வெண்மணிச்சங்கினந்தவழுந்
திரைவளங்களுஞ்செந்தமிழ்க்கவிஞராற்செப்பு
முரைவளங்களைக்கடந்துமேற்பெருவளமோங்கும். (சச)

கமலயோனிமால்புரந்தரன்கடவுளர்முனிவ
ரமலயோகியரறிவதற்கரியதாயமைந்த
விமலனாருடங்கியன்புடைமைமேல்விளைந்த
நிமலநாடிதற்கெந்தநாடிணைசொலநேரும். (சரு)

நாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (ருஎ)

---

## நகரப்படலம்.

வளையெடுத்துவிறகெடுத்தவசியர்குலமகன்றனக்கோர்மாமனாகிக்
கிளையெடுத்தவழக்குவென்றுகிழவனைவெண்ணில்வூரக்கிளைத்ததிங்கண்
முளையெடுத்துமுடித்தமுடிப்பெருமானைக்கதலிபலாமுதிர்ந்தசெந்தேன்
விளையெடுத்தமொழியுமையோடணிமதுரைபுரந்தானைமேவிவாழ்வாம். (க)

வேறு.

நாடெலாமுடலதற்குயிர்நகரெனநன்னூ
லேடெலாஞ்சொலும்பான்மையானுடுமுன்னிசைத்தோந்
தேடலாம்பொருளெவைகளுமொருங்குறத்திரண்டு
மாடெலாமலிவெய்தியநகர்வளம்வகுப்பாம். (உ)

குலஞ்சிறந்ததுகுடிகளாலிறைவர்செங்கோலால்
வலஞ்சிறந்ததுமுனிவரால்வணங்குதற்குரிய
தலஞ்சிறந்ததுபுலவராற்சமைவுறுநகழக
நலஞ்சிறந்ததுதிருப்புவனேந்திரநகரம். (ங)

சிவனினைக்கவுநான்முகன்மறக்கவுந்திருமா
லுவமைகூறவுமிமையவர்கவலவுமுநகர்
தவமிழைக்கவுந்தனதனவ்வியமலிதாவும்
புவனமேத்தவும்புகழ்மிகுமணிநலம்பொலியும். (ச)

வேதியர்க்கருநான்மறைப்பொருளெலாம்விளக்கு
மாதருக்குளநிறைத்தெழில்வளனெலாம்வழங்கு
மோதுமைந்தருக்கெவ்வகைக்கழகமுமுதவு
மாதுலர்க்கொருதாயெனக்கருணைவைத்தளிக்கும் (௫)

முக்கணானயன்மால்புரந்தரனுயர்முனிவர்
தொக்கமாநகர்க்குயர்ந்ததென்றுலகெலாந்துதிக்கத்
தக்கபேறுவாய்ந்தறமெனுந்தருவின்மேற்றழைத்துப்
பக்கமெங்கணும்புகழ்க்கொடிபடர்ந்ததிப்பதியே. (௬)

கண்ணகன்றகீழுலகினையுட்படக்கவர்ந்து
விண்ணகன்றபொன்னகர்க்குமோர்காவலாய்மேவி
மண்ணகன்றநற்சுவணவெற்பாமெனவளனுற்
றெண்ணகன்றபொன்னெயினகர்ப்புறத்திலங்கியதே. (௭)

தங்கண்மாட்சியுநூல்சொலுமாட்சியுந்தக்கோ
ரிங்குகாண்மினென்றருந்தவந்தச்சர்களியற்றிச்
செங்கைவல்லமைகாட்டியசெயலெலாந்தெரிக்கும்
பொங்குசித்திரம்பொறித்தபொன்மணிதிசழ்புரிசை. (௮)

அங்கிதாரகைமதிகதிர்முதலியயாவு
மிங்குறுஞ்சுடரொளியினாற்றம்மொளியிழப்பப்
பங்கமில்லதோர்பழமறைநான்குமிப்பார்மேற்
றங்கினாலெனநாற்பெரும்வாயில்கள்சமைந்த. (௯)

மேலமைத்தநற்பொறிக்குலமேவலரடுக்கிற்
பாலம்வேன்மழுச்சக்கரம்பகழிவிற்கவண்கல்
சூலமங்குசந்தோமரமுலக்கைவாள்சொரிந்து
காலனும்பயந்தோடவெஞ்சமர்முனைகடக்கும். (௧௦)

ஊழிநாளொருநாட்கொடுபுவனமோரேழு
மேழுந்தன்சிறுகருவெனக்காட்டியிங்கேந்த
வாழியான்றிருவுந்திபோலணிநலம்பரப்பி
யாழங்காண்பதற்கரியவாயகன்றபேரகழி. (௧௧)

கூறுமாலையுங்கலவையுங்குழைகளுங்கலனு
மேறுதீபமுந்தூபமுங்கலசமுமேந்தி
வீறுதோன்றுசற்புடையவர்நலமெனவிரிந்து
வேறுவேறுநின்றொளிர்வனவணிவிழாவீதி. (௧௨)

பாவுதண்கதிர்ச்சந்திரகாந்தமீப்படிந்த
வரமியத்தலந்தோறுநின்றொழுகுவெள்ளருவி
விரவுகற்பகவிருக்கநீணிழலிடைமேவுஞ்
சுரபிவான்மடிபிலிற்றுவதாமெனத்தோன்றும். (௧௩)

வள்ளவார்முலைமகளிர்செந்தாமரைவதனங்
கொள்ளையாடமெய்குறைந்தனையோவெனக்குழையாப்
பிள்ளைவெண்பிறைகாண்டலும்பிறங்குபொற்காந்த
முள்ளநீர்விழியுகுதல்போன்மாடங்களுருகும். (௧௪)

குறுகுநாண்டுலைத்தாம்புகணிரைநிரைகொளுவி
மறுகமைத்தபொன்மாடமேன்மழைப்புனல்வார்த
விறுகுமெய்யுரற்புடைத்தகாற்பிறைமருப்பிலங்கு
மறுகுமுக்கடம்பொழிந்துவீறியற்றுதலடுக்கும். (௧௫)

யாணரிந்நகர்க்கிணையெனவமரர்கோனகரை
மாணமெய்த்தவர்வழுத்திடாதணொளிமடக்கி
யேணுறக்கருப்பாக்குதற்ககங்கரித்தெழுந்து
சேண்வளைத்தமருடற்றல்போலகிற்புகைசெல்லும். (௧௬)

காமர்மாடமேற்கவின்மணிச்சுடர்செய்பொற்கலசம்
பூமலர்க்குழல்புலர்த்தகிற்புகையொடும்பொலிதல்
வாமமேகலைமடந்தையர்வனமுலைசிவண
வோமகுண்டநாப்பண்டவமுஞற்றுவதொக்கும். (௧௭)

முத்தழுத்துபொற்சுவர்வகுத்தணிவளைமுடுக்கி
யுத்திரத்தணிமரகதக்கொழுஞ்சுடரோட்டிப்
பத்தியெங்கணும்பவளமும்வயிரமும்பரப்பி
வைத்தமாளிகையோளிவிண்ணுலகினைமயக்கும். (௧௮)

நாட்டின்மிக்கவிந்நகர்மடவார்நடநயந்து
கோட்டின்மிக்கவைந்தருநிழற்கொலுவிருப்பவன்முன்
னாட்டின்மிக்கபொன்னரம்பையராடுதற்கிதனைக்
காட்டிநிற்பவர்க்கடுப்பனமாடகேதனங்கள். (௧௯)

அடிதுவக்கியாடகத்தகடடுக்குயர்மாட
முடிதுவக்குவிற்சேதனமுழுமதியுடனா
டிடிதுவக்கியபுழைபடுதழும்பினையேனை
படிதுவக்கியமாந்தர்கள்களமெனப்பகர்வார். (௨௦)

கலங்கிடப்புயத்தணிபதஞ்சிவப்புறக்காலால்
வலங்கதித்துநின்றுருதைசிலம்பொலிமாற்றி
யலங்கலில்வருந்தளிதுயர்மறந்தவர்த்தேற்றி
நலங்கண்மாதருக்குரைப்பனபோலொலிநாட்டும். (௨௧)

கிரியடர்ந்துபாகெறிந்தகாற்றுணைச்செவிகிளப்புங்
கரியினீண்மணிக்கால்களுங்கலைபயில்புலவோர்க்
கரியபுண்ணியத்தாறறிந்ததுதினமளித்தற்
குரியர்கைகளுநீளுவதானநீருற்றே. (௨௨)

### வேறு.

கொடியிடைநெடுந்தேரல்குல்குவிமுலைகலசம்வேல்கண்
சுடர்மணிமுறுவல்பைம்பொற்றோரணஞ்சூழ்மென்காஞ்சி
தொடிநிலைகரநற்றூணிவ்வவயவஞ்சுமந்தசெம்பொன்
வடிவமைநகராங்கன்னிக்கென்றுமங்கலமாமன்னோ. (௨௩)

### கணிகையர்வீதி.

மைநிறைத்தலவும்வேற்கண்வலைவிரித்ததற்குள்ளானோர்
கைநிறைத்துதவுசெம்பொன்முழுவதுங்கவர்ந்துதத்தம்
பைநிறைத்தவர்களுள்ளம்பரவசங்கொள்ளவின்ப
மெய்நிறைத்தேகச்செய்யுங்கணிகையர்வீதிசொல்வாம். (௨௪)

அறவழிப்பொருள்கொண்டுய்யாதவரெலாமந்தோவிந்த
மறவழிக்கோதைமின்னார்மனவழிவதியவென்றோ
புறவழியெல்லாங்காமப்புலவழியேற்றுமாபோ
லுறவழியாதகோலங்காட்டியங்கொளிருமாடம். (௨௫)

பொன்னணியல்குற்றேர்மேற்புருவவிற்கடைக்கால்கோட்டி
மன்னுபூவரிக்கணம்புவயக்கிமுன்னெதிர்த்தமைந்தர்
துன்னியமருமம்போழத்தொடுத்துத்தம்வயத்தராக்கி
மின்னிடைக்கொடிகொண்டாருக்கியாவரேவணக்கமேவார். (௨௬)

தசும்புறுதுணைமென்கொங்கைச்சாந்தமுஞ்செறிந்தமென்பூம்
பசும்பனிநீருஞ்சூதம்படிந்தவாயெச்சிலென்ன
விசும்பினுங்கமழக்கையாலடிக்கடிவிலக்கிவேறு
வசம்பெறப்புனையுமன்னார்வடிவமுமனமுமொன்றே. (௨௭)

கைமுதலென்றுமுள்ளதளைப்பணங்கைக்கொண்டந்தோ
செய்தொழில்பெருக்கியென்மேற்றிரவியம்வலிந்துசேர
வையகந்தனிலெஞ்ஞான்றும்மாதனம்பெற்றுவாழுந்
தையலாரிவர்களாற்றும்விரகையார்சாற்றலாவார். (௨௮)

### வேளாளர்வீதி.

முடிபுனைந்தறஞ்சொனீதிமுறையரசியற்றுமீனக்
கொடியவன்றவிப்புருமற்குறைவிலைப்பஞ்சநீங்கப்
படியுமொன்பதுபத்தாழ்கீர்த்தியும்படைத்துநல்ல
குடியொழுக்கியல்வேளாளர்குலமனைகூறுகிற்பாம். (௨௯)

வறுமையேபெரிதாயுற்றமாந்தர்களெவரென்றாலுஞ்
சிறுமைதீர்த்துளக்கணின்பஞ்சேரவாளுக்கநல்கி
வெறுமைகொள்ளாதுநாளுமளிப்பர்கள்வினைதீர்ந்தப்பான்
மறுமையிற்பெறும்பேறெல்லாமிம்மையேமருவவல்லார். (௩0)

காலத்தைநோக்கிச்செய்யுமிடங்கண்டுகருமந்தேர்ந்து
மேல்வருவிநயந்தூக்கிச்சமனுரைவிளம்பியார்க்கும்
பாலுறுபிறைபோற்கொள்ளப்பரிவுகூர்ந்தன்புகாட்டி
ஞாலமன்னவர்க்குக்கண்போலமைச்சியனடாத்தவல்லார். (௫௧)

மானமுங்குலமுங்கல்விவண்மையுமறிவுமிக்க
தானமுந்தவமுநட்புந்தகையுமாண்பொழுக்குநீங்கா
ஞானமுங்கொடையும்பெற்றநல்லவரிவர்க்கேநாளும்
வானமும்புவியுமேனையுலகமுமகிழ்வுகூறும். (௫௨)

வணிகர்வீதி.

பாற்கான்குலத்திலாத்திப்பனிமலர்த்தொடையல்வேய்ந்த
வேற்காத்தாவிநாடன்விரும்பியவொருபெண்கேட்க
நாற்கழன்முடுவறன்னைநடுவகம்பிணித்துப்போந்த
மேற்குலவணிகர்தங்கண்மிளிர்மனைவீதிவிள்வாம். (௫௩)

நினைவதுங்கனகக்கையாணிறுப்பதுங்கனகமெய்யிற்
புனைவதுங்கனகம்வார்த்தைபுகல்வதுங்கனகமென்றாற்
பினையிவர்க்குரிமையாயபரிகலம்பிடகமஞ்சம்
மனைமுதற்பிறவும்வேறாய்ப்புகல்வரோமதியான்மிக்கோர். (௫௪)

நிறைபுரிதவத்தான்மிக்கநகர்வணிகமாக்கள்
குறைபுரியாதுமென்மேலூதியமிதப்பக்கொண்டாங்
கிறைபுரியளவும்வாளாவிரையமேயில்லாதிட்டு
முறைபுரிகுணத்தாலன்றேமுருகனுஞ்செட்டியானான். (௫௫)

பச்சிளங்கமுகேயன்னமரகதப்பைங்காலூட்டி
வச்சிரப்பலகைபூட்டிமணிவலைப்பொற்றாம்பிட்டுக்
கைச்சிறுதோடுந்தத்தங்கணவருந்தாமுமாக
மெச்சிதம்பெறவெஞ்ஞான்றுமாடுவார்மிளிர்பொன்னூசல். (௫௬)

மணிதுகிர்கனகமுத்துமரகதம்வயிரமேனைக்
கணிபடாக்குவைசெங்காந்தட்கரம்பொருமுற்றில்வாரித்
திணிபடவிகலிக்கூத்திட்டார்த்துவாய்சிரித்தங்கன்ஞெ
ரணிமனைமுன்றிறோறுஞ்சிறுமியர்கொழிப்பரம்மா. (௫௭)

இறையவர்வீதி.

வேறு.

பயிர்தழைக்கவிட்டாற்றியவேலைபோர்படர்ந்த
செயிர்விலக்கியிவ்வுலகெலாநடுநிறைநிகழ
வயிரனைத்துந்தம்முயிரெனப்பாதுகாத்தோம்பும்
வயிரவாட்படையன்னவரிருக்கையைவகுப்பாம். (௫௮)

கூனரும்பியபுரிமணியிப்பியிற்கோத்த
கானரும்பியமணிமுதற்குவியலாற்கலைதேர்
ஞானமாதவனருந்துநீர்க்கடலையுளிர்தண்
மீனரும்பியவானையும்போன்றனவீதி. (௩௯)

மூரிவான்றிரைக்கடலினையொருங்குறமுடுக்கு
மாருதத்தினுஞ்சுழற்சிகொள்வாசிமந்துரைவில்
லாரமிட்டபொற்றேர்நிரையருவிதாழ்வரைபோல்
வீரமிட்டுயர்மதம்பொழிவாரணம்விளங்கும். (௪0)

கைக்கவண்சிலைநாஞ்சின்முத்தலையயில்கழுமுட்
சக்கரம்பிடிதோமரம்வேன்மழுத்தண்டு
மிக்கநாந்தகம்பலகையோடாரமர்வீறு
தொக்கவிந்தைவாழ்சாலையும்பற்பலதுலங்கும். (௪௧)

கச்சிறுக்கிவிற்கழல்பிணித்தொருகையிற்கதிர்வாண்
மெச்சிதம்பெறப்பலகைகொண்டமரரும்வியப்பப்
பச்சிரத்தம்வந்தொழுகிடவருஞ்சமர்பயில்வா
ணிச்சைமீக்கொடுதிருத்தியசாலையெண்ணிலவால். (௪௨)

வேறு.

கனத்தெழுமுலைமின்னார்தங்கலவியிற்கயற்கண்வேலான்
மனத்திடைச்செலுத்தத்தைத்தபுண்ணலான்மறுபுண்ணில்லா
ரினத்தொடுபோர்த்தங்கார்ப்பவாளொடுபலகையேந்திச்
சினத்துறுமிடியிற்றுக்கிச்செருப்பயில்காட்சித்தெங்கும். (௪௩)

காலறுப்புண்டுகண்போய்க்கதிர்மணிச்சிறையோடுற்ற
மேலறுப்புண்டபோதும்வீரத்தின்விழுமந்தோன்ற
வோலமிட்டொளிர்செஞ்சூட்டுவாரணமொன்றோடொன்று
பாலர்விட்டதட்டுமோதைபடுப்பனபரவையோதை. (௪௪)

கயிரவமுறழ்பொன்வாயார்கண்வலைவீச்சுக்குள்ளாய்ச்
செயிருறத்தெழுந்தசீற்றச்சிறுவர்கடிருகிமென்மே
லுயிரளவினும்பின்வாங்காக்காடைகளொன்றோடொன்றுங்
கயிருறுதுருத்துமோதிபாடமராடல்காண்பார். (௪௫)

மின்னெனுமருங்குற்செவ்வாய்ச்சிறுமியர்விரிநீர்க்கங்கை
வின்மணியிழைத்தசிற்றிலழித்திடவெகுண்டுகண்ணீர்
நன்னிலஞ்சேறுசெய்யநடத்துதேரதனின்மாழ்கிப்
பொன்னுருள்புதையச்செல்வச்சிறார்நகைபுரிந்துபோவார். (௪௬)

வேறு.

பவளஞ்செம்மணிமரகதங்கொழுஞ்சுடர்படிகந்
தவளநித்திலச்சுமையொடுதமனியத்தாம
மிவளவென்றளவிடற்கரிதரண்மனையெங்குந்
துவளிடைத்தளிர்ச்சிலதியர்துடைத்திடுங்குப்பை. (௪௭)

இறைவர்வந்தடிபணிதொறும்பணிதொறுமெழிற்கா
லறைகழற்சிலம்பொலியொடுமெவர்முடியார்ப்பச்
சிறைதனைக்தொணர்நருதிறைகவர்ந்துமேற்றிகிரி
முறைபுரிந்தரசாள்வதுகோமனைமுற்றம். (௪௮)

## அந்தணர்வீதி.

வேதமுந்திகழ்மெய்ந்நெறிவிளம்புறுசைவ
போதமும்பரம்பொருணிலைபுகல்புராணத்தின்
கீதமுந்தமக்குரியநற்கிளைகளாய்க்கெழுமு
மாதியந்தணருறையுளையெடுத்தினிதறைவாம். (௪௯)

### வேறு.

கருமத்தினுறுதிவாய்ப்பவேள்விவெங்கனலோடங்கண்
பிரமத்தின்பெருமைகூறுமாணவர்கழகம்பேணி
நிருமித்தவிதியாறங்கமுறையெலாநிரப்பாநின்ற
தருமத்தின்வதனம்போலமிளிர்வனதனிப்பொன்மாடம். (௫0)

மறையவர்மறையில்வேதமறையும்வான்மழையுமாறு
முறையெலாந்தவிருஞ்செய்யுங்கிருத்தியமுழுதுங்குன்றுங்
குறையெலாநிறையுமாந்தர்குணமெலாங்குறுகுமென்று
லிறையினுமிவரலாதோர்தெய்வதமிருக்குமேயோ. (௫௧)

### வேறு.

வாசநீராடவுமலர்கள்சூடவும்
பூசவுமுடுக்கவும்பூணவுங்கமு
கூசல்களாடவுமூடறீரவும்
பாசிழையார்க்கிராப்பகல்கணீங்குமே. (௫௨)

ஓதவும்வினவவுமொருங்குதேர்ந்தபல்
காதைகண்மொழியவுங்கலைகளூற்கவு
மூதெரிவளர்க்கவும்பூசைமுற்றவும்
போதுபோமார்சருக்கரியபொன்னகர். (௫௩)

மறைவழிவேதியர்மறையினுலுளா
முறைவழிமன்னவர்முறையினுலுல
கிறைவழிகுடிகணின்றினிமையெய்திட
நிறைவழிநடக்குமங்கையர்கணெஞ்சமே. (௫௪)

கணிதநான்மறைகளுங்கலைவல்லோர்களும்
பணிகளுக்கிறைவனும்பார்த்துப்பார்வள
மணிவதற்கரியதாயவனிமாதுகண்
மணியெனச்சிறந்ததிந்நகரின்மாட்சியே. (௫௫)

நகரப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௨-க்கு விருத்தம்-௧௧௨.

# அரசியற்படலம்.

நாரணன்பிரமனேனமாயனமாய்நாடினின்றின்னமுமுணராக
காரணனடியார்க்கெளியவன்பூதகாரியமெவற்றினுங்கலந்த
பூரணன்சோமசுந்தரன்மதுரைபுரந்தருள்பூழியர்பெருமான்
ஆரணன்சரணசரோருகமறவாதநுதினமனத்தினுள்ளமைப்பாம். (க)

வேறு.

சொன்மாவளமல்கியவிந்நகர்த்தோன்றலென்பான்
பொன்மானுறையும்புயபூசரமோங்குபொற்பா
னன்மாசடர்வெய்யவனுதியராயதொன்மை
மன்மாலையுதித்தநாட்டியவாகைவேலான். (உ)

பொய்யாமறைபொய்த்துறினும்புகல்வாய்மைபொய்யா
னெய்யாழல்வேள்விகள்யாவுநிரப்பியென்றுஞ்
செய்யாதனநல்லறஞ்செய்துமுடித்தசீரான்
பையாடரவிற்றுயில்பண்ணவனன்னபண்பான். (ங.)

வேறு.

காற்றினைக்கூற்றினைக்கடுத்துமாற்றலர்
தோற்றிடப்புயவலிதுலங்கும்வென்றியா
னேற்றமென்பேசுவதென்றுநின்றொளிர்
நாற்றிசையிவன்பணிநடக்குநாடொறும். (ச)

ஒன்னலருக்கமுமுயிருமோட்டியே
மின்னவிர்ந்திலங்குகைவேலுந்தேயுமான்
மன்னவர்நவமணிமௌலிதேய்த்தலாற்
பொன்னடியடிக்கடிசிவந்துபொங்குமால். (ரு)

நிழலினைச்செய்யவுமிருளைநீக்கவுங்
குழுமியவுலகெலாங்குறித்துக்காட்டவுங்
கழலணிகழலினன்கவிகைகிற்றலான்
முழுமதிக்கெங்ஙனம்பீடுமுற்றுமால். (சு)

அன்பினையாற்றலாலரியதாயென
முன்பனுய்ச்செய்வினைமுடித்துமுற்றலா
லின்புறுதநயனேயென்னத்தாங்கியே
மன்பிறவுயிரெலாம்வளர்க்குமாண்பினன். (எ)

வெம்புலிபசுவொடுமேவியோர்துறை
செம்புனல்பருகிடச்செலுத்துநீதியா
னம்பினோர்தமக்குயிரொனினுநல்கியே
யிம்பரிற்பெரும்புகழேற்குஞ்சீர்த்தியான். (அ)

வார்திரைக்கடலெனமலிந்ததானையான்
காரெனமுரசொலிகறங்குமுன்றிலான்
மாருதம்பின்னிடவாவும்வாசியான்
பார்மதயானையான்பசும்பொற்றேரினான். (௯)

கங்கையந்துறையினான்கனகக்குன்றினான்
மங்குலார்தருவெனவயங்குவில்லினான்
சிங்ககேதனத்தினான்றிகிரியொன்றினா
னங்கசன்போலழகமைந்தபொற்பினான். (௧௦)

இமைத்தலுமுகிழ்த்தலுமிழந்தவானவர்
தமைத்துணையுறுபுரந்தரனுந்தாழவே
யமைத்தநல்லமைச்சரைம்பதின்மராய்ந்துமேற்
சமைத்தநற்கருமமேசமையுந்தன்மையான். (௧௧)

வேறு.

நிலஞ்செய்நீதிநிரம்பியமன்னர்கள்
வலஞ்செய்தேத்தியமாமுடிசூடினோன்
குலஞ்செய்நன்மையெலாமுருக்கொண்டென
நலஞ்செய்தாலபுரந்தரநாயகன். (௧௨)

வேறு.

ஆயவனரசியற்கமைச்சராகிய
தூயவைம்பதின்மரிற்சுமந்திராகரன்
சேயபல்கேள்வியிற்றேருந்தேர்ச்சியின்
மேயவிந்திரற்கொருவியாழன்மானுமே. (௧௩)

நீதியில்வருபொருணினையும்வன்மையி
லோதுநற்கலையினிலுயருமாண்பினின்
மேதகுசிறப்பினில்வினவுகேள்வியிற்
றீதிலாவிவற்குநேரெவரைச்செப்புகேன். (௧௪)

அன்னவனோடிருக்கவனியெங்கணு
மன்னுசெங்கோன்முறைவழுவொன்றின்றியே
யுன்னுசக்கரஞ்செலவுருட்டிவாழுநாட்
டன்னிலைபுரக்கவோர்தநயனின்மையால். (௧௫)

வருத்தமுமானமுமலிந்துநெஞ்சினி
லருத்தலிலறமெலிந்துயிருந்தேய்ந்துதன்
கருத்தயர்ந்தரசனுங்கலந்துபேரவை
யிருத்தியவமைச்சரோடியம்பன்மேயினான். (௧௬)

உங்களைப்புகல்புகுந்துறுகணின்றியே
யெங்கணும்புகழ்க்கொடியேற்றினாடொறு
மங்கண்மாநிலமுழுதளிக்குமாற்றலோ
டிங்கிருந்தேற்கொருகுறைவுமில்லையால். (கஎ)

புண்ணியமம்மையிற்புரிந்திலாதவென்
னெண்ணருந்தீமையாலிப்பிறப்பினி
னண்ணியபயக்குறைநலியனைந்தற
புண்ணினால்வருந்தினேன்புகறற்கொல்குவேன். (கஅ)

தவ்வுவெண்டிரைக்கடற்றரணிதாங்கினா
னிவ்வரசியற்றினேனெனக்குப்பின்னுறுஞ்
செவ்வியநலந்தருசிறுவனில்லதோர்
வெவ்வழல்சுடவுளமெலிந்துசாம்பினேன். (ககூ)

வேறு.

கொம்மைமாமுலையவரினும்மெய்யுளங்குளிர
வெம்மைநீக்குமின்சொற்சிறார்விளைவுறுகேண்மை
இம்மையிற்றரும்பயனளித்தின்றவர்தங்கட்
கம்மையிற்றரும்பயனுக்குமொருமுதலாவார். (உ௦)

துறந்தவர்க்குந்தூவாதவர்தமக்குந்தொல்புவிமே
லிறந்தவர்க்குநற்றுணையெனவில்லறத்திருப்பா
ரறந்தனக்குறுகளைகணாயவனியிலொருசேய்
பிறந்திடாமவனிமேலதுகொண்டுயர்நலம்பெறுவார். (உக)

மனையறம்புரிந்தாக்கமுங்கல்வியும்வலியு
மெனையசெய்கையும்வாய்ந்துமேல்விழுமமெய்திடினு
நினையுங்காலவர்க்கார்கலிநெடுநிலவரைப்பிற்
றனயரில்லையேலில்லையாம்வீடுமெய்த்தவமும். (உஉ)

பகைகடிந்துநல்லறம்புரிந்தாக்கமும்பயனு
மிகவிளங்குமிந்திரனெனவுவகைவிம்முவராற்
றகவிழந்துதாழ்குலத்துளாரென்னினுந்தமக்கோர்
மகவுவந்துறிலதனறமெவ்வுழிவாய்க்கும். (உ௩)

ஏதமென்பனவிலக்கியேதற்பயந்தெடுத்தார்க்
காதரம்புரிதநயருக்காசையில்லாதோர்
பூதலந்தனிலெனையொழித்தெவர்களைப்புகல்வேன்
பாதகத்துளானினிப்படைப்பதெப்பயனே. (உச)

தினைக்கணப்பொழுதாயினுஞ்சிறாவர்களின்றி
மனைக்கட்பேயெனவாழ்தலினன்கூசமலியு
நினைக்குங்காலதுவெய்யடுநெருப்பெனநெஞ்சின்
முனைக்கொழுந்துபட்டாவியையநுதினமுருக்கும். (உ௫)

ஆதலாலியல்விடுத்தடவியிற்புகுந்து
பூதநாதனையிதயவம்புயமலர்பொருத்தி
மாதவம்புரிந்தருமகற்பெறமனம்வலித்தே
னீதலாலெனக்குறுதிவேறிலதெனிலிசைமின். (உசு)

என்றுரைத்தபோதிறைமலர்ப்பதம்பணிந்தெவருங்
கன்றிவாண்முகங்கவினிழந்துள்ளமுங்கருக
நின்றுகண்களினீருகுத்தழுதுநெட்டுயிர்த்துப்
பொன்றினொனமெய்வொடுங்கவாய்புலர்ந்திடப்புகல்வார். (உஎ)

இந்திரற்குமாலயற்குமற்றெவர்க்குமெய்தாத
விந்தமாநிலத்தரசுவீற்றிருந்திதுகாறுந்
தந்தைபோலெமைப்புரந்தவிப்புரனைநீக்கிப்
புந்திநொந்துடனயர்வதொன்றன்றியென்புகல்வோம். (உஅ)

மக்களாக்கையெய்தீண்டுதலின்பமற்றவர்தந்
தக்கவார்த்தைகேட்பதுசெவிக்குறுமெனச்சாற்று
மொக்கநான்மறையுணர்ந்தமெஞ்ஞானிகளுமுஞ்
சிக்குமாற்சிறுமக்களின்காதன்மேற்செறிந்தே. (உகூ)

சிவனுநான்முகத்தவனுமாலவனுநற்சிறுவர்
கவனமுற்றதாமனைவியர்தநலங்கலந்தார்
யவனமற்றிடிற்பெறுவதும்வளர்ப்பதுமில்லாப்
புவனமுற்றவர்தொழித்தென்புகழ்பூண்பார். (௩௦)

இல்லில்வாழ்பவர்க்கொருதுணையிதனினும்வேறு
சொல்லலாவதென்றீமனந்துணிந்துமாதவஞ்செய்
தல்லறீர்த்தெமையளிக்குதல்கடமையென்றமைச்ச
ரொல்லைகூறியவாய்மொழிகேட்டிறையுவந்தே. (௩க)

செய்யமாதவஞ்செய்துநான்வரும்வரைதிரைநீர்
வையமாநகர்மனைகள்வாசிமற்றுளவுங்
கையடைக்கலஞ்சாமியென்றரசனுங்கழறித்
தையல்பாகனைநோக்கியேதவவனஞ்சார்வான். (௩உ)

தன்னையொத்தொருமகவிலாவறுமையிற்றளர்ந்த
சொன்னதாய்மறைச்சுமந்திராகரனையுந்தொடர்பாய்
மன்னவைசதுடன்வரப்பணித்திருவருமறுநாட்
பொன்னகர்ப்புறங்கடந்தருவனநெறிபோனார். (௩௩)

வீடுவிட்டுநீள்வீதியைத்தணந்தெயில்விலங்கி
நாடுதொட்டுளபதனமுநதிகளுநறுந்தேன்
கூடுகொட்டியசோலையும்பிறபடத்தொடர்ந்த
காடுகிட்டினர்கிரிதிரிவனங்கலந்தார். (௩ச)

அரசியற்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௩-க்கு திருவிருத்தம்-கசசு.

# தாலபுரந்தரன் தவஞ்சுப்படலம்.

---

இந்திரன்வெம்பழிதீர்த்துவெள்ளானைக்கருஞ்சாபமிரியநீக்கி
வந்திதனக்காளாகிமறைநான்கின்பொருளுணர்த்துமதுரைமேவுஞ்
சுந்தரனைநம்சோமசுந்தரனைவிடமருதாய்த்துய்த்துநின்ற
கந்தரனைவந்தனைசெய்தினிப்பிறவாநெறிகூடிக்களித்துவாழ்வாம். (௧)

வேறு.

கடமலிவெங்கயத்தரசன்மந்திரியோடருங்கானங்கடந்தெஞ்ஞான்றும்
புடையருவிமணிகொழிக்கும்புதுமணற்பாறையினறுந்தேன்பொழியுஞ்சோ
வடவரையின்றடஞ்சாரல்வந்தணுகியதிலிருந்துமருவாயோதித் [லை
திடமுறமாதவம்புரியுந்திறன்முனிவர்பெருங்கூட்டஞ்செறியக்கண்டார். (௨)

சிக்கேறுஞ்சடைதிரட்டிச்செடிகொடிபுன்மரமுளைத்துச்சேணளாவக்
கொக்கேறிமலங்கழிப்பக்குறுங்கரையான்பெரும்பாந்தள்குடிகொண்டோங்
புக்கார்ந்தநிலைமாறுப்பொறியொடுக்கித்தவம்புரிவார்பொலிவுநோக்கி [கப்
யெக்காலநமதுதவமீடேறுமெனுமயக்கமெய்தினரால். (௩)

மெய்கருகித்தோனரம்புவெயிற்சுடவெந்தறவலர்ந்துமெலிவுதோன்றப்
பெய்மழையிற்குளிர்பனியிற்பெருங்காற்றில்வருந்தியும்பின்பேதுறுமற்
செய்யுமிவர்நெடுந்தவங்கடேவருக்குமிகவருமையென்றுசெப்பிப்
பொய்யுறவில்லாதவரும்பொருவரியதவக்கோலம்புனைவார்மன்னோ. (௪)

கங்கைகுடைந்தரையினிற்செங்காவியுடைவரிந்திருக்கிக்கவினும்வெண்ணீ
றங்கமெலாம்புதுநிலவார்ந்தழகெறிப்பநரைத்தசடையருகுலாவச்
செங்கைவிரற்பவித்திரமுந்திகழ்குழையிற்குண்டலமுந்திருவில்வீசப்
பங்கமிலாரதிகணவன்பழவடிவுக்கருந்தவஞ்செய்பான்மையொத்தே. (௫)

உண்ணிறைந்தகரணமெலாமொருங்குபடப்புறக்கரணமொடுக்கித்தூய்மை
நண்ணுமிதயாம்பரத்தினாதாந்தமோனமுறுநாதனாகிப்
பெண்ணொருபாகத்தமைத்தபிஞ்ஞகனைப்பிறையணிந்தபெருமான்றன்னை
யெண்ணிமறவாமலநுதினமிருகண்சுழினையின்மேலேறநோக்கி. (௬)

வேறு.

கழற்பருமவிரலூசிமுனையிட்டொற்றைக்கான்மடக்கிமேலிரண்டுகரமு
நீட்டி, யழற்சிகைசூழலங்கிளப்பிமேலாதாரத்தவிர்மதிமேன்மூட்டியுருகநீர்த
தாரை, பழத்திழிதேனெனப்பருகிநட்டாற்போற்பகலிரவின்றேற்றமறப்ப
தைப்புநீங்கி, மழைப்பனிகால்வெயிற்குடையாதசைவொன்றின்றிமாதவ
நோற்றநேகரிங்கிருக்கின்றார். (௭)

புல்லுமண்டிச்செடிவளர்ந்து கொடிசுடாவப் புற்றுயர்ந்துபுயங்கமடை
பொருந்தமெய்யிற், செல்லரிப்பக்குருவியினங்கூடுதொத்தச்செய்யுமிவர்தவ
ங்கருதிச்சேணுளோரும், வல்லிதயக்கனன்மெழுகாய்க்கரையவேனைமாந்தர்
முதற்கண்பணிந்துவருந்தாநிற்ப, நல்லவிவர்நிலைதெரிந்துகைலைமேவுநாயக
ன்மாதுமைக்கித்தனைநவில்வதானான். (௮)

தாலபுரந்தானமைச்சனோடுமைந்தர் தமைக்குறித்துண்டுயில்விலங்கித்தவாங்கமான, கோலமணிந்தருந்தவமேற்கொண்டுநின்றசொள்சைசினைப்பரியபெருங்கொடுமையன்னோர், பாலனாதியுவந்தவரங்கொடுத்துநாமிப்பால்வருவோமெனப்பரமன்பகரக்கேட்ட, சீலமரகதமயிலினழகுவாய்ந்த தேவியிறைபதம்பரவிச்செப்புவாளால். (௯)

பேராசுவாய்ந்தறங்கண்மலிந்தெஞ்ஞான்றும் பெருந்தகைசாலிவர்தமக்கோர்பிள்ளையில்லாக், காரணமென்பகலவர்பின்றவங்களேனுற்கிற்கான்றுளைவந்துற்பவிக்குங்கருமமென்கொ, வீரவம்புனைசடையாய்புகலுகென்றமிமலைதிருமுகநோக்கிநிமலனாபாய்ச், சீரணிபுன்முறுவலளிலவதோன்றச்செழுங்கனிவாய்மலர்ந்திதனைச்செப்புவானால். (௧௦)

புண்ணியங்க ளொன்றொன்றினளவதாசப் போகங்களொன்றொன்றுபொருந்தாசிற்கு, நண்ணியபுண்ணியங்களில்லாதவர்கட்கெந்த நாளினுந்தீவினைநரகநல்காசிற்கு, மெண்ணரியவவ்விரண்டுஞ்செய்தபேர்கட் கின்பதுன்பஞ்சமனைடையாயிவையதாகும், பண்ணுமிவர்புண்ணியத்தாலாக்கம்பெற்றும் பாவயதாற்சோகமிலைபற்றினாரால். (௧௧)

சன்மத்தைநீக்குதற்குவினைத்தவின்பங்கைக்கொண்டுவாழ்வதற்குங்கடந்துநின்ற, சென்மத்தின்புண்ணியமீதன்றியிப்பாற்செய்ததவமிரண்டொழிக்கிற்றிருவொன்றில்லை, வன்மத்தையிழந்திவர்கடவமேற்கொண்டார்மாதேநாமிவர்க்கருடன்மார்க்கமென்றே, நன்மத்தயானையுரிபோர்த்தமுக்கணநாதனுமங்கெழுந்துதவயத்தானம்மா. (௧௨)

திருப்பவளச்சடைவிரிந்தங்கைசயச்சுடுஞ்சிறைமதியும்பெருநதியுந்தெளிந்துதுள்ள, நெருப்பிரவிசசியுறவுமலியுமூக்கண்ணிறைவிளக்கமாகசம்போளிநிறைந்தபச்சைப்,பொருப்புமுலைக்குமரியொருபாகந்தோன்றப்பொலிநகைவெண்ணிலவெறிப்பப்பூதியோங்கி, யுருப்பவளவும்படிந்துவெண்மைகாட்டவுடைபுனைந்தகரியுரியுமொளிகுலாவ. (௧௩)

செங்கைமழுமானிலங்கப்புலியும்பாம்புந்திகழ்ந்திருபாதங்குலவச்செப்பவொண்ணாச், சங்குகண்ணன்மாளாறுதிபூதத்தலைவரொலாப்புடைதழுவத்தயாரன, வைங்கரனோடாறுமுகனிருபக்கத்திலமர்ந்திடவெள்ளேறுகைத்திவ்வண்டமெல்லாந்,தக்கவிளையாடும்பரஞ்சோதியன்னார்தவம்பயிலும்வடவனையின்சாரல்சார. (௧௪)

அங்குவருமளவில்லறையமைச்சன்றங்களாற்கருதித்தவம்பயின்றவழகன்றன்னைப், பங்கமுறுமெதிர்நோக்கியுள்ளத்தோயாப்பரவசமுற்றானந்தபார்ப்பவென்ன, மெங்கணுமின்றலைமெயரிமவுடல்பூரிப்பவெழுந்தெதிர்சென்றனமேனமின்றுங்காணாச், செங்கமலத்திருவடிதஞ்சிரமேற்சூடிதீவினைதீர்ந்தஞ்சலித்தார்தியக்கந்தீர. (௧௫)

பாடினாரமுதமுதபின்னுங்கண்ணீர் பசுங்கொண்டலெனப்பொழியப்பார்மேற்றுள்ளி, யாடினார்பாற்கடற்றென்னமுதுண்டார்போலகத்தடங்காக்களிமயக்கமாகிச்சோகங், கூடினார்தமைமறந்தார்வெயர்த்தார்பேசக்கூசினார்பலபிணியாற்குறைந்துளாவி, வீடினார்மீண்டுயிர்பெற்றெழுந்தவாபோல்விளம்பரியபேருவகைவிம்மினாரால். (௧௬)

வேறு.

நாலுமாமறையாலுநான்முகனாலுமாலவனாலுமே
காலகால்கபாலமேர்த்தியசோதிநின்கழல்காணவே
ஞாலமேலயர்வாகினார்சிறுநாயினுங்கடையானதோர்
சீலநீங்கியசிந்தையேமறிதற்கென்மாதவஞ்செய்துமோ. (கஎ)

அப்புமாமதிசூடுசெஞ்சடையாடவேவிடைமீதினிற்
செப்புமாமுலைமாதினோடிருபாலநம்புடைசூழவே
பொப்பிலாதுவந்தெங்கடவினையோடநல்லருளுந்தினை
தப்பிலாதநலப்பனேயுனையென்புகழ்ந்துரைசாற்றுவோம். (கஅ)

பூவும்வேறியுமெள்ளுமெண்ணெயும்போலவேபுவனங்களின்
மேவுபல்லுயிர்யாவுந்தெயனவேசவாய்திறந்தோதிய
தேவதேவநின்பாதமாமலர்கண்டுகண்டெரிசிக்கவே
யேவரேதவமாகினாரெளியோங்களைத்தவிர்த்திங்ஙனே. (கக)

பாலனாருயிர்பற்றவேபகடேறியேசினம்பற்றிய
காலனாருயிர்காலவேயுதைகாலினாயுனைக்கைதொழுஞ்
சீலமேயுணராதபாதகத்தீயரேம்வினைசிந்தவே
சூலபாணியுன்கோலமிங்ஙனம்நாங்கள்காண்குறுந்தோற்றமோ. (உ௦)

வாதியாதுயர்வாகியேமறைவாடிநின்றினந்தேடியே
சோதியாதுளநீதியேபரஞ்சோதியேயதுகடர்ந்தசெவ்வண்
பூதியேயணிந்தோசொனாதெழிற்பூவையாருமைமாதொரு
பாதியாகியநாதனேயுனையேதுகொண்டிசைபாடுவோம். (உக)

வேறு.

இன்னவாபுகன்றேத்தியவிவர்கண்மேற்கருணை
மன்னிநீண்டகட்கடையருள்வழங்கிவெண்மதியம்
பின்னுசெஞ்சடைக்கடவுணீங்கள்போற்பெரிதா
யின்னிலத்தின்மாதவஞ்செய்தாரொருவருமில்லையால். (உஉ)

பொறிபுலன்கெடுத்தாணவமலவல்போக்கி
நெறியின்மேவிநின்றருந்தவம்புரிந்தநீர்நெஞ்சிற்
குறிபகுத்தியகருமமென்கூறுமென்றுரைக்க
வறிவினோர்மனத்தாகுலம்விடுத்திஃதறைவார். (உங)

கங்கைசூடியகடவுளேகௌவையார்கலிசூ
ழுங்கண்மாநிலமளிப்பதற்காகியமதலை
யெங்களுக்கிதுவரையிலையத்துயரிழப்ப
விங்குமாதவம்புரிந்தனமெனப்பணிந்திரந்தார். (உச)

நாட்டமூன்றுடைநாயகனிருணயந்து
சேட்டநல்வரமுதவினேநூங்கள் பாற்கிடைக்குங்
கோட்டமின்றியகுழவிகள்குவலயந்தனில்
வீட்டுநன்னெறிக்கேதுவாம்புகழறம்விளக்கும். (உரு)

போமினென்றருள்புனைந்தரன்கைலைபசர்கினபின்
நேமிமன்னனுமமைச்சனுமநேடுந்தவம்விடுத்துப்
பூமியெங்கணுமிவர்களையன்றியிப்பூமேற்
சாமியில்லையென்றுரைத்திடத்தம்பதிசார்ந்தார். (உசு)

தாலபுரந்தான் தவசுப்படலம்

முற்றிற்று.

ஆகப்படலம் ௪ க்கு திருவிருத்தம்-௬௭உ.

---

## மகாருற்பத்திப்படலம்.

வாதவூரடிகளடிகளாவுள்ளம்வருந்துறபொழுதுவெம்பரிக்கு
நாதனுய்மதுரைச்செழியனுக்குதவிநல்கருஞ்சொக்கநாயகனை
மூதனையனையபொன்னனையாட்குமூவதம்பொன்றருமிரச
வாதமுன்புரிந்தகைலைவாழ்பவனைவணக்குவையெனதுபுன்மனனே. ()

வேறு.

மனைபுகுந்துதம்மனைவியற்குவகைவாய்ந்தோங்கப்
புனையுமாதவம்புரிந்ததும்புராந்தகனுற்று
நினைவினைத்தெரிந்துதவியதன்மையுநிகழ்த்தி
யெனையவேந்தருமடிதொழவாசுவீற்றிருந்தார். (உ)

இறைவன்றேவியிந்திரையுமந்திரிமனையென்னும்
பிறைநுதற்திருமடந்தையும்பிரியமுற்றவர்தங்
குறைகெடத்தியகொழுநர்மாதவங்களைக்குறித்து
நிறையுமன்பினேடிருந்தனர்நாட்சிலநீங்க. (௩)

வேறு.

அன்னபோதகனாருளாற்றிருக்
கன்னியும்மன்களிக்கப்பின்மந்திரி
பன்னியம்மொருநாட்கோடுபோர்புகழ்
துன்னியோங்கக்கருப்பந்தலங்கினார். (௪)

இல்லையுண்டென்றிசைத்தவசைத்திறச்
சொல்லையுண்டுவண்டமென்சிற்றிடை
யல்லனிந்திவிரிச்சழகார்ந்திட
வல்லியர்ச்சுக்கருப்பம்வளர்ந்தவால். (௫)

செய்யவாய்வெளுப்பேறத்திருமுகந்
துய்யவெண்மதிபோன்றதுல்கைப்பொன்
மெய்பசந்துமுலைநுனிமென்கறுப்
பெய்தநீண்மயக்கான்மனமெய்த்தனர். (௬)

சாம்பலும்புளியுந்தின்னத்தம்மனத்
தேம்பலுற்றதோராசையெழுந்திட
வீம்புசெய்தனர்தின்னவிருப்பிலாச்
சோம்பறின்னத்துவண்டுவருந்துவார். (௭)

திங்கடிங்களிற்செய்யுஞ்சடங்கெலாந்
தங்கியின்பந்தழைத்தமனத்தினர்
பொங்குதிங்களோர்பத்தும்பொருந்திமே
லங்கனருகுலுளைவாற்றளர்வாகினர். (௮)

நல்லநாளினினற்கிரகங்களு
மொல்லைசேர்ந்துவந்துச்சமபெற்றோங்கிட
வல்லநீர்த்துலகெங்குமறந்தரச்
செல்வமாநகருங்களிதங்கவே. (௯)

பானுந்திங்களும்பாய்திரைவாருதி
தான்மிதந்துதிகழ்ந்தொளிர்தன்மைபோன்
மீனுமானும்வெருண்டவிழிக்கடை
மானுமங்கையர்மைந்தரைவாய்த்தனர். (௧௦)

ஞாலமேந்தியசோதிதிருவருட்
பாலர்வந்துபிறத்தலும்பாரெலாஞ்
சீலமோங்கத்திருவுந்திருவுறக்
கோலமன்னமைச்சுங்குளிர்ப்பெய்தினர். (௧௧)

வயங்கலிக்கச்சொல்வண்மைகலிக்கப்பொற்
புயங்கலிக்கப்பயோதரம்போர்த்தபல்
லியங்கலிக்கத்துன்பின்றியெழுந்தசீர்
நயங்கலிக்கக்கலித்ததந்நாடெலாம். (௧௨)

சங்குகைத்துடிதாரைதவின்முர
செங்குமந்தெனவதிர்ந்தேங்கிடத்
துங்கவேதியராசிகள்சொற்றிடக்
கங்குவெண்கவரித்தொகைகாறர. (௧௩)

சீதவாண்மதிபோன்றதிகழ்ந்தொளிர்
சோதிவெண்குடைபொன்முடிசூழ்வர
மாதர்பாட்டொலியாழொலிமாதிர
மீதுமண்டப்பல்லாண்டிசைவிம்மவே. (௧௪)

வளைவேந்தருமாந்தருமின்சொல்பொன்
மானைவென்றவரிவிழிமாதருங்
கோனையங்கைகுவித்தொருங்கிடத்
தானைமாக்கடற்றாரணிபோர்ப்பவே. (கரு)

நூலுணர்ந்துநவன்றதஞ்செய்வினைக்
காலமோர்ந்துகருமங்கள்கைதொறும்
பாலின்வாலியவுளவுபடைத்தோர்
சீலமார்ந்தபழையவர்சேரவே. (கசு)

வேந்தருக்குறுதன்மையுமேதினி
மாந்தருக்குறுவண்மையுந்தமதிச்
சாந்தமுடைமைத்திட்பச்சமனிலை
யேந்துகோலினமைச்சருமெய்தவே. (கள)

கொங்குதாரணிகோக்களிறேறென
வங்கைவல்லணியன்னனவாவொடு
சங்குபொன்மணிதூற்றுதடந்திரைக்
கங்கைமாநதிமூழ்கிக்களிப்புற. (கஅ)

தோடுமென்குழைத்தூயிளமாதருஞ்
சோடுவாய்ந்ததுணைநலமைந்தருங்
கோடுமால்கள்கூடுபிடியொடு
மாடுகின்றதுபோற்புனலாடினர். (ககூ)

வெள்ளநீர்நிருத்தேமறவெள்ளநீர்ப்
பள்ளமீதுபுகுந்துபடிதல்போல்
கொள்ளைமாப்படையாவுங்குழுமியே
புள்ளலம்புபுனல்குடைந்தேறன. (உ0)

வேதமோதுசங்கற்பவிதிப்படி
சீதமென்புனலாடியதேர்வலான்
பூதிபன்னிப்புனைந்தைந்தெழுத்தினை
யோதியீசனைத்தொழுவந்தேத்தியே. (உக)

பேணவேலைப்பெரும்பொருள்வாங்கிமெய்த்
தானமென்பனயாவுந்தனித்தனி
மானநான்மறைமாக்கடையர்க்கெலா
யானவாசையினுசமுன்னுக்கினான். (உஉ)

இந்தலாவமெழின்மணிமாளிகை
வந்துபொன்னரியாசனமேவியே
தந்திரித்தலைவோர்க்குத்தனதுறை
மந்திரித்தலைவோர்க்குமவழுத்துவான். (உங)

அந்தணாளர்க்குமாதரமீக்கொடு
வந்தவந்தவறிஞர்க்கும்வாணர்க்கு
மிந்நாட்டொடுத்தேழ்தினம்பொன்னறை
சொந்தமென்றுமுராசந்துவைமினே. (உச)

சாருமேழுவருடந்தனிவுள
வாரமில்லைவரியிலையென்றுசொ
லூருநாடுமுலகுமுணர்ந்திடப்
பாரமாமுரசெற்றப்பணிமினே. (உரு)

இட்டகாற்றளைவெட்டியிருஞ்சிறை
நட்டவேந்தரைநாட்டுக்கனுப்புமி
னெட்டிரண்டுளவாண்டுக்கிறைவர்கள்
கட்டுபொற்றிறைநீக்குதல்காணுமின். (உசு)

ஆலயம்புதிதாக்கியதற்குள
வேலைபூசைவிதிமுறையாற்றுமின்
சாலையந்தப்படிசமைத்தின்புறஞ்
சோலைகோடிதுலங்கிடச்செய்யுமின். (உஎ)

தீபமென்னத்திகழுநந்தாவன
நீபநீகோவூடுநிரப்புமின்
ரூபமாகியமாந்தர்தளிர்ப்புறக்
கூபம்வாவிகுளம்பலகூட்டுமின். (உஅ)

இன்னமாநகரத்துமிதன்புறந்
துன்னுமூருமவிழவுதுலங்கிடப்
பன்னுமென்னப்பணித்ததற்கெண்மடங்
கன்னகாலையிற்செய்தமைத்தாரரோ. (உகூ)

சீரிணங்குசிகழிகைசேர்த்துமேற்
றோரணங்கடெருத்தலைதாக்குவார்
பாரிணங்குபொன்மாடப்பரப்பெலாங்
காரிணங்கெழிற்கேதனங்கட்டுவார். (௩0)

தூய்யவெண்முளைப்பாலிகைதாமதி
யெய்திறுலெனவெங்குநிரப்புவார்
செய்யபூரணகும்பங்கள்சேர்த்துமேல்
வெய்யவன்கதிர்போல்விளக்கேற்றுவார் (௩க)

சாந்தமென்பனிசந்தனங்குங்குமஞ்
சேந்தபொன்னகரத்தெருவெங்கணு
மாந்தருக்குமடந்தையர்மாந்தரப்
பூந்தண்வார்குழலார்க்கெதிர்பூசுவார். (௩உ)

நஞ்சினஞ்சுகனிகலந்தாலெனச்
செஞ்செவேல்விழிச்சஞ்சனந்தீட்டியே
மிஞ்சுபொன்னணிமெய்புனைந்தெங்கணு
மஞ்சுநோக்குமயிலெனச்செல்லுவார். (௩௩)

முத்தம்பொன்னுமுழுதிக்குப்பையுங்
கைத்தலங்களிலள்ளிக்கணக்கிலாச்
சுத்தவீரருந்தூயநன்மாதரு
மத்தன்பூசையோடாதுலர்க்கீவரால். (௩௪)

பாலுநெய்யும்பருப்புங்கலந்துமென்
சிலம்வாய்ந்திடுசோறுதிரட்டியே
கோலமாநகர்க்கோக்களுமாக்களும்
நாலுபாலினுநல்விருந்தூட்டுவார். (௩௫)

கொந்துமென்குழற்கோதையர்கைகளாற்
பந்துபொற்கழங்காடல்பயின்றிடக்
கந்தனும்மலர்க்காமனுநாணுரு
மைந்தரெங்கணும்வாளமாடுவார். (௩௬)

உரிமையுன்னியுவந்துவந்தின்புற
மாசர்கோடியநீகமதம்பொழி
கரியுகைத்துக்கதிர்மணித்தேர்நிரை
பரிசெலுத்திப்பவனியுலாவுவார். (௩௭)

இன்னணங்களித்திரெட்டுநாள்வரைச்
சொன்னதானஞ்சுரபியின்றனமோ
டன்னதானங்களாற்றிநகரெலா
முன்னியுள்ளிக்குதுகலமோங்கவே. (௩௮)

கற்றறிந்தகணிதர்களூன்முறை
யுற்றநாடிதியோகங்கரணங்கள்
சொற்றசாதகசன்மந்துலக்கியே
கொற்றவற்களித்தாரக்குரிசிலும். (௩௯)

வாங்கிநோக்கிமலைநிகர்பொற்புயம்
வீங்கத்தூங்குமகிழ்ச்சிமிகுத்திட
வாங்குநின்றகணிதர்க்கருங்கலி
நீங்கப்பொன்மணிதூசுசிரப்பியே. (௪௦)

மந்தமாவயமாப்பரிபொற்குடை
சுந்தரப்பொற்கவரிசுருட்டிபொன்
றந்ததந்தச்சிவிகைதனிப்புவி
நந்திடாதவர்க்கின்புறநல்கினன். (௪௧)

ஈரவெண்கதிரிந்துவைக்கண்டுகண்
டாரவாரஞ்செய்யாழியின்வேந்தனுஞ்
சீரமைச்சனுஞ்சிந்தையினாகுலந்
தீரவேகளிதேங்கச்சிறந்தனர். (௪௨)

வேறு.

சூதமுனிக்குந்தமிழ்முனிக்குந்துகடீரனைமுனிவரர்க்கும்
போதமிகுத்தபெருந்தகைமைப்புணரிபோலும்புகல்பலநூ
லோதியிதயாம்பரந்தெளிவுற்றுயர்மாதவஞ்செய்பிருகுமுனி
பாதம்பரவித்திருநாமம்பகரப்பணித்தான்பார்வேந்தன். (௪௩)

தங்கள்குருவாம்பிருகுமுனிதநயற்குரியகுறியிடங்க
ளங்குநோக்கியரனருளாலுதித்தவரசன்றிருமதலைக்
கிங்குபுவனேந்திரனெனப்பேரியம்பியமைச்சனிளஞ்சேய்க்குச்
சங்கையணுகாப்புத்திசிகாமணியென்றுரைக்கப்பெயர்சமைத்தான்.

மறைதேர்முனிவன்றிருத்தாளின்மகாரைக்கிடத்தித்தான்பணிந்து
குறைபோயகலவரன்முறையாற்குருவுக்குரியகடனியற்றிச்
சிறைவண்டினங்கள்கிடந்தொலிசெய்தெரியன்மவுலித்தேர்வேந்த
னிறையுமறவாதன்பியற்றிவளர்க்குந்தாயரிடத்தீந்தான். (௪௫)

பாலர்க்குரியசெவிலியர்கள்பகர்தற்கரியதங்கள்கனைக்
காலிற்கிடத்திநீராட்டித்துவட்டிதிலக்காப்பெடுத்தணிந்து
கோலவயினீர்சுழற்றித்தெய்வங்குறித்துக்கும்பிட்டுச்
சீலங்குலவக்குழுமைபலசேர்த்துப்புகட்டிப்பாலூட்டி. (௪௬)

முத்துமணியும்புடைகுயின்றுமுழுவெண்வயிரந்துவர்ப்பவளம்
பத்திநிறைத்துமரகதக்கால்பாய்ச்சிப்பசும்பொற்றும்பிசைத்து
மெத்தைவிரித்தோதிமத்தூவிவிரவிநறுமென்மலர்பொதுளி
வைத்தபசும்பொனணியூசல்மைந்தர்துயிலக்கண்வளர்த்தி. (௪௭)

பொன்னேமணியேமரகதமேபூவினரும்பேபசுங்கரும்பே
மன்னேயிறைவர்கண்மணியேவானிற்குலவுமதிக்கொழுந்தே
மின்னேகடையாப்பாற்கடலில்விளைந்தவமுதேசுடர்விளக்கே
யென்னேயெனச்சீராட்டியபண்ணிசையோடுறங்கத்தாலாட்டி. (௪௮)

எற்றம்பிறிதொன்றறநின்றுதவத்தோர்தவத்தையேற்றுநல்போன்
மாற்றமறியாநன்மகளிர்கற்பைமலியவளர்ப்பதுபோற்
போற்றிவளர்க்குங்கலைபெருகிப்பொலியும்வானின்முழுமதிபோற்
றேற்றம்பிறங்கியழகிலங்கச்சுதர்கள்வளர்ந்தார்சுகமாக. (௪௯)

தண்டைகலிப்பச்சிறுசதங்கைதாளிற்புனைந்துதனிப்பவளத்
துண்டினிடைவெண்மதிநிலவுகுட்டியமைத்தவாறதுபோன்
மண்டுவயிரக்கணையாழிமலர்மென்கரத்தின்விரன்மாட்டி
யண்டத்திருணீக்கியகதிர்போலணிபொன்மணிப்பூண்பலவணிந்து.

சவளநிரப்பியமுதருந்துஞ்சடங்குபுரிந்துமற்றெல்லையுங்
கவளக்களிற்றினரசர்பிரான்காலந்தெரிந்துகனிந்துதவத்
தவளநகைவெண்ணிளமூரற்றநயர்வளர்ந்தார்வயதைந்திற்
றவளமார்பிலுபநயனவதுவைசூட்டித்துயர்தீர்ந்தார். (௫௧)

காவுகாந்துபுலன்கடிந்துகாலங்கடந்துமேலுணர்ந்த
குரவன்பிருகுமுனிவனிருகுளிர்தாமரைப்பொன்னடிபாவி
யாசர்பெருமான்றிருப்புதல்வர்க்ககந்தூயுறுஞ்சீர்கலையனைத்தும்
விரவியளிக்கும்படிக்குரியகடன்களாற்றிவிடுத்தனனால். (௫௨)

தனதுமைந்தர்குருமைந்தர்தானிக்கிறைவர்தருமைந்தர்
மனதுக்கினியதிருமைந்தர்வறுமையகற்றும்பொருண்மைந்தர்
வினவற்குரியாரவர்தமக்கேவிளம்பற்குரிமையெனப்பன்னூன்
முனமிப்படிச்சொன்முழுதுணர்ந்தமுனிவனேதவோதினரால். (௫௩)

வன்சொலகற்றிவழுக்களைந்துகுருசொல்பொருளின்வழிமருவித்
தென்சொற்பயின்றுவடகலையுந்தெளிந்துதேனும்பாலும்போ
லின்சொலிதுவென்றறிஞர்குழாமேமோந்துள்ளந்தடுமாறப்
புன்சொல்லறியாத்திருப்புதல்வர்பினுந்தேர்முயற்சிபொருந்தினரால்.

வேதம்பயின்றார்சாத்திரங்கள்பயின்றார்புராணவிதிவிலக்குப்
பேதம்பயின்றார்பலமதங்கள்பிதற்றும்பிணக்கின்வகையறியும்
வாதம்பயின்றார்சொற்றேறுவழக்குப்பயின்றார்பயனுதவுங்
காதைபயின்றார்பிறவுமுளகலைகட்கிவரோர்கடலானார். (௫௫)

அணிமாமகிமாகரிமாவுமிலகிமாவும்பிராத்தியுமார்
தணியாப்பிராகாமியமும்வசுத்துவமுமீசத்துவமுஞ்சால்
பிணிதீரட்டமாசித்திவகையுமதனாற்பெறும்பேறுந்
துணிவிற்பயின்றங்கவர்களநுபவத்திற்கொண்டுதுகளோர்ந்தார். (௫௬)

வில்லின்றொழிலுங்கரிபரிதேருகைக்கும்விதமும்வீரமிகு
மல்லின்முறையும்போரடர்க்குமாற்றார்மருளவலியுந்து
சொல்லின்றிறனுமற்றுமுள்ளதொழிலும்புரியுஞ்சூழ்ச்சிகளு
மெல்லையிலையென்றெவர்களுங்கண்டியம்பப்பயின்றுவெளிதாக. (௫௭)

ஏற்றந்தாழ்வுசிறிதின்றியெல்லாவினையுஞ்சமயாகப்
போற்றுங்குருவாற்றிரிபையம்பொருந்தாதுணர்ந்தபுதல்வர்க்குட்
சாற்றுமதியானதிகமதாய்த்தனிவிடினவர்தாமீளத்
தோற்றம்புரியும்விஞ்சையொன்றுகற்றான்சுரார்மானிடர்துதிக்க. (௫௮)

கற்றகலைகட்கெண்மடங்குகவினுங்குணமுங்கருணையும்வாய்ந்
திற்றமைந்தர்தமைநோக்குந்தோறுமுவகையுளத்தூறும்
பெற்றகுரவர்சுற்றத்தார்பெற்றிபேசற்கெளிதன்றே
மற்றுப்பகைஞர்கட்பாகியிவர்தங்குறிப்பின்வழிநின்றால். (௫௯)

பருவம்பனிரண்டினிற்சிறந்தபழையமதனன்பன்னிருகை
முருகனிவர்தாமெனுங்காதன்முதிர்ந்துபுவனமுழுதேத்த
வுருவங்கஞலுந்திருக்குமரரொருவர்க்கொருவர்பிரியாமற்
பெருகுமன்பிற்செய்வினையிற்பிழையாநேசம்பெரிதானார். (௬௦)

தாய்போலுண்மைதனைப்பேணித்தந்தைநிகர்ஞானந்தழுவி
நேயவறத்தைச்சோதரனாய்நிருவித்தயையைநீங்காத
தூயசிநேகமெனச்சாந்தஞ்சொல்லுமனையாய்ச்சுதன்மானு
மேயபொறுமையகலாமலெவர்க்குமேலாய்விளங்கினரால். (௬௧)

வேறு.

இருளறவருகதிர்மதிபுரையிவர்தம்
மருளறமனவெளிமணியொளிவிரியா
வருள்வலைபடுகயலெனவுயிரணவத்
தெருளுறுவினைநனிதினமருவினரால். (௬௨)

சிலைபயில்கரவலர்திருநகர்புறமா
ரலைபுனனதிகுளமணிபொழில்வனைநீண்
மலைகடலிடநொடிவரையளவிலுமோ
ருலைவிலதிவர்நிதமுலவினர்வருவார். (௬௩)

பகன்முழுவதுமிவர்பழமலிபொழிலார்
மகிநறைமுனிவரர்மலரடிபரவித்
தகுகதைபொருள்பலவினவுவர்தபன
னுகுவெயின்மறையமைதியினகருறுவார். (௬௪)

ஒருவரினொருவர்தம்வலிநிலையுணர
மருவிமல்புரிகுவர்வரிசிலைகுனித்
தெரிகணைகொழுவிமுனைதிர்குறிபிழையாக்
கரவிரலுதவுவர்மருவலர்கவல். (௬௫)

கந்துகநடவுவர்கவுண்மதநிரைசா
றந்திகணிரைநிரையுந்துவர்சரளப்
பந்துகள்பயிலுவர்படைமதனெனவே
விந்தைகொள்புயவலிவிளைதரவளர்வார். (௬௬)

திருநகர்புறநகரிவர்நிலைதெரிவோர்
வருமவர்புரிசெயன்மனவலியுணராப்
பொருமவரவரவர்புரிதவமகவென்
றுரிமையொடநுதினமுருகுவருளமால். (௬௭)

இன்னணநிகழ்வுழியிறைமகனொருநாட்
டன்னுயிரினுமிகுதகைமைகொள்புலமை
மன்னியமதிகலைமதியழகுறுசீர்
நன்னிலையவனிஃதுணர்வுறநவில்வான். (௬௮)

உளையலதிலையெனதுயிருகினாயிரு
மெனையலதிலையெனுமொழியிதுசரதம்
மனதினிலொருபொருளுளதுநன்மதியோ
யினியஃதுணர்கெனவிவையிவைபுகல்வான். (சுகூ)

வேறு.

நயந்தருந்தந்தையானோர்நற்றவம்புரிந்துநம்மைப்
பயந்துறுகலைகள்யாவும்பயிலுவித்தன்புசெய்ய
வயந்தரவளர்ந்துபின்னுமதியினாலுணரத்தக்க
செயந்தருபொருள்கடேர்ந்துவந்தனந்தீதொன்றின்றி. (எ0)

கற்றனகலைகட்கேற்பக்காசினிமீதிலுள்ள
மற்றுளநாடுநாட்டின்வளங்களுமௌலிமன்னர்
வெற்றியுமவர்தஞ்செய்கைவிநயமும்பிறவுந்தேறி
யுற்றிவண்வருவோமாகினமக்குமேலொருவருண்டோ. (எக)

எத்தனைகற்றபோதுந்தன்மதியிருந்தபோது
மத்தனையளவின்மேலுமயற்புலத்தவரினல்லோர்
புத்தியுமவர்களாற்றும்புனிதமுந்தெரிதன்மேலென்
றுத்தமமறைகளாதிநூல்களுமுணர்த்திற்றன்றே. (எஉ)

சிறிதுநாட்செல்லிற்செம்பொற்செழுமணிமௌலிவேய்ந்து
முறிதிரைப்பரவைஞாலமுழுவதுங்காக்குஞ்செங்கோ
லிறைமையிலிருத்துவார்பின்னிறையினுந்தவறிவேறோர்
முறைமையுமினைதற்கொவ்வாதரசியன்முயல்வதாகும். (எங)

ஆதலாலிதுகாலத்திலாள்பரிகரிதேரின்றி
மேதகுசிவிகைவெண்சாமரங்குடைவிழுப்பமின்றித்
தாதைபால்விடைபெற்றிந்தத்தரணிவளங்கள்பார்க்கப்
போதலேநலமென்றென்றன்புந்தியினினைக்கின்றேனால். (எச)

நின்கருத்தெனக்குத்தோன்றநிகழ்த்துவாயென்னக்கேட்ட
மன்கருத்துணர்ந்தபுத்திசிகாமணிவணங்கிமுன்னா
லென்கருத்தன்னதென்றிங்கிசைத்தநீமறந்தாய்போலும்
நன்கருத்துடைப்போயென்னைவினாவுதனியாயமன்றே. (எரு)

ஆக்கைவேறின்றிச்செய்கைகுணமுதலமைந்தவேனைச்
சேர்க்கையுமொன்றென்றெண்ணுஞ்செயல்பிழைத்ததற்குமாறாய்
வாக்குரைபுகறற்கர்தமட்டினான்கற்றதுண்டோ
பூக்கிளரலங்கலோயென்றீதையும்புகல்வதானான். (எசு)

கற்றறிவுடையையில்லாக்கயவர்களெனினும்போந்து
மற்றுமோர்தேயஞ்சேரின்மதிநுணம்வனப்புவேறாய்ப்
பெற்றவருள்ளார்போலும்பீடுவாய்ந்துருவமொன்று
வெற்றிநின்மேற்கொண்டாக்கமளிக்குமென்றியம்புவேனால். (எஎ)

ஆர்த்தலைப்பாவைசுற்றுமவனியாத்திரைசெய்வோர்க
ளூர்த்தமும்பெரியோர்பாதசேவையுஞ்செப்பவொண்ணு
மூர்த்திகளருளுங்கொண்டுமுற்றிலுநலமேயாகி
வார்த்திகந்தனிலுங்கூற்றின்வாதைதீர்ந்துய்வான்றே. (எஅ)

எல்லையிருற்றத்துள்ளேமனிதராய்ப்பிறத்தலென்று
நல்லதிங்கதனின்மேலுநல்லதுசெல்வநண்ணல்
கல்விமற்றதனின்மேலுநல்லதுதலங்கள்காணச்
செல்வதுபோலுமில்லைநல்லதுதேருங்காலை. (எகூ)

பிணியணுகாதுமுன்செய்பெருவினைமுழுதுந்தீரு
மணியுறுஞ்சீர்த்திமேற்கொண்டளிக்குநல்லாக்கநல்குந்
தணிவில்யாத்திரைபோலொன்றிங்கிலையெனத்தாணியோர்கண்
மணியெனவிளங்கும்புத்திசிகாமணிவழுத்தலோடும். (அ0)

தன்னுளத்துவகைகூர்ந்துசாற்றுமந்திரியைநோக்கி
நின்னுளந்தெரிந்தேன்முன்னநெடுந்தவநோற்றுப்பெற்ற
மன்னுளமறிந்துநாளையேகுதல்வரம்பாமென்றான்
முன்னுளவரசர்க்கெல்லாமுதன்மைபெற்றுயருமொய்ம்பன். (அக)

மகாருற்பத்திப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௩-க்கு திருவிருத்தம்-௨௫௩.

---

# மந்திராலோசனைப்படலம்.

கல்லானைகரும்பருந்தக்கற்பித்தாயைக்
கலந்தணைந்துதாதையுயிர்கவர்ந்தபாவப்
பொல்லானைநல்லானுப்பொருத்திவெய்ய
புரம்பொடியப்புன்முறுவல்பூத்தமேரு
வில்லானைக்கரிக்குருவிக்குபதேசித்த
வித்தகனைப்பழமதுரைமேவிவாழும்
வல்லானைப்பிறப்பிறப்பற்றகண்டாகார
மாகிவளர்சுந்தரனைவணக்கஞ்செய்வாம். (க)

வேறு.

பற்பலயோசனைப்பரப்புக்கொண்டுமே
வெற்பொலிமண்டலமியயநீண்டது
சிற்பநூல்வரம்பையுந்தெரித்துமுற்றிலும்
பொற்பமைந்தமரர்பொன்னுலகம்போன்றது. (உ)

மேயவானிரவியுமதியும்வெள்குறச்
சேயொளிநவமணித்தாணஞ்சேர்த்திமேற்
பாய்பசும்பொன்மணித்தகடுபாய்ச்சிமுத்
தாய்கதிர்விமானம்வைத்தழகமைத்தது. (௩)

எப்பெருமலைகளுங்கடலுமெண்ணுரு
தொப்பமையுலகமுமுலையுங்காலத்துந்
தப்பிவேறழிப்புகாவலிமைசார்ந்தவா
னப்படைமுகிலுருத்தமைத்தமண்டபம். (௪)

அன்னமண்டபத்திடையலங்குதாசிஞ
னின்னியங்கடனிகர்த்திரைப்பவெங்கணுங்
கன்னியரிரட்டுவெண்கவரிகாறத்
துன்னியநிலவுமிழ்கவிகைசூழ்வர. (௫)

அந்தரத்தரம்பையையழகில்வென்றதோர்
சுந்தரத்திருநுதற்றேவையாயமும்
மந்திரத்தவர்பெருக்குழுவும்வாய்ப்புறத்
தந்திரக்கடனிறைதமுவமேயினன். (௬)

அங்கண்வானகத்துறமொற்றராய்மணிச்
சிங்கசேதனத்திஞன்சீர்மைநோக்கியே
தங்கஞயகனெனச்சார்ந்துகண்களோ
யிங்கிவற்காயிரமிலையென்றேகினர். (௭)

ஆயதோரமைதியினாசன்பாலினி
லேயதங்கருத்தினையியம்பற்கெண்ணியே
சேயருமவ்வுழிசென்றுகைகளா
ஞயகன்பதமலர்கனிதுபோற்றினர். (௮)

பார்மிசைவீழ்ந்தடிபணிந்தமைந்தரைத்
திரனுமெடுத்துமார்பிறுகச்சேர்த்துமே
லார்வமோடிருபுறமமைத்தவாசனஞ்
சார்புறவிருத்திநன்முதுகுதைவரா. (௯)

இனியநண்பரைக்குரவரையிலாவுழி
வினைஞராவேலையின்முடிவின்மெய்ச்சிரை
மனைவியையமலியின்மைந்தர்தங்களை
நினைவினிற்புகழ்வதுநெறியென்றுன்னியே. (௧௦)

மைந்தர்மேலூறியவன்பைமன்னவன்
சிந்தையின்புறஞ்செலாதடக்கித்தீஞ்சுவை
தந்தசொற்புதல்வர்கடமதுமாமுகத்
திந்தவைநோக்கியாங்கிவைவிளம்புவான். (௧௧)

என்பெருந்தவத்தினுமெனதுமுன்னவர்
மன்பெருந்தவத்தினும்வனப்புவாய்ந்தநம்
அன்பினுக்கவதியென்றமைந்தநின்றனி
ரின்புறவந்ததங்கருத்தையெண்ணினல். (௧௨)

மனத்தினிலொருபொருண்மருவியக்கதை
நினைத்துளம்வருந்தியநீர்மையாமெனக்
கனத்தநம்முகக்குறிகாட்டிற்றாலதின்
வினைத்திறமினதெனவிளம்புவீரென்றான். (௧௩)

சொற்றபோதிருவரிற்றோன்றன்மாமகன்
நற்றவிசகன்றெதிர்நண்ணிநாயகன்
பொற்றிருத்தாண்மலர்போற்றிவாய்புதைத்
துற்றதன்கருத்தினைத்தெரியவோதுவான். (௧௪)

மக்களுக்காற்றுதந்தைமக்களின்
றக்கவரிவரெனுந்தகைமைமக்கடா
மிக்கவிங்கிவர்ப்பெறவிரும்பித்தந்தைமுன்
றொக்கமாதவமென்சொல்லென்னுஞ்சொல்லதே. (௧௫)

இந்தமாநெறியுணர்ந்தெங்கட்காவதோர்
செந்தனிக்கலைமுதற்பிறவுஞ்செய்தநு
மந்தமில்புகழ்க்குமாறாற்றற்கெண்ணிய
சிந்தையுட்கருத்தினைச்செப்பன்மேயினோம். (௧௬)

வில்வலியுரிமையுமழகும்வீரமுஞ்
சொல்வலிவிநயமுந்துணிபுஞ்சூட்சியு
மெல்லையில்கல்வியுமியைந்தபோதினு
மில்லைவேறுழிப்புகாதவர்கட்கென்றுமே. (௧௭)

படத்தாவேந்துமிப்பாரிற்பற்பல
விடத்துறும்பொருள்படாதவர்கட்கென்றுமட்
குடத்தினுள்ளேற்றியவிளக்கின்கொள்கைபோன்
மடத்தொழிலன்றிநன்மதியுண்டாகுமோ. (௧௮)

மற்றவர்தம்மினுமெளவிமன்னர்கள்
சொற்றதோர்புறநகர்துருவியாக்குறை
கொற்றவர்செயலெலாந்தெரிந்துகொள்வரேல்
வெற்றியென்பதுபினும்வேண்டவேண்டுமோ. (௧௯)

என்பதைக்கருதியுமெமக்குநீர்செயு
மன்பினுக்குதவிவேறாற்றற்குன்னியு
முன்பனேபுறநகர்முழுதுநோக்குதற்
கின்பமுற்றனமிதிலின்னமொன்றுள. (௨௦)

தேர்பரிகரிமணிச்சிவிகைசாமரம்
பேரிகைகவிகையாட்படைபின்மற்றுள
சீர்தருபொருளெலாமின்றித்தேர்மதித்
தார்புனைமந்திரிதநயனோடுமே. (௨௧)

போவதற்கெண்ணினேன்பொருந்திநீவிடை
தாவெனப்பணிந்ததன்றனயன்சொற்செவி
மேவலுங்கொடியதிவிடமுண்டாலெனக்
காவலனுயிர்நிலைகலங்கினானரோ. (௨௨)

பெயர்த்தொருவார்த்தையும்பேசப்பேசிடா
தயர்த்துநின்றாருயிரூசலாடிட
வெயர்த்தனன்மெலிந்தனன்வெதும்பியேங்கிமூச்
சுயிர்த்திலனொடுங்கினனுணர்வுள்ளோயவே. (௨௩)

வேலுடனுழைத்ததன்வீரஞ்சிந்திய
மால்கரிபோன்றதாய்மன்னன்பூவணை
மேலவசத்தொடும்வீழ்ந்தெழுந்துதன்
பாலனைநோக்குவான்பையுளுரைக்குவான். (௨௪)

ஆர்வமுந்துன்பமுமகங்கொளாதுதன்
மார்பினோடிறுகுறத்தழுவிமைந்தன்மேற்
கூர்விழிப்புனலின்மஞ்சனங்கொண்டாட்டிமெய்ச்
சோர்வினோடின்னனசொல்லன்மேயினான். (௨௫)

வேறு.

என்விழியுமென்னுயிருமென்னுடலும்புவியரசுமெவையுமிந்த
நன்மகனையன்றிமறுபுகலுளவோவிவன்கானினடக்கவேநான்
றன்னுபெருஞ்செல்வமெலாந்தனியாகியிவணிருந்துதுய்க்கிலென்போன்
மன்னவர்களென்சொல்வாரன்றியும்பின்னிதுபோலும்வசைமற்றுண்டோ.

பிள்ளையிலாப்பெருந்துயரந்தணந்தேகமதியணிந்தபெருமான்றந்த,வள்
ளலிவன்பிறந்ததொட்டிதகாறுமனம்படைத்தமகிழ்ச்சியெல்லாங், கொள்
ளைகொண்டுபிரிவெனுஞ்சொற் கூற்றுண்ணவேதனைமேற் கொண்டபாவிக்
குள்ளுயிர்வைத்திவ்வுலகிலுற்றிருக்கநியாயமினியுண்டோவுண்டோ. (௨௭)

முலைப்பாலின்மணமாறுமுளரிமலர்த்திருவாயான்முதிர்வெங்கானு
மலைப்பாலும்புறநகருஞ்செல்லுவனென்றென்பாலின்வழுத்தற்கிங்கு
கலைப்பார்கள்கலைத்துளபுன்கட்டுரையேயன்றியிவன்கருத்திலுன்னிச்
சொலப்போமோயாவர்கொலிச்சூழ்முடித்தென்குடிகெடுக்கத்துணிவுகொண்
[டிற்றார்.] (௨௮)

கைமலராலனமன்னியுணவறியானிடையிலுடைகட்டவோரான்
செய்மலரினமளிவிட்டுத்தெருவிலினநடைபடிக்கத்தெரியான்றீச்சூழ்
வெய்யநெடுங்கானேகவிரும்பினன்றான்விளையாட்டோவினைமற்றியாதோ
மெய்யிதுவேற்பொய்யாதென்னுயிர்பிரிந்துநமனுலகமேவுமாலோ. (௨௯)

வருமகஞ்செய்தெமதுகுலம்வாழ்வித்ததசரதனும்வருந்தியின்ற
பெருமகவுநான்கிலொருதிருமகனுங்கான்புகுதப்பிரிவாற்றாமற்
றருமகநொந்துயிர்விடுத்தானொருமகனைப்பிரிந்துயிர்நான்றரிக்கலாமோ
பொருமகர்தாய்ஞானிகளுமகவாசையெனுஞ்சலனம்போக்கற்குண்டோ ()

கரியொன்றுந்தேரொன்றுங்கவிகையொன்றுஞ் சிவிகையொன்றுங்கா
லாளொன்றும், பரியொன்றுமில்லாமற்பயமொன்றுங்கொள்ளாமற் பாலன
ம்மா, அரியொன்றுமலைப்புரனுமனலொன்றுநெடுங்கானுமழகுவாய்ந்த, புரி
யொன்றும்வளநாடும்புகுந்துவரவலியொன்றுபொருத்ததுண்டோ. (ரு௧)

சினமிகுந்தபகைஞனிவன்சிலதனிவனெனப்பகுக்கத்தெரியானள்ளா
ரினமிகுந்துபொரவரிற்கண்டெதிர்மிகுந்தவலிதாங்கியிருங்கைவில்லின்
முனைமிகுந்தாசுகம்பொழிந்துமுடிப்பதற்குப்புயவீரமுற்றுமுண்டோ
மனமிகுந்தவிவன்கருமந்தனைக்கிலதிதுனிதந்துவருத்திற்றம்மா. (ரு௨)

வெயிலியங்கும்புடவியெலாம்வினையியங்குநெடுநேமிவிரட்டிநீண்ட
வயிலியங்குந்தருமலர்க்கையரசர்பிரானிவைபிதற்றியயர்தனோக்கிப்
வயலியங்கும்பயிர்செழிக்கவான்கமஞ்சுன்மேகமழைவழங்கல்போலச்
செயலியங்குமதிவல்லோர்தெளிவியக்குங்கருமங்கள்செப்புவாரால். (ருரு)

கற்றாய்மற்றரசரினுங்கலையனைத்துமலைமலையாய்க்கடல்போற்செல்வ
முற்றாயுன்போற்பெருமையும்பருலகத்திறைக்குமுண்டோநீதான்
முற்றாதபெருந்துயரின்மூழ்குதற்கென்கடனேர்ந்தமுறையொன்றின்றிப்
பற்றாதார்படுஞ்செய்கையொழிகவிதுகேட்கவென்றுபகருவாரால். (ரு௪)

பாலனுக்கோபனிரெண்டுவயதானதிவனழகும்பண்பும்பார்க்கில்
வேலவனும்வாசமலர்க்கோலவனுமாலவனும்விதியுமொவ்வார்
ஞாலமிசையிவன்றனக்கோர்பாதிபரையிணையெனவேவவிறற்காசேங்
காலனெதிர்ப்படினுமொருகைபார்ப்பான்புயவீரங்கடல்போன்றுள்ளான். ()

தற்பருவஞ்சிறிதெனவுந்தருணமறிந்துறுகருமஞ்சமைக்கவல்ல
விற்பனமின்றெனவுமொழிவிளம்புதனம்மேழமைத்தேவிரிந்தபூமேன்
முற்பிறந்தாகுபதியையன்றியொருவிஜயனையுமொழிவார்வென்றிக்
கிற்பிறந்தாரிவர்க்கவரோடினிப்பிறப்பாரும்மிலையாலிணைசொல்லற்கே. ()

வில்லுரிமைவலிவாய்ந்தவீரருக்குவேறுதுணைவேண்டாமென்னுஞ்
சொல்லுரிமையல்லாதுகுமுறவோருரிமையென்னதுணிவுகாட்டும்
பல்லுரிமைசேர்த்திவன்றன்பாலுரிமைசெயகினைச்கும்பான்மைநல்ல
நெல்லுரிமைபுல்லினுக்குநேர்பாதியெனச்சொல்லும்நெறியேயொக்கும். ()

மன்னினைவுவருந்துவதென்வாளாகின்மனமயக்கமாற்றிமைந்தன்
றன்னினைவுக்குடன்படுதறகைமையன்றேலெவர்கூடித்தடுத்தபோது
மின்னினைவோனேகுதற்கிங்கிடையிலொருதடையுமிலையென்றேயெங்கள்
புன்னினைவிற்றோற்றினதைப்புகன்றனமுன்னினைவெதுவோபுரிவாயென்
[றார். (ரு௨)

மந்திரத்தோர்சொற்றுணிபுமைந்தனிற்குமனத்துணிபுமலியநோக்கி
யிந்திரர்க்குமெய்தாதபெருந்திருவோன்மருமம்போழ்ந்தெரிசெம்புண்ணிற்
சிந்திரத்தவேனுளாத்தசெய்கையெனத்திகைப்பதுபோய்த்தெளிவுசார்ந்து
சந்தரச்சீர்முகமிலங்குஞ்சுமந்திராசர்கேட்பத்தொழுதுசொல்வான். (ரு௧)

என்போலுமந்திரிமார்நான்குபத்தோரொன்பதுபேரிசைத்தவெல்லாம்
பொன்போலப்பிறங்கினவப்பொருள்பிழைத்துப்புதிதாகப்புகறற்கேயென்
றன்பாலினிடமுண்டோதாரபதியேயவர்வயினிற்சந்தேகிக்க
வுன்போல்வார்க்கடுக்குமதோதிரிகாலமுணரவல்லவுணர்வின்மேலோய்(௪௦)

குடியிறமைமைந்தரினுங்குறைவன்றேசெங்கோல்கைக்கொண்டசெம்பொ
முடியிறைமைமைந்தருக்கிங்கெத்துணையுமுவமிக்கமுடியாதிந்தப் [ன்
படியிறைமையோர்புகலும்பழங்காதைதெரிந்தளவேபகரவென்று
ஞெடியிறைமையற்கொள்ளாதவர்க்கலதுவேறொருவர்நுவலப்போயோ. ()

மாருதியுமூலைப்பாறன்வாயருந்தத்தெரியாதவயதிற்றெண்ணீர்
வாருதியிலெழுங்கதிரைமாங்கனியென்றதின்மீதுவாவக்கண்ட
பேருதிக்குங்காலமெல்லாம்பேசியசொற்செவிநுழையப்பெற்றநீயுஞ்
சோர்வுதிக்குங்கவலைகொடுகவலுவதென்வீருக்கோர்துன்பமுண்டோ.(௪௨)

கோசலைநாடாளுமுடிக்கோமகனுங்கோசிகன்பின்கூசாதேகிக்
காசலைவாருதிர்ருதியுயிர்வீட்டிமகக்காத்தகாதைகின்பாற்
பேசலையோகாக்கண்முனம்பிழைபுரிவார்தங்கள்குடிபிழைதீர்ந்துய்ய
மாசலைக்குந்திகிரியுந்திமாநிலமெலாம்புரக்குமன்னரேறே. (௪௩)

வாள்வீமனாவுயர்த்தோன்வஞ்சனையான்மான்மகளைமகற்குச்சூட்ட
மூள்போதிற்றனியேகிமுடிமன்னர்பெருஞ்சேனைமுடியநூறித்
தோளாற்றல்காட்டியவிற்றொழிலாற்றரமைக்குறித்துச்சொல்லற்கிங்கோ
ராளாற்றலுடையவர்களொருவருண்டோநிதனையயர்க்கலாமோ. (௪௪)

குருபதனைத்தேர்க்காற்றுணைத்தோளோடுறப்பிணித்துத்துரோணனென்னுங், குருபதத்தில்விடுத்தவன்சொல்வஞ்சினமுந்தன்சினமுங்குறைபோய்த்திரப், பெருவிஜயன்விசயமிந்தப்பேருலகில்வில்வீரர்பேணிப்பேசுந் திருவிசயன்செவியிற்கேட்டறியாய்போலுமனந்திகைத்தாயின்றே. (௪௫)

இலங்கையின்மேல்வாளிரவிபெய்தாமல்வெம்பாசமிட்டுக்கட்டிக்
கலங்குறத்தன் கடைத்தலையிற்காப்பமைத்தவிராவணிதன்காதையெந்தத்
தலங்களினும்பெரிதன்றோதனைத்தறுகாலினங்குழுமித்தண்டேனுண்ணு
மலங்கனவமணிமுடியாயிதுபோலிங்கெத்தனையென்றறைகுவேனுல். (௪௬)

வேறு.

வடகலையுந்தென்கலையும்பிறவுமுள்ள-மந்திரமுந்தந்திரமும் வயங்கும்வெம்போர்த், திடவலியுஞ்சொற்றுணிபுங்குணமுங்கொண்ட-திருமைந்தனிவனிதன்மேற்றெரியன்றோன், றடையறநாமனுப்புவதேமுறைமையன்றித்-தடைப்பதுவுலனலவென்றறிவான்மல்குங், கடனிகர்நற்சுமந்திரநாகனுஞ்சொல்லிக்-கைதொழுதானதுகேட்டகாவலோனும். (௪௭)

தெருமால்போயகங்களித்தானெனினும்பின்னுந்-தீராத மகவாசைசிந்தையுள்ளே, பருவாறந்தனன்மெமுசாயுருகிநைந்த-பார்வேந்தனிலையுணர்ந்துபாங்கருள்ள, குருவெனுநற்பிருகுமுனியுணர்வானிந்தக்-குமாரனைநாந்தடுப்பமெனினில்லானன்றே, னிருபனுயிர்விடுவன்றப்பாதென்றாய்ந்த-நெறியாலங்கவற்றெளித்திகழ்த்துவானுல். (௪௮)

வேறு.

மற்றவர்புதல்வர்போலுமன்னனின்புதல்வன்றன்னைச்
சற்றுவேறெண்ணற்கெண்ணேற்றனிமுதலருளாலிங்க
னுற்றவன்விரும்பிவேண்டற்குறுதனபொருண்மற்றுண்டோ
யிற்றதின்மேலுவந்திங்கெய்துறுங்காலமீதால். (௪௯)

செல்லுழித்தீதொன்றின்றித்தேவரும்வியக்கத்தக்க
பல்பெருநூலுங்காதைப்பயன்களும்படைப்பான்பின்னு
மல்லியங்கமலமேவுமணங்கினுக்கணங்குபோலோர்
வல்லியைமணந்திங்கெய்துவானிதுவாய்மையாலோ. (௫௦)

தனியனுயுலகமூன்றும்வெல்லுநின்றநயன்நட்பி
னினிமைசெய்மதிமானேடுமெய்துவானென்னில்பின்னர்க்
குனிசிலைவயவர்யாரைக்குறித்துரைகூறற்காகும்
புனிதன்மாலயன்வந்தாலும்புறந்தரப்பொருதுவெல்வான். (௫௧)

பல்வழித்தோற்றமான படைப்புளதவைகட்கெல்லாஞ்
சொல்வலிமுறைமைதய்த்தரேய்தல்கண்டுங்கலாய
வெல்லையில்கருமமெல்லாமியற்கையிலியைவதின்றிப்
புல்லிமற்றொன்றின்செய்கைமற்றொன்றுபுரியப்போமோ. (௫௨)

கருப்பதிற்கலந்தசிங்கக்குருளைவெங்கயமேற்றாவ
விருப்புற்றததுவுமன்றிவெவ்வராவீன்றகுட்டி
யுருப்பெற்றபோழ்தினஞ்சமுட்பெற்றதுறுமீன்குஞ்சு
குருப்பெற்றுப்புனலினீந்துங்கொள்கையீங்குண்டோகூறாய். (௫௩)

ஆதலாலிவன்றான்கற்றதளவிலையெனினும்வேற்றார்
போதலுமாங்காங்குள்ளார்தங்களைப்பொருந்திக்கேட்டே
யோதலுமாவானுனலுவமிச்சுவிவன்போலெந்தப்
பூதலந்தனிலுமில்லையென்பதோர்புகழ்பூண்பானல். (௫௪)

கையணுகவலைநீக்கிக்கருத்துவந்திவனுக்கின்றே
யெய்துறப்பணிப்பாய்நீயென்றியம்பியகுருவின்பாதங்
கைகளாற்போற்றிநின்றுன்கழற்றுணையுடையேற்கென்று
மூய்திறமல்லால்வேறொருகுறுகண்வந்துறுவதுண்டோ. (௫௫)

வருமொழியிழுக்காற்றுன்பவ்வரினுந்தீர்த்தருளவல்ல
குருமொழிபிழைக்கிற்றெய்வங்கொதிக்குநல்லருளுங்குன்றும்
பெருநரகியற்றும்வையம்பேயெனப்பிதற்றும்நட்டோ
ருரிமையுமுறவும்நீக்குமொன்றலபலவுமுண்டால். (௫௬)

நல்லதுந்தீதேயாகத்தீயதுநலதேயாக
வல்லதுவேறொன்றாகவமைச்சர்சொல்லகற்றியிந்தத்
தொல்லைமாஞாலங்காக்குந்தோன்றல்கட்கென்றுந்துன்ப
மெல்லையில்லாதுசேருமிருமையும்பழிவந்தெய்தும். (௫௭)

அமைச்சருங்குருவுஞ்சொன்னமொழிபிழைத்ததற்குயாருய்ச்
சமைப்பதுதகைமைத்தன்றென்றுணர்ந்துதன்னருகினின்ற
சமைப்பெரும்புதல்வன்றன்னைக்கைகளாற்றழுவிப்பாங்க
ரமைத்துடனிருத்தியுச்சிமோந்திதையறைவதானான். (௫௮)

எத்தனைநாளோபிள்ளையில்லையென்றுலகமேசு
மத்தனைநாளுநோற்றதென்றவமதனாற்பெற்ற
புத்திரனியும்புத்திசிகாமணியெனும்பூமானை
மித்திரனுக்கோடற்குன்றவம்விழுமிதாமால். (௫௯)

எனக்குறுமகனுமென்றுமிறைஞ்சிவாழெழிலமைச்சன்
றனக்குறுமகனுமென்றுஞ்சாற்றுவேற்றுமைசற்றின்றி
மனக்குறும்பகலநீக்கிவருங்கண்மாமணிபோலிங்கு
கனக்குறும்படிவளர்த்தகருமநான்கழறப்போமோ. (௬௦)

மன்மகனமைச்சன்றமகனிவனிவன்றானென்னுந்
தன்மையையாற்றிநின்றதகைமையேயாயிதுபோனீயு
மென்கலம்புகுந்தபோதுமிடையினிற்பிறிவொன்றின்றி
யன்னியநட்பைக்காத்துவருவதுன்கடமையாலோ. (௬௧)

மக்களுமனையுஞ்சூழ்ந்தமாபுமாநிதியும்வேறுந்
தொக்குறும்விலகுநட்பிற்றுவக்குண்டுபழக்கமான
பக்கநீங்காதுநீக்கம்பண்ணிக்கொள்பவர்க்கேதுன்பஞ்
சிக்குறும்புகழைமாய்க்குந்தீயவன்னரகிற்சேர்க்கும். (௬௨)

தந்தையர்ப்பிழைத்தும்பெற்றதாயரைப்பிழைத்துமீன்ற
மைந்தரைப்பிழைத்துங்கொண்டமனைவியர்ப்பிழைத்தும்வாழ்ந்தோ
ரெந்தயாவிலத்துமுண்டின்னுயிர்நட்புப்பிழைத்திங்குற்றோர்
வெந்துயர்பிழைக்காவாழ்க்கையல்லதுவேறென்விள்வேம். (௬௩)

அன்னைதன்பகையுந்தாதைபகையுமான்றவர்பின்னுள்ளோர்
வன்பனைப்பகையுந்தாங்கிமாறுயிர்பிறிதொன்றின்றி
மன்னுநட்பாளர்க்கின்பம்வரித்துநல்வாழ்க்கைபேணு
நன்மகனிவனேமூர்த்திமூவரினல்வாராவான். (௬௪)

எப்பிழைதனையுந்தீர்க்கத்தெய்வமொன்றியலுநட்பிற்
றப்பிழைப்பவர்கட்கந்தத்தெய்வமேசதிக்குமென்றே
யொப்பிழையாதவேதமுணர்த்திடுமுனக்குநாளுஞ்
செப்புதறகைமைத்தன்றேசிந்தையிற்றெளிவுசான்றோய். (௬௫)

என்பனபலவும்பன்னியிறையவனமைச்சனீன்ற
தன்பெரும்புதல்வன்றன்னைக்கைகளாற்றழுவியையா
வன்புகலிவனுக்கான்றபுகழுனக்கிவனையன்றிப்
பின்புகலில்லையென்றபெருமிதம்பெற்றநீங்கள். (௬௬)

வாசமுமலரும்போலமருவிநீங்காதுநட்பி
னேசமோடவிர்பூஞ்சோலைநெடுவரையடவிமற்றைத்
தேசமேமுதலாயுள்ளசெறிவளம்புகுந்துநோக்கிப்
பாசமோடெமக்குக்காட்டும்பண்புமுன்கடைமையாமால். (௬௭)

என்றுரைபுகன்றுவேந்தன்மைந்தர்கட்கினிமையான
பொன்றிகழ்மணிப்பூண்பாகுபூந்துகில்பிறவும்வேய்ந்து
வன்றிறற்கவசம்வீக்கிவயிரவாளிடையிற்சேர்த்து
மின்றிகழ்கழலில்வீரக்கழலொலிவிளங்கப்பூட்டி. (௬௮)

வடவரைகடுத்துநீண்டவரிவில்லுமதனிலார்த்த
படவரவிதுவென்றுன்னுநாணுமுப்புரம்பாழிட்ட
திடமுனைப்பகழிமானும்பகழியுஞ்சேர்த்துச்செய்யக்
கடவனகடன்களாற்றிக்கண்களிப்பமையநோக்கி. (௬௯)

வான்கொளாமகிழ்ச்சிவெள்ளமனக்கரையுடைத்துப்பொங்கத்
தேன்குலாயலங்கல்வேந்தன்சிந்தையாகுலம்போய்ச்சிந்த
நான்கடையானபோதுநமர்கண்முன்றவமேநல்குந்
தான்கடைத்துணையுங்கட்கேயென்றுரைசாற்றிப்பின்னும். (௭௦)

இங்குநீர்பன்னிரண்டாண்டெல்லைக்குளெங்குஞ்சுற்றிப்
பங்கமில்லாதுமீண்டுபடருவீரென்னப்பார்ம
னங்குசொற்றனன்சேட்டுள்ளபுதல்வருமன்புகூர்ந்து
திங்களினுதயம்போலத்திருமுகஞ்செழிப்புற்றோங்க. (௭௧)

குருமலர்ச்சரணம்போற்றிக்குரிசிலையவ்வாறேத்தித்
தருமவர்வெண்ணீறேற்றுச்சபையிலுள்ளவர்கட்கெல்லாம்
அருமைகொண்டினிமைபேசியகல்பொழுதமைச்சன்மைந்த
னுரியதன்றந்தைபாதமுவந்தினிதிறைஞ்சநோக்கி. (௭௨)

(வேறு)

மன்னோர்புகழ்மந்திரிமாமகனும்
பொன்னார்மணிபுத்திசிகாமணியைத்
தன்னோடொருமாடுதனிக்கொடுபோய்
நன்னேர்மொழியொன்றுநவிற்றிடுவான். (௭௩)

களிதங்கியநல்லமுதக்கடலே
துளிதங்கியமென்கனியின்சுவையே
யளிதங்கியமாமலரோயழகே
யொளிதங்கியமாமணியேயுயர்வே. (௭௪)

பொன்னேபுகழ்புத்திசிகாமணியே
முன்னோரெயர்செய்தமுதற்றவமே
பன்னாடவர்தேடுறுபாக்கியமே
யென்னான்மொழியொன்றிதுகோடியென. (௭௫)

நீயும்சிதிநேர்புவனேந்திரனுங்
காயுங்கொடுகோனகழும்பொழிலும்
ஆயும்பலதேயமுமண்மியிவ
ணேயும்வரையிவ்வழிநோக்குவனால். (எசு)

முன்னைப்பிரியாதமுதக்குறையீர்
பின்னைப்பிரியற்குமதெண்பிழையாத்
தன்மைக்குண்மிகுத்ததனிப்புகழே
நன்மைக்குறுமெய்த்துணைநல்குமரோ. (எஎ)

நெஞ்சிற்றகையின்றிநிகழ்த்திடினும்
வஞ்சித்துயிர்வீக்கமதித்திடினும்
மிஞ்சிப்புகலாதளம்விம்மல்கொளா
தஞ்சித்தொழுதேவலமைத்திடுவாய். (எஅ)

தெய்வந்துணைசெய்வதினும்பெரிதா
யுய்வந்தருண்மன்னவர்கண்ணிலொரு
பொய்வந்துறிலங்கவர்போன்றிடவே
மெய்தந்தெழுமாணைவிளம்புவரால். (எகூ)

நீங்காதுநெருக்கியுறுதகனற்
பாங்கேகுளிர்காய்பவர்பண்பெனவே
யீங்காரிறைவர்க்கணிருந்துமுறை
யாங்காரியமாற்றலமைச்சியல்பே. (அ0)

கயமஞ்சுவபாகர்கருத்தினுமப்
பயமிஞ்சுவதொன்பதுபண்பிறைவர்
வயமஞ்சுதன்மாண்பவர்தம்மினுமற்
புயமஞ்சுதன்மந்திரர்பூணணியே. (அக)

நட்டார்பிழைசெய்துநிறைநல
மிட்டேறியமன்னரிருஞ்செவிகண்
பட்டாலவர்பாடுறலின்றடரு
மொட்டாரிவதொன்பதுணர்ந்திடுவாய். (அஉ)

தாய்தந்தையர்தாரமகார்தமர்பொன்
னேயும்புகழ்தெய்வதமென்பவெலா
மாயுந்துணையிவ்வுலகத்தரசர்
நேயந்தருமென்பதுநிச்சயமே. (அங)

ஈதன்றியுமன்னரியற்கைநமா
லோதுந்தரமன்றிவையுள்ளியவன்
பாதம்விலகாதபணித்தபணி
நீதங்கொடுநீபுரிவாய்நிதமே. (அச)

செல்லார்நெறிமுற்கொடுசென்றுநகர்
வல்லான்வருபோதுபினிவருவா
யல்லாதெனிலன்னவையேயமைவாய்
நல்லாயிதன்மேலிலைநற்றவமே. (அரு)

நீயாவுமுணர்ந்தனைநின்மனதுக்
கேயாதனவில்லையினிச்சுகமே
போய்வாவெனவேபுகல்வானிருதா
டோய்வான்விடைகொண்டுதொடர்ந்தனனால். (அசு)

மந்திராலோசனைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-சு-க்கு-திருவிருத்தம் ௩௩௬.

# நகர் நீங்குபடலம்.

காலர்கள்வீசுறுபாசமதாலுயிர்கவல்பொழுதுற்றுழையிற்
பாலர்மினார்கிளைஞ்ஞோரழுதின்னல்படுத்தினுநான்மறவேன்
நீலவிலோசனமாதுமையாளொடுநீண்மதுராபுரிவாழ்
பாலவிலோசனநீறணிசுந்தரபாண்டியனார்பதமே. (க)

வேறு.

பொன்னார்மனைபுக்கினர்தாயருழை
சொன்னாருருமேறுலியாற்றுவரு
மின்னாரவாமெனவெய்துயிரா
வன்னாருளம்விம்மியயர்ந்தனரால். (உ)

கண்ணீர்மழைபோலொழுகக்கதறி
மண்மீதுபுரண்டுதம்வாய்வாள
வுண்ணாடுபுலன்களொடுங்கிமனத்
தெண்ணாதனவெண்ணியிடைந்தனரால். (௩)

மகவில்லையெனப்புவிமாந்தர்முனே
தகவின்றிமொழிந்தசழக்ககல
நகவில்லவனல்கியநாண்முதலா
யகவிம்மியவோகையழிந்தனரால். (ச)

உமையன்றியிலாதவுயிர்க்கினியிங்
கமையுந்துணையேமனலாதுளவோ
சுமையென்றுதுறந்தெமைநீர்சுகமாய்ச்
சமையுந்தாநற்றருமந்தருமோ. (ரு)

பெற்றும்முறைமையின்றபிரிந்துதுய
ருற்றின்னுயிர்வாழ்தலினிவ்வுலகின்
முற்றும்மலடென்றுமொழிந்தமுறை
குற்றம்மெனவெண்ணுதல்கூடுமரோ. (௬)

நலமாயருள்செய்துயர்தெய்வநமைக்
குலமோடழியத்துயர்கூட்டிவிதை
யலர்மாநில்மீதெவர்பாலடைவாய்ச்
சொலவாகுதுமென்றுதவண்டனரால். (௭)

என்றின்னனபன்னியிரங்கியழு
தொன்றுந்தழல்வாய்மெழுகாயுருகிப்
பொன்றுந்துயரெய்தியபூவனையா
ரன்றின்பமுறும்படியாற்றுவரால். (௮)

என்னேதுயரித்தனையெங்களையு
முன்னேபெறநற்றவமுற்றமிலா
வன்னாளினுநீவிரலக்கணுற
விண்ணுளிஃதென்கொல்லியைந்ததுவே. (௯)

பூமாதுறழ்தாயர்புலம்படையக்
கோமானவிராமனெனுங்குரிஞ்சிற்
றீமாந்தியசேணெறிசென்றுமெழிற்
றேமாநகர்வந்தமையுந்தெரிவீர். (௧௦)

கங்கைத்துறையம்பிகடாவியசீர்
மங்கைச்சுதன்வேதவியாதன்வனஞ்
சங்கித்தவன்சொற்றழுவாதுறைத
விங்கச்செயனுஞ்செவியேற்கிலிரோ. (௧௧)

வேறு.

இன்னாடொரீஇயாங்களிதன்புறமேய்ந்தநற்சீர்
பன்னாடுபுகுந்தொருதீங்குபடைப்புறுமற்
சொன்னாடணவாதுறவோர்துயர்நீக்குமென்ன
வன்னார்மொழியத்தெளிவெய்தியவன்னமன்னார். (௧௨)

பாலின்சுவையின்னமுதூட்டிநற்பாலர்கட்கு
மேலின்முழுதும்பணிவேய்ந்துவிளைந்தவன்பின்
சீலம்பெறவேகுதுமென்றுரைசெப்பவன்னார்
காலஞ்சலிசெய்துபொன்னுய்ந்துகடந்தனரால். (௧௩)

பண்டைத்திருமாலோடவன்றருபாலனுஞ்சீர்
கொண்டித்தலையெய்தியகொள்கையிதென்கொலென்னக்
கண்டுற்றவர்நெஞ்சமுவந்திருகண்களிப்ப
மண்டிப்பொலிசியமெனத்திருவீதிவந்தார். (௧௪)

செல்லுந்திருமைந்தர்கடம்மனச்செய்கையெல்லாஞ்
சொல்லுஞ்சிலராற்றெரிந்தந்நகர்துன்னிவாழும்
வல்லின்முலைமாதருமைந்தருமற்றுளோரும்
புல்லுந்துயரத்தினொடின்னபுலம்பினைவார். (௧௫)

நம்மைந்துமுகத்தவனல்கியநல்வரத்தா
லிம்மைந்தர்பிறந்தனரொன்பதோரின்பமெல்லா
மெம்மைந்தருநீங்கியலந்தலையெய்தவிந்தச்
செம்மைந்துரினேந்துமுடித்தமையாவர்செய்கை. (௧௬)

பஞ்சும்மலருஞ்செறிமெல்லணைமீதுபதம்பெயர்க்க
வஞ்சுந்துயரொய்தியபாலர்களம்மவெம்முண்
மிஞ்சுந்தழலார்நெறியேகவிதித்தமன்ன
னெஞ்சுந்திடமுற்றிவணுற்றதென்னீர்மைநன்றே. (௧௭)

எல்லாவுயிருந்தமதாமெனவெண்ணுகின்ற
வல்லார்தவநாளும்வருந்தியளித்தவிந்த
நல்லாரிவர்மீதருணல்குதலின்றியென்னே
கல்லாதர்மேவியகான்புகுவித்தகாட்சி. (௧௮)

தம்மாமகர்மீதருணீக்குதயாவிலோர்க
ளிம்மாநகரத்துறைவோமையியைந்துகாக்கச்
செம்மாமனமுள்குவரென்பதுதீமையல்லா
லம்மாவிவர்நல்லறமாற்றவோராறுமுண்டோ. (௧௯)

ஒப்பேதுமிலாதவர்யார்க்குமுயர்ந்தவென்றி
யிப்பாலகரோகுதல்கண்டநமக்குமினி
யெப்பாலகர்நற்றுணையாற்றுவரொன்றுளேங்கி
யப்பாவலரல்லதுநல்லறமல்லவென்பார். (௨௦)

வேளைங்கணேவேளிவரொன்னவியக்கும்வென்றி
நீளும்புயமைந்தர்களென்குறைநேர்ந்ததிங்கு
மூளும்படையின்றிநெறீஇக்கொடுமுன்செலற்கோ
ராளுந்துணையின்றிநடந்தனரம்மவம்ம. (௨௧)

வேறு.

இன்னணம்புலம்பிமைந்தர்தங்களையெதிர்ந்துபோற்றித்
தொன்னகர்மாக்களெல்லாந்துயருளந்தயரும்வேலை
யன்னவர்த்தேற்றிச்செம்பொன்னணிமணிவீதிநீங்கி
மின்னுமேகஞ்சூழிஞ்சிவாயிலைமேவினால். (௨௨)

மாலவன்புள்ளும்வெள்ளிவரையவன்விடையுஞ்செங்கை
வேலவன்மயிலும்பூவின்வேதியனனமுமிந்தக்
கோலவான்பரிகட்கென்றுமுவமிக்கக்குறையுமென்றால்
ஞாலமேற்சிறப்புவாய்ந்ததெதுவெனநவிறற்காவேம். (௨௩)

ஒன்றுமூன்றுமூன்றுவண்ணமொளிரவைங்கதிகள்பெற்று
நன்றுநற்சுழியுமெய்யினற்றமுநகையும்வானத்
தென்றுதேர்ப்புரவிமானுமிவைகளின்குணங்களாயிற்
றுன்றுவெம்பொறிவீய்ந்துய்ந்தார்மனத்தினுந்தூய்மைத்தம்மா. (௨௪)

பரவையைக்கடக்குமண்டப்பரப்பினைக்கடக்கும்வானத்
திரவியைக்கடக்குமற்றவெவற்றையுங்கடக்குந்தேடி
யுரைசெயிலுரையிற்சாலாதுவமிக்குமுவமையாகாக்
கருமுகில்வெருவப்பையக்கனைக்குங்கந்துகங்களம்மா. (௨௫)

பாய்ச்சலில்வரைகள்யாவும்பரியவேர்சாய்க்கும்விண்ணின்
மீச்செலிலிரவிதேர்குப்புறவிழமிதிக்கும்பைய
மூச்சிடிலண்டங்கிண்டுமுதுபுனற்கங்கைசிந்தும்
பேச்சினிற்பேசலாமோயாவருமதனின்பெற்றி. (௨௬)

வேறு.

வேதத்தாயினுமதனுளேவிரிந்துருத்திரிந்த
பூதத்தாயினுமதனுளேபொலிந்தபற்பலவாம்
பேதத்தாயினுமிவைகளின்நிலைசொலப்பெறுமோ
பாதத்தாலுலகேழுநண்டுகள்படப்படரும். (௨௭)

காலெலாமுழுநீத்திலங்கண்மணிவெறுக்கை
மேலெலாமுழையிரசிதம்விளங்குதாரகையின்
கோலமேயனியெயிறுமற்றுவமையிற்குறுகாக்
கூலம்வெண்டிரைமதிவகிர்ந்தனையபொற்குரமே. (௨௮)

வேறு.

வாயுவேகிமனவேகியெனும்பேர்பொருந்திவதிந்ததிருத்
தூயபரிகளிரண்டினையுந்தோன்றலாணைகொடுதோன்றி
நேயவுழையர்பணிந்தளிக்கவுவகைநிறைந்தநெஞ்சினரா
யேயபுதல்வரவைகளின்மேற்கொண்டார்செழுந்தாரெயினத்தே. (௨௯)

நகர்நீங்குபடலம்

முற்றிற்று.

ஆகப்படலம்௧-க்கு திருவிருத்தம் ௩௬௮.

# வளங்காண்படலம்.

வருவணிகமாதினுக்குக்கரிகிணறுவனிலிங்கம்வந்துசொல்ல
வருள்புரிந்திங்கொருமுதலாயண்டமுகடளவும்வளர்ந்தளாவுஞ்சோலைத்
திருமதுரைதனிலிருந்துசிந்திப்போர்தங்கள்வினைசிந்தச்செய்யும்
மருமலர்ப்பொற்கடுக்கையணிமாதேவனிருமலர்த்தாள்வணங்கிவாழ்வாம்.

வேறு.

வாவியகான்மனவேகியெனும்முறண்மண்டியகற்கிகடன்
மேவியகேள்விசமீரணவிஞ்சைவிரித்துரைகூறிடலுங்
தாவருவிண்ணவர்கட்புலனுங்கதுவாவகைதண்டலிலா
தோவலில்பற்பலவண்டமளாவவுயர்ந்துநடந்தனவால். (௨)

நடந்ததுபானுகடும்பரியேழுநடுங்கிமயங்கினநெஞ்
சுடைந்ததுமால்வருபுள்ளிறையன்னவையுற்றதுநக்கன்விடை
கடைந்தபயோததிமீதுழன்மந்தரமானதுகாசினிகீழ்
படந்திகழ்நாகர்விடங்களுமிழ்ந்துபதைத்துவருந்தினவால். (௩)

வேகவயப்புரவிக்கடைவாய்நுரைமீறுவிலாழிமழை
மேகமெனச்சொரியச்செறிமூச்செறிவிண்ணுலகுந்தருவும்
மாகமுநீள்கிரியுங்கடலுங்குலைவாகிவருந்தமனஞ்
சோகமடைந்துலகுந்தளரக்கனதூளிநிறைந்தனவால். (௪)

அன்னவைவாவுகடுப்பினையாவரறிந்துரைசெய்யவலார்
மின்னிடுமுன்னெழுபத்தொருயோசனைமேவினகீழ்த்திசையிற்
பின்னுமளப்பிலயோசனைசென்றபெரும்பகன்மத்தியிலே
மன்மகனுங்களைகொண்டடைனுய்வருமந்திரிபாலலறைவான். (௫)

தாகவிடாயதிதாகமதாகி:தன்பையிஞன்மனது
சோகமடைந்தனநாவும்வரண்டனசோர்வொடுகந்துகமும்
வேகமயர்ந்தனநாமும்விசைப்பரிமேதினிமீறுவிச்
சீகரயோதுகயப்புனலுண்டெதிர்செல்வழிசென்றிடலாம். (௬)

என்றுதிரைக்கடலாடைகொள்பூமகனின்னுரைதந்திடவே
நன்றெனமந்திரிமீவருபாடலநாணிலமீதுசெலத்
துன்றியவிஞ்சைபுகன்றனன்வாவுதுணைப்பரியுங்கடுகி
யொன்றியமின்னவிழிந்தனபோற்றரையுற்றனனெய்தினிலே. (௭)

வேறு.

வண்டினங்கறங்கலங்கன்மைந்தர்சோகமாறியே
கொண்டலங்குறங்குசோலைதிங்களங்கொழுந்துபோன்
மண்டுவானுதற்கயற்கணாரைவானமாதரென்
றண்டருடலாகினானுமருதவைப்படைந்தனர். (௮)

சிலமுத்துதிர்த்தெழுந்தசெந்நெல்செந்நெலல்லகா
ரோலமிட்டிறங்குசோலைசோலையல்லவுழவருச்
சாலிமைக்குமணிகளல்லவல்லமேவுதண்பணை
வால்வளைக்குலங்கள்பம்பும்வாவியல்லவல்லவே. (கூ)

வாசநாறுசோலையூறுவானளாயதேறலுங்
காசுலாவுபூணினார்குழற்களுங்கலந்துபுன்
மாசிலாதமேதிநின்றிறங்குபாலும்வாறியே
யோசையுற்றெழுந்துகால்வழுக்குமாறொழுக்கரோ. (க0)

மானுறங்குமயிலுறங்குமழையுறங்கும்விரிமலர்த்
தேனுறங்குமனமுறங்குமாசிலாதசேறளாய்
மீனுறங்கும்விழியுறங்கும்விளைவிலாதசிறுமியர்
ஆனுறங்கும்வேயுறங்குமாயர்வாழுமுன்றிலே. (கக)

மஞ்சுலாவுபொங்கருவெந்துலாவுமயில்கணோர்
பஞ்சுலாவுசிரமைந்தபாதமாதராதர
நெஞ்சுலாவுபொழுதெலாநெருங்குமாரனேவுகோ
லஞ்சுலாவுமதுகைமைந்தர்சென்றுலாவுமாறரோ. (கஉ)

வேறு.

இன்னணவளங்கெழுதமதின்னாடோரீஇ
மின்னலுமசனியும்விரிந்தமேகமு
முன்றுமெய்ப்பொருள்களுமுருக்குறைந்துலை
பன்னரும்வெஞ்சுரப்படியின்மேயினார். (கங)

நீந்தராவறநெறிநினைப்புறுதபுன்
மாந்தரார்மனையெனமாட்சிகுன்றியே
பூந்தராதலம்வெடிப்புண்டப்பூந்தல
மேந்தராமுடிதொடுத்தெரியும்பாலையே. (கச)

கானெலாக்கரியவெங்கனற்கொழுஞ்சிகை
மேனிமிர்ந்துருத்தலில்விசும்புவெந்துபின்
வானகத்தருச்சினைமலரும்வேமெனி
லேனையார்பொருளுளவேவதின்றியே. (கரு)

மேகமுஞ்செல்கிலகாலுமேவில
காகமுஞ்செல்கிலகரியுஞ்செல்கில
நாகமுஞ்செல்கிலநாளுஞ்செல்கில
ஞகமுஞ்செல்கிலகுருஞ்செல்கில. (கசா)

இடியருக்கதம்பம்வெந்திர்ந்துசிந்தியே
படிமிசையுகுதல்போற்பாலையெங்கணும்
கொடியினக்கழுகொடுகுறியினத்தழல்
விடுசுடர்முருக்கலால்வெந்துவீழ்குமால். (கஎ)

முளைக்கதிரிரவிமெய்முழுதுந்தீய்ந்துவிண்
பிளக்கவேவெவ்வழற்பிழம்புபற்றுதல்
வளர்த்தவன்கரந்தகர்மாறிப்பாயுமென்
றளக்கர்சூழுலகெலாமறைதன்மானுமே. (கஅ)

முந்துமண்ணீரினைமுழுதுமுண்டுமேல்
வெந்துதீப்புகையெழும்பாலைவெப்பினு
லந்திவானகமெனவவிருஞ்செம்மணி
சிந்திநீருகினவரவின்சேக்கையே. (கக)

வடவனன்மானும்வெஞ்சுரத்தின்மாசுணம்
படுபசியாலுயிர்பதைத்துவாய்பிளந்
துடல்சுருண்டழியுமுன்னோடியாகுவெவ்
விடமுமிழ்படாநிழலொதுங்கிவீயுமால். (உ0)

சலையுணர்ந்தவாவினைகடத்திப்பொய்ந்நெறி
குலைவுறநீக்கிமெய்குறித்துநாட்டிய
நிலைபொருதுறவினர்நெஞ்சுநேயமில்
விலைமகணெஞ்சும்போலீரம்வீய்ந்ததே. (உக)

கலகமேபுரிந்துதன்கணவன்வேறொரு
விலைமகள்பாற்புகநோக்கிவெய்துயிர்த்
துலைமெழுகொத்துமெய்யுருகிவெம்பிய
குலமகண்மனமெனக்கொதிக்கும்பாலையே. (உஉ)

அப்பெரும்வெஞ்சுரமவர்கணண்ணவு
மொப்பருமமுதெனவூறுநீரொடு
செப்பரும்வளம்பலசிறந்துமல்கினு
லெப்பொருளீட்டுவாரறத்தையின்றியே. (உங)

மஞ்சினங்குமுறியேமழைபொழிந்தன
குஞ்சரம்வீழ்ந்தடிகுமரர்ப்போற்றின
வஞ்சியராமெனமயில்களாடின
செஞ்சொலாலவந்திகைமுகமன்செப்பின. (உச)

பாம்பெலாங்கடுவொழித்தமுதம்பார்மிசை
யேம்பலிலுகுத்தனபாகினேழிசை
வீம்பிலாக்கின்னரமிதுனம்பாடின
பூம்பொழிலாகினபுகைந்தபாலையே. (உரு)

காவெலாங்காலமில்கனிகளீய்ந்தன
பூவெலாம்பிரசமுமணமும்பொங்கின
வேவலிற்பரிக்குரம்வருடியேகின
மாவுறைமந்தியோடளப்பில்வானரம். (உசு)

கவரிகளிரட்டினகமுகின்பாளைக
ணவமணிக்குடையெனப்பரவைநண்ணின
நவையில்வான்பனியொடுநாவிநக்கியே
சிவிரியிற்றெளித்தனசிறுமந்தாரிலம். (௨௭)

கன்னலுங்கதலியுங்கமுகுஞ்செந்நெலும்
பின்னியேககனமுங்கிழும்பிறிப்பின்
மன்னவர்மாலைவாய்மைந்தரேகுழி
யின்னல்செய்திருபுறமிடைந்துசாடின. (௨௮)

குள்ளமுநீண்டனகுருடுநீங்கின
கள்ளமுமுனிவரிற்கருணைதங்கின
வெள்ளமுங்கதித்தனவிளைவுமல்கின
வள்ளியோர்நடந்திடுவெறந்தபாலையே. (௨௯)

கொண்டல்கண்முழங்கினகுயில்கள்கூவின
வண்டர்வாழுலகமுமாவினாரும்பின்
புண்டரீகத்தவனுலகும்போன்றன
கண்டவர்மனத்தினைக்கவற்றும்வெஞ்சுரம். (௩0)

காலெழாதுயிர்களுன்கரிந்துசாம்பிய
பாலையுஞ்சோலையாய்ப்பசந்துகாட்டிய
மூலமுமோர்கிலர்முழுதுநோக்கியே
மாலைவேய்மைந்தரும்மகிழ்ந்துசென்றனர். (௩௧)

வல்லையில்வெஞ்சுரங்கடந்துமற்றுள
முல்லையில்குறிஞ்சியில்முழுதும்வைகிய
எல்லையில்பொருளெலாமினிதுகண்டுகண்
டல்லல்கொள்ளாதிவரவனிமீதரோ. (௩௨)

கோசலங்கேகயங்கொல்லங்கூர்ச்சரம்
காசங்காஸ்மீரங்கன்னடங்கோள
தேசமேமுதலியயாவுஞ்சென்றுசென்
றாசறநோக்கிமேலறிவுதேருவார். (௩௩)

நீண்டுளநதிகளும்நிமலனாருள்
பூண்டுளதலங்களும்புகுந்துநீவினுங்
காண்டகுவரையினுங்கலந்துநாலிரண்
டாண்டுமேலிரண்டுசென்றகன்றோராண்டினில் (௩௪)

நமைமுதலுயிரெலாநயந்தளித்தநல்
லுமையினையின்புறவுயிர்த்துவிண்ணுல
கமைபவாதியோர்க்கன்புசெய்தரு
ளிமயமால்வரைப்புறன்பொதும்பரெய்தினர். (௩௫)

வளக்காண்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் அ-க்கு. திருவிருத்தம் ௪௱௩.

---

# சோலையைக் கண்ணுற்றபடலம்

வான்முதலாதிபூதபௌதிகமாகிநின்ற
வான்மகோடிகளுக்கெல்லாமங்கங்கேபோகந்துய்க்க
ஆனுயிருணவாயுள்ளும்வெளியினுமுணர்வாய்நின்ற
கோன்முகமானகூடற்கடவுளைக்குறுகிவாழ்வாம். (௧)

வேறு

தேன்சிந்தியகனிசிந்தியசிறுகான்மலர்விரவிக்
கான்சிந்தியகுளிர்சிந்தியகவிதங்கியபொழில்வா
யான்சிந்தியயடிபானிறைவயல்சூழ்நகரரச
ரூன்சிந்தியநெடுவேலிறையுறவோனெடுப்கவே. (௨)

குயிலின்றொனியொருபால்கிளிகுழறுந்தொனியொருபான்
மயிலின்றொனியொருபாலளிமலரெங்கணுமிசைகள்
பயிலுந்தொனியொருபாலொருபாலும்மிதுபோலு
மியலுந்தொனியிலையென்றுளவிலையுந்தொனியியலும். (௩)

நாகந்தழைகுரவந்திகழ்நறைகான்முகைதளவஞ்
சாகங்கனிகிளைநீடியதளிர்மாவிலவங்கஞ்
சோகந்திகழ்மருதங்கனிதுவண்மாதுளைசொரியும்
மேகந்தொடுபூகங்களுல்விரிசண்பகமயிலை. (௪)

மரவம்முனிகதிர்சாடியவரிபொன்னொளிர்கதலி
யரவம்புனையவர்கொங்கையைநிகர்தெங்குயாலரி
பரவும்பணைவானீடியபலவோடடர்பாலி
மருவும்பலதருவொன்றியவள்மிஞ்சியபொழிலே. (௫)

கிளிபாடுவமயிலாடுவகிளர்தாமரைகமுகங்
கொளிர்வாணகைமடவார்புரையுறுகாறளவிடையே
துளிதேறலமலியுண்டெழுசூதம்மிசைமுரலக்
குளிர்மாவுறுசினைநாடியகுயில்காகளகிரர. (௬)

அடைபானெனவிலைமென்சினையயிலும்படியுதவ
வுடைவாளெனவிருப்பாலினுமொளிர்கேதகைமிடைய
விடையோனழல்விழிவீயுருவிலிபொன்முடிசூடிச்
சடைமாதவருடையச்சமர்தருபாசறையனைய. (௭)

வேறு.

பாரினாட்டியநாட்டினிற்பகர்வதற்கரிய
சீரினாட்டியபாண்டிநாட்டினுக்கொருதிலக
நேரினாட்டியதெனுமுகவைப்பதிருப
னாரினாட்டியவுயர்மைப்பொதும்பரொத்துளவால். (௮)

அந்தணர்காவினின்மிகுவளமனைத்தையுநோக்காச்
சந்தமாமலர்த்தார்வனைகுரிசிலுந்தகவாய்ப்
பந்தநான்மறைபதித்துநாத்தழும்புறப்பயின்ற
விந்தைமந்திரிநயனுக்கிவையிவைவிளம்பும். (௯)

விண்டலர்தொடுவேணுவிலக்குழாம்விருப்பங்
கொண்டியற்றிருல்வழிபடக்குலைந்திழிபிரசம்
வண்டலோடிடவானரக்கையிணைவகுத்துப்
பண்டுலர்ந்தபூஞ்செடிகளிற்பாய்ச்சுவபாராய். (௧௦)

சந்திமேவியகானவன்கூலம்போய்க்கவிந்து
பந்தியாய்நிறைநுனிமலர்மீச்சென்றுபடித
விந்துநோக்கிவாழ்னெழின்மணிச்சுடிகையம்பாந்தள்
வந்துகவ்வினவாறுபோற்றோன்றலமதியாய். (௧௧)

பூகமார்சினைகுதித்திடக்கோகிலமுடைந்து
பூகமாமடற்றிரளினுள்ளுடலினைப்புதைத்து
சோகமுற்றனபிணிமுகந்தோகையைத்தூக்கி
மேகமாமெனவிரித்துநின்றாடுவபாராய். (௧௨)

மருத்துமோதியம்போதினையுகுத்திடவளர்ந்து
பருத்தகொம்பர்கள்கணவரோடுமெய்பரித்துத்
திருத்துபோணிகிதரிடச்சிந்தைகடிரிந்து
வருத்தமுற்றதாய்மகளிரைமானுவமதியாய். (௧௩)

மூசுதேனளிபிரசமுண்டணியிசைமுரல
மாசினைத்தளிராடுவமலர்க்கரநீட்டி
யாசிறைட்டியமாக்களின்மாபுகின்றன்பாய்ப்
பேசுமங்கையர்நடித்தல்போற்பிறங்குவபாராய். (௧௪)

பூவுண்கோடரம்பொங்கரிற்குதிக்கின்றபோழ்தின்
மேவும்வாலினைவெவ்வாவெனமனம்விரும்பித்
தூவியாமயில்பற்றுவதோய்ந்தளபுருடர்
போவநோக்கியமகளிர்கையிர்ப்பனபோலும். (௧௫)

ஊடியாண்மயின்மாதவிநீழல்புக்கொளிப்ப
வாடிவெங்கணன்மாழ்தல்போற்பெண்மயின்மறுகி
நீடுபிண்டியினிறைவுறப்பூத்தபூங்கொம்ப
ரூடுதேடியேயுலைந்துநின்றயிர்வனவுணராய். (௧௬)

குன்றவர்ப்புனம்வீழ்குரீஇயோச்சுகோற்பறையைச்
சென்றெடுத்தொருகோகுலமுழக்கிடச்சிறந்த
துன்றரம்பையினறினற்றுணர்களைத்தொடுத்தா
மன்றலாற்றுவகடுவனேர்மந்தியைமதியாய், (௧௭)

களையமைந்தவானுதலயிராணியின்கலவி
விளையுநன்னலந்துய்க்குமிந்திரன்மனம்விரும்பிக்
கிளைகளோடபசாற்றியதருவினைக்கீழாய்
வளைதல்காண்பபோற்றிகிரிவான்வளைவனமதியாய். (கஅ)

வச்சைமாக்களின்மனைகளையகற்றியேவறிஞர்
மெச்சும்வள்ளியோரகத்திடைமேவல்போல்விரைந்து
நச்சிலாதுசண்பகமலர்விலக்கியேநறைசால்
பிச்சிதேடிச்செல்பேட்டொடுபிரமரம்பாராய். (கசு)

உழுவலன்பினைப்பெய்துளமார்வமோடுருகத்
தழுவும்வேசையர்பாற்பொருள்சரிவறவளித்துப்
பழுதுதாங்கியவறிவிலிபோற்பழுமரங்கள்
குழுமிவீயுணக்கொடுத்துநின்றுலைவனகுறியாய். (உ0)

குரும்பைமாவினின்மாக்கனிகுரும்பையிற்குளிர்ந்த
கரும்புகந்தியிற்கந்தியுங்கரும்பினிற்கலந்து
சுரும்பர்பாண்டருசோலைவாயெங்கணுந்தோன்றல்
விரும்புநான்மறைப்பொருளெனவிளங்குவபாராய். (உக)

இளையபல்வளம்யாவையுமந்திரிக்கியம்பி
வளைகழற்புரவலன்மகனுடந்துழ்மதித்து
நினையுநெஞ்சினுநீண்டுநீண்டுயர்ந்தமண்டபமுங்
கனைதிரைக்கடல்கடுத்தநீர்வாவியுங்கண்டார். (உஉ)

அன்னவாவியின்வளங்களையறிந்துரைசெய்ய
வுன்னலாவதோவும்பர்க்குமிம்பர்க்குமாக
மன்னனுதிமற்றவர்கட்குமெம்முனோர்வகுத்துச்
சொன்னசிற்சிலவதிற்சிலநாமினித்தொகுப்பாம். (உங)

தீதடங்கியபுலப்பகையாவையுஞ்சிதைத்தே
யோதுபல்பொருட்சமயங்களுரைத்திடுமுரையை
யாதியந்தமில்லாததையறிவினாலறியு
மாதவத்தினர்மனமெனப்புனல்வதிந்ததுவே. (உச)

வானரம்பையராடலினரவமும்வளைகள்
ஞனிரம்பிவாய்தொனித்திடுமரவமுஞ்சுரும்பர்
மேனிறைந்துபாண்மிழற்றியவரவமும்விரிந்த
பூநகழ்ந்ததேனிரங்கியவரவமும்பொங்கும். (உரு)

நாளரும்பியநல்முறுநாகிளவனமும்
வாளமும்பலபுட்களுமலிந்திடுதுழனி
நீளும்பற்பலபாடைகணிரம்பியமாக்க
ளாளுமோர்நகராமெனவணிசிறந்ததுவே. (உசு)

தாளமொப்பெனவெழுந்தவிண்டனிமுகிற்குலங்கள்
பாவையாமெனப்படுபுனலூழக்கிவாய்ப்படுத்தே
யுருவகன்றிடுமையமண்டபத்தின்மீதுயர்ந்து
கருதமீசன்கைத்தரவிதுவெனமழைகாலும். (௨௭)

மலாடங்கியவாவியின்வலையகன்கூலத்
திலகுபன்மணிராசிகளிமைப்பனமறையோ
னலகில்பூமகட்கமுதணவென்றகையலைத்து
நிலவக்காட்டுபோர்வள்ளத்தின்விளிம்பினைநிகர்க்கும். (௨௮)

பருகுமாம்பலைக்காண்டலும்பங்கயங்குவியு
முருகுலாவசெங்குமுதங்கண்மொய்யிதழ்விரிக்குங்
கருதிபஞ்செலப்பண்டுபோற்காட்டிடுங்காட்சி
பெருகுஞானமில்லாதவர்மதியெனப்பிறங்கும். (௨௯)

உலகமேத்தியபுலவர்நாட்டுளநலமடவார்
மலர்கள்கொய்துநீள்வாவியிலாடுவமலிந்த
கலவியூடியபேடெனவோதியங்கருதாச்
சலசமீவாத்துண்டத்தாற்றனுமையிழுக்கும். (௩௦)

கள்ளநெஞ்சமடவியர்கண்டனக்காற்றுத்
தின்னும்வாட்கயல்கஞ்சத்திற்றவக்குண்டுகிடத்த
றன்னொனுப்பகைபெற்றவரிருவர்கடனியே
வின்னும்யோசனைகருதியசெயலினைவிரிக்கும். (௩௧)

கொண்டலைப்பொருகரிக்குழாங்கொடிகளானிண்ட
மண்டபத்துறுகால்களிற்பிணித்துக்கைவாங்க
லண்டரானவாய்பார்த்தடவியசிமய
விண்டினுலிருவேலமுன்கடைந்தபோல்விளங்கும். (௩௨)

கற்றைவெண்மணித்தகையினற்கவின்செய்பொற்படிக
ளுற்றவானமுதுதவபார்க்டணிகர்த்தொளிரும்
நற்றடத்தினைவாவியினலங்களை நோக்கிக்
கொற்றவேந்தனுமமைச்சனேடகங்களிகூர்ந்தே. (௩௩)

சோலையைக்கண்ணுற்றபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-க-க்குத்திருவிருத்தம். ௪௩.௨

---

# அசனங்கொணர்தற்கேகுபடலம்.

அம்பந்தம்விழிகிளியின்மொழிசெம்பஞ்சா-ரடிச்சிறுசிற்றுடுக்கிடை மின்னார்கள்செய்யும்,வெம்பந்தமுழுவதுநீத்துலகமெல்லாம்,-வெண்ணீறைந் தெழுத்துகண்டிவிளைவித்துள்ள சம்பந்தன்றனக்கருளியமண்வெங்காடுதனை யகழ்ந்துதிருமதுரைதன்னிலென்றும், நம்பந்தப்படியடியார்க்கின்றுங்காட்டு நம்சோமசுந்தரத்தைநண்ணிவாழ்வாம். (க)

வேறு.

பரிகணின்றிழிந்தவைகளுக்கரும்புனல்பருக்கி
விரியும்பொங்கரின்றருவிடைவிசித்துமற்றவர்கள்
வரிமிகுந்தொலிமலிந்தநீர்வாவியிற்புகுந்தங்
கரியநீர்குடைந்தருந்திமெய்யயர்வுதீர்ந்தப்பால். (உ)

களையடைந்துவீற்றிருந்தனர்தென்றல்பூங்காவின்
விளையெலாங்கவர்ந்திவர்கண்மேன்மணந்தவவீசிப்
புளைசெயத்திருமுகமலர்ந்துடல்புளகித்தார்
திரையினின்னமுதுண்டவர்போலுளஞ்செழிப்ப. (ங.)

கோலமானவன்கண்வளர்குளிர்பயோததிபோற்
சீலம்வாய்ந்தபூவாவியிற்சீர்த்தசெப்பொருளோ
நாலுமாமுகத்தவன்றருநாட்டிடையிதன்க
ணேலநாமுஞ்செம்புரிந்தமாதவப்பயனென்றே. (ச)

பொன்னிறுற்பொலிவிளிம்பினின்மணிக்குலம்பொருத்திச்
சொன்னதெய்வவான்றச்சராற்செருட்டபூகிழைத்து
மின்னெலாம்புகுந்துலாய்வரவிதித்தவிப்படிமே
லன்னம்வைத்துநாமருந்துதற்கவாவடைந்தனருல். (ரு)

வல்லாட்சுளையன்றியுநம்மனத்திடைந்த
வாவல்போக்குதற்செவ்வழிமுடியுமென்றரசன்
சேவலித்துளம்வருந்திறுனமைச்சனுங்கேளாக்
காவலாளனைப்பணிந்திதுகழறுவான்கனிந்தே. (சா)

வாட்டமென்கொனீமனத்தினினினைத்ததும்வாயாற்
கேட்டதுமுவந்தளித்துப்பின்கேட்பதுமளித்தற்
காட்டுணைத்தலையமைச்சனும்பாங்கனுமாகி
மாட்டுநின்றநானிவைசெயாதெதுக்குடன்வந்தேன். (எ)

விண்ணினுதியவுலகிடைவிரும்பியோர்பொருண்
யெண்ணுமுன்றுதவேனெனிலடிமையானென்னே
யண்ணலேயுனைத்தனிவைத்துச்செல்வதற்கத்தி
னன்னுந்துன்பிறுலிந்துனைதாழ்த்ததுநாயேன். (அ)

என்றுமேற்றிசையடையுமுன்னின்னமுதயினி
நன்றுதந்துனக்குதவுவனென்னநவிலா
நின்றவாம்பரியுகைத்தெழுந்தானெடுந்திசையுங்
குன்றமும்பெருங்கடல்களுந்தலைநிலைகுலைய. (௯)

பரியெழுந்ததுவிசையினாற்படர்திசைபரித்த
கரியிரிந்தனகாசினிசுழன்றதுகணக்கி
லருவிசும்புறுகோள்களுமுதிர்ந்ததிவ்வளவோ
வான்மயங்கினனுமெனில்வேறெதையறைவேன். (௧௦)

எகுமாநெறிவடதிசையியக்கர்கோனகர
மாகுமென்னவேயவிரொளிபரப்பியவிஞ்சி
மேகமாலைகடழுவநின்றிரவியும்வெள்கச்
சேகறும்படிதிருத்தியநகரொன்றுதெரிந்தான். (௧௧)

தங்கமாபுரியாகுமந்நகர்ப்புறஞ்சார்ந்து
யங்குறேய்மணிவாயிலைக்கடந்துநீண்மருகிற்
சிங்கவேறனான்சேர்தலுந்திருவினுஞ்சிறந்த
நங்கையர்பலர்கூடினர்மயங்கினர்நவில்வார். (௧௨)

கதிருநாணியபணியினன்கவின்முகநோக்கா
மதியுந்தேய்ந்ததுதேய்ந்ததுமானல்வடிவம்
விதியினார்செய்தபிழையலால்விளைந்தழகொருவர்க்
கதிசயென்பதோரவதிகண்டறையுமாறெவனோ. (௧௩)

கந்தனோவெனிற்கண்களீராறிலைகாமன்
வெந்துநீர்த்தனன்விண்டுமெய்கருகினன்விண்ணி
னிந்திரன்வாக்கருமங்கமொன்றுமீங்கில்லை
யெந்தமாநகரத்தானியன்சொல்காணெண்பார். (௧௪)

பவளமேனிபானநுசெழும்பாற்கடலனைப்பண்
டிவளுமாமலையந்தாந்திரிதரக்கடைந்திங்
கெவர்கொலோதவனோற்றவாறுதுணையாமு
மவனையேபணிந்தாலதுபோதுமென்றயர்வார். (௧௫)

கலைவிலங்கினர்கைவளைதோற்றனர்கண்ணீர்
முலையின்முத்தெனவுகுத்தனர்முளரிவாய்முழுதும்
புலரமன்மதன்பகழியாற்புலிகண்டமான்போற்
றலைமயங்கினர்துழுக்கடந்தப்புறஞ்சார்வான். (௧௬)

பஞ்சியூட்டியபதங்களிற்பரிபுரங்கலிப்ப
வஞ்சிகாட்டியமருங்குலோர்வனிதையாலோர்ந்து
செஞ்சொலாளனற்றெருவகன்றொருபுடையிருந்த
மஞ்சுதோய்மணிமாளிகைமருங்குறுமளவில். (௧௭)

வேறு.

மலர்தொடும்வாணிபம்மாறிலாவேலையாள்
கலகவேல்விழியினாள்கனகமாளிகையின்வா
யலகில்பல்சேள்வியானடைதலுமனமனா
னாலகமுண்டவனிவனெனமனத்துன்னினாள். (௧௮)

என்னகர்யாவனிங்கெய்துகாரணமெனப்
பொன்னனாண்முகமனோடுரைசெயப்புகலுவா
னன்னையேசொல்வதிற்பயனுனக்காவவோ
பின்னுசெங்கதிருமேற்கடலின்வாய்விழுமுனே. (௧௯)

சேணதர்ப்புகுதுமோர்செலவினனாகினேன்
சோணவான்விதுவெனக்குளிரும்வாணுதலினா
யாணர்தேவமுதுபோலயினியீந்திடுகென
வாணிமேலுயர்பொனுமளவிலாதருளினான். (௨0)

வாங்கிமென்மலர்தொடுவாணிபமானினி
தாங்கருமுவகையோடமுதுபல்சமையல்செய்
தீங்கிவனுழைதருமளவையின்கதிர்கட
லோங்குநீர்மூழ்கினானுலகிருண்மூழ்கின. (௨௧)

கதிரவன்கடல்புகக்கனியிருள்படிபுக
மதிமசன்றுயர்புகமூரிவான்மஞ்சினம்
புதியமின்னலும்விழப்பொருவருமுருமொடும்
பொதியுமாதிரமெலாம்பொழியுமாமழையரோ. (௨௨)

ஊழினாண்மழையின்மேன்மழையெனவும்பரா
ரேழுகாளங்கள்வாய்குமுறியேயெங்கணு
மாழிநீர்வறள்படவள்ளியேபொழிதலும்
வாழியான்சேதனமாறிநின்றெண்ணுவான். (௨௩)

வஞ்சர்தீவினைபுரைமங்குல்வாயெங்கணு
மஞ்சவேமஞ்சிழீஇயம்பினால்வெம்பரி
யெஞ்சுமன்றுனெறியேகுமன்றுவிறை
தஞ்சுநம்பிரிவெனுந்துயர்சுடுங்கனலினே. (௨௪)

சோலைவாய்மழையினாற்றுயில்வுறாதிறைவனுஞ்
சாலவெந்துயருழந்தழியவோதாயனாள்
கோலவாண்மனைசுகங்குறுகினேனென்னில்விடா
தேலுமென்னடிமைநன்றென்றுநின்றேங்குமால். (௨௫)

அள்ளலாரிருளின்வாயரசனுந்தமியனாய்ப்
புள்ளெலாந்துணையெனாப்புலரவோதெய்வமே
கள்ளமாயெனைமனங்கவலவைத்தாயென
வெள்ளமுஞ்சிறிதெனவிழிகணீர்சொரியுமால். (௨௬)

திங்களிரைந்துசூல்சேர்கிலாதன்றியே
தங்கவன்றேன்றநாடொட்டுமிக்காறுமே
தங்கிவேறிறைவிறுந்தவறிவேறுழைபுகே
னிங்கிராமுழுதுமெவ்வகைநணப்பேனெனு. (உஎ)

செங்கணீர்வாரவேநெருமலோடயருவான்
பொங்கிருட்டுலைவுறும்பொழுதுகாறிறைவனைக்
கங்கைசூடியசடைக்கானவாகாவென
வங்கைமாமலர்சிரங்குவியவஞ்சலிசெய்வான். (உஅ)

இன்னவாறுயருழந்திருளின்வாய்மருளுவான்
றன்னைநீங்கியதாரதலமளித்தொளிரும்வேன்
மன்னவன்றனியனுய்வாவியில்வைகுபோழ்
தன்னவற்குற்றவாறியாவையுமறைகுவாம். (உகூ)

அசனங்கொணர்தற்கேகுபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௪0-க்குத்திருவிருத்தம், ௪௯௧.

---

# நாகம்வெட்டியபடலம்.

தங்குகூடலி-லங்கம்வெட்டிய
மங்கைபாகனைச்-செங்கைகூப்புவாம். (க)

வேறு.

போதலர்ந்தபுனற்றடமீதுநன்
மாதர்முல்லைமலர்ந்தொளிர்சோலைவா
யோதுகின்னைகுயிலொலியொண்குழைக்
காதிலேற்றிருந்தான்புவிக்காவலன். (௨)

அந்தவேலையகன்மலர்வாவியி
லந்தாத்திடியாமெனவார்கலி
முந்தவெண்டிரைநீரின்முழக்கென
வந்ததோரொலிமண்ணுமறக்கொள. (௩)

ஒலியெழுந்திடவும்பருலைந்தனர்
வலியநாகர்மறுகியிரிந்தனர்
மலிகொண்மாதிரயானைமயங்கின
புலிகொள்சன்கைமானும்பதறின. (௪)

நனையவிழ்ந்தநறும்பொழில்வைகிய
புனையும்பொற்கழற்பூமகனேக்கியே
யினையபேரொலியாதெனவெண்ணியோர்
வினயமுந்தெரியாவகைவிம்முவான். (௫)

மஞ்சிடிப்பெனின்மேகம்வயங்கில
வெஞ்சலின்றிமிருகங்களெய்தில
வஞ்சொன்மீறுமவந்திகைதங்கிய
மிஞ்சுகாவிடைவேறொன்றுதோன்றில. (௬)

சண்டனும்பகடுந்தலைசாய்த்திட
வண்டகோளகைக்கப்புறத்தெட்டிய
வெண்டலங்கள்சுழன்றிரிந்தேமுற
மண்டுபேரொலிவந்தியாதென. (எ)

பண்ணமைந்தபருவலியானையான்
கண்ணிமைத்திலனெஞ்சங்கலங்கில
னெண்ணுஞ்சீயக்குருளையெனச்செழுந்
தண்ணங்காவிற்றனிநின்றுலாவினன். (அ)

ஆயகாலையணிமலர்வாவியிற்
றூயதேர்யஞ்சுழித்துவகிர்ந்திடத்
தீயையொப்பெனக்கட்பொறிசிந்தியே
காயும்வெஞ்சினக்கட்செவிவந்ததே. (௯)

மலைகள்யாவுமொருவழிவைத்திடி
லுலைவொணுதவுடற்புரையொக்குந்தண்
ணலைகொளுங்கடலேழினகலமோர்
விலைமணிப்படமொன்றுவிரிக்குமால். (௧௦)

காவுநீறெழக்கானகநீறெழத்
தேவர்நாடுந்திசைகளுநீறெழப்
பூவுநீறெழப்பொங்கும்விழிக்கடை
மேவுசீற்றவிரிகனல்சிந்தியே. (௧௧)

அழலுகுத்துப்படங்களோரைந்திறற்
பழுதிலாவசையிருள்படப்பாரின்மே
லெழுதுமேனியிறைவனைக்கொல்லவென்
றழிவுகாலம்பின்றூண்டவடைந்ததே. (௧௨)

மண்டுசீற்றமலிந்தெழுமாசுணந்
தண்டலைக்கண்புகுதலுந்தார்புயன்
கண்டுவெட்டக்கருதிக்கைநாந்தகங்
கொண்டுதுண்டங்குறைபடவீசினன். (௧௩)

வீசவீய்ந்துவிழுந்ததுசெம்புனல்
வாசநாண்மலர்ச்சோலையைவாரியே
யோசைவாருதியுழிப்பெருக்கென
வாசைதோறுமலையெறிந்தோடின. (கசு)

வரிகொளுகமடியப்பணம்பிழந்
தரியசோதிமணியிரண்டாழியிற்
பருதிவேறிரண்டுற்றெனப்பாய்திரைக்
குருதிமீதெரிவீசக்குமாலும். (கரு)

எடுத்துனன்காஞ்சேமித்திறகுறப்
பிடித்தவாளிற்பிறங்குகுருதியுந்
தொடுத்துமெய்யிற்றலங்குகுருதியு
மடுத்தவாவியடைந்துகழுவற்காய். (ககூ)

நாகம்வெட்டியபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் கக-க்குத் திருவிருத்தம் சஎஎ.

---

# பூலோகரம்பையைக்கண் ணுற்றபடலம்.

வானகமுமண்ணகமுமெடுத்துண்பான்போல்
வளர்பசியால்வருந்துகுடைக்காடனுக்குப்
போனகமும்வைகைநதிப்புனலுந்தந்த
புராரிதனைப்புனிற்றேனக்குருளைக்காகக்
கானகஞ்சென்றினியமுலைப்பால்கொண்டூட்டிக்
கலைபயிற்றிப்பெறும்பேருகாட்டித்தாய்போற்
றானகமுற்றருமையுறவளர்த்தகூடற்
றனிப்பாமன்றனைத்திருத்தாள்சார்ந்துவாழ்வாம். (க)

வேறு.

குளத்தினையவ்வழிகுறுகியாங்கதின்
றளத்தினைநண்ணியேதாக்கத்தண்புன
லளிக்கையாற்கவாவப்படியினிங்கியே
களிப்புனமுழ்ந்ததவ்விறையுநண்ணினன். (உ)

ஒருபடிக்கொருபடியுயர்ந்ததண்புனல்
பொருபடியாயிரந்தாழ்ந்துபோயின
மருபடிதார்மிலைமன்னுமையமாய்த்
தருபடியாவையுந்தணந்துசென்றனன். (௩)

சென்றனன்படியெலாந்தீர்ந்துசேவக
ஞென்றியகீழ்த்தளப்பரப்பையுற்றனன்
றன்றியபுனலெலாந்தோமிலாதொளிர்
பொன்றிணிகவிகையிற்பொலிந்தமீமிசை. (ச)

உற்றவானலைப்புனலுயர்ந்தவிண்மிசை
பற்றியமாட்சியும்பளிக்குப்பொற்படி
யற்றதுநோக்கியோரயிர்ப்புமுற்றுரு
மற்றதன்சூட்சியைமனத்திலுன்னுவான். (ரு)

அவ்வயினின்றிடுமளவைகீழ்த்திசைச்
செவ்வியபொன்மணிக்கதவஞ்சேர்த்திய
வொவ்வலிலுயர்நிலையொன்றுகண்டனன்
றெவ்வடுகுரிசிலுங்கடிதுசென்றனன். (சு)

பொற்கதவடுத்துறுபூட்டைப்பூமகன்
றற்கையாற்றீண்டலுந்திறந்ததம்வினை
முற்படத்துறந்தவர்க்கின்பமுற்றும்வந்
தற்புதங்கொளச்செயுங்காட்சியன்னவே. (எ)

திறந்தனதீவினைதுறந்துதிண்மைசா
லறந்தலைநிரப்பியவரசர்கோமகன்
சிறந்ததம்முளத்தினிற்றிப்பியங்கொடு
பிறங்குமவ்வாயிலின்பெருமைநோக்கினன். (அ)

வாவியம்புனல்புகாவண்ணம்வாயிலி
லோவவில்சூட்சியொன்றுஞற்றிவைத்துள
தாவலிலியந்திரத்தன்மைதேர்ந்துபின்
காவலனுங்கொருவழிகண்டானரோ. (கூ)

இவ்வழியாற்றியவியல்பையெண்ணுங்காற்
செவ்வழியாமெனத்தெரிதற்பாலது
வெவ்வழியாயினுமேவினுவிதி
லெவ்வழியாயினுமெய்துமென்னவே. (க0)

நடந்தனன்பொற்படிநாலைஞ்ஞூற்றையுங்
கடந்தனன்காவதங்கணக்கில்சென்றனன்
றடந்திரைப்பாற்கடறயங்குந்தன்மைபோற்
படர்ந்தபூம்பழிக்குடைப்பாரமீதரோ. (கக)

ஐயிருயோசனையகலமுள்ளது
செய்யவாய்நீளமவ்விரட்டிசேர்ந்தது
மையறுமலர்மகள்வதனமாண்பது
பொய்வினையவித்தவருலகம்போன்றது. (கஉ)

சூரியரொருவழிதொக்கமான்பது
போரவிருக்கையின்பெற்றிசான்றது
காரியமுனிவருங்காண்கிலாதது
கூரிருட்பிழம்பையுங்குலைக்குங்கோட்பது. (க௩)

தாமரைவனமதுதருவின்காவது
மாமணிக்கோபுரம்வயங்கலானது
நாமுதற்றவத்தினோர்நயக்கும்வீடது
சேமநூன்மயன்கரந்திருந்திச்செய்தது. (க௪)

பந்தியின்முத்தினம்பரப்புபேரொளி
சந்திரனெழில்கெடத்தழைக்கலாயதவ்
விந்திரனுலகமுமிணையிலாததோ
ரந்தமாளிகையினையரசனோக்கினான். (க௫)

கோணிலையாமெனக்குயின்றமுத்திமிழ்
வாணிலைப்படியினைக்கடந்துமாசிலாப்
பூணிலைமார்பினான்புக்குவைகிய
மாணிலைப்பொருளெலாமலர்க்கண்ணோக்கினான். (க௬)

செவிதருகற்பகநாடுந்தெண்டிரைப்
புவிமுதலுலகமும்போற்றப்போன்றுள
குவைமணிவெருக்கைபூங்கோவைமான்மத
மவிரிழையணிதுகிலளவிலான்றதே. (க௭)

மங்குலுமாசுறநீலமாமணி
யங்கதைத்தேய்த்தொளியவிருஞ்செம்மணி
யெங்கணுமிளநிலாவெறிக்கும்வெண்மணி
பங்கமிலொருவகைபகரற்பாலதோ. (க௮)

பளிங்குடையோளியிற்பசியதேறல்கா
னளந்திகழ்பொறியெனநகைவிளங்கிட
வளந்திகழ்மனைகளங்குவான்கர
மனந்தெடுத்தமைத்தபொற்பாவையாடுமால். (க௯)

கமுகெனமாகதக்கால்களுட்டிமேற்
றமனியத்தாம்பினாற்றொடுத்துச்சாலமை
யுமிழ்நகைமணிகளாலொழுங்குநிற்றிவா
னமுதவாய்ச்சியரிலாதசையுமூசலே. (உ0)

பூணியல்வனமுலைப்பூவைமார்நிகர்த்
தேணியல்பித்திவானிலங்குமோவியம்
பாணியல்வீணையாழ்பலவும்பற்றியே
மாணியலிசையெழாவயங்குமோர்புறம். (உக)

செம்மணிவிதானமுஞ்செறிந்ததொங்கலுஞ்
சும்மையாய்ப்பனிமலர்சொரிந்தசேக்கையு
மிம்மையைத்துடைப்பவரெய்துபூமிபோற்
பொம்மல்கொண்டளவிலபொருந்துமோர்புறம். (உ௨)

தமிழெனச்சுவைதருதனித்தண்டேறலு
மமிழ்தினும்பாலினுமரியமூரலு
மிமிழ்தருகருணையும்பிறவுமெஞ்சிலாக்
கமழ்நறுங்கனிகளுங்கணக்கிலோர்புறம். (உ௩)

வயின்வயின்விளங்கியமணிகளாதிய
செயிறுபொருளெலாநோக்கிச்சேவகன்
வெயில்புகாமாளிகைவிதத்தையோருங்கான்
மயிலனூருறையுள்போல்வயங்குகின்றது. (உ௪)

இன்னமுமறிகுதுமென்னவேகுழி
மன்னியகிள்ளையுமயிலும்பூவையு
மன்னமுநவ்வியுமணித்துவாழ்வுறும்
பன்னருஞ்சேக்கைபஞ்சரமும்பார்த்தனன். (உ௫)

பண்டெவரும்படையாதபண்டங்கள்
கொண்டெழிற்றிருநலங்குலவுமிம்மனை
யொண்டவருறையுளீதன்றிங்கோதொணுப்
பெண்டனிவாழ்வுறுபெற்றியென்னவே. (உ௬)

எழுநிகர்தோளினனெண்ணியேகுழீஇ
மழுவவளைசக்கரம்வரிவிற்சூமரங்
கழுவியல்கப்பணங்கலப்பைசூலம்வே
லழிவிலாப்படைக்கலத்தமைவுநோக்கினன். (உ௭)

இயக்கனேவுரகனேவெவன்கொலோவொரு
சயத்தவன்முயற்கறைதவிர்த்ததிங்களை
நயக்குவாண்முகத்தியைச்சிறையினட்டதோ
மயக்கமாயிம்மனைவயங்குகின்றதே. (உ௮)

நக்கசெம்மணிபொருமனையினற்பெருந்
திக்கெலாந்தேடிநாஞ்செல்லுவோமெனிற்
றக்கதோர்பொருளினைச்சார்தலாமெனப்
புக்கியேபூவறைதுருவிப்போகுங்கால். (உ௯)

இன்னிசைத்தமிழெனவமுதமீதெனப்
பன்னரும்பாகெனப்பசியதேனெனத்
துன்னுபொன்வீணையின்றுழனிகேட்டன
மன்னனுமத்திசைமதித்துமேயினன். (௩0)

வேறு.

வாசமலர்குடியெழுமஞ்சினைமுனிந்தே
தேசுலவுகாசிலமைசில்லணிதிருத்தி
ஆசையிருளில்லெனவமைத்தவறவோதிப்
பூசல்வரிவண்டுநறவுண்டொலிகள்பொங்க. (௩௧)

சத்திரவிழிக்கடைபுரண்டுகுழைதாவ
முத்தினைமுனிந்தவிளமூரலொளிவீசச்
சுத்தமமரும்பவளவாயமுதுசோரப்
பத்தியின்மணிப்பணிமதிக்கலைபரப்ப. (௩௨)

வாடுமொருநுண்பிடிமருங்குலையொசித்தே
சேடுறுமுலைக்களிறுசிந்துமதநாறச்
சூடுமணிமேகலைவிரிந்தொளிதுலங்கத்
தாடருதனிப்பரிபுரங்கழறழங்க. (௩௩)

சிறுபிறைநுதற்றிலதசிந்துரமிலங்க
நறைகமழலங்கன்மணிமாலைபலநாலச்
செறிகளபகுங்குமநிமிர்ந்துவிரைசிந்த
நிறைசுடர்தரித்தபணிநீடும்வெயில்வீச. (௩௪)

மாடகமலிந்தவெழில்வீணையைவயங்கு
மாடகமலிந்தகடகக்கரமணைத்துத்
தோடவிழ்செழுங்குமுதவாயமுதுசோரப்
பாடுமிசைமாதவருளத்தியல்படுக்க. (௩௫)

அம்போருகம்பொலியணங்குமனம்வெள்க
வம்பார்தனச்சசியரம்பையர்மயங்கச்
செம்பாலினுங்கனியினுங்களிசிறந்த
கும்பாபபோரழுகெழுந்துதுடிகொள்ள. (௩௬)

வாலுளைமடங்கலுருவாயிரம்வகுத்துக்
கால்சுடர்மணித்துகைகவித்ததவிசின்கண்
பால்பொருவுசொற்குழறுபைங்கிளிகடுத்தே
சாலெழில்பிறங்கவொருதையலுமிருந்தாள். (௩௭)

அம்புயமலிந்ததிருவாமெனவிருந்த
வம்பருலகிற்புவியினுகருலகில்லாக்
கொம்பெனவயங்கியொளிர்கோதைநிலைகண்டா
ளிம்பர்முழுதுந்தனிபுரந்தருளுமேந்தல். (௩௮)

மண்கரியளித்தமுகில்வண்ணனயனையாரோ
தண்கமலமீதிலுறைதவோன்மனைவிதானோ
வெண்குலவுநாகருலகுக்கிறைவியேயோ
விண்குலவுமிந்திரைகொலோவலதுமின்னோ. (௩௯)

பூரணமதிக்கலைபொருந்தும்வதனத்திற்
றேர்தரளமொத்துவெயர்சிந்துவதனாலுங்
கூரியவிழிக்கடையிமைத்தகுறியாலும்
பாரின்மிசைவந்தபருவக்குமரியாமால். (௪0)

இந்திரன்முதற்கடவுள்யாவர்களுமெய்தா
விந்தமணிமாளிகையிருந்ததிவராரோ
தந்திரமதானசெயருனறிவமென்னப்
புந்திகொடுவல்லியுழைபூமன்வருபோழ்தில். (௪௧)

தூயமலர்மீதிலுறைதூவியனமன்னாள்
சீயமிதுவென்னவருசெம்மலெழில்பாராச்
சாயகமிலங்குகைதரித்தபுவிமன்போ
லேயுமுருவத்தினொடுமெய்துமிவராரோ. (௪௨)

வெள்ளைவிடையோனுதல்விழிக்கனல்பொடிந்த
கள்ளுறுமலர்க்கணைகரங்குலவுகாமன்
வள்ளலிவனுக்கிணையெனச்சொலுதன்மாசென்
றுள்ளமயரச்செயன்மறந்துதெளிவுற்றே. (௪௩)

மங்கையிருவர்க்கொருமணாளனெனவந்த
செங்கைவடிவேலணிதிகம்பரனலாது
சங்குலவுசெங்கைபொருதண்டுளபனாண
விங்குவருவார்க்குவமையெங்குசொலநேரும். (௪௪)

கைகமலமன்றணிகலாமதியுமொவ்வாத்
துய்யவதனம்பொருசுடர்ப்படைசுமந்த
சையநிலையுந்தளர்புயம்பெறுதரத்தான்
வையமிசைவந்தவனெனப்பகர்தன்மாசால். (௪௫)

வாசவனும்வந்தெதிர்வணங்குமலர்மேனித்
தேசுடையவள்ளலிவனைத்தெரியுமாத
ராசையினுமாசையகலப்பெருகியந்தோ
வீசுகனலின்மெழுகெனக்கரைவண்மெய்யே. (௪௬)

வஞ்சனையதாகவுறவாடவருநாகஞ்
செஞ்செவியமெல்லுருவுகொண்டதிறலேயோ
மிஞ்சுமணிமாளிகைவிதித்தநெறியோர்ந்திங்
கஞ்சுதலிலாமலிவணார்வருவரம்மா. (௪௭)

வேளுமலமாலுமலவேளுமலவிண்ணை
யாளுமமரேசனலவம்புவியெலாமோர்
தோளின்மிசையேந்தியரசாளுமொருதூய்மை
நீளிறைவனன்றியரவன்றானினையுங்கால், (௪௮)

இங்குவருவோனையெதிரெய்தியினிதாகச்
சங்கையனுமானமகலத்தனிவினவ
வங்கடனெனக்கருதிநங்கையுமெழுந்தே
பொங்கியபதத்துணைசிலம்பொலிபுலம்ப. (௫௯)

செங்கயல்விழிக்கடைசெவித்துணையழைப்பப்
பங்கயமலர்க்கையுறுவீணையொலிபம்ப
வங்கமுழுதும்பணிமதிக்கலைகளாயக்
கொங்கையிணைமென்கொடியிடைக்கிடர்கொடுக்க. (௬௦)

அன்னமெனவேகிமயிலாகுமெனமன்னன்
றன்னெதிர்புகுந்தயலொதுங்கிவெளிதாவு
மின்னெனநுடங்குமலர்மென்கொடியினொல்கிக்
கன்னிகையுநாணமொடுதன்றலைகவிழ்ந்தே. (௬௧)

புன்னகைபரப்பிவிழியின்கடைபுரட்டிச்
சொன்னமணிவாய்மலர்திறந்தமுதுதள்ள
வெந்நகரமேதுகுலம்யாவர்மகனஞ்சா
மன்னியிவண்வந்தவகையென்கொல்சொலுமையா. (௬௨)

மூவர்முனிவோரமரர்முற்றுமுணராத
வாவியுளிறங்கிவழிகண்டுவரவல்ல
காவலவமற்றெவரினும்பெருமைகைக்கொண்
டேவல்கொளுநின்னிலைமைசொல்லலியல்பாமால். (௬௩)

என்றுமடமாதுரைசெயின்னமுதுதேக்கா
நன்றெனமலர்ச்செனிகுலுக்கிநகைசெய்யா
மின்றிகழும்வான்கரமிலங்குபுயவீர
னின்றபினுறங்கருமமுன்னியிதநேர்வான். (௬௪)

என்பெயருமென்குலமுமென்பதியுமற்றை
நன்கருமமுந்தெரியவெண்ணிநவில்கின்ற
மின்பொருமருக்குல்வடமேருமுலைமானே
நின்கருமயாவுமறிதற்குளநினைந்தேன். (௬௫)

அல்விரியவெண்கதிர்பரப்பிவிணமர்ந்த
வல்லைமதியிங்ஙனமறைந்துறைதன்மானும்
வல்லியிடையாயொருவரின்றிமயில்போலிவ்
வில்லிடையிருந்தனையிதென்னரியயர்கின்றேன். (௬௬)

உள்ளபடிநின்பெயரையூரையுறவோரைக்
கள்ளமகலப்புகறனின்கடனெனச்சீர்
வள்ளலுரைசெய்யமடமாதுதனதுள்ளந்
தொள்ளைபடநின்றுயிர்குழைந்திதுகரைப்பாள். (௬௭)

வேறு.

விழியழன் மாண்டசம்பாரிநற்றவத்தைமேவிப்
பழியசன்றிடச்சீர்வாய்த்தபடிவமொத்தொளிருமேனி
யெழுநிசர்தோளாய்நின்பாலெனக்குறுகருமமெல்லா
மொழிகுவன்றடைவேறில்லையாயினுமொழியக்கேண்மோ. (௫௮)

மிஞ்சுபாதலத்திற்பாரில்விசும்பினிற்கிடைத்தற்கெட்டாச்
செஞ்செவிமுழுதம்வாங்கித்தனதுமாசவமுஞ்சேர்த்துக்
கஞ்சனின்னுருவநீட்டிக்காட்டினனவடிவுக்கேர்ப்ப
வெஞ்சலிலாயுளாற்றுதெணியுளமிரங்கிற்றம்மா. (௫௯)

இன்றுநீதணப்புற்றப்பாலேகுதவின்றியீங்கு
நின்றிடிற்றப்பாதுன்றனுருயிர்க்கிறுதிநேரும்
நன்றுநின்னழகுமுற்றுங்கண்டுளநாயேன்பின்னும்
பொன்றுதல்காணற்காற்றுமோவெனதுள்ளம்பூம. (௬0)

ஆதலாற்காலந்தாழாதப்புறமகன்றுநீயும்
போதலேகருமமென்றுபூங்கொடிவருந்தாநிற்பப்
பேதைதன்குணனும்பேசுமொழுக்கமும்பிறவுநோக்கிக்
கோதிலாதுலசங்காச்குங்கொண்டலுண்டாட்டங்கொண்டே. (௬௧)

செழுந்தனியழகுநீட்டிச்செய்துளமலரோனெற்கிங்
குழுந்திநுண்ணியவாயாயுளுஞற்றினனென்றுன்வாயான்
மொழிந்தனைமுத்துமுத்தாய்முலைத்தடங்குழிப்பக்கண்ணீர்
பொழிந்தனைவாளாநைந்தாயுள்ளவாபுகன்றிடாமல். (௬௨)

உள்ளமுள்ளியவாகொண்டுகரப்பிலாதுவப்பமென்பூங்
கிள்ளைநன்மொழியாயென்பாற்கிளத்தலையெனினுநின்றன்
கள்ளமுமிவனுற்றூர்ந்தகருமமுமெனக்குநேருஞ்
சள்ளையுமுணர்வுற்றேனென்றீதையுஞ்சமைப்பதானன். (௬௩)

தொல்லைநின்மரபுக்கொவ்வாதொருவனுற்றுன்பமுற்றிவ்
வில்லிடையென்றுநீங்காச்சிறையிடையிருந்தாய்போலும்
வல்லவன்வந்தாலென்னைக்கொல்லுவானெனன்றுவாடிச்
சொல்விறகென்றுங்கண்டேனின்பெருஞ்சூண்மற்றேதோ. (௬௪)

சக்காத்தலைவன்மேலைச்சதுமுகன்வலாரிநீண்ட
திக்கமரெண்மர்மற்றைத்தேவர்தானவராயுள்ளா
ரொக்கவெஞ்சமரிலேவந்துடற்றினுமுழிக்காலை
முக்கணன்முடித்தாற்போலமுடிக்குவனனையார்வெல்வார். (௬௫)

ஆதலாலெனதுகேதமெண்ணுதலகற்றிநெஞ்சிற்
சூழ்தொழித்துன்னையுள்ளவாறுநீசொல்வாயென்னப்
பூதலத்தரசன்கூறப்பூவையுமிவனுலென்றன்
றீதுபோய்வாழுநாளென்றுளதெனச்சிந்தைசெய்தே. (௬௬)

உருவினிற்சில்லோர்புத்தியூகத்திற்சில்லோர்வீரம்
புரிதலிற்சில்லோர்மாறபொருளினுஞ்சில்லோரின்றி
யொருமுகமாகப்பெற்றோரிவனொழிந்துவரிசூழ்ந்த
பெருநிலமதனில்யாரைத்தெரிந்துரைபேசலாவேன். (௬௭)

உள்ளதைமறைத்துவேறொன்றோதினுமதனிலுள்ள
கள்ளமுமறியவல்லானிவனுழைகரப்பொன்றின்றி
விள்ளுதல்விழுமிதென்றுவேட்கையுற்றபலநீங்கிக்
கள்ளினுமினியதீஞ்சொற்கன்னியுங்கழறுவாளால். (௬௮)

காற்றினைக்கனலைமண்ணைக்கடலினைக்கடைநாடோற்றுங்
கூற்றினைமாற்றவல்லகுறுந்தலைப்பணமைந்துள்ள
சிற்றவாளரவொன்றென்னைச்சிறையிடைச்சேர்த்ததின்றோர்
வேற்றுருக்கண்டான்மாய்க்கும்விபுதராற்கொலவும்வீயா. (௬௯)

போயதுவெளியிலிங்குபுகுதநின்வரவுகண்டாற்
றீயெழச்சிறிமாய்க்குமென்பதோர்தியக்கஞ்சேர
நோயடைந்தவர்போனின்றேனலதுநானுவல்வாயென்ற
நாயகினதுவார்த்தைமறுத்துரைநவிறற்பாற்றோ. (௭௦)

பாதகவுருக்கெழீஇயபாந்தள்வாய்ப்படுமுனீங்கிப்
போதலேகருமமென்றென்புந்தியினினைக்கின்றேன்பி
னேதுஞ்செயினுஞ்செய்கவென்றனள்சிரித்துத்தோன்றல்
வேதனைவிலங்கமாதுக்கிதனையும்விரிப்பதானான். (௭௧)

பாலருக்கணக்குதோன்றப்பாம்புபாம்பென்றதெண்ணீர்
வேலைசூழ்ஞாலம்வாளாவிளம்புதல்கொண்டுசொற்ற
சேலையொள்ளியதன்னுள்ளந்தெரித்ததுமேலுமந்த
வாலமார்பாந்தள்வந்திங்கென்னையென்னுற்றற்காற்றும். (௭௨)

கன்னிநீகன்னிநெஞ்சங்கரைவதுதவிர்தியந்தப்
பன்னகந்தன்னைவாளாற்படுத்தனனுவிநீத்துப்
பொன்னகர்புக்குமினாதன்மனத்தனியும்போன
பின்னுனக்காவதேதுமுளதெனிற்பேசுகென்றான். (௭௩)

மன்மகன்புகன்றவார்த்தைவன்பிணியாளர்க்காங்கு
நன்மருந்தளித்தாற்போலநாரிதன்செவியிற்கேளா
மென்மயிர்பொடிப்பவங்கமெலிவுதீர்ந்துடல்பூரிப்பப்
பொன்மலர்பொதுளவாசம்பொருந்துபூங்கொம்பர்போன்றே. (௭௪)

போயதுபுயங்கமீண்டுபுகுந்திலபொழுதுதீர்ந்த
மாயதாலழிவுண்டென்றற்கையுறவில்லையிந்த
நாயகனுரையுமெய்யேயென்றனளயந்தாளாகி
யேயவன்றன்பாற்பின்னும்வினையமோடிதனைச்சொல்வாள். (௭௫)

நன்றுநன்றுரைத்தாய்நின்போனராதிபர்தமக்கேயன்றி
வென்றிமற்றொருவற்கெய்தாதென்பதுசரதம்வீர
நின்றரமளவைத்தாகாவதனையெவ்வழியினேர்ந்து
கொன்றனையென்னையான்மற்றினிச்சொலுங்கூற்றுமுண்டோ. (௭௬)

ஈசனுமாலுமேனையிமையவர்குழுவுமீண்டி
மாசுணந்தனக்கோரின்னல்வருவிக்கமனத்திற்றோரா
ராசுகஞ்செறிந்ததுணியமைந்ததோளரசேவாளால்
வீசினேனென்றுசொன்னாய்விழுமிதுன்வீரமன்றோ. (௭௭)

தோற்றியவுலகுக்கெல்லாங்கூற்றெனத்தோற்றமார்ந்த
மாற்றருஞ்சீற்றமிக்கமாசுணநின்னாலென்னே
யூற்றமற்றிறந்ததென்றிங்குரைசெய்தாயுற்றுநோக்கி
னாற்றிசைபரிக்கும்யானைநரியினான்மாண்டதொக்கும். (௭௮)

வெங்கயங்கோடிகோடிமேவிநின்றடர்த்தபோதுஞ்
சிங்கத்தையூறுகாணுந்திறலுடைத்துளவோவையா
விங்குநீநாணமின்றியியம்புவதென்னையென்னாச்
செங்கையைக்குலுங்கக்கொட்டிச்சிரித்தனணிலவுசிந்த. (௭௯)

சிரித்தலுஞ்செம்மனோக்கிச்சீற்றமேற்கொண்டானேனு
முருத்துறணகையாண்மீதுவெறுத்துரைமொழியானாகிப்
பருத்தபொன்முலையாயுன்மேலருத்தியாற்பகர்ந்தேனல்லேன்
விரித்தபூம்பொதும்பர்நாப்பண்மேவிநாணிருக்கும்வேலை. (௮௦)

காலனும்வெருவவிண்ணோர்கண்முகிழ்த்தொடுங்கமற்றை
ஞாலமுநடுங்கச்சீறிநாலொருதலையாநாக
மேல்வருமளவில்வாளால்வீசினேனிரண்டுதுண்டாய்
வால்சுருண்டுடலங்குன்றிமடிந்ததுமண்மேலம்மா. (௮௧)

அந்தலைமடிந்தநாகத்தலைபிளந்தவிருஞ்சோதிச்
சித்திரமணியிரண்டுதெரித்ததென்னுழைசேமித்தே
னித்தைநீகாண்மினென்றுகாட்டினானிருகணோக்கி
முத்தணிநகையினாளுமுகமலர்ந்தார்வமுந்த. (௮௨)

பாருளமணியின்மேலாய்ப்பயோததிபிறந்துமாயோன்
மார்பினிலிருந்ததெய்வமணியுமிம்மணிகட்கொவ்வாச்
சூரியனொளியுந்தோற்குமெனில்விலைதொகுத்துச்சொல்லற்
காருளர்நாவுமீராயிரமுளவனந்தனல்லால். (௮௩)

நம்மையிச்சிறையிலிட்டநாகத்தின்றலையினாறுஞ்
செம்மணியிவைகளல்லால்வேறிலையென்றுதேர்ந்தே
கொம்மைவெம்முலையாளின்னங்கோமகன்கோட்பாடெல்லா
மம்மநான்வினவித்தேர்வேனென்பதோரார்வமுற்று. (௮௪)

பாம்படியுடையானேனும்பாம்பினைப்படுக்கற்பாற்றோ
தேம்படிதாராயிந்தமணிகள்போற்றேசுகொண்டு
ஏம்படியளவைசெய்யாநவமணிராசிநீண்ட
தூம்படியறங்குவாயில்கிடந்தவைசூழநோக்காய். (௮௫)

அன்னவைகவிற்கவர்ந்துகாட்டினாயதனைமாற்றி
யென்னுடைமணிகளொன்றிங்கியம்புதற்கெனதுகையாற்
சின்னங்கள்பொறித்ததுண்டோதெரியல்சூழ்மார்பாநின்சொற்
றன்னையெப்படிநானம்பித்தெளிவுறுந்தகைமைத்தென்றாள். (௮௬)

சொன்னதுசற்றநம்பாத்தொயின்முலைமயிலினாளுக்
கென்னநானினிமேல்வேறுபகலுவேனென்றுவாடி
மன்னவனணங்கேபன்னூல்வகையறிந்தாலுமாதர்
தன்னியன்மடைமைங்காரென்பதுசாதமாலோ. (௮௭)

வஞ்சமேவடிவுகொண்டமாதரார்தமக்குநேரே
யஞ்சமாமுகன்சொன்னாலுஞ்சமெனவறிவிற்றேரார்
கஞ்சவேல்விழியாயென்சொனிசமெனநீயுங்காதிற்
கொஞ்சமுங்கொள்ளப்போயோகொள்ளினுக்குறைவேயன்றே. (௮௮)

விட்டியவதுவும்பொய்யேவிழிந்ததும்பொய்யேபாந்தட்
குட்டுடையணியும்பொய்யேகுழூமென்னுரையும்பொய்யே
கோட்டுமென்முலையாய்நின்கண்குறிக்கொளக்குறைந்தபாம்பைக்
காட்டினாலதுவும்பொய்யேயென்றுரைகழறுவாயே. (௮௯)

என்றலுமகத்தினுள்ளேயெழுந்தபேரிறும்பூதெய்திக்
குன்றெனப்பணைத்துவிம்முங்குடமுலைமடநல்லாளும்
வென்றியிவ்வனேபேசம்வியத்தக்கிவனேசாம
னன்றெனிலெவர்க்குமேற்கொள்ளழகுக்குமிவனேயம்மா. (௯0)

என்பெருந்தவமோவென்முன்னவர்செய்மாதவமோவிந்த
மன்பெருமகனிங்குற்றானிவனைநான்வரனாக்கொண்டு
முன்பெருங்குறைகளைப்பேனென்பதோராசைமுந்தத்
தன்பெருமனத்தினுள்ளேதசைந்துபின்னிதனைச்சாற்றும். (௯௧)

விட்டியபாந்தடன்னைவிரும்பியென்கண்ணிற்காணக்
காட்டுவதன்மையென்னிற்கருத்தினிற்றெளிவிலார்போற்
றுட்டினைசலிப்பவாதஞ்சாதித்தித்தளர்ந்துநின்ற
கோட்டியென்கருமமென்றாளிவனலங்கொள்ளநின்றாள். (௯௨)

சொன்னசொன்னன்றுநன்றதுடியிடைத்தோகாயிந்த
மின்னுவாளாகமாண்டவெறிமலர்ப்பொதும்பர்மேவி
நின்விழிகளிக்கநானுங்காட்டுவனேயேயென்றான்
மன்மகனுறுதிநோக்கிமடவாண்மறுத்துந்தேர்வான். (௯௩)

மூவரேயெனினுமற்றைமுனிவரேயெனினுந்தெண்ணீர்
வாவியுளிறங்கியிங்குவருவசற்கரவின்சென்னி
மேவியமணிகளின்றேல்வேறொன்றலாகாதென்னாப்
பூவையுநினைந்துளையம்போக்கித்தன்னுடல்பூரித்தே. (௯௪)

கண்ணினாற்கண்டாலன்றிக்கட்செவிமாய்ந்ததென்றிங்
குண்மையெத்தனைநீசொற்றபோதினுமுறுதிகொள்ளே
னண்ணலேயென்றாள்பின்னென்செய்குவானரசனம்மா
பெண்ணருங்கலமேயந்தப்படிசெயப்பெறுவேனென்றான். (௯௫)

வீய்ந்ததுமெய்யேயென்றால்வேந்தனுக்கணிபூமாலை
வேய்ந்துடன்வாழ்வனின்றேல்வெறுத்துயிர்விடுவனென்றே
தேய்ந்தசிற்றிடையினாளுஞ்சிந்தையுணினைந்தாளாகி
வாய்ந்தகைவீணையேந்தியெழுந்தனண்மயில்போலம்மா. (௯௬)

பின்றொடர்ந்தேகிச்சென்றாள்பிடியுமால்களிறும்போலத்
துன்றியசுரங்கமெல்லாந்தணந்துதூய்த்தோயமல்கும்
மின்றிகழ்மலர்ப்பூம்வாவிவழிதரவெளிகண்டேறித்
தென்றல்வந்தசைக்கவாசஞ்சிந்துபூஞ்சோலைசேர்ந்தார். (௯௭)

மலைபிளந்திரண்டுகூறாய்வயங்கியதென்னவைந்து
தலைசிலைகுலையவாளாற்றரிப்புண்டுவாயிற்சோரி
யிலைமரந்துவன்றிநீண்டபொங்கர்களெங்குமோடி
யலைதரவுயிர்போய்மண்மேற்கிடந்தபேரரவைக்கண்டாள். (௯௮)

கள்ளவாளரவுமாண்டுகிடந்ததைக்கண்ணிற்கண்ட
பிள்ளைமென்மொழியினாளும்பேச்சயர்ந்துயிர்ப்புவிம்ம
வுள்ளெழுமுவகைவெள்ளந்தலைப்பனித்தோங்கத்துன்பந்
தள்ளினண்மேன்மேலின்பந்தருக்கினடைந்தாண்மெய்யே. (௯௯)

வாடினாளநேகம்பட்டமனத்துறுவறுமையெல்லாம்
வீடினாளரசன்கீர்த்திவீணையிலிசைத்துக்கானம்
பாடினாள்பரதங்குன்றாவிதிமுறைபதங்கள்சேப்ப
வாடினாளுவகைத்தேறலள்ளியுண்டவசமானாள். (௧௦௦)

மாசுணமதனாற்பட்டமாசினைத்துடைத்துமுக்க
ணீசனேவறிஞனானவேழையேற்கிரங்கிநின்னை
யாசையின்கணவனாகவனுப்பினையென்றுநேசம்
பேசினாள்பேரானந்தம்பெருகமெய்பெருத்துநின்றாள். (௧௦௧)

போதுறைமடந்தைபோலப்பொற்புநீண்டழகுவாய்ந்த
பேதையரெவரென்றாலும்பேதைமைபிழைக்காதொன்று
வேதமும்புகன்றதன்றோவீரயானறிவில்லாம
லேதுசொற்றிடினுங்குற்றம்போக்கியாண்டருள்வையின்றே. (௧௦௨)

சீர்தருமகதயாழிற்சேர்த்தியவாசமென்பூந்
தாரினைவாங்கியோங்குந்தாரபதிபுயத்தில்வேய்ந்து
கார்வரக்களிக்கும்பச்சைக்கலாபநன்மயில்போனாணிப்
பார்நிலம்விரலாற்கிறிப்பாவையுமொதுங்கிநின்றாள். (௧௦௩)

நிலத்தினைவிரலாற்கிறிநாணமேனிறைத்துநின்ற
சொலத்தகாவடிவினாளைத்தூயதன்கரத்தாற்பற்றி
முலைத்தடம்வருடிவாயான்முத்தமிட்டணைத்துப்புல்லிக்
கலத்தல்போன்முயக்கங்காட்டிக்காவலன்களிப்புச்செய்தான். (௧௦௪)

ஐயன்கைதழுவலோடுமெரிமதர்நெடுங்கட்செவ்வாய்த்
தையலாளுடலமோடித்தடித்தனபொடித்தரோமங்
தொய்யணிகலசக்கொங்கைதுழும்பினததும்பியோகை
மெய்யினிலடங்காதாகிவேலையில்விரிந்ததன்றே. (௧௦௫)

கற்பெனும்பொற்பினீண்டகடியானுடையநங்கை
யற்புதவரசேநானிங்கடைந்தவாறனைத்துஞ்சொல்வே
னற்புகாமனையிலேகியெழுகவென்றிசைத்தாள்வேந்தன்
சொற்பணிகடக்கப்பாற்றோதுயர்கடிந்துய்யும்வேலை. (௧௦௬)

வாவியிற்புக்குமீண்டுமலர்ப்பொழில்வந்தவேந்த
னாவிநேரமைச்சைநின்றவசுவத்தைநினையானாகித்
தேவியோடெழுந்துசெல்லச்சிந்தித்தானையோகாமம்
மேவினாலெவர்க்கும்பார்மேனன்மதிவிளையுங்கொல்லோ. (௧௦௭)

தையலோடெழுந்துநொய்திற்சக்கரவாகந்துஞ்சும்
பொய்கையைநணுகலோடும்பூவைமன்னவனைநோக்கிச்
செய்யநீர்விலகற்குற்றகருமநன்காஞ்சேமித்த
பையுறுமணியாலென்றாள்பார்த்திபனையந்தீர்ந்தான். (௧௦௮)

வாவியுளிறங்கிநீரும்வழிதரக்கடந்துபண்டைப்
பூவுளோனகரின்மேலும்புதநிலவெறிப்பவாய்ந்து
தேவர்நாடணவுஞ்செய்பொற்செழுமணிமாடம்புக்கங்
கேவருச்சிலையினானுக்கின்னனகருமஞ்செய்வாள். (௧௦௯)

துய்யநீராட்டிவாசந்துதைந்தெழுகலவைச்சாந்த
மெய்யெலாங்கமழத்தூசுவீக்கிநல்லணிகள்வேய்ந்து
செய்வனபிறவுஞ்செய்துசெஞ்சிலையனங்கனன்ன
வையனைச்சிறந்தசெம்பொனாசனத்தமைத்துப்பின்னர். (௧௧௦)

பரிகலந்திருத்திமூரல்பருப்புநெய்பழந்தேன்றீம்பா
லுரியனபடைத்துவேந்துண்டுள்ளசேடந்தானுண்டு
விரிகதிர்மறைதலோடுமெவரியலர்விதானந்தூக்கிப்
பருமணிகுயின்றசெய்பொற்பஞ்சணைப்படுக்கைசேர்ந்தார். (௧௧௧)

மறைகளால்வகுத்தநீதிக்காந்தர்ப்பமணத்தின்வேட்டே
யிறைவனுமிறைவியாளுமிரதியுமதனுமென்னக்
குறைவறுகாமநூலுங்குறைபடக்களிப்புக்கொண்டே
முறைமுறைகலவிப்பூசலுஞற்றிடமுயக்கினால். (ககஉ)

பரிபுரமொலிப்பச்செங்கைப்பணிவளைகுமுறநீண்ட
வரிவிழிசிவப்பக்கூந்தல்வார்ந்துதேன்கறங்கத்திங்கட்
டிருமுகம்வெயர்வுதோன்றச்சேயிதழ்நறவம்பொங்க
வரசியுமரசனோடுகலவிப்போராடினளால். (ககங)

பணிலங்களுடையத்தானைபரிந்துபாரிரிந்துசாய
மணிமதயானையஞ்சவகுத்தபோணிபின்னோட
வணிசிலைநிமிர்ந்துநாணற்றலைவுறமாலைசிந்தப்
பணிமொழியாளைவெற்றிகொண்டனன்பருதிவேலான். (ககச)

மங்கையும்வங்கமாகமன்னனுமாலியாகத்
தங்களாற்புரியும்லீலைதனித்தனிகருவியாக
வெங்கணுமுடிவொன்றின்றியெற்றுவெண்டிரைகொழிக்கும்
பொங்கியகலவியென்னும்புணரியைக்கடந்தான்றே. (ககரு)

சித்திரித்தழகுவாய்ந்தசெழுமலரமளிமீது
முத்தணிநகையினளுமுழுமதிமுகத்தினனு
மெத்தனைதரமோவந்தவிரவுவீணெய்தாவண்ண
மொத்தறுபத்துநான்குலீலையுமுஞற்றினால். (ககசா)

வேறு.

கலவியின்பூசலிற்களைப்புற்றஞ்சிய
விலவிதழ்மடந்தையும்வருந்தியேமுரு
மலைமிசைதுயிலுமோர்மயிலிதாமெனத்
தலைமகன்புயத்தொடுந்தழுவித்தூங்கினள். (ககஎ)

அங்கசன்பகழியாலலசிமெய்யெலாம்
பங்கமுற்றயர்ந்துளம்பதைத்தபார்மகன்
கொங்கையின்வேதுகொண்டொற்றிக்கூர்விழி
மங்கைவாயமுதினல்வருத்தமாறினன். (ககஅ)

அநுபவித்திதற்குமுன்னறிந்திடாதநல்
வனிதையுமன்னனும்வளர்ந்தகாதலி
னினிதுவந்ததன்பினும்புணரவெண்ணுங்காற்
றினகானுதித்தனன்சிந்தைதேம்பவே. (ககக)

பூலோகாம்பையைக்கண்ணுற்றபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் கஉ-க்குத் திருவித்தம், ருகசா,

---

# வரலாறுகூறியபடலம்.

தாயாயிவ்வுலகமெலாமீன்றமாதா
தன்னையொருகாஞ்சனைக்குத்தநயையாக்கி
வாயாதமணவாளன்றானுமாகி
மனுமுறைகொண்டரசியற்றிவடிவேலோனைச்
சேயாகப்பின்னிருத்தியின்றும்வந்து
தெரிசிப்பார்தங்களுக்கோர்தெய்வமாகி
யாயாமன்மறைமுடியினமேற்பட்டிப்பா
லணிமதுரையிருந்தானையணுகிவாழ்வாம். (௧)

வேறு.

பருதிவந்துதித்தலும்பசும்பொற்றாரினன்
றிருமகட்கொருமகனென்னவத்திரு
மருமகட்கொத்துளமாதினோடுமக
கருமைநீர்குடைந்துநீறணிந்துபின்னரோ. (௨)

காலையில்விதிமுறைகடன்கழித்தபின்
பாலமுதருந்தியேபாவைதன்னொடுஞ்
சால்புறப்பாகடைதரித்துச்சாந்தமு
மேலணிந்தகத்துறுகளிப்புவீங்கவே. (௩)

பச்சைமாமயிலெனும்பாவைமேன்மய
லிச்சைநீங்காதவணிருக்குமெல்லையின்
மச்சவேல்விழியினாள்வதனநோக்கியே
செச்சையம்புயத்தினனிதனைச்செப்புவான். (௪)

குழலொலியாழொலிகுயிலின்சிறொலி
பழுதில்பைங்கிளியொலிபாலூறுகண்
டழக்கழைதருமரியசாறொடு
மெழுதரையமுதினைவிலக்குஞ்சொலாய். (௫)

எந்தமாநகர்ப்பயமேதுநின்பெருந்
தந்தையார்தாயெவர்தளர்ந்தபாய்பிற
விந்தமாளிகைபுகுந்திருத்தற்கேதுவென்
சிந்தையிற்கரவிலாதெடுத்துச்செப்பென்றான். (௬)

கௌவையார்கடலெனக்களிப்புக்கைமிகச்
செவ்வியகுமரனைவணங்கிச்சேயிழை
நவ்வியம்பெடையெனவொதுங்கிநாணியே
கொவ்வையங்கனியிதழ்திறந்துகூறுவாள். (௭)

வேறு.

கரும்பொனிணைத்திணிமருப்புக்கடாக்கழுத்தினுகம்பிணித்துக்கருங்
கான்மள்ளர், விரும்புதடம்பணைகளிற்சென்றுழுமொலியான்மந்திமனம்வெ
ருண்டுதெங்கின், குரும்பையைவிட்டாம்பையினிற் குதிக்கின்றபோழ்துக
ளிக்குலைத்தேன்சிந்திச்,சுரும்பாற்றும்பூங்கமலவாவியலையிட்டோடிச்சூழ்க்கு
[மன்னே.] (அ)

இதுசிவணும்பல்வளமார்விரிஞ்சநகர்புரந்தருளுமெனதுதாதை
மதிசிவணுமணிக்குடையான்வணங்கார்கள்வலிக்குடையான்வாவுங்காலின்
கதிசிவணும்பரிக்குடையான்முரசதிருங்கடைத்தலையான்கனகமேரு
நிதிசிவணுந்தனதனெனப்பான்விரிஞ்சனெனநாமமலிதிருப்பரேறே. (௯)

அன்னவன்செய்நற்றவத்தாலொருமகவாய்நான்பிறந்தேனரசேபெற்கு
மன்னியபூலோகாம்பையெனப்பெயருஞ்சேர்த்தியவண்வளர்க்குநாளின்
மின்னிடைச்சிற்றடிக்கயற்கட்டாளநகைத்துவரிதழ்வாய்விரிவண்டோலந்
தன்னுகுழற்பைங்கனகக்குரும்பைமுலைத்தோழியர்கள்சூழமன்னே. (௧௦)

மலைப்புறனும்பெருங்காவுமணித்தடமும்பார்க்கவெனமதித்தோர்நாளிற்
சொலைக்கடந்தவானிரவிதோன்றுதகாலத்துஞ்சுடாலட்ட
குலக்கிரியின்றலைக்கிடந்தபுடவியிருட்படவிரியக்கொழிக்குமுத்தா
ரலைப்புனல்விட்டெழுந்தவாற்பசடுகருமுகில்வெருவவடர்த்துப்பாயும்.(௧௧)

கின்னரங்களின்னரம்பிற்கிளக்குமொலிதாமரையிற்செழுமிவாழு
மன்னமலிவளம்பொருவுதிருவாவிக்கரையணுகியாயமோடும்
பன்னரியமலர்பரித்துப்புனல்குடைந்தாரணிதிருத்திப்பரிவிற்குடிப்
பொன்னளிபாட்டயர்பொதும்பர்புகுந்துமணிக்கழங்காடும்பொழுதினுகம்.()

அருவனமும் பெருவரையுமலைபுனலுநிலைகுலையவடர்த்துச்சீறிக்
கருதரியவுலகமெலாங்கட்பிறங்குதழன்மோதக்காலனென்ன
வருமளவிணுக்களெலாமலர்க்கரத்தால்வயிறலைத்துமருண்டுநெஞ்ச
மொருவர்சென்றவழியொருவருற்றறியமாட்டாமலொதுங்கினேமால்.(௧௩)

அவ்வேலையானெதுங்கும்வழிதொடர்ந்துதனதருவையகற்றிநேரோ
வெவ்வியராட்சதனுருவம்விரைவிலெடுத்தணிகுழலாய்மெலிவுகோடே
லொவ்வியெனதுழையிருத்தியெனக்கடுகியிவண்கொணர்ந்தேயுய்த்தமே
செவ்விமலியரசேநீரென்கொழுநனெனவிதியார்செய்தமாண்பால். [னுட்

அவ்வாவமொழிநயந்துவெங்காமப்பிணிதணிப்பாயணங்கேயானே
ரெவ்வமிலாதரக்கர்குலம்பெயரிடும்பன்மயன்றவத்தாவிரந்துகேட்பச்
செவ்வியனத்தானளித்தான்சேர்த்தயவேயிலக்கணங்கடெரிவோமென்ன
ஒவ்வவிலாதிம்மனையையொழுங்குகண்டான்யானுமவனுழையிற்பெற்றேன்.

செய்யமனையெனக்களித்ததெய்வமயனளப்பரியதிரைநீர்வாரி
யெய்திடினுநெறிதருமற்றடையலராலிறுதிதாதிவைகட்கென்றும்
வெய்யவன்மெய்யொளிநாணுமாயுள்குன்றுதாக்கமுறுமேன்மையான
பையாவின்மணியிவையென்றிவந்தளித்தானெனவுறுதிபலவுங்கூறி. (௧௬)

இம்மனையுநின்னையுநானெம்முன்னோர்தவப்பயனாலெளிதிற்பெற்றேன்
மும்மையுலகதில்வேட்டபொருளளிப்பன்முயங்கவெனமொழிதலோடுஞ்
செம்மனமுந்தட்டழிவுற்றொருவருடனோன்புளவாற்றீர்ந்துபின்னு
னும்மனம்போனடப்பனெனவுரைக்கமனமிசைந்திருந்தானுறவில்லாமல். ()

அன்றுமுதற்சொல்லியநாளவதியுமின்றோடகன்றவதனாற்பட்ட
துன்றுதுயர்ச்சிறைதடிந்துசுகமளித்தீரெனப்பலவுந்துணைமென்கொங்கை
மன்றன்மலர்க்கொடியிடைப்பஞ்சடிக்கயற்கட்டுவரிதழ்வாய்மடந்தைகூறப்
பொன்றிகழும்வார்கழற்காற்புரவலன்கேட்டுளமுருகிப்புகலுவானால். (௧௮)

தந்திமருப்பெனப்பணைத்ததனக்குயிலேயெனதுபெருந்தவமேநின்றன்
சிந்தையுறுபருவரலைத்துடைத்தியெனதாயுள்வரைதீர்க்கொணாத
வெந்தவிதத்திடையூறும்வரிற்றடுப்பனயிராணியென்றபோதும்
புந்தியிலெண்ணேன்கலங்கலிஃதுண்மையெனப்புகலப்பூவைகேட்டே. (௧௯)

புத்தமுதமுண்டவர்போற்புளகடைந்துகளபமுலைபூரித்தோங்கச்
சித்தமிசையடங்காதவுவகையளாயிரவுபகறெரியாவண்ண
மொத்திருவோருங்கலவியுறுபோகநறவருந்தியுணர்வொன்றின்றி
மத்தவெறியினர்போன்மாளிகையிற்றனித்திருந்துவாழ்ந்தார்மன்னோ. (௨௰)

மன்னவன்மெய்வாய்செவிகண்மூக்கெனுமைம்புலன்கண்மறுவழிபோகா
கன்னிகையின்சத்தரசருபகந்தபரிசமதிற்கலந்தெப்போதும் [மற்
பின்னமுறாதுறைந்தவனுக்கயலாகவவனறிவைப்பிரித்ததென்றாற்
றன்னிகரிற்புத்திசிகாமணிதன்னைத்தேடுதற்கோர்தகைமைத்துண்டோ. ()

வரலாறுகூறியபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௧௩-க்குத்திருவிருத்தம் ௬௧௭.

---

# மந்திரிசோகப்படலம்.

தன்னைப்பாடும்பாணன்பொன்னுக்கேங்குஞ்
சமயமுணர்ந்துதவவெனத்தாமஞ்சூடுஞ்
சென்னிக்கேதிருமுகமொன்றீந்துதானுந்
திகழிரவிலவன்கனவிற்செப்பிமீண்ட
பின்னிக்கார்முடிதவழும்மாடக்கூடற்
பெருமானையொருமானும்பிறையுங்கொண்டு
வன்னிக்கானிலம்புனல்வானெனநின்றானை
வாக்குமனங்காயமொன்றவணங்கியுய்வாம். (௧)

வேறு.

இங்கிவனிருப்பத்தங்கமாபுரிதன்னிலெய்தி
மங்கைமாளிகையினுற்றமந்திரிமகனுஞ்சூழ்ந்த
கங்குலுமழையுங்காற்றுங்காப்பவெண்ணிலவுவீசித்
திங்கள்வந்துதயஞ்செய்யத்தெரிந்தனன்வல்லைசெல்வான். (௨)

எழுந்தனனமுதுதோளிட்டிரும்பரியுகைத்துநொய்தில்
வழிந்தகண்ணீருமாருவழிநிறைந்தாறுகோப்பக்
கொழுந்தடம்பொழிலுங்கானுங்குன்றமும்பிறவுந்தள்ளித்
தொழுந்தகுந்தோன்றலுற்றவாவியின்சூழல்சார்ந்தான். (௩)

வேறு.

சார்ந்துநோக்கினனோக்கிலன்பரியினைத்தவிர
வார்ந்ததிண்டிறலரசனையயிர்த்தனன்விரைவாய்
வார்ந்ததேனலைமண்டியவரிமணற்காவு
மீர்ந்தநுண்படிகத்தினாலிழைத்தபொற்றடமும். (௪)

துருவியோடினன்கண்டிலன்மனந்துடிதுடித்தான்
பொருமிமாமலர்க்கட்புனல்புயலெனப்பொழிய
வெருவிவேகவெம்பரியினைநிறுவிவில்வேந்த
னொருவனாகவெங்கேகுவனென்றுநின்றலைந்தான். (௫)

காலுஞ்சாலெனக்காவினாற்செழுமலர்க்காவின்
பாலுமங்குளபுதர்களுந்தனித்தனிபடரா
நாலுபாலினுங்கறங்கெனச்சுழன்றுகண்ணாடி
மேலுந்தேடுதற்கெண்ணினான்மனத்துணிமிகுக்க. (௬)

துய்யகாலின்முள்ளேறியகுருதியுந்துணைமென்
கையினான்முகத்தறைந்திழிகுருதியுங்கனத்த
மெய்யெலாஞ்செடிகிழித்தவெங்குருதியுமிகுந்து
பெய்யும்வான்முகின்மழையெனவனமெலாம்பெருக. (௭)

பேயுங்கூளியுங்காளியும்பெருஞ்சிறைக்கழுகும்
நாயுஞ்சேனமுநாடுமிங்கிவன்றுயர்நாடாக்
காயும்வெங்கதங்கைவிடுத்திடவில்வெங்கான
மாயுமந்திரிக்கருந்துணையமைதல்போலணவ. (௮)

செடியெலாஞ்செடியிலையெலாம்வேரெலாஞ்செறிந்த
கொடியெலாந்தருக்குலமெலாம்விலங்குபுட்குலவு
மடியெலாநொடிவரையினுமயர்ந்திடானாகி
விடியல்கண்டிடுமளவினுந்தேடிமெய்மெலிந்தான். (௯)

நடந்துமோடியுநாளிகையொன்றினாலேழு
தொடர்ந்தகாவதஞ்சூழுமப்பொதும்பரைத்துருவிக்
கடந்துந்தேடினான்றனிமைகண்டிரங்கியோகங்கு
லுடைந்துபின்செலக்கதிரவன்கடன்முகட்டுதித்தான். (௧௦)

கங்குல்போக்கிவெங்கதிர்வரக்கண்டமந்திரியுந்
தங்களாயகன்வைகுழிமீளவுஞ்சார்ந்து
பொங்கர்வாய்தொறூஉநிரைநிரைதுருவியேபோவா
னங்கொர்பாலினிற்றலைகளோரைந்துளவரவின். (௧௧)

வடிவுபெற்றுமற்றவயவம்பொருந்திவான்மலைநே
ருடல்பிளந்திருகூறுபட்டுதிரங்களோடிக்
கடன்மடுத்திடவாவிபோய்க்கழிந்தவாளரக்கன்
புடவிமேற்கிடந்ததுதெரிந்தான்மதிப்புலவோன். (கஉ)

நோக்கினாலரவன்றிதுநுவல்வதற்கரிதா
மூக்கமேவுபாம்புருவுகொண்டுள்ளதோரரக்கன்
னூக்கும்வெஞ்சமர்தன்னினம்மிறைவனாற்றடிய
வாக்கைபாழ்படத்தேம்பித்தன்னுயிரும்போயழிந்தான். (கங)

இங்கிவன்றனைவீட்டுமுன்னிறைவனுக்கிவனாற்
பங்கமுற்றதுண்டாமெனிற்படிவமிங்கிருக்கு
மங்கதன்றிவல்விலங்கெடுத்தேகினாலடவி
யெங்குமோர்ந்தனங்காணுமக்குறிகளோவில்லை. (கச)

எட்டுநாகமுஞ்சிறிதெனக்கிடந்ததிங்கிதனை
வெட்டினானுநம்மிறைவனேயன்றிவேறன்றால்
வட்டவாண்மதிவதனத்தான்யானிவண்மயங்க
விட்டுமெய்ம்மறைவாய்விளையாடல்செய்விழைவோ. (கரு)

இரவிபோகுமுன்போனகம்வாங்கினானிங்கு
வருவனென்றவன்வான்கதிர்மறைந்திருள்வந்துந்
தருகினானென்பதுணர்ந்தெனைநேடியேதனியாய்ப்
பரவுசான்பதிகடன்மலைபுகுந்ததோபாவம். (கசு)

இக்குவாம்பரிசிற்றலாற்றேடிநம்மிறைவ
னெங்குமேகிலன்றன்னுயிர்க்கிறுதியுமில்லன்
சங்குன்மேனியிவ்வரக்கனாற்கவலையுற்றிருந்த
தங்கையேவனோமயறாசனுக்கிச்சென்றனனால். (கஎ)

அணக்கனார்மயற்சேற்றிடைமூழ்கினாலன்றி
யிணங்குநம்முறவகற்றிவாம்பரியினையிங்கே
யுணங்கநீக்கித்தன்னுணர்விழந்துறைவதற்குளவோ
யணக்கொடாரவனம்மவோபேதைநான்மதிப்பேன். (கஅ)

என்றுபற்பலவெண்ணியேவிருகணீர்சொரிய
வன்றுகண்பகாளவிலுந்தருகிடாதந்தத்
துன்றுசோலையையெத்தனைதரஞ்சொலோதுருவி
யொன்றுமுணராதுடன்மெலிந்துணர்வோய்ந்தான். (ககூ)

அரசவென்றுபேரோலமிட்டழுதுவாய்குழைந்து
கரைசெயாதகண்ணீர்மழைகான்றுமெய்கரைப்ப
வரையினெட்டுயிர்த்துள்ளமுநெகிழ்ந்திடநின்றே
யுரைசெய்வானிதையுணர்ந்தபல்லுயிரெலாமுருக. (உ0)

வேறு.

என்னுருயிரேயென்னிருகண்ணேயெழில்சேரும்
பொன்னேதேனேபூவினரும்பேபுகழ்மானே
யென்னேயானுந்துன்புளவாகியிடர்மூழ்க
வன்னேகைவிட்டெவ்வழியுற்றுயறியேனே. (உக)

பொய்யாவேதப்போதமலிந்தபுகழ்வாழ்வே
மெய்யார்மெய்யேகாசினியாளும்விறன்மன்னே
யுய்யாதாகியானுமரற்றவுயிர்காவா
தையாவையாயெவ்வழியுற்றுயறியேனே. (உஉ)

இப்பாருள்ளோர்வன்கணனுமென்றெனையேச
வப்பாருள்ளோர்சியெனசிந்தித்தறைகிற்ப
வொப்பாரில்லாவுன்றனையேவிட்டெவ்வேனோ
வப்பாவப்பாயெவ்வழியுற்றுயறியேனே. (உங)

விண்ணோர்துய்க்குமெல்லமுதேசன்விரிநீர்சூழ்
மண்ணோர்துய்க்குமாசிலதேனேவறிஞோர்போ
லெண்ணுதெண்ணியானுளமொல்கியிடராழ
வண்ணாவண்ணாயெவ்வழியுற்றுயறியேனே. (உச)

எந்தாய்நின்னையிவ்வயினீத்தேயிதுகாறுஞ்
சிந்தாதுயிரோடின்னுமிருந்தேன்றீயேனுன்
னந்தாசிற்குமாநகர்செல்லினையாதோ
வந்தோவந்தோயெவ்வழியுற்றுயறியேனே. (உரு)

கொம்பிற்கூவுங்குயிலேமயிலேகுறைவில்லாத்
தும்பிச்சுமையேமன்னர்கள்வந்துதொழுதேற்ற
வும்பர்க்கேயுமோர்குடைநீழலரசுய்க்கு
மம்பொற்சிலையானேகினதெங்கண்ணறைவீரே. (உசு)

கடலுற்றிடினுங்காவுற்றிடினுங்காவில்லா
துடனுற்றிவணீவருவாயெனமுன்னுரைதந்த
யடலுற்றிடுவேன்மன்னர்க்கெதிரெவ்வகைபோயான்
றிடமுற்றஞ்சாதென்சொலவல்லேன்றிருவில்லேன். (உஎ)

வாகைமிடைந்தமன்னரசோடுமெகிழ்வாகச்
சாகமிடைந்தசேணதர்சென்றுதாழாதே
தோகைமிடைந்தநகர்புகவென்றுசொல்தந்தைக்
காகமிடைந்துதுன்புறயானீதறைவேனோ. (உஅ)

என்றினபன்னிசின்றழுதேங்குமிடைவீழுந்
தன்றிருமேனிநெய்யழலுற்றதகைசாலுஞ்
சென்றினியெங்கேகாண்குவனென்றேசிரமீது
குன்றிடியொத்தேகைகள்புடைக்குங்குலவெய்தும். (உகூ)

மண்ணிருகையால்வாய்மிசைபெய்யும்மருளெய்துங்
கண்ணிமையாதுநோக்குமயிர்க்குங்கனல்சாலு
முண்ணிறைவெப்பாலென்புகணீறியுயிரோயும்
பண்ணியல்கொண்டானின்னலையாரேபகர்கிற்பார். (௩௰)

வேறு.

இன்னபன்னியுயிர்ப்படக்கியிடரின்மூழ்குமதியமைச்சன்
பின்னுந்தெளிவுற்றிதுநினைவான்பெருநீருலகிற்பிரியாத
மன்னைப்பிரிந்தென்னுயிர்பிரியாதிருக்கவழக்கோமந்திரத்தால்
முன்னமிறந்தார்தமையெழுப்புமுறைமைதெரியான்முடிவேந்தன். (௩௧)

செயிராவுலகமுழுவதினுந்தேடிக்காணப்பெறிலரச
னுயிரோடிருக்கினிருக்குமற்றுயிர்போய்க்கழிந்துகட்டுவிட்டு
வெயிலாலுலர்ந்துதசைகழிந்தவெள்ளென்பெனினும்விஞ்சையினாற்
செயலான்மீளவாப்பயின்றுசிந்தையனுக்கந்தீர்குதுமால். (௩௨)

இன்றுமுதனீள்வனஞ்சோலைநதிபூவோடையெழில்கிறை
குன்றுதிருநாடணிநகாங்குறுகித்துருவியோரிடத்துஞ்
சென்றுகாணுதொழியிலுயிர்தீர்துமெனவேசிந்தித்து
நின்றமதியானதற்கானகருமம்புரியநேர்ந்தனனால். (௩௩)

வேறு.

அப்பளமுமதிரசமுமான்பாலுஞ்சருக்கரையுமருந்தேனாறும்
முப்பழமும்பாயசமுநெய்முதலாஞ்சிற்றுண்டிமுழுதும்பெய்தே
செப்பமுடனமைத்தநறும்போனகத்தையுண்கமனஞ்சிந்தித்தானு
யப்படியிலிருந்தமுதின்கட்டவிழ்த்தானரசைநினைந்தழுதுகொண்டே. (௩௪)

எங்குபுகுந்தெவர்பாலிலெளிபசிநோயாற்றுதின்னமுதுவேண்டிச்
செங்கைமலர்விரித்தேந்தித்திரிந்தனையோமாறுதசெல்வந்துய்ப்பார்
தங்கண்மனைபுகுந்துண்டுதெவிப்பகற்றியிருந்தனையோதரையாள்வேந்தே
யிங்குபசிப்பதற்கினிமேலென்னுடன்வந்துறுவாயோவென்செய்வேனால். ()

சொல்லாமுன்னமுதுகொண்டுதெய்ப்பிக்கும்விநயம்வலிதொடர்புசற்று
மில்லாதவிவனென்றோவெனையிகந்துமறுநெறிசென்றெனக்கிங்கூட்ட
நல்லாமலனந்தேடிநெடும்புறவும்வனநாடுநேர்ந்தாய்கொல்லோ
வல்லார்க்குள்வல்லானென்றெல்லாருந்தொழச்சிறந்தமன்னரேறே. (௩௬)

எனப்புலம்பியோயாமலழுதழுதுமழைப்புனல்கண்ணிறைப்பவன்னந்
தனைப்புசித்தும்புசியானும்மீதியெலாந்தாவுபரிதங்கட்கூட்டி
மனத்துயருஞ்சிறிதகலமலர்க்காவிலவ்விரவுவைகிப்பின்றை
கனக்கதிரோன்வாவெழுந்துகாலைவிதிக்கடன்முடித்துக்கவலைதீரான். (௩௭)

பரிவிரண்டுமுடனாகத்தானுமுனமிருளிருந்தபதியினண்ணித்
தெரிவையகம்புகுந்தவள்பாற்றேசிகளைக்காத்தியெனச்செம்பொனீந்து
மாவுரியுங்கப்பரையும்வார்சடையுந்திருநீறும்வயங்கமேனாட்
புரமெரித்தபுனிதனெனத்தவவேடம்புனைந்துநெறிதுருவிப்புக்கான். (௩௮)

மந்திரிசோகப்படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௧௪-க்குத்திருவிருத்தம்-௬௫.

---

# அரசன்சோகப்படலம்.

கைநாகந்தனையுரித்தோர்மாணாகந்தனிற்சேர்த்துக்கவின்மானேந்திப்
பைநாகமுழுவதுநற்பணியாக்கித்தொண்டரைத்தம்பணிக்கண்ணுக்கிச்
செய்நாகம்வளைமுழங்குந்திருக்கூடலுகந்தருளுஞ்சிவனையென்றும்
மெய்நாகமுதற்காணம்வேறுபடாதொருங்குபடமேவிவாழ்வாம். (க)

மந்திரியிவ்வாறரசன்றனைத்தேடிச்சென்றதற்பின்வளைவெண்முத்தஞ்
சிந்துதிரைப்புனன்மலிந்தசெழுவாவியுண்மனைக்கண்டீதொன்றின்றிச்
செந்துவர்வாய்மடந்தைமயற்கடன்மூழ்கியிரவுபகறீர்ந்தின்புற்றே
யந்தரவானவர்போன்றவரசனுக்குமேல்வரும்பாடனைத்துஞ்சொல்வாம். (உ)

மேதகுதன்னுடலுயிர்போல்வினைபுரியுமவயவம்போல்விளைந்தநட்பின்
காதல்விலகாதிருந்தகலைமகனைச்சிலைநுதற்செங்கயற்கட்செவ்வாய்ப்
பேதைமயலான்மறந்துபிழையுறுவானென்னிலிவன்பின்னைப்பெற்ற
தாதையைத்தாயைக்கிளையைத்தான்மறந்தானென்பதைநாஞ்சாற்றலா
[மோ. (ஙு)

திசைமுகன்மாலீசன்முதற்றேவர்முனிவரர்பிறர்தந்திருவிற்றீர்ந்து [டி
வசையடைந்துநாணழிந்தான்மற்றிவனேவெற்றிகொள்வான்வரிவிற்கோட்
விசையமெல்லாந்தண்மலர்ப்பூவிசிசமுனையாற்கவர்ந்துவிழுமந்தோன்ற
விசைபரப்பித்தனக்குருவொன்றில்லையெனுஞ்சொல்லுருவாய்த்திருப்போ
[ன்றன்னை. (ச)

பெற்றாரைப்பிறந்தாரைப்பிறவாதநெறியாய்ந்தபெரியோராதி
கற்றாரைமறந்திருகண்மணிபோலுந்தனக்குரியகருமங்காட்ட
வுற்றூர்ந்தவொருவனையுமுள்ளார்ந்தவறிவினையுமொருங்குநீக்கி
முற்றாதமுகிண்முலையாண்முதிர்காதறலைக்கேறிமுயங்குநாளில். (ரு)

பன்மணியார்சதுரங்கப்பலகைவரிமீதொருநாற்படையுந்தொட்டுத்
தன்மலர்க்கைசேப்பவிளையாட்டயர்போதணங்கனையதையன்மன்னு
நின்னெருமந்திரியையெனதாட்பலத்தாலடிப்பனெனநிகழ்த்தலோடு
மின்னிலைவேலவன்றனதுமந்திரியின்நினைப்புவரமெலிவுற்றேங்கி. (சு)

கண்மயங்கிவாய்வறண்டுகருத்தயர்ந்துமூச்சடங்கிக்கால்கைசோர
வெண்மயங்கித்துடிப்போய்ந்தாதனந்தவறியிடிவீழ்ந்தமரமீதென்ன
மண்மயங்கிவீழ்ந்தரசன்மாண்டார்போற்கிடந்திடலுமலர்க்கணேக்கிப்
பெண்மயங்கியறிவழிந்துபேதுற்றாளேதுற்றபீழையென்றே. (எ)

வேறு.

மயங்கிநெடுமூச்சயர்ந்துவிழமன்னற்குற்றவாதையென்னே
பயங்களானமொழிகளொன்றும்பகர்ந்ததிலையேயிவனுடனாய்
நயங்கொளமைச்சன்வந்திருக்கவேணுமவனைநம்மயலாற்
செயங்கொள்வேலான்மறந்துவிட்டசெய்கையாகுமெனத்தெளிந்தே. (அ)

தாங்கியெடுத்தான்முகமீதுதண்ணார்பனிநீர்தனைச்சிதறி
யோங்குபொதிகாசலத்தென்றலுலவச்செய்தானுயிர்ப்பணுகித்
தூங்கிவிழித்தானெனவெழுந்தான்றயாமனத்திற்பொருக்காணா
யேங்கியேங்கித்தழங்கியவான்கடல்போல்வாய்விட்டிறைந்தழுதான். (௯)

கையாற்புவியின்மிசைபுடைக்குங்கண்ணீருகுக்குமனமயரு
மையோவென்றுமெனதுயிரேவமைச்சேயென்னும்வாய்புலரும்
வெய்யிற்புழுவொப்பெனத்துடிக்கும்விடமுண்டவரொப்பாய்க்கலங்கு
மெய்யுமயில்பட்டுழல்யானையென்னமெலிந்தாங்கிதுபன்னும். (௧௰)

அமுதந்தருவேனெனவெழுந்தாயதனைக்கருதாதணங்கனையாள்
குமுதமலர்வாயமுதமெனுங்கொடுந்தீவிடமுண்டுளம்வருந்தி
திமிரக்கடலிற்படிந்தயருந்தியேனுன்னைத்தெரிவேனோ
வெமதுதமர்மாதவம்போலும்விலகாதிருந்தவெழிலமைச்சே. (௧௧)

கூடிவந்தமன்னவனுமெங்கேயடைந்தானெனக்குறித்தே
நாடும்பொழிலுங்கான்வரையுநனிதுதேடியயர்ந்தனையோ
வீடினேனென்றனதுயிரும்வீடிப்புகழ்மேல்விளக்கினையோ
சாடுமயற்காற்படுகேரங்காய்த்தவிக்குந்தமியேனறியேனே. (௧௨)

துயிலும்பொழுதும்விழித்திருக்கும்பொழுதுமற்றைத்தொழில்கள்பல
பயிலும்பொழுதும்விலகாமலிருந்துநெடுநாட்பழகியநான்
குயிலின்குரனமென்மழலைமொழிக்குமரிமையற்றூண்டிலிலே
யயிலப்புகுந்துபடுங்கயல்போலாவியோய்ந்துள்ளலமந்தேன். (௧௩)

காமனாலேகாமனுருக்கண்கள்பலவாய்ப்பெற்றழன்றான்
காமனாலோராவணனுங்கலங்கியாக்கத்திட்டழிந்தான்
காமனாலோராபனெழிற்கலைகள்கரையக்கனங்குறைந்தான்
காமனாலேகீசகனுங்காற்றின்மகனாலுயிர்கழிந்தான். (௧௪)

அறத்தைதமாய்த்துக்கருணையைவேரறுத்துக்கல்வியழகழித்து
மறத்தைப்பெருக்கிப்புறத்தோர்சொல்வசையையிசையாய்த்தலைக்கேற்றித்
திறத்தைக்கெடுத்துச்சுவர்க்கநெறிசேராதகற்றியாவருக்கு
சிறத்தைக்குறைக்குநவியசிகர்காமந்தருக்கநெஞ்சழிந்தேன். (௧௫)

தக்கோர்மனத்திற்கடவானகாமந்தருக்கத்தலைமாறிப்
புக்காறமுங்கருணையுநற்புகழும்போக்கிப்புலம்படைந்தே
னெக்காலத்தினுமினிக்காண்பேனெனநெட்டுயிர்த்தேங்கி
மிக்கோன்வருந்தக்கண்டுமனஞ்சகியாளாகிவிளங்கிழையாள். (௧௬)

காந்தண்மலர்க்கையாலெடுத்துக்கண்ணீர்யாற்றிவியர்வகற்றி
நீர்தற்சரியடல்புடைசூழ்நிலங்கண்முழுதுந்தனிபுரக்கு
மேர்தற்கிறைவாநீமயங்குமியல்பிதெனவேயியம்புகென்னச்
சாந்தமருமத்திளஞ்சியந்தனதிலைமைதனைவிரிக்கும். (௧௭)

பெருகுபுனற்றண்பழனமெலாம்பிறங்கும்வளரித்திலம்வான்றிக்
குருகுளினத்தளமலியக்குவித்துக்குடிகொண்டடைகிடக்கும்
மருவியிளஞ்சூலால்வருந்துமந்திக்குயர்வானரமெழிலி
வெருவக்குதித்துச்சோலைநறுந்தேன்கொண்டூட்டிவியப்பெய்தும். (கஅ)

விடாதத்தடங்காதெழுந்தவரால்வெருவிச்சினந்தாங்கலம்பிணிக்குங்
கடாவைக்கடவியுழுமுழவர்கலங்கக்குழைத்துக்கதித்தண்ட
கடாகம்வெடிக்கத்தகர்த்துமழைக்காலோடிரங்குங்கமலமலர்த்
தடாகத்தமரமிரவுபகலோயாதொலிக்குந்தடங்கடல்போல். (கக)

இன்னவளஞ்சூழ்புவனேந்திரநகருக்கிறைவனெழில்குலவும்
பொன்னங்கமலத்திருமார்பன்புகழ்சேர்தாலபுரந்தரனன்
மன்னனவற்கோரைம்பதின்மரமைச்சர்தன்னின்மதிதெளிந்த
நன்னற்சிலைவேளனையவடிவழகன்சுமந்திராகரனும். (உ0)

தங்கட்குரியமகவின்றித்தவிப்புற்றுலகம்புலம்படையச்
சிங்கம்புலிவெங்கயநாகந்திரியுங்கிரிசூழ்வனஞ்சேர்ந்து
கங்குல்பகலாயூணறக்கங்கருதாதிவர்கள்கண்ணறிவுக்
கங்குபரமன்வெளிப்படுங்காலளவுந்தவநின்றுற்றினரால். (உக)

துள்ளுவிடையான்றிருவருளாற்றேன்றறனக்குநானுமதி
வள்ளறனக்கென்னினுங்கவினூர்மகனும்பிறந்தோம்பெற்றவர்க
ளுள்ளங்களிக்கப்பெயரெனக்குப்புவனேந்திரனென்றுரைத்தமைச்சன்
பிள்ளைக்கினியபுத்திசிகாமணியென்றழைக்கப்பெயர்புனைந்தே. (உஉ)

வேதத்தாதிசாத்திரமும்விரிஞ்சன்முதன்மாமுனிவாரு
மோதற்கரிதெண்ணெண்கலையுமோதுங்குருவாலுணர்ந்துமற்றைப்
பேதப்படுத்துமிலக்கணமும்பிழைபாடறக்கற்றனமதன்மே
னீதத்தழகாரவனிறந்தோர்பிழைக்கும்விஞ்சைநிரம்பினனால். (உ௩)

வடிவிற்குணத்தில்வலிநிலையின்மற்றைவினையிலிருவோரும்
படியிற்சரிதானெனச்சிறந்தபருவம்பனிரண்டினினுங்கண்
முடியிற்பெருத்தவரசனடிமுறையால்வணங்கிவிடைவாங்கிக்
கொடியபுறவநிசோலைகுலவிச்சிலவாண்டதிற்குறைய. (உச)

இங்குபுகுந்துவாவியினூற்புறஞ்சூழ்ந்திலங்குசோலையெலாந்
தங்குவளங்கள்பலகுறித்துத்சடாகங்குடைந்துவிடாயகலக்
கொங்குவிரிதாவனுடனேகூலவிருந்துகுளிர்நிலவிற்
பொங்குமமுதம்புசிக்கினலமென்றேனதன்மேற்போயினனால். (உரு)

வருமுன்பாந்தடனைவீட்டிமழலைதெளியாமதுரமொழி
பெருகும்வரிப்பூங்கருங்குயிலேநின்மேல்விளைந்தபெருமயலா
லுருகியறிவுசிறிதின்றியுற்றேனற்றேனுறவோனைக்
கருமமிதுபோலுளவோநானினிமேலவனைக்காண்பேனே. (உசா)

என்றுபுலம்பிமடவாலோடெழுந்துசுரங்கந்தனைத்தணந்து
மன்றன்மலர்ப்பூந்தடங்கடந்துமதுக்காலளிசெவ்வழிமுழங்க
தென்றல்குலவுமிளஞ்சோலைசேடியிருகண்புனல்சோர
நின்றங்காற்றியென்னெறியுந்துருவிப்பார்த்துநிலைதளர்ந்தான். (௨௭)

விண்ணினிடிகேட்டுடல்வருந்தும்வெங்கணரவமெனமயங்கி
மண்ணிற்புரண்டுபூழியுடன்மறைப்பவாய்விட்டாற்றிமலர்க்
கண்ணீர்கலுழிமாறுதுகடல்போற்பெருகியலையெறிய
வெண்ணிற்பெரியசராசரங்களியாவுமிரங்கவிதுசொல்வான். (௨௮)

கல்விநிறைந்தபெரும்புணரிசுவற்றியழகின்காடகழ்ந்து
செல்வமுதவுஞ்சுரபிசிந்தாமணியைச்சிதைத்துத்திருநீங்க
நல்லகுலமுங்குடிப்பிறப்புமாய்த்துநவைக்கோர்துணைநல்கும்
புல்லினுனியினனையபனிக்காமத்துற்றபொருளன்றே. (௨௯)

பாம்புந்தீயும்பெரும்பேயும்பகைவருறவுங்கொடிததனிற்
காம்பினிணைத்தோட்செங்காந்தட்கையார்கமலக்கண்ணென்னுந்
தாம்பிற்றுவக்குண்டவர்முலையாந்தந்தாவளத்துக்கிரையாகித்
தேம்பித்திரிதன்மிகக்கொடிதுவினைகளிதுபோற்றெறுதலுண்டோ. ()

கானற்பெருக்குஞ்சசக்கோடுமலடிமகனுங்கயிற்றரவும்
வானப்பதியுமம்மலரும்போன்றமனிதர்புழுவாழ்க்கை
யீனப்பழிப்பார்கலியழுந்தாதெழுந்தாரன்றேயென்றுமுள
மானப்பெருமையவான்றேவுலகநோக்கிவணங்குறுமால். (௩௧)

நரம்புகுருதிதசைமூளைமயிர்தோலென்புநனிமலிந்த
குரம்பையதனிற்கணுக்கணிகருறப்பைப்பொருப்பின்குயமெனவுங்
கரும்பின்மொழிவேல்விழியெனவுங்கமுகுகளம்வேய்தோளெனவும்
விரும்பிமகளிர்நலந்தோய்பவர்க்குச்சுவர்க்கமிகையன்றே. (௩௨)

அம்மாவறிந்துமறியார்போலனங்கன்கலகப்பெரும்பூசற்
றம்மால்வருந்தியுயிரிழந்தகூடுநிகர்த்தன்றனைப்பிரிந்து
விம்மாதழன்றவெறிதடைந்தவினையேன்வினைகளிதன்மேலுஞ்
சும்மாவிடுமோவெய்தாயுடோலைக்குந்துணிபுஞ்சூட்டிடுமால். (௩௩)

கானார்பொழிலுந்தடவரையுங்கடலுநதியுங்கழனிகளும்
வானுடனையதிருநாடுநகருநோக்கிவரநினைந்து
போனாரமைச்சன்றனையரசன்போக்கியொருபூங்குயிற்குரலின்
மானாருறவுமருவிவந்தானெனுஞ்சொல்வசைக்குள்வாழ்வேனே. (௩௪)

தம்மாலலர்சற்றிலதாகிநான்சொல்பணியைத்தலைதாங்கி
யெம்மாநிலமும்புகழேறப்பெறும்பேரியைந்தாயெழிலமைச்சே
செம்மாந்தெழுபூண்முலையாசையறிவைச்சிதறவுயிர்திரிந்தே
யம்மாநரகப்பெருங்காணியாளக்கிடந்தெனவானன்றே. (௩௫)

ஒருநாளொருவன்றனைநெறியிலுற்றுலவற்கேபினுமற்றை
வருநாளிடுக்கண்பெறிலிவன்றன்னுயிரேயெனினும்வழங்கியருள்
பெருநாணிறுத்துமுறையென்பதறிந்தும்பெரியோய்பேதமின்றி
மருவாவிருந்தவனைமறந்திங்குயிரோடிருந்தேன்மதிநன்றே. (௫௬)

என்றுபுலம்பித்தன்னுயிரைமாய்க்கக்கருதுமிறைவனையுங்
குன்றுமுலைக்கோகிலமனையாணோக்கியுள்ளக்குழைந்தவளாய்ச்
சென்றுதலைக்கேறியவிடமந்திரத்தாற்றீர்க்குஞ்செயலினர்போ
னின்றுமெல்லமனந்தெளியுநெறியோர்ந்திதனைநிகழ்த்துவளால். (௫௭)

அரசேவருந்தேல்வருந்தேனீயறியார்போலவறிவழிந்து
கரைசெய்வதற்குமிகவரியகவலையுழந்தாலுனக்கினிமே
லுரைசெய்பவராரந்தோவிவ்வுலகிற்பிரமனொருவருக்குப்
பரசுங்கருவிலமைத்தபடியலதுவேறோர்பயன்படுமோ. (௫௮)

வாமமணிமேகலையார்க்குமைந்தர்தமக்கும்பொதுவான
காமனொருவனில்லையென்றுமெலவர்தம்முறவுகைக்குவரு
மோமக்கனல்வாயிருந்தவமுஞற்றிநெடுநாளுயர்வான
நேமமறைதேர்முனிவர்களுமொருகாற்காமன்றனைநேர்வார். (௫௯)

முறையோர்ந்தறஞ்செய்தவிர்பசும்பொன்முடிவேய்ந்தவனிமுழுதாண்ட
விறையோனுயர்கோசலைநாடனெல்லாங்காதிமகற்கீந்து
மறையோனிடத்தின்மனைவியைவிற்றவனும்புலையன்வசமாகிக்
குறைசேர்ந்ததுவுமகளிர்நலங்கொண்டோவிதியின்கோட்பட்டோ. (௬0)

காதற்புருடன்றனைவிலகியவன்றனிருகண்மணிகவினுஞ்
சீதைக்கரக்கன்மயல்செறிந்தோவிலங்கைபுகுந்துசிறையிருந்தா
ளோதற்கிதுபோலெத்தனையோவுலகிலெவர்க்குமுளநாளும்
வாதைக்கிடந்தீர்ந்தின்புறினல்லறமேபுரியமாட்டாரால். (௬௧)

நினைக்கும்பொழுதிங்கனையனையாளெனினுங்காலவகைநினைந்து
வினைக்கும்வினைசெய்முறையமைச்சின்விரகனுதலாலுனையுந்
தினைக்குணேர்ந்தருகாதுதேடிச்சென்றசெயலாகு
மனைக்குமனையான்றனைநாமுமடையுங்காலமடைகுதுமால். (௬௨)

அன்றிமயலாவிரிந்தேனென்றரசேநீயுமறிவனுங்க
லென்றுநன்றாகாதிதனைக்கேட்டோர்நகைப்பாரெனப்பலவுங்
குன்றுமுலையாள்குழைந்தினிதாய்க்கூறுமொழியான்மனந்தேறி
நன்றுகருமமெனப்புகுந்தாங்கிருந்தான்சுரங்கந்தனைநண்ணி. (௬௩)

அரவின்றலைச்செம்மணித்துணைமாற்றவிரும்பசும்பொன்னணியாழி
யிரவினாளும்வகைதிருத்தியவன்கைவிரல்வேய்ந்திரவுபக
லரிவையுழைநின்றகலானுய்வேண்டும்போகத்தமுதருந்திப்
பரவியுறைவானொருபகலப்பாவையோடும்வெளியேறி. (௬௪)

சந்தார்மரவமகிற்கோங்குதயங்கும்பொதிகாசலநின்று
நந்தாருவரித்திரைபடிந்துநறுஞ்சீதளந்தோய்ந்தளிமுரலுஞ்
செந்தாதிரைத்துமலர்கடொறும்வாசந்திரட்டிவருந்தென்றல்
பைந்தாரிவர்தம்மேல்விசிறிக்கோடைதணித்துப்பரிவியற்ற. (௬௫)

வாவிகாப்பண்ணிந்தகிரிமானசிவர்ந்துலாணிரவி
தாவுசுடர்பின்னிடையவொளிதயங்குமணிமண்டபத்தினிடை
மேவிப்பகலின்பொழுதகலவிளையாட்டயரும்விருப்பினராய்ப்
பூவையரசன்வீற்றிருந்தாரிவர்க்குவருந்தீவினைபுகல்வாம். (௬௬)

அரசன் சோகப்படலம்

முற்றிற்று.

ஆகப்படலம் ௰௫க்குத்திருவிருத்தம்-௭௱௧.

---

# விஜயதரன் வேட்டைப்படலம்.

தொல்லைவழுதிதன்நகரைச்சூழ்ந்துபுறத்திற்கிடந்தபெரு
மெல்லையறியாதுளம்வருந்தியிரப்பவிரங்குற்றொருபணியால்
வல்லையறிவித்தன்றுதிருவாலவாயென்றின்றுமுளோர்
சொல்லப்படைத்தபரமனடிதொழுதுபடைப்பாம்பெருஞ்சுகமே. (௧)

வேறு.

விசையநகர்புரந்தருளும்விசையதரன்றனதுபுயவென்றியாலே
திசைமுழுதங்கொடுங்கோன்மைத்திகிரிசெலமநுமுறைமைதிறம்பிநீங்கா
வசைபெருக்கியறம்போக்கிமகளிர்நலம்பாழாக்கிமறையோர்வேள்வி
யிசைவிலக்கிமனுத்தீர்ந்தவெவ்வுயிருந்தின்றுமனதேம்பல்கொள்வான். (௨)

வில்வலியிற்கைத்தொழில்வெங்கரிதேர்பரியுகைக்கும்வீரந்தன்னின்
மல்வலியிலிவன்போலும்வான்புவிபாதலமூன்றுவரைப்பிற்கற்றோர்
சொல்வலிகொண்டுவெகிக்கத்தொலையாவெஞ்சூளைப்போற்றேற்றமிக்கோ
கல்வலிதிண்டோளமரர்கண்டொதுங்கமண்டமர்செய்காலன்போல்வான்.[ன்

அங்கவன்றன்மனைவிசுபலீலையென்பாடிருவினுஞ்சீரழகுவாய்ந்த
நங்கைவயிற்றினிற்பிறந்தவிவன்காதற்சுதர்மூவர்நமன்போல்வீர
சிங்கனதிவீரசிங்கன்சித்திரகேசரியென்பார்தெவ்வருரைப்
பொங்குமழன்மடுத்துமற்றைப்புவனமெல்லாந்தமதேவல்புரியச்செய்வார். ()

முப்பதினாயிரங்கோடிகுமுதநெடுஞ்சாகரம்போன்முழங்குதானை
செப்பரியநான்கமைச்சருநான்குபடைத்தலைவர்சிவனையன்றி
யெப்பெரியகடவுளர்வந்தெதிர்ப்பினுமோர்கைபார்ப்பாரென்னிலன்னார்க்
கொப்புரையிவ்வுலகமிசையுள்ளசிறுமானிடரோவுரைக்கநேர்வார். (௫)

வான்புவிபாதலமூன் றில்விசையதான்பெயர்கேட்கின் மறலிகைப்பட்
டுன்பிரிந்தவுயிரேபோன் மத்தேறியுடை தயிர்போ லுள்ளமாழ்கி
யான்பிரிந்தகன்றெனகின் றலம்வருமேலெவ்வுலகோரவனைவெல்வா
ரேன்பிறந்தானிவனெனத்தீவினைநரகம்பாவமுதலெல்லாம்வையும். (௬)

பானுங்கத்தீவினையும்பயந்தொழிக்கநயந்தவிண்ணோர்பண்ணையென்னும்
பேரொாதுங்கநல்லறமும்பேசாதுவாயடங்கப்பிறவுமஞ்ச
நேரொருவரில்லாமனெறிதவறியாசிருந்தசிருபன்போல
வாரொருவரைச்சொலுவேமந்நாடொட்டிந்நெடுநாளளவுமம்மா. (௭)

வேறு.

விடையவன்றிரிபுரம்வீட்டவாங்கிய
வடவரைசிறிதெனவயங்கும்வில்லினன்
கடையுகக்கனலையுங்கனற்றுங்கண்ணினன்
படர்மழைவெருவுறப்பகருஞ்சொல்லினன். (௮)

குமரியர்விழியெனக்குறிக்கும்வாளின
னமன்முதுகிடமுனைநயக்கும்வேலின
னமாருமுனிவரும்பிறருமஞ்சவே
தமரெனவெங்கதந்தழுவுந்தன்மையான். (௯)

ஆயவன்வேட்டையினருத்திமீக்கொளாப்
பாய்பரியானையும்படைக்கைவீரரு
நாய்களுமெயினருநணுகவென்றன
னேயெனுமளவின்மந்திரிகளீட்டினர். (௧௦)

காற்றெனவயப்பரிகலந்தவெங்கடுங்
கூற்றெனமதமழைகுழுமக்குன்றுக
டோற்றெனத்தேர்க்குலஞ்சூழவான்முகி
லேற்றொலியியங்கலித்தெழுந்ததெங்குமே. (௧௧)

சூலம்வேல்சக்கரஞ்சுரிகைதோமரம்
பாலம்வில்லங்குசம்பாசநாந்தகங்
சோல்கவண்சப்பணங்குடாரமீட்டியென்
றேல்பதினெண்படைக்கலங்களேய்ந்தவால். (௧௨)

தாரைவேய்ங்குழற்றவில்சங்குகைத்துடி
பேரிகைதக்கைமாக்குரடுபேசொண
வார்முரசுறுமிவாய்வழங்குபேரொலி
காரொலிகடலொலிகல்விச்செல்லுமால். (௧௩)

புவனியைப்புதைத்தனபோர்வெஞ்சேனைகள்
சிவன்வலக்கணைப்புதைத்தெழுந்ததேர்க்கொடி
கவனமாப்புதைத்தகாற்றுகழிற்கார்கட
லுவனிலாத்திவைவரண்டுற்றடைத்ததே. (௧௪)

த்திருள்செறிந்தனதயங்குவான்குடை
புதுவெயில்பொழிந்தனபொலன்கொடேர்க்குல
நதர்தருகுறமன்னர்நடந்தசேணதர்
மதிலைவெறிந்தனமகுடகோடியே. (கரு)

(வேறு)

கச்சிறுக்கிவரிவிற்குழைத்துகிமிர்காலினிற்கழல்செருப்புறுய்ச்
செச்சைநத்தொளிவிரிந்துமொய்த்திருள்செருக்கலைத்துகிலவொழுகந
லுச்சியிற்கழுகிறக்கைபற்பலவொழுங்குசேர்த்துமுகிலேறென
நச்சுவிற்சுடிகைகட்செவித்திறணடந்தவேடுவானந்தமே. (கசு)

கற்றொடுத்துகிமிர்மேனிமால்வரைகவித்தகாளகம்விரித்தல்போ
லற்றொடுத்தவுடையோபெட்டிகையணிந்துவாணுதலிலழகெழ
நெற்றொடுத்தசாமிட்டுநற்கவடிநெட்டிறுக்கிமுடிதொட்டுவா
னெற்றொடுத்தசிறுபிறையெனக்கதுவுமெயிறுநாறெயினர் கோடியே.()

விற்குழைத்துமுனையாசுகங்குல்வுதூணிவென்பிடாலைப்பநீ
பூற்குழைத்தகருமேனியோடுகிறதாவடர்ந்துசெறிதாடியும்
பற்குழைத்தலகுமென்றுபுட்கரிபாந்தசெங்குருதிவாய்களுங்
கற்குழைத்தகழலும்பொருந்திவருவேடுவப்படைகலித்தவே. (கஅ)

பேருவிந்தகிரியாதிதுன்றிமிர்வெற்பெலாமொருநெறிக்கணே
சாரின்றுநடைகொண்டுசென்றுலவுதன்மையொத்துமிளிர்பொன்ம
தேருகந்துவருவீரர்தங்கள்புடைசெப்பொணுதசகடங்களில் [ணித்
வார்விசித்தவலைகூடைகண்ணிகொடுவந்தவேடர்குழுமுந்தவே. (கக)

நனிசுருண்டகடைவாணிமிர்த்துவிரிநயனவங்கிபொறிசிதறவிண்
டனியெழுந்தமுகிலிடியெனக்கொடியதனதுவாய்களிடையுறுமியார்
துனிபடப்பிடர்பிணித்தசங்கிலிகடுகளெழக்கடிதுதிருகியேழ்
பனிகடற்புடவிநிலைகடட்டழியஞாளிபற்பலபரந்தவே. (உ0)

வாய்வளர்ந்துவயிறொட்டிமார்பகலமாகிநாமுழமிறங்கவான்
றேய்பசாசிலையுந்தொடர்ந்துடறொலைத்துவாளெயிறுதோன்றவே
பாய்நடுங்கதிவலித்தகாற்கொலுசுபம்பியார்கலிபடுப்பவெந்
தீயெழுஞ்சிகையெனச்சிவந்திருகண்மீறிவந்தசிலநாய்களே· (உக)

நந்துதந்தமகாலையங்கரைதகர்த்துநாற்புறனுநண்ணிநீண்
முந்துபூவுலகடங்கமீக்கிளருமுறைமையொத்தொலிமுழக்கியே
சுந்துகந்தெனவெழுந்துதாவுபடைகண்டுவண்டுளாலங்கலான்
சிந்தையுந்துவகைகொண்டுமந்திரிகளோடுசெல்வதோர்சிறப்பினன். ()

குண்டலம் புடைவிரிந்துநின்றொளிகுலாவவிண்டுலவுகொண்டல்வாய்
விண்டமின்னினமெனத்திரண்டுசுடர்வீசுபொன்மகுடம்வேய்ந்துநீ
டுண்டவெண்பிறையினைந்தகிம்புரிகடோள்புனைந்துவரையருவிபோன்
மண்டுமாலைபுரண்மார்பினிற்கவசமார்த்துவாள்புடைவயங்கவே. (உந)

வேலெடுத்துமுனையாசுகங்குலவுவில்வளைத்தொலிவிளங்கநீள்
காலினிற்கழல்செருப்பணிந்துகடைநாளெழுந்துவருகாலனே
டாலகாலவிடமுங்கொடுங்கனலுமஞ்சியோடவரியேறுபோற்
கோல்பிடித்துவலவன்கடாவிரதமேறிவெற்றிபுரிகோமகன். (உச)

கொற்றவெண்குடைநிழற்றவெண்கவரிகுலவவார்முரசுபேரிகை
யெற்றுபேரொலிமுழங்கமற்றுளவியங்கள்விம்மியெழுகடலெனச்
சுற்றவந்திசர்வணங்கிவாழ்த்துமொலிதுள்ளமள்ளர்புடைசூழவே
வெற்றிமாநகரவீதிவிட்டெயில்கடந்துகான்வரைகண்மேவியே. (உரு)

கைவகுத்துவலையூடுகட்டிநிரைகானெலாம்படைகலந்துநின்
றெய்யும்விற்பகழிகோன்மழுக்கண்முசலங்களெஃகுவளைசக்கரம்
வெய்யவெங்கனல்பரப்பியெங்கணும்விளங்கவங்கதில்விழுந்துநீள்
கைமலைக்குலமழிந்தயாளிபுலிகரடிமான்மரைகழிந்தவால். (உசு)

நாய்கடித்தகடியிற்பிழைத்துடனடுங்கவந்தபல்விலங்கின்மேற்
றேய்பசுங்குருதிவாரவேடுவர்தொடுத்தவிற்பகழிதுளைசெய
வாய்பிளந்துயிர்பிரிந்துவானுலவுமலைகள்போற்குவியவனமெலாம்
போய்வளைந்தவலையூடுபுட்குலமடிந்துதங்களுயிர்பொன்றுமால். (உஎ)

வேசைமையல்விலகாதகாமுகர்விரும்பியங்கவர்கள்பாலினின்
றாசைமீறவுயிர்தேய்தல்போலவனம்யாவுமேகுநெறிமாற்றிய
பாசமீதுசுழல்புட்குலங்களுயிர்பாறிவாய்வெருவல்கொண்டதோ
ரோசையந்தரமெலாநிரந்தமழையோலமென்னவொலியோங்குமால். ()

குந்தநேமிகணைசூலம்வேல்கயிறுகொண்டுவேடுவர்குழுக்களாய்த்
தந்தியாளிபுலிகேழன்மான்மரைதடிந்துதாவியெழுபுள்ளெலாஞ்
சிந்தநூறியெலிமுயலுடும்புகள்சிதைந்துவீழவுடறிசைதொறும்
வெந்துதீச்சுடர்பிறங்கமொய்த்துவனவேட்டையாடினர்விரும்பியே. ()

பாவிரும்பியருளாதவன்கொடியபாமரர்க்குரியபொருளெலா
மேவியள்ளியெரிவாய்மடுத்துவிளையாடல்கொண்டுவெருவிந்தைபோற்
காவுகான்வரைகடாவியாவுமொருகைக்குளேவரவளைத்துவில்
லேவுமேவின்முனையாலழிந்துயிரிழந்துபோயினவிலங்கரோ. (ஙo)

வட்டவாணுதன்மடந்தைமார்விழிவலைக்குளேமனம்வருந்துரு
தெட்டவோடிமயலாறிமேன்மைபெருமான்கள்போலவிளமானெலாந்
துட்டவேடுவரடர்ந்துகான்வரைதொடர்ந்துதுன்றுசணைவாய்தொறுங்
கட்டுபாசவலையைக்கடந்துவெளிசென்றுநின்றுடல்களிக்குமால். (ஙக)

வேறு.

தோள்வலம்படவயவர்கைச்சிலைதொட்டவேல்கணைசுரிகைபாயவே
தாளொடிந்துகண்சிதறமெய்யுரந்தசரவாய்களிற்குருதிசாய்த்துவெண்
மூளைசிந்திநற்றலைநொறுங்கிடமுழுவதும்பொடியாகிநீள்பெருங்
கோளடைந்துமாவனமெலாம்வளங்குறைவடைந்தபுட்குலம்விலங்கவே. ()

தலைதுமிந்துவானளவுமாமுகிறழுவமேனிவர்தொளிகுலாவிய
மலையெனத்திரண்டொழுகுசோரிகண்மகிதலத்தினிலருவிபோலெழுந்
தலைபரப்பமெய்முழுவதும்புதிதாகவேபுவிமாதுசென்னிறக்
கலைபுனைந்துவீறழகுதோன்றிடக்கானெலாங்கவின்காட்டன்மானுமே. (௫௩)

எனமான்மரைகாடிமர்ந்தமாவெலியுடும்புபுல்வாய்முயர்குலந்
தான்மடிந்தவைவாரிவேடுவர்தழன்மடுத்துடறனைவெதுப்புமே
லூன்வகிர்ந்துதின்றூர்வமோடுமாடுற்றஞாளிகட்குணவருத்தியே
கானறும்புனல்பருகிமெய்யுளங்களிதரும்பவெங்கானின்மீளவும். (௫௪)

அன்னநாரைகொக்கன்றில்குக்கில்கேகயஞ்சிவல்கவுதாரிதாக்கணம்
பொன்வரிக்குயில்பூவையஞ்சுகம்பூனிசிட்டுபூஞ்சிட்டுகம்பள
மின்னதாயபுட்கொட்டுகண்ணிவைத்திட்டுவான்சுமைகட்டியீங்கிது
மன்னன்யாமகற்கிதுநமக்கிதுமனைவிகூத்தியர்க்கென்றுவாவுவார். (௫௫)

மாதமொன்றுநீள்வனமெலாமுளமாவிலங்குபுள்வளங்களைக்கவர்ந்
தேதுமின்றியேயாதுசெய்துமென்றேந்தல்பாற்சொலவேந்தர்கோமக
னேதுவேடுவப்படைகளுமதாவயிற்செலுமெனவுரைத்துமப்
போதுதன்பதாதிகணெருங்கியேழ்புணரியாமெனப்புடைதுலாவவே. (௫௬)

ஈரிரண்டுமந்திரிகளோடுதானிரதமேறியவ்வனமிரிந்துபோய்ச்
சூரியன்செறிபாதவங்களாற்சுடரிழந்திருள்சொரியநீழல்செய்
வேரியம்பொழிலினோர்தெரிந்ததின்மேவினான்படைவீரர்வெங்கரி
தேர்பெரும்பரிபார்பெருந்துறச்சிந்தைவேடையானைந்துதாகமாய். (௫௭)

மன்னர்கோமகன்மாடுநின்றதோர்மதியமைச்சர்நான்கவரின்மன்னவன்
சொன்னசெய்வதிற்றுருசளான்புரிகுதம்வாதும்வஞ்சகமுநாளெலாந்
தன்னதாகவேதழுவுதற்சனன்றன்னைநோக்கியேதாகநீங்கவே
யின்னபோதினிற்புனல்கவர்ந்துவாவென்றசொல்லின்முன்னேகினனரோ.

சோலைவாய்தொறுஞ்சுனைமாருதஞ்சுழறல்போலவேதிருவியேகியோர்
பாலின்முன்னமேகடைபடாதவெண்பாற்கடற்பெரும்படமலிந்தபொற்
கூலவாவியைக்குறுகியம்புனற்கொண்டுபின்னவன்கண்டுகொண்டநற்
சிலமங்கையின்னிலைமைநோக்கினன்சிந்தையாகுலஞ்செறியநோக்கினன். ()

பொன்றிரண்டொளிவீசும்வாசமார்பூவின்மென்கொடிகாவியுண்கணும்
மின்றிரண்டசிற்றிடையும்விந்தமாமேருவின்முலைப்பாரமும்பொருந்
தின்றநின்றதோர்பெண்கொலாவிவரெங்குளார்கொலோவென்றமெய்மறந்
தன்றமந்திரியச்சமெய்திமேல்வசமாகினனறிவுமாழ்கியே. (௬௦)

மதிகொள்வாண்முகமதுமலர்ந்ததாமரைகொலோவிழிமான்கொலோமொழி
புதியதேன்கொலோபூவைமேனியும்பொன்கொலோவிதுபுரியநோக்கினற்
பதியினுகர்தம்பதியின்வானவர்பதியினில்லதோர்படிவமெய்திட
விதியினார்தவமன்றியாவரால்விளையவாற்றலாமெனவிளம்புவேம். (௬௧)

கானெலாமொளிவீசமூசியகானமாதினைக்காணிலாதவன்
மானமாறிநீள்வானமீதினில்வாவனாடொறும்மனதுசெய்வனே
ஊனமில்லவடனியளாகியிங்குற்றதேதெனவுணருமுன்னொரு
மீனகேதனன்கேதமெய்துசீர்விளையும்வீரனவ்வுழைவிளங்கினன். (சஉ)

ஆணிலாணிபோற்றோன்றுமிங்கிவனழகெலாந்திரண்டார்வமாய்விளை
காணிகைக்கொளுங்காவல்பெற்றுளகாளைதன்னையுங்கண்டுகண்ணெதிர்
நாணினீங்குதற்கியாவர்வல்லவர்நாரதாதியர்கீதமோதநீள்
சேணில்வாழுமோர்தேவர்கோமகன்சிறியனேயிவன்சீர்மைநோக்கினல். ()

பெண்ணினுக்கிவளாணினுக்கிவன்பேசவாய்ந்துளார்பீடுதோன்றவே
மண்ணில்வானினிற்பாதலத்தினின்மனதினும்நினையாதவண்ணமா
யுண்ணிறைந்தகுதுளவெலாமுணர்ந்துள்ளநாளெலாந்தவமுஞற்றியே
தண்மலர்த்தவிசண்ணல்செய்தகைச்சமர்த்தைநான்சொலச்சமர்த்தனுவனே

என்றுநின்றுநின்றெண்ணுமந்திரியிவணலத்தைநாமென்றுநீக்குத
னன்றுநல்லதுகண்டபோதவைநாயனுக்கெனநவில்வராதலா
லின்றுநம்மிறைக்காக்குதல்கடனெனப்பதெண்ணிமீண்டேந்தல்பாற்புகுந்
தன்றுதாகநீரால்விலக்கிநீங்காதமோகநீரளிக்கவுன்னினன். (சரு)

விஜயதரன் வேட்டைப்படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-கசு-க்குத்திருவிருத்தம் எசகூ.

---

# பூலோகரம்பையின்வடிவுரைத்தபடலம்.

பொற்புமிகுந்ததாருவனப்புனிதமுனிவர்பன்னியர்தங்
கற்புமொழுக்குமளக்கவொருகபாலிவடிவுற்றவைபுரிந்து
வெற்புநிகர்மாமதிட்கூடன்மேவிவெளியாயொளியாய்நின்
றற்புநிறைத்தானிறைத்தானெனுளத்துமவன்பொன்னடித்துணையே. (க)

வேறு.

தாகமுநீங்கநன்னீர்தனைக்கொடுத்தரசன்கொண்ட
சோகமுநீங்கச்செய்ததூர்ச்சனன்சுகம்போலச்சோ
வாகமுமுளமும்வேவவவாவெனும்விறகிட்டோயா
மோகவெந்தீயைமெல்லமூட்டினன்முடிவில்லாமல். (உ)

அன்னமோகிளியோசோலையகத்துறுமயிலோகாரின்
மின்னலோகுயிலோயாதோவிரிமலர்வாவிநாப்பண்
மன்னியதென்கொலென்னமயறரக்கூர்ந்துநோக்கிப்
பின்னுநானெடுநேரம்போய்ப்பெண்ணெனத்தெரியலுற்றேன். (ங.)

தெரிந்தனன்றமியளாகச்செழுமலர்வாவிநாப்ப
ணிருந்தவளியற்கைநோக்கிவிந்திரநகரினின்றுந்
திருந்திழைதவறிமண்ணிற்சேர்ந்ததுபோலுமந்தோ
விரிந்தபொழிமாட்டோர்வீரனும்விளங்குகின்றான். (௪)

இருவரேயழகுக்கெல்லையாமெனவிலையந்தார்மாந்த
ரொருவருமறியாதாங்களுற்றவாதெரியநோக்கிற்
காவினிற்கலந்தார்போலக்காட்டினதவனைத்தீர்த்தவ்
வாசியையாசேகின்பாற்சேர்ப்பதற்காசையுற்றேன். (௫)

காளியின்மயிலினாளும்வீரனுங்கலந்தகாதன்
மேனனிகளிப்புத்தூண்டவிரும்புபேர்விளையாட்டாலே
நானடைந்ததுவுமீங்குநண்ணியதுவுந்தோரார்
மானவவென்றான்கேட்டமன்னவன்யாவளென்றான். (௬)

இந்திரையென்கேன்யானுமெழிலுறநாவில்வாழுஞ்
சுந்தரியென்கேன்வேரிசூழ்ந்தருமுளரிப்போதில்
வந்தவளென்கேனெந்தவண்ணநானெளிதிற்றேர்ந்திங்
கந்தமிலுருவத்தாளையாவளென்றறைவனையா. (௭)

பாவணங்கவிர்பூமாதுபார்வதியிவளைக்காணி
லாவல்கொண்டயன்மாலீசனணுகுவாரென்றேவன்றே
நாவினின்மார்பின்மெய்யினாளுநற்குடிநீங்காமன்
மேவினாளென்றால்வேறுநானெதைவிரித்துச்சொல்வேன். (௮)

---

மானெனினோக்கஞ்சோலைமயிலெனிற்சாய்கைசெம்பொ
றானெனின்மேனியல்லான்மற்றவைதருகற்பாற்றோ
வான்மதிதேய்த்தசோதிவதனத்தாட்குவமைசின்ன
னூன்மதியுடையேன்சொல்லாலுரைசெயற்குளவோபாவம். (௯)

மங்கையர்க்குவமையாவும்வகுத்தனர்புலவர்மேலோ
ரங்கதைப்பகரநெஞ்சமஞ்சுவனரியதேடி
யிங்கெதையுரைப்பேன்பின்னுமிசைந்தவாறிசைப்பேனென்னாக்
கொங்கலர்குழலினாடன்வடிவெலாங்கூறலுற்றான். (௧௦)

(வேறு)

கரியவின்மழையோசைவலத்திரளோகலையில்புன்மாந்தர்கண்மனமோ
வரியநெய்புழுகுநாவிமென்பனிநீரளைந்தகிற்புகையொடுங்குலவி
விரிமலாத்தார்வேய்ந்தளியினம்பாடமினுமினுத்தறலினுமிளிர்ந்து
வருகதிரவிக்குமிருட்பிழம்பெனவும்வார்ந்துகன்னொழுகியகுழலாள். (௧௧)

மாதுதன்வதனமுழுமதிக்கிடையின்மற்றொருமதியினைவகிர்ந்து
பாதிநன்னுதல்செய்ததனுள்ளார்திலதம்பாதியைவளைத்துவைத்ததுவோ
சோதிமென்குமிழின்பூவையுமெள்ளின்றோன்லையுந்தொல்லைமாஞால
மீதுளார்கொடிமூக்குவமையென்றுரைத்தார்நானவைவிளம்புதன்மிகையே.

நெரிகுழன்முகிற்குமுகமதியதற்குநேருறுமிந்திர தனுவோ
தெரிவரிதாயவுருவினன்சிலைகூருக்கிவைத்திருத்தியசெயலோ
வரிவிழித்தரங்கக்கடறதும்பாதுமலரயன்கரத்தினல்வகுத்த
கரையதோகரையாமனத்தையுங்கரைக்குங்கன்னிகைமுகத்தொளிர்புருவம்.

பரவையிற்பாந்துமதர்த்துமைசெருக்கிப்பானலங்கரிந்துகச்சீறித்
தெரிவருமூவர்நிறமெனச்சிறந்துசெவ்விளம்பிணையெனமருண்டு
கருதுபொய்வஞ்சங்கொலைகளவெவையுங்காலனுக்கனையெனப்பயிற்றித்
திருமணிக்குழையைக்கிழிபடத்திறந்துசேணுறப்புரளும்வாள்விழியாள். (௧௪)

குமுதமுங்கிடையுங்கோபமுமுருக்குங்கொவ்வைமென்பழனுமேதுவன்றி
யமுதமுள்ளூறித்ததும்புசெம்பவளத்தணிபொருவள்ளமொன்றிருக்கி
லெமதுவாயொருவாறிசையுமாங்கவட ன்வாயெனவிசைக்கவுமையா
வுமிழ்நகைவிரியுமுருந்ததோமுத்தோவொளிநிலாப்பரப்புவெண்முறுவல். ()

ஆடியோவிரதப்பசுங்களைகுழைக்குமணிமலர்ப்படையினன்கரத்திற்
கூடியவரிவட்டகட்டுநெட்டிலைவாட்டிடக்குறித்தசாணையவோ
சேடுறுதரங்கப்புனல்வதிகிலையோசேயிழையொளிர்மணிக்கபோலம்
பாடியபொருளிலெப்பரிசெடுத்துப்பாடினுமிணைதாற்பாற்றே. (௧௬)

சுழிமணித்தடத்திலார்ந்தவள்ளையினைத்தோயமுட்டோய்த்துகத்திரியைப்
பழிபடப்பாணுர்பையுளிற்புகுத்திப்பருமணியூசலைப்பழித்துக்
கழிமடமாந்தராவியைப்பிணிக்குங்கயிறெனத்தோள்வரைநீண்டு
விழியெனும்பிணைபோயுலவிமீள்வதற்காய்விதித்தபொன்னிலையெனுங்கு
[ழையாள் (௧௭)

தாமரைவதனமென்றிடின்முன்மேதையலார்முகங்களுக்கொல்கும்
பூமதிக்குடைந்துபோயதாலதனைமீளவும்புகலுதல்புகழோ
பாமகண்மாமன்பஞ்சவாயுதத்திலொன்றைநான்கண்டமாய்ப்பகர்ந்தான்
மாமகள்வாய்வைத்தூதியதுளையுமருவுபுன்னெச்சிலுமாமே. (௧௮)

விண்டுவும்பசியகரும்புமென்றடந்தோட்குவமையென்ருய்ந்துநான்விண்
முண்டகமன்றிக்காந்தளின்மலர்கண்டுழுவதும்புறஞ்செலமுடுக்கிக் [டான்
கொண்ட லுந்தருவுங்குடிபுனைந்தலைமேற்குலவியசென்னிறப்பவளத்
துண்டணிவிரல்கொள்கையுநகமாந்தூய்மதிச்சுடர்களுமுளவோ. (௧௯)

மூண்டகமுகைபம்பரங்குமிழ்குதுமுடிகுடங்குரும்பைகோங்கரும்பு
செண்டுசெப்படங்கக்கனத்தடிதடித்துத்திதலைபூத்தணிவடமலர்த்தா
ரொண்டருகலவைசுமந்துசிதளமார்ந்துத்தராசங்கமிட்டெதிர்சென்
றண்டர்கோன்யானைக்கோட்டொடும்பொருதவனுந்துவிண்ணேங்கியமுலை
[யாள். (௨௦)

மாலவன்றயிலுமாலிலையன்றிவயிற்றினுக்குவமைவேறிலையென்
ரேலநான்மறையாகமநெறியுணர்ந்தோருரைசெய்தாரதுபிழைத்துரைத்தற்
சேலுமோவுதரபந்தனமடிப்பார்ந்திலங்கியவிளங்கிழையழகாங்
கோலவான்கடலின்றரங்கமென்றுலகோர்கூறினல்வேறெதுகுறிப்பாம் ()

கண்டகர்கழலினிகளங்கொன்முலையாங்கஞ்சமென்முகையினைத்தாங்குந்
தண்டுகொல்வண்டினொழுக்குகொன்மதன்கைச்சலாகைகொலென்றுமாண்
புடையோர், பண்டுசொல்லுவமையாவையுந்தள்ளிப்பாவைதன்மேகலைமணி
யி,லுண்டவான்சுடர்போன்றொளிசெயுமுரோமத்தொழுங்குதேர்ந்தியாவரே
[யுரைப்பார். (௨௨)

முந்துபேருலகமுழுவதும்படைத்தமுதிர்மறைநான்முகத்தொருவன்
வந்தவாண்மனையின்வனப்பழித்தவிர்வெண்மதிநிலாவுலவுசெஞ்சடைமேற்
சிந்துதெண்டிரைநீர்க்கங்கைமாநதியின்றிகழ்சுழியனைத்தையுஞ்சுழிந்த
வுந்தியஞ்சுழிகண்டுளஞ்சுழிந்தாசையுறாதபேருலகினிலுண்டோ. (௨௩)

சிங்கமுந்துடியுமின்னலுமயங்கச்சிறுத்தசிற்றிடையினைமட்டு
மங்கையைநீயுமணந்தபஞ்சணையின்மருவுநாண்மறந்திடாதுனது [துப்
செங்கையாற்பரிசித்தறிந்துகொண்டெனக்குஞ்செப்புவாயொப்புவேறெடுத்
பங்கமில்லாதுபுகல்வதற்கெவரிப்பார்மிசைபடித்தனரம்மா. (௨௪)

வரம்பினைக்கடந்தவடிவினுள்கவான்மன்மதன்மனைவாயிலினட்ட
வரம்பையோமகரதோரணக்கலையோயானையின்றுதிக்கையோயாதோ
விரும்புபேரல்குன்மான்குழம்பரவின்விரிபணமாசிலையின்றேற்
சுரும்புகுழிறாலின்றேன்வழிந்தனையசுவைதரும்வட்டெனச்சொலலாம். ()

சினைவராலாவநெற்பொதிகணைக்காலிணைதருஞ்செழுமணிமுழந்தா
ளிணைவாரதரித்தாரலவனையெதைநானிகழ்த்துவனிறைமதிவணிக
ரனைவராடகத்தைநிறுவைசெய்யருகுதராசணிபரடுநல்லாமை
தனைவாரதொதுக்கும்புறவடிக்கென்னோசாற்றலாம்புத்தகந்தவிற. (௨௬)

பஞ்செனச்சிவந்தகால்விரற்றிருப்பாற்கடற்படுபவளத்தினுள்ள
செஞ்செவிமுழுதுங்கவர்ந்துவெண்மதியைச்சிதறிவண்டினங்குடைந்தொலி
கஞ்சநாண்மலரினிதழெனவிரிந்துகற்பகத்தளிர்நிறங்கவற்றிக் [செய்
கொஞ்சமுங்குறையாதழகெலாஞ்சூழ்ந்துகுடிபுனைந்திருந்தகொள்கையதே.

கற்பகக்காவூடிருந்திளவேனிற்காலம்வாய்கூவுபூங்குயில்க
டற்பகையாகயாழ்குழல்சீனிசருக்கரைதேன்முதற்கனிபா
னற்பதம்பொருந்தியுலர்ந்தவெள்ளெலும்புநனிபசந்துயிர்தரநாளுஞ்
சொற்பகாமுதமழலைமென்மொழியஞ்சுகத்தினுக்குதவியசொல்லாள். (௨௮)

மதம்பெய்வாரணங்களுடநீர்ந்திருகமையல்செய்வனப்பிடிபோலப்
பதம்பெயர்த்தணிசெம்பவளவாயன்னம்பாடுறப்படித்தமென்னடையாள்
கதம்பகத்தூரிசந்தனம்புழுகுகலந்தெழுவாசமின்றெனினு
நிதம்பெருந்தொலைசென்றளாவுபூவாசநிரம்பியபொன்னனின்மேனியினள். ()

இன்னதோர்வடிவின்மடவால்வடபாலிரும்பொழில்ஞாங்கர்சூழ்கிடந்த
மன்னியவனசப்போதலர்வாவிமையமண்டபத்திடையொருவன்
றன்னொடுமிருந்தாளவனைநானுனக்குத்தாரமாய்ப்பொருத்துதறமென்
றுன்னியிங்கோட்டமோட்டமாயுற்றேனுன்றவமுலகில்வீணுறுமோ. (௩௦)

பூலோகாம்பையின்வடிவுரைத்தபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௧௭-க்குத்திருவிருத்தம்-௭௭௬.

---

# விஜயதரன்மோகமுற்றபடலம்.

பொருமிதங்கருமந்தீர்த்திடநெஞ்சம்புலர்ந்துதன்னடிதொழுதிரந்த
தருமிதங்கைக்குப்பொற்கிழிபெறவேதமிழ்க்கவிபாடியங்கதனில்
வருமிதங்காட்டுங்கீரனைக்கடிந்தமதுரையம்பரன்றனைத்தொழுது
கருமிதங்கடத்திவாழுநாண்முழுதுங்களிக்குதலெனதுபுன்கருத்தே. (க)

மந்திரியுரைத்தமதுரவாசகங்கண்மன்னவன்செவித்துளைமண்டிச்
சிந்தையுட்புகுந்துமெய்யெலாம்பரவிச்சிரம்பனித்தடங்கொணச்சோகந்
தந்திடமயங்கித்தெளிவுறுதனங்கன்சரங்களாலுரம்பிளந்தெறியுஞ்
செந்தழன்மெழுகொத்துருகிவாய்புலர்ந்துதிகைப்பொடுமுயிர்நிலைதிரிந்தா
[ன்.

வாடினன்மெலிந்தான்மந்திரியுரைத்தமடவால்வனப்பெலாமனத்தி
னாடினன்கண்முன்கண்டதுபோலுனைந்துளமுருகிமேன்மோகங்
கூடினனுயிர்விட்டகன்றசையாதகூடெனக்குறுகுறுத்தச்ச
நீடினன்செய்யும்வகைசிறிதிலனாய்நெட்டுயிர்ப்பெறிந்துநின்றழன்றான். (ங)

இந்தநாள்வரையுங்கண்டுகேட்டறியாதிப்பெரும்வனப்பெலாம்படைத்த
மந்தவாணகைமென்மயிலியற்குயிலின்மழலையஞ்சுகத்தினைமருவிச்
சிந்தையாகுலம்போமளவினும்வேறுசிந்தியேனென்பதுஉருதாச்
சந்தணிகடகவாகுநீள்புயத்தான்சாற்றுதுற்சனன்முகநோக்கி. (ச)

கண்டுநீயுரைத்தகருந்தடநெடுங்கட்காரிகைதன்னைநான்கவர்ந்து
கொண்டுபோய்வதுவையாற்றுதலின்றிக்கோநகர்க்கேகுதல்குறியேன்
மண்டுவெம்படையின்றெழுகவென்றுரைத்துமதுமலர்வாவியைநோக்கித்
திண்டிறன்மணித்தேர்கடாவிவந்தற்றான்றிசைபுவிவானமுந்தியங்க. (ரு)

வேறு.

வாவியைநாற்புறம்வளைந்துமாப்படை
மேவிடத்தேரைவிட்டிழிந்துவேந்தர்கோன்
காவியுண்கண்ணியைக்கண்ணினோக்கின
னாவியுமனமுநின்றாசலாடவே. (சு)

புதுமலர்த்தேனுணப்புகுந்தவாவுறு
மதுகாஞ்சுழறல்போன்மாதுமெய்யழ
கதிமதுரத்துளியமிழ்தருந்திட
மதுகையான்கண்ணளிசுழன்றுமாழ்கின. (எ)

போதுறைமடந்தையும்பொதுமடந்தையென்
றோதுவவொருவரோடுறவுபெற்றவிம்
மாதினுக்கெதுசொல்வேனமைச்சன்வாயினு
லோதியவுவமமாயிரத்தொன்றோதிலன். (அ)

மந்திரிகூறியவனப்புக்கெத்தனை
யிந்தமாதழகுநண்ணிநைஞ்ஞூறுடை
யிந்திரனன்றிக்கணிரண்டினேக்குதற்
கந்தகன்மேன்மையென்றவலமெய்தினன். (க)

முன்பெருநற்றவமுழுதுமுற்றிய
வென்பெரும்பாக்கியம்போன்றிங்கெய்தினு
டன்பெரும்வடிவினைக்கண்டுசாற்றிய
வன்பனுமமைச்சனுக்கெதுகொண்டாற்றுவேன். (ச0)

கற்படிமனத்தினேன்காத்துவைகிய
நற்படிமுழுதுமின்னுரிக்கீந்திவள்
சொற்படிகேட்பதேயமார்துய்த்துறும்
பொற்படிவாழ்க்கையீதொழித்தென்பூணுவேன். (சக)

அங்கசனம்புபாய்ந்தலசவங்கமும்
பங்கமுற்றுவியுள்பதைக்கின்றேற்கிவள்
செங்கனிவாய்மருந்தருந்தித்தீர்ந்துயிர்
தங்குவதன்றிவேறெதவுஞ்சாலுமோ. (சஉ)

தேவர்கண்மூவர்தன்றேவிமாருமிப்
பாவையுமன்றியேபாரினுக்கின்
மேவியவிசும்பினில்விளையுமங்கைய
ரேவல்செய்குடிமையினியல்பிற்றுமரோ. (சங)

காணவுங்கேட்கவுங்கனிந்துபேசவும்
பூணவுமுகரவும்பொருந்துமென்புலன்
மாணிழைவடிவினையன்றிமாறுமா
றேணுளபொருளெலாந்தீதென்றெண்ணுமால். (சச)

என்புலனிவள்வயினெய்தவீந்திவ
டன்புலனென்வயிற்றந்தவையலை
யன்புலவாதுகொண்டகல்வதின்றியே
பின்புலன்விடுத்துநான்பெயர்தனன்றரோ. (சரு)

போர்முனைந்திவனுயிர்போக்கிப்பொன்னிகர்
காரிகைதனையுங்கைப்பற்றிக்காணகன்
றூர்வயினடப்பதற்குள்ளயோசனை
நேர்வதுகடனெனநிருபன்சாற்றலும். (சசு)

அமைச்சரும்வீருமாசன்சொற்படி
சமைக்குதுமெனத்திரண்டார்த்துத்தானையோ
டிமைக்குமுன்கடலெனவெழுந்துசுற்றினு
ருமைக்கொருநாதனுமயக்கமுற்றிட. (சஎ)

விஜயதான்மோகமுற்றபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் கஅ-க்குத்திருவிருத்தம் எகஙு.

---

# புவனேந்திரன்முனிவுற்றபடலம்.

இந்திரனெழிலிக்காகவிமையவர்குழுக்கொண்டீண்டி
வந்தமர்பொருதவன்றன்றனைவென்றுவாகைசூடிச்
செந்தமிழ்நாடுகாக்கச்செழியனுக்குதவியாண்ட
சுந்தரனெந்தையம்பொற்றுணையடிமுடிமேற்கொள்வாம். (௧)

வேறு.

வினைவிளையாட்டின்மேல்விருப்பமுற்றிய
மனைவியுந்தானுமம்மன்னன்மாப்படை
தனையுணர்ந்திலர்பினுந்தாக்குவான்புரி
யினையபேரொலிசெவியெய்தக்கேட்டனர். (௨)

ஆர்கொலாமிவர்மழையார்ப்புமார்கலி
வார்திரையோசையுமடங்கச்சீறியே
போர்வயவாசியுந்தேரும்பூட்கையும்
பார்வளைத்திடமறப்பரந்துசுற்றினர். (௩)

கூர்த்தவெவ்வரவெனக்கொதிக்குங்கண்ணினர்
போர்த்தொழில்புரியவேபுகுந்ததாமென
வார்த்தைநம்பால்விடுதூதின்மார்க்கம்போ
லார்த்தபேரமலைவானலைத்ததின்றரோ. (௪)

முன்னைக்கண்டேவரோமொழியக்கேட்டுளே
பின்னைக்கண்டித்தலம்படரப்பெற்றிவ
ரென்னைக்கொன்றப்புறமெளிதிலீங்குநின்
றன்னைக்கொண்டகல்வுறுந்தகைமைத்தாமரோ. (௫)

புலிமுகம்புகுந்தமான்போலும்பூனைவா
யெலிமுகம்போலுநின்றேங்கவென்கையின்
சிலிமுகமழையெனச்சிந்தியீங்கிவர்
வலிமுகந்தொலைத்துடல்வாட்டல்காண்பனால். (௬)

வீட்டுவேனிவருடற்குருதிமென்றசை
யூட்டுவேன்றணங்கைகொண்டலகையுண்டிடக்
காட்டுவேனென்வலியென்றுகட்கடை
கோட்டினனுலகெலாமறுக்கங்கொள்ளவே. (௭)

மன்னவன்வீரமும்வலியும்வாய்மையுங்
கன்னிகைகண்டுளங்களித்தபோதினுந்
துன்னலர்பெரும்படைநோக்குந்தோறெலாந்
தன்னுளம்பறைதரத்தளர்ந்துசாம்புவாள். (௮)

ஐயநான்புகறல்புன்மொழியென்றாலுநின்
செய்யநற்றிருவுளமுணர்தல்சீர்மையா
லெய்துறுகாரணமொன்றுமின்றியே
வெய்யவரோடமர்விளைத்தன்மேன்மையோ. (கூ)

காவலவுன்னைவென்றென்னைக்கைக்கொடு
போவதற்கெண்ணினானென்றபோதினும்
வாவியுளிறங்கிநாமனைக்கண்மேவிடின்
மேவலர்கிடக்கயார்தெரிந்துமேவுவார். (க0)

முனிவினைநீக்குகமுளரிவாவியு
ளினிதுநாம்போவதற்கெழுகவென்றுரை
தனுவலான்பொன்னடிதாழ்ந்துகூறினாள்
வனிதையர்க்குண்ணலம்வாய்ந்தகற்பினாள். (கக)

அவ்வுரைகூறலுமரசன்காதினில்
வெவ்வழல்செறித்தனவெகுளிவீங்கினான்
செவ்வழிநயனங்கள்செம்புநேர்படக்
கொவ்வைவாய்மயிலுளநடுங்கக்கூறுவான். (கஉ)

என்னையென்னாதுரையிகழ்ந்துகூறுவார்
தன்னையேதுணிக்குமென்சரங்களென்பது
முன்னைநீயறிகிலாதுரைத்துமுற்றிலுங்
கன்னிகையாதலிலுய்வுகண்டனை. (கங)

என்னொருவலியுமிங்கெதிர்ந்துசுற்றிய
மன்னொருபடைகளின்வலியுங்காண்பான்
முன்னருஞ்சுரரொடுமுனிவரும்புவி
துன்னியவேந்தரும்பிறருந்தொக்கினே. (கச)

இந்திரன்மாலயனீசனேனையர்
வந்தமர்மலையினும்விளைத்தவிற்சரஞ்
சிந்தினின்றவர்புறங்காட்டச்செய்யுமென்
விந்தைநின்பாற்சொலல்வெட்கமேகொலாம். (கரு)

அருந்தவம்முனிவர்கட்காக்கமீக்கொள்வோர்
விருந்தினுக்கீகைக்குநன்மைமிக்குனோர்
வருந்திறற்சமர்க்குமன்னவர்கள்வையமேற்
பொருந்தவாவர்க்கிவைபுகழின்பூணரோ. (கசு)

பாரினிலரசர்தம்பான்மைக்கேற்புறும்
வீரமென்பதுதனுவீங்கவுண்டுபுன்
னாரியரிளமுலைநலங்கடெய்த்துமேற்
காரியஞ்சோர்ந்துகண்டுயில்தல்காண்பதோ. (கஎ)

இற்றொருகணத்தினிலெதிர்ந்துளோரெலா
மற்றுகக்குருதிநீராறுமண்டிட
வெற்றிகொண்டுலகுமப்பாலுமேவவென்
கொற்றமுநாட்டுவேன்கோதைகாண்கென. (கஅ)

செஞ்சிலைவாங்கிநாண்சேர்த்துப்பல்லவம்
மிஞ்சியதூணியும்புறத்துவீக்கினன்
புஞ்சமார்கவசமுங்கழலும்பூட்டினன்
குஞ்சரமேற்செல்கோளரியின்கொள்கையான். (கசு)

ஏறியவெகுளியுமெடுத்தவில்லும்வாய்
மீறியசொல்லுங்கொண்டெழுந்தவீரனை
யாறியகுணத்தினளஞ்சிப்போற்றிநின்
றூறியகவலையோடிதனையோதுவாள். (உ0)

மன்னநின்வாய்மொழிமறுக்கவல்லனோ
வென்னொருபேதைமைக்கியைந்தபுன்மையாற்
சொன்னசொற்பொறுத்துக்கொடுணிவதாயினு
மின்னமொன்றுளவவையெண்ணல்கோடியால். (உக)

கடங்கவுள்கரிநிரைகண்டுதம்முனை
மடங்குமோமடங்கலுந்தெவ்வர்வன்சமர்க்
கடங்குமோநின்வலியறிவிலாதநான்
றடங்கல்சொல்வதும்பெருந்தகைமைத்தாகுமோ. (உஉ)

போர்புரிவதுவிளையாட்டின்பொம்மலென்
றோர்வதுதகைமைத்தன்றென்னலார்புரி
சீறிந்திடம்வலிகாலந்தேர்ந்துமேற்
சார்வதுநலனெனுந்தன்மையாய்ந்துளாய். (உங)

நீரினையருந்தவோநெறிவிலங்கியோ
போர்பொரக்கருதியோபுறத்தோரெண்ணமோ
வோர்கிலாதிவர்வயிற்சீற்றமுற்றெதிர்
வீரநீசெலுத்துதன்மேன்மையின்றென. (உச)

எண்ணினேனலதுவேறில்லையென்னிரு
கண்ணினற்கட்செவிகாலன்வாய்ப்படப்
பண்ணினதறிந்தும்நின்பருமநீள்புயத்
திண்ணமெஞ்ஞான்றினுமறக்குஞ்செய்கையோ. (உரு)

பூசலிற்றிரிபுரம்பொடிக்கப்புக்குமவ்
வீசனுமங்கமோடேகினனெனிற்
றேசுடையலங்கலோய்தனித்துச்செல்லுதன்
மாசுடைத்தல்லதுவென்றிவாய்க்குமோ. (உசு)

இலாதவர்கையுமிளமைவாய்ந்தழி
நலார்மயனிக்குவோர்துறவுநன்புவி
யெலாமொருங்கெதிர்ப்பினும்வென்னிடாதவில்
வலார்மனப்பொறுமையுமாண்பென்றெண்ணுநீ. (உஎ)

இச்செருக்குறித்திருத்தேகற்குள்ளமுங்
கிச்செனக்கனலுதல்கிருபைத்தாகுமோ
துச்சநீக்கியபுகழ்த்தோன்றலேயிவை
யச்சமென்றோர்தலுமழுகிற்றுமரோ. (உஅ)

வாவியுளேகுதும்வாவென்றாயிழை
காவியங்கட்கடைக்கலுழிவாரின்
றூவலித்தழுங்குதலறிந்தவேந்தனும்
பூவைசொற்றணிமைகண்டிரக்கம்பூண்டனன். (உகூ)

மானமுங்கல்வியும்வலியும்வண்மையுந்
தானமுமெய்ம்மையுந்தவமுஞ்ஞானமு
நானிலமீதிலெஞ்ஞான்றுநீக்கமே
மானிழையார்மயல்வாய்ந்தமாந்தர்க்கே. (௩0)

ஆதலாற்றன்வலியயர்ந்தவாணகை
மாதுசொல்லாலுளமருண்டுவேந்தனும்
போதலர்வாவியுட்பூவையோடுபோ
யாதவனிகர்யணையமர்ந்துவைகினான். (௩க)

புவனேந்திரன்முனிவுற்றபடலம்.
முற்றிற்று.
ஆகப்படலம்-சக-க்குத்திருவிருத்தம் அஉச.

---

# புனல்குளியோடுபடலம்.

விருப்பணிமாறன்பரிகள்வேண்டுவெவ்வன்றதவியவெறுக்கைகண்முற்றுந்
திரும்பணிதனக்குமடியவர்தமக்குஞ்செலவுசெய்தினுமறுதாயின்
கருப்பணியாதநெறிதனிலாசைகதித்துளவாதவூருக்குக்
குருப்பணியுருக்கொண்டாண்டநம்மதுரைக்குதிரைநாயகனடிதொழுவாம்.()

(வேறு)

அங்கவர்நீர்புகுந்தம்பொன்மாமணி
தங்கியமாளிகைதன்னிற்சார்தலும்
மங்கையையுடனுறைமன்னனைக்காண்கிலா
திங்கவர்கட்புலன்மயக்கமெய்தினார். (உ)

மண்டபத்துற்றவர்வாவியம்புனற்
றெண்டிரையுட்புகுந்திருந்தசெய்கையைக்
கண்டுகொள்வதற்கொருகருமமோர்கிலார்
மண்டியவருத்தமுங்களிப்புமன்னினார். (௩)

கண்ணினுமனத்தினுங்காந்திலாதுறை
பெண்ணிவளென்கொலோபெரும்புனற்றிரை
நண்ணினுணுமிதைநாடிநோக்குறி
லெண்ணுருதிந்திரசாலமேய்க்குமால். (௪)

நம்பெரும்பதாதிகணண்ணனோக்கிய
செம்பவளந்தரும்வாயின்சேயிழை
யம்புயமாதுநீரழுவத்தாழ்தல்போற்
றம்பதியொடுபெயந்தன்னின்மூழ்கினாள். (௫)

வாவியினீரிடைமறைந்துவைகிய
காவியுண்கண்ணினாள்கன்னலெத்துணை
மேவுவாள்வெளிவருமளவும்வெம்படை
காவலாயமைகவென்றுரைத்தகாவலன். (௬)

பகலெல்லாங்காத்தவணிருக்கப்பானுவும்
மிகுமிவன்காமத்தீச்சுடுமுன்மேற்றிசைச்
சிகிரிபுக்கொளிப்பதற்கேகுஞ்செய்கைபோ
னகையிழந்தேகினான்மாலைநண்ணவே. (௭)

சோலைவாய்க்குயிலொலிதுள்ளவன்றியும்
வேலைவாயோசையுமீறவெம்புலி
போலமந்தாநிலம்புகுதச்செக்கர்சூழ்
மாலைவல்லிருளெனுங்கூற்றம்வந்தவால். (௮)

கங்குலும்வாடையுங்கடலினோலமு
மங்கசன்பகழியுமாலகாலமேற்
பொங்கியதாமெனப்புகுந்துமோதலும்
வெங்கயநுகர்விளாங்சனியின்வேந்தனும். (௯)

தன்னறிவழிந்துவெந்தழலினீட்டிய
பொன்னெனச்சிவந்துளம்புகைந்துதேய்ந்திடப்
பின்னொருவழியினுநிலைபெறாமனின்
றின்னனமந்திரிக்கியம்பன்யேயினான். (௰)

நீரினின்மூழ்கியின்னேரம்வைகுதல்
பாரினில்வாழ்பவர்க்கரிதுபன்னக
னூரினிலுள்ளவளலதிங்குன்னுங்காற்
காரிகைகங்கையோகமலக்கன்னியோ. (௧௧)

செங்கதிர்ப்பகலெல்லாந்தீர்ந்தும்வந்திடா
மங்கையுமாதிரம்வளைந்துமன்னிய
கங்குலில்வந்திடுமென்னக்கண்விழித்
திங்கிருந்தோமினியென்செய்தாற்றுகேம் (௧௨)

ஆதவனுதயஞ்செய்யளவுந்தாமரைப்
போதலர்வாவியின்புறத்துக்காத்திதின்
ருதினைத்தெரிந்துநாந்தோயமூழ்கிய
மாதினைக்கவர்வுறுமார்க்கமின்றியே. (௧௩)

சென்றிடிற்கண்டவர்சிரிப்பாரமென
வென்றியான்வெகுளியும்வியப்புமானமுந்
துன்றிடவிரவெலாந்துயின்றிடாதுளங்
கன்றிடப்புலம்பியேகவலையாகினான். (௧௪)

மந்திரியன்னவவருந்தனான்புகல்
செந்துவர்ப்பவளவாய்த்திருவைக்காலையிற்
றந்துநின்மனத்துனிதணிப்பலென்றலுஞ்
சிந்தையாகுலஞ்சிறிதகற்றித்தேர்வலான். (௧௫)

பெண்ணினைக்காணுமோர்பீழைகொண்டுதன்
கண்ணிணையிமைத்திடான்கங்குல்போம்வழி
யெண்ணினானென்னல்வாயிரவிலின்றெனோ
நண்ணிரவகன்றுளதியாயநன்றரோ. (௧௬)

தருச்செடிமலர்விரைததைந்துதென்றிசைப்
பொருப்புவிட்டாழிநீர்பொருந்திச்சீதளம்
விருப்புறக்கவர்ந்தமேல்வீசுந்தென்றலு
நெருப்பினுங்கோடைமெய்நிரைத்ததென்கொலோ. (௧௭)

நன்றெனவிருப்புறநமக்குமுன்னமே
நின்றொலிகுயிலுநீள்பனையைநீங்கிடா
வன்றிலுமுயிர்நிரிந்தாக்கைதேய்ந்துளங்
கன்றிடக்கதறினகாட்சியென்கொலோ. (௧௮)

என்மதிபாழ்படுத்திடருள்ளாக்கிய
புன்மதியவன்முகப்பொலிவுக்கஞ்சியே
தன்மதிமாழ்கியதனிமையோர்ந்திடா
நன்மதிவன்மதிநமக்கின்றாயின. (௧௯)

இன்னணம்பித்தரிற்புலம்பியேங்கிய
மன்னனும்வாவியைவளைந்துகாத்துறந்
தன்னெடும்படையொடுதங்கினானிருள்
பின்னிடைந்தலரியும்பிறக்கும்வேலைவாய். (௨௦)

வள்ளவாய்க்கிளிமொழிமடநல்லாடனைக்
கள்ளமாய்க்கவர்வுறக்கருதுபாவியை
யுள்ளமோர்ந்தேசுதல்போலுமுற்றதோர்
புள்ளெலாம்பொழிலிடைப்புலம்பியார்த்திட. (௨௧)

பூக்கிளரணங்கினைப்போன்றபூவையை
நீக்குவானிவனெனநினைந்துதம்நெடும்
வாக்கினால்வைவதுமானுமானிறக்
காக்கைகள்கலைந்தொலிகதறிற்றெங்குமே. (௨௨)

முண்டகமுகைவிரிந்தொளிரும்மொய்ம்புனற்
றெண்டிரைமூழ்கியதேவிதன்னையுங்
கண்டிடலுனக்கரிதென்றுகாவல
னண்டையிற்புகறல்போலளிகளார்த்திட. (௨௩)

கோல்வளைமடந்தையைக்குறிக்குமன்னரின்
பாலவளெய்தினும்பயன்படாளினி
மால்கொளாதேகுவையெனச்சொல்வாறுபோல்
வால்வளைதிரைப்புனல்வாய்விட்டார்ப்புற. (௨௪)

இருள்கிழித்தாழியொன்றேழுகொய்யுளைப்
பரிமணித்தேர்மிசைப்பருதிவானவன்
கருநிறக்கடன்முகட்டெழுந்துகைக்கொளா
விரிநெடுந்திசையெலாம்வெயிலைவீசினான். (௨௫)

தங்குலமன்னவன்றனதுபாரியைப்
பங்கஞ்செய்வதற்குறும்பதகனாவியை
யிங்குசுட்டிடுவதற்கேவுமாறுபோற்
செங்கதிர்ச்சுடர்வெயில்செறித்ததெங்குமே. (௨௬)

சூரியன்றோன்றியுந்தோயமூழ்கிய
காரிகைவெளிவரக்காண்கிலேமினிப்
பாரினாஞ்செயத்தகும்பான்மையென்னென
வீரன்மெய்மெலிதலுமமைச்சன்விள்ளுவான். (௨௭)

புனல்குழிப்பவர்களாற்புனலின்மூழ்கிய
வனிதையைத்துருவிநின்வயின்வழங்குவே
னெனவுரைத்தொற்றரையேவிவந்தவவ்
வினைபுரிமாக்களைவிளித்துச்சொல்லுவான். (௨௮)

கண்ணிமைப்பதன்முனங்கறங்குதெண்டிரை
நண்ணியவாவியுனாடிநாரமார்
பெண்ணினைக்கொணர்வதற்கழைத்தபெற்றியீ
தண்ணறன்பணியெனவமைச்சன்சாற்றலும். (௨௯)

பெருமதயானையின்வலிமைபெற்றுள
வோருபதினாயிரமாக்களொல்லையிற்
கருமுகிற்குலங்கடற்படிந்தகாட்சிபோற்
பொருபுனல்வாவியிற்புக்குநேடினார். (௩௦)

அன்னமுநாரையுமாழிப்புட்களுந்
தன்னிருப்பிடங்குலைந்தெழுந்துசாவியம்
மன்னனைத்திட்டுதல்போலவானெலாந்
துன்னியபுலம்பல்கொண்டிரங்கிச்சோரவே. (௫௧)

படவையும்வள்ளமும்பரப்பிப்பாதலந்
தொடுவலைநீண்டறத்தொடுத்துவீசிவெங்
கடகரிமானத்தண்கயத்துண்மூழ்கியே
தடவினர்சேடனுந்தவிப்புற்றேங்கவே. (௫௨)

சுற்றினார்நாற்புறந்துருவிக்கிழ்த்தளம்
பற்றினாராழமும்புகுந்துபார்த்திட
முற்றுருதாகியேமூச்சுளோய்ந்துயி
ரற்றனர்சிலர்கண்மேலாகினாரோ. (௫௩)

போனவர்போகத்தண்புனலின்மேலெழுந்
தானவர்கால்கரமயர்ந்துபேசவு
மானமாய்நரம்புதோல்வலிப்பக்குந்தியே
மோனமாகினர்தவமுனிவர்போலவே. (௫௪)

அண்ணலுக்கருமையாயலங்குநீருறை
பெண்ணினையீகுதமென்றபெற்றியா
ருண்ணிறைமகாக்களுண்டுவெந்திடக்
கண்ணினையீர்ந்தளங்கலங்கினானரோ. (௫௫)

வாற்பருவாளைமீன்மலக்குமாச்சுறாக்
காரக்கனான்மெய்புலைமாக்கள்கால்கையி
லாப்பிணித்திடநாகாழ்ந்தமுழ்கல்போற்
றாப்படுநீரினுட்டவிப்பற்றாரரோ. (௫௬)

இன்னணந்தேடுதற்கெய்தினார்களிற்
றன்னுயிர்மாண்டபேர்தவிரத்தப்பினோர்
மன்னவன்பாற்புகுந்தடிவணங்கியே
யுன்னருந்துயரினோடுரைவிளம்புவார். (௫௭)

வார்கடலாழமும்வானினீளமும்
பாருடையகலமும்பார்த்துமீளுவோ
மோரிமைப்பொழுதினிலோங்குநாண்மலர்
கீர்த்திலையறியவுநெஞ்சமாழ்கினோம். (௫௮)

உற்றவர்தங்களினுடலழிந்துயி
ரற்றவரனேகராலரசனின்றவப்
பெற்றியானுங்களும்பிழைத்துப்போந்தனம்
மற்றுவேறிலையெனவழுத்திப்போயினார். (௫௯)

புனல்குழிப்பவர்களுட்புகுந்துதேடியவ்
வனிதையிங்கிலையெனவழுத்தியேகலும்
மனநிலைதளர்ந்துவேன்மன்னன்பின்னொரு
வினையமுஞ்செயவறியாதுவிம்மியே. (சo)

வாங்கரும்வறுமையேவாழ்க்கையென்றுளங்
தாங்கினாரும்பொருடன்னைப்பெற்றுப்பி
னீங்கிடத்தலைமுறுநீர்மையாமென
வோங்குநெட்டுயிர்ப்பெறிந்துள்ளமாழ்கினன். (சக)

கண்ணிடைப்புக்கியென்னுயிரைக்கைக்கொடு
புண்ணுடைத்தலைமுறச்செய்துபோனதோர்
பெண்ணிவடன்னையெப்பிறப்பிற்காண்டுமென்
றண்ணலுஞ்சோர்ந்துநின்றழுதுவிம்மினன். (சஉ)

பெண்ணிவள்வடிவெனும்பெருமைகண்டவென்
கண்ணினுக்கென்னலங்காட்டுகிற்பினு
மென்னுமோவின்னுயிரிழப்பதின்றியே
மண்ணின்மேன்முகந்துசோறுண்டுவாழ்வனோ. (சஙு)

என்றுநின்றிடைந்திடைந்தேங்கியேங்கியே
தன்றிருவிழிகளிற்றுரைசாய்ப்புறத்
துன்றியபடைகளுந்தன்னிற்சோர்ந்துளங்
கன்றிடப்பின்னருங்கழறுவானரோ. (சச)

வேறு.

மைகலந்துவாளைதிர்ந்துமான்மருண்டவுண்கணு
ணெய்கலந்தகூந்தலாளின்னிலையினின்றுநானழப்
பொய்கலந்தமாயமேபுணர்த்துமாறுபாடதாய்க்
கைகலந்திடாதொளித்தகாலமென்னகாலமே. (சரு)

அஞ்சனந்திமிர்ந்துகாதடர்ந்துவேறொடர்ந்துநீ
நஞ்சமிஞ்சுபங்கயங்கண்நங்கைகொங்கைசெங்கையான்
மிஞ்சிடாதணைந்துமோகவெறிவிலங்சவமளிமேற்
கொஞ்சிவாய்குழைந்துதேனருந்துநாளென்னாள்கொலோ. (சசு)

முத்திழைத்துமணிகுயிற்றிமொய்த்தபொன்சளாற்புறப்
பத்திதைத்திலங்குசித்திரம்பதித்தமென்பனிக்
கொத்துமாமலர்க்குலங்குவித்தபஞ்சணைக்கண்மேற்
றத்தையொத்தமொழியினண்மெய்தழுவுநாளென்னாளரோ. (சஎ)

வட்டடர்ந்தடர்ந்தசக்ரவாளகோளவரையினோ
டெட்டியானையின்மருப்பிடந்தெழுந்துருத்துவா
ரிட்டுமார்பிடங்கவர்ந்திலங்குகும்பமுலைகள்கை
பட்டடங்கிடாதுளந்தருங்கொலென்னபயனரோ. (சஅ)

ஏலமார்தமாலதாலமின்குருந்தசண்பக
மாலமார்பொதும்பருடமைந்தவாவியின்கண்மின்
போலநின்றனாவியுண்டுபோனபூவைபொன்னிறக்
கோலமெந்நாளில்வந்துகூடநன்மைகூடுமோ. (சகூ)

வஞ்சமாகவந்துபோனவஞ்சிவஞ்சகத்தினாற்
றஞ்சமாகநம்புமென்றனைப்பிரிந்தெதன்னாவியுந்
துஞ்சலாணைநீயுமந்தமாதினோடுதுயர்செய்தா
னெஞ்சமேயிவ்வுலகில்யாவர்வந்துநன்மைநேருவார். (ருo)

கள்ளையுண்டுவண்டினங்கறங்கலங்கலோதியுங்
கிள்ளையுண்டமொழியும்வாள்கிளர்ந்தவேலின்விழியுநீள்
வள்ளையுண்டகுழையுமன்றிமறலியாலுமென்னுயிர்
கொள்ளைகொண்டிடப்படுங்கொலோவெனக்கொதித்தனன். (ருக)

கெண்டைகாணுமுரிமையிற்கெடாதிருந்தகிளிமொழி
வண்டுகொண்டநயனமின்மருங்குலாளைவாவியின்
றெண்டிரைக்கணீர்புகுந்துதேடியென்கணுறைசெய்தா
லண்டர்மானதத்தடத்தின்வாழ்வுமக்களிப்பனால். (ருஉ)

பாடுவண்டினக்கறங்குபங்கயங்களெங்கணுஞ்
சோடுகோடுபேடையைத்தொடர்ந்துவாழனங்களே
வாடிநானிடைந்துநொந்தரற்றுகின்றவாறெலா
மோடிநீரினுட்புகுந்துமாதிடத்தினுரைமினே. (ருங)

செய்யவாயுமுகமுநீலவொண்கணுஞ்சிறந்தபூண்
டொய்யில்கொங்கையுந்திரண்டதோளுமின்றுடிக்கிநே
ரையநுண்மருங்குலுமெனக்களித்தெனாவியாந்
தையலாளைநீயொழித்ததன்மையென்கொல்வாவியே. (ருச)

வேறு

விண்ணவாமுதோபாகோவிரிபசுமலர்ச்செந்தேனோ
கண்ணினுக்கிடம்பெறுதகாட்சியோகமலமேவும்
பெண்ணிவடானோநானும்பெண்ணெனக்கனவுகண்ட
வண்ணமோவெதையீகோர்ந்துமனத்துயர்தணிப்பனென்றே. (ருரு)

சுடுந்தழல்வெயிலிற்பட்டபுழுவெனத்துடித்துவேந்தன்
படும்பரிதாபங்கண்ணுற்பார்ப்பதற்கஞ்சியென்ன
கொடும்பழிவிளைத்தேனானென்றமைச்சனுங்குழைந்துமன்மே
னெடும்பனைமாம்போனின்றேநெஞ்சயர்ந்திதனைச்சொல்வான். (ருகூ)

ஐயநின்னறிவுமெய்யுமாவியுஞ்சூறையாடிச்
செய்யதாமரைநீர்வாவிசென்றுபுக்கொளித்துக்கொண்ட
தையலைக்கொணர்ந்துநாளையுனக்குநான்றருவேனென்னில்
வெய்யவென்போலுந்தீயருலகினில்வேறுமுண்டோ. (ருஎ)

உலகெலாம்புகழவுன்போலுலகபாலகராயுள்ள
தலைவரும்வியக்கவிந்தத்தையலைத்தாரமாக்கி
விலகுறுதிருந்துநீவிர்மேவிவாழ்திருவின்மிக்கு
நலனெலாங்காணுங்காலநாளையேநான்செய்வேனல். (ருஅ)

வருந்துருதாசேயின்றுமாநகர்க்கெழுகவென்றுன்
றிருந்தலர்ச்செகுக்கும்வேலான்செப்பியவமைச்சன்சொல்லாற்
பொருந்துயர்சிறிதுள்ளாறிப்போவதற்கியைந்தானேனுங்
கருந்தடங்கண்ணியாசையடிக்கடிகலக்கநைவான். (ருகூ)

அங்கசன்பகழியாலுமாழியினோர்ப்பினுலும்
திங்களின்கலையினுலுந்தென்றலின்செருக்கினுலும்
பங்கமுற்றுவியோயும்பதகனிங்குன்னைக்கொண்டே
யிங்கதுதீர்வேமென்னுமார்வமுற்றிருந்தேனின்னும். (சுo)

உன்னுரைபிழைக்கிலென்றனுயிர்சிலைபிழைக்குமென்னுந்
தன்மையிக்குனக்குநானென்சாற்றுவதென்றுசாற்றி
மன்னெடுந்தானைசூழமாநகர்வந்துபுக்கான்
பொன்சுடரிரவிமேலைப்பொருப்பிடைச்சென்றுபுக்க. (சுக)

புனல்குளியோடுபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-உo-க்குத்திருவிருத்தம்-அஅரு.

---

# விஜயதரன் கைக்கிளைப்படலம்.

வேதநான்கினுக்கும்பொருடெரியாதுமெலிந்துளவாபத்தன்றனக்குத்
தீதறத்தெரித்தற்கொருகுருவடிவாய்த்திருவுருக்கொண்டுநன்மதுரை
மீதமர்ந்திருந்தசோதிவானவனைவிளம்பியசராசரங்களுக்கோ
ராதிநாயகனைமாதுபாதியனையஞ்சலித்தருவினைகடப்பாம். (க)

வேறு.

கக்கும்வெவ்விடம்போற்சிறிக்காரிருள்கனிந்துநீடுந்
திக்கெலாம்புதையவோடிச்செருமினசெக்கர்வானம்
மைக்களிறுரிவைபோர்த்துவார்சடைவிரிந்துவாரா
முக்கணனொருகால்வைகுமுறைமைபோன்றிறுத்தவன்றே. (உ)

மேற்றிசைப்பருதிப்புத்தேண்மறைதலும்விரிந்தகங்கு
ஞற்றிசைமுழுதுந்துன்னிநண்ணினவானமெல்லாந்
தோற்றினவுடுக்களிந்தத்தோன்றலுக்கனங்கன்வேறே
யாற்றியபுதுப்பூவாளிபோன்முளியவிர்குலாய. (ந)

கங்குலினகாஞ்சார்ந்தகாவலன்படையைநீங்கி
நங்கையர்கவரியின்றிநளிர்மணிவிளக்கமின்றிச்
சங்குபேரிகைகொம்பின்றித்தனிநடந்தொருவனாக
மங்குறோய்கோயிற்புக்கான்மனையுளார்வருத்தமன்ன. (௪)

கவரியுங்குடையுங்பேசாலமுங்கயற்கண்மாதர்
பவுரியுநாதயாழும்பலாண்டுமற்றுளவுநீங்கி
யுவரியினொலியுமன்றிலோதையுங்குயிலினார்ப்பு
மவிர்மதிக்கலையுந்தென்றற்புலியுநின்றடர்ப்பநைந்தான். (௫)

உண்டிலனுறக்கமில்லனுடுக்கையும்படுக்கைதானுங்
கண்டிலனொருவரோடுங்கழறிலன்காமனம்பு
கொண்டபுண்செய்யநெஞ்சங்குழைந்தனன்மண்மேற்பூழி
மண்டிடக்கிடந்தான்மாதைமறந்திடாதுயிர்ப்புமாழ்கி. (௬)

நோக்கியபொருள்களெல்லாநண்டிரைவாவிபோலுந்
தாக்கணங்கனையாள்போலுந்தன்னெதிர்காட்டக்காட்டத்
தேக்குமெய்புளகங்கொள்வான்றிருமுகம்முறுவல்பூப்பான்
வாக்குபசாரஞ்சொல்வான்மறைந்திடமயக்கங்கொள்வான். (௭)

புத்திரர்சோபங்கூரமனையவள்புலம்பக்கேளீர்
தத்தமக்குள்ளேயெண்ணித்தளர்வுறமயங்கிமண்மேற்
பித்தரிற்கிடந்தவேந்தன்பெரிதுநாணடைந்துநாமு
மித்தலத்திருத்தறீதாமெனநினைந்தெழுந்துபோவான். (௮)

நீண்டொளிர்விளக்கங்கோடிநிரைவிளக்கனையாரேந்தக்
காண்டகுமயிலினார்வெண்கவரிகால்குழைப்பவாங்கு
வேண்டியதெல்லாம்விண்ணின்றருவெனமின்னார்நீட்ட
வாண்டுநின்றகன்றுவேறோரணிமணிமாடம்புக்கான். (௯)

பத்தியிற்பவளக்காற்போதிகைபளிங்கவிரும்பச்சை
யுத்திரங்கொடுங்கைநீலமுயர்துலாஞ்சுவர்செம்பொன்னாற்
சித்திரித்தாணிவீக்கிச்செய்தமண்டபத்தினூடு
நித்திலங்குயிற்றிப்பட்டுநிரைமலர்விதானந்தூக்கி. (௧௰)

வெள்ளியான்மணியாற்பொன்னால்விரிசினைவேர்தூராற்றிக்
கள்ளுலாமலருங்காயுங்கனிகளும்பிறவுஞ்சோதி
துள்ளியநீலம்பச்சைதுகிரினால்வகுத்துக்கோடி
யுள்ளினும்வெளியினுங்காலுலவுமுய்யானமாக்கி. (௧௧)

அஞ்செவிவனத்தின்றூவியணிவிரித்தனிச்சப்போது
பஞ்சணைநிரம்பக்கொட்டிப்பாப்பினார்படுக்கைசெய்தான்
செஞ்சிலையானுக்கந்தச்சேக்கையின்மலர்விற்காமன்
வெஞ்சரமென்னமேன்மேல்வேதனைவிளைத்தவன்றே, (௧௨)

அலர்செயுமுருவிலான்விற்பகழியென்றறியாதேனே
மலரெனக்கொணர்ந்துகொட்டிவாட்டியென்னுயிரைவாங்குங்
கலகமேபுரிந்தீர்தென்றற்காற்றெனவிடங்கால்பாம்பை
நிலமிசைக்கொணர்ந்துவிட்டீரின்னமென்னேருவீரோ. (கங)

செந்தழற்பிழம்பைவாங்கித்தேய்வைமென்பனிநீரென்னச்
சிந்தினீர்விடத்தையூட்டிப்பாலெனச்செப்புகின்றீர்
வந்தவெம்புலியையென்னுமதிப்பிலாதெனக்குவானத்
திந்துவென்றுரைத்தீர்கூற்றையிருளெனவியம்புகின்றீர். (கச)

மலிதிசைமயக்குங்கங்குன்மத்தமாவுகைத்துமார
னொலிகுயிற்காளமேங்கவுவரியின்முரசமார்ப்ப
வலிபடுகரும்புகோடிவளைத்துநாணேற்றிப்பூவின்
சிலிமுகந்தூற்றற்கென்னேநான்புரிதீமையென்றான். (கரு)

ஒன்றொழித்தலர்பூவாளியுளவெலாமுடன்றுவாங்கிக்
குன்றொழித்தெழுந்தபொற்றோண்மருமத்திற்குழிக்கவெய்தா
னன்றொழித்திட்டமாதையிலக்கங்கொண்டஞ்சாதென்மு
னின்றொழிக்காதகாமனின்னமுமென்செய்வானே. (கசு)

கரும்புநாணேற்றிவேனிற்காலனீளிரவிற்சூழ்ந்த
சுரும்பொலிமுல்லைநீலந்துய்யதாமரைசூதஞ்சோ
கரும்புகொண்டென்னைவெல்வானெண்ணியவனங்கனந்தக்
குரும்பைமென்முலையினாட்குமின்னலைக்கொடுப்பான்கொல்லோ. (கஎ)

வெவ்வியவீரர்க்காண்மைவீரமேவிளம்பிநேரே
யொவ்விநின்றடுபோராடலம்முறையொழுக்கமின்றி
யிவ்விருணயந்துகள்வராமெனவெதிர்தோன்றாது
செவ்வியென்னுயிரைமாய்க்குந்திருவிலீதிறமைநன்றால். (கஅ)

ஈசனைப்பகைத்துமேனுளரிவிழிக்கனலான்மாண்ட
மாசுடைத்துலகிற்றீராவசையடைந்துருவந்தேய்ந்து
தேசழிந்தருவமானதீய்மையைமறந்தாய்போலுங்
கூசிடாதெதிர்த்தவீரக்கோட்டியென்கொள்கைத்தம்மா. (கக)

மாங்குயிற்காளமீறமறிகடன்முரசமார்ப்ப
வாங்குவிற்கடைசால்கோட்டிமலர்ச்சரமாரிசிந்திப்
பூங்குழலாளைவெல்லும்போர்த்திறமின்றியேனோ
வீங்கெனோடெதிர்த்துநின்றாயென்மயலுன்னதன்றோ. (உ0)

கயல்விழிப்பவளச்செவ்வாய்க்கன்னியாமிரதிமீது
மயல்பெரிதுற்றநான்றுமதனகேளுனக்குமேலோர்
வயவலியனங்கன்சிறிவன்சமராடுவானேற்
புயவலிகாட்டிப்பூசற்கென்னெடும்பொருதுவாயோ. (உக)

வீரம்போயாண்மைகுன்றிவிழிக்கனன்மாண்டுதீர்ந்த
மாரநின்வலியிதாயின்மன்னனானுன்னைவெல்லப்
பாரமோவுலகமூன்றும்பரிக்குமென்னெஞ்சினென்னற்
சோரமாயொருத்திபுக்குநினக்குபகாரஞ்சூழ்ந்தாள். (உ௨)

பூங்கழைகுழைக்கும்வேனிலானொடுபுலம்பிநையுந்
தேங்கமழ்தாராற்கின்னலிருமடிசேரும்வண்ணம்
பாங்கினின்மலருங்காயும்பழங்களுந்தவன்றஞ்சோலை
மாங்குயிற்றொகுதிகூகூவெனவொலிவளங்கிற்றம்மா. (உ௩)

குயிலினங்கூவக்கூவக்கொதித்தளந்துடித்துவாடு
மயில்வலான்குயில்காணீவிரன்னையையடர்த்துமேனாண்
மயலினுக்காக்கிவிட்டவாறுகண்டன்றேவண்ட
மியல்கொடியினங்கண்மேவுங்குடம்பையினிட்டதன்றே. (உ௪)

காகத்தைத்தாயாயெண்ணிக்கைவிட்டன்னிறமேகாட்டு
மேகத்துக்கொதிங்கிமாதர்விளம்புசொற்குரலாணி
யாகத்துமகத்துமாறுக்கருப்படைந்ததனையெண்ணா
மோகத்தினெருப்புக்கூதுங்காலெனமுழங்குகின்றீர். (உ௫)

மாரனாற்குயிலானீங்காவசந்தமென்காலானொந்து
வீரம்போயரிகுடைந்தவிரிசினைப்புன்குபோலச்
சோரும்வாள்வீரற்கந்தத்துன்பிலெத்தனையோகோடி
நேருறநெருப்பிற்கார்துகிலாச்சுடர்நிரப்பிற்றம்மா. (உ௬)

வான்முடிவெடித்துக்கங்கைமாநதிவழிதல்போல
மேனிலத்தவிருமிந்துகாந்தமென்புனலும்வெள்ளைப்
பானிலாக்கதிருமெய்யிற்படுந்தொறும்பாராள்வேந்த
னானுயிர்கருகித்தீயின்மெழுகெனவுருகிச்சொல்வான். (உ௭)

நீள்ருள்யானைமாய்த்துநிணப்புலாற்குருதியுண்டு
மூள்கொடும்பசியாற்றாதமுனிவொடுமெழுந்ததிங்கட்
கோளரியின்றுமென்னைக்கொன்றுயிர்தின்னவோவிச்
சாளரந்தோறுங்கையாங்கதிர்களாற்றடவிச்சார்ந்த. (உ௮)

அமிழ்தொடுபிறந்துமீசனணிசடைவளர்ந்துஞ்சீத
முமிழ்திரைக்கங்கைமாதோடுறவுபெற்றுறைந்துமென்னே
விமிழ்குணமின்றிவாங்காதெரிதழற்சுவாலைவீசத்
தமிழினுக்குதவாலுத்தர்போன்றெனைச்சாடுகின்றாய். (உ௯)

தாரையாலுடலந்தேய்ந்துதளர்ந்தமைமறந்திங்கேனோ
மாரனொடுறவுசேர்ந்துவரிக்குயிற்கினிமைகாட்டி
யீரமில்லாதசெந்தீக்கலைவிரித்தெழுந்தாய்நின்போற்
பூரியரொருவரிந்தப்பூதலந்தன்னிலுண்டோ. (௩௦)

கான்புலிதனிலும்வெம்மைகாட்டிவெண்ணெருப்பாயுற்ற
வான்புலிக்கெதிரோமுன்னம்வாவியிலொளித்துக்கொண்டு
நான்புலியணைக்கவாராநண்ணுதன்மானைக்காட்டி
யூன்புலியருந்தச்செய்தலுழையருந்தருமமாமால். (ருக)

நீளிரவென்னும்பாந்தணெட்டெயிற்றுளையிலூறிக்
கோள்புரிந்துலகைக்கொல்லுங்கொடுந்தழல்விடத்தைவெள்ளை
வாளொளிபிறங்குமிந்துவளங்கும்வெண்கலையென்றேனே
சூள்வினையறியுஞ்சூட்சியறிஞருஞ்சொல்லுகின்றார். (ருஉ)

எரிமுனைப்பகழிப்புத்தேளிராகவனேவமேனள்
விரிதிரைவாண்டவாழிமீண்டுதன்னுள்ளம்வெள்கா
துருவிலிசெய்யுமாயவுறவினன்மூரசமாகி
யரசரைப்பகைத்தற்கென்னநியாயமீதம்மவம்ம. (ருரு)

வாலியாற்கடையமுன்னமறுகிப்பின்னனுமனீண்ட
காலினுற்கடக்கவஞ்சிக்கவிக்கொருதலைமையான
நீலனுற்றடுக்கநாணநீண்டுயர்பெருமைநீத்த
சால்கடலொலிக்கென்னுள்ளஞ்சலிப்புறுந்தகைமைத்தென்னே. (ருச)

கடலொலிகுயிலினேலங்கால்படுபரிசமேகந்
தொடுபனையன்றிலார்ப்புச்சுடர்மதிக்கிரணச்செந்தீ
யடல்செயத்தளர்ந்துவாடுமரசர்கோன்கண்முன்னாகக்
கொடியிடைமடந்தைபோலவுருவெளிக்கோலந்தோன்ற. (ருரு)

என்னுயிர்முழுதுக்கைக்கொண்டிரும்புனல்வாவியுற்ற
கன்னியிவ்விருளில்வெய்யகானெறிகடந்துகானெந்
தின்னிலந்தன்னில்வந்தவெளிமையென்றனிமைநோக்குந்
தன்மையாலன்றோகைமாறெதுசெயத்தகுவேனம்மா. (ருசு)

வருகவந்தென்னைச்சேர்ந்துமகிழ்ந்தினிதுவந்துமுத்தந்
தருகவென்றெழுந்துகட்டித்தழுவுவான்காணுதேங்கிப்
பொருகனலுலைவாயூதுந்துருத்திபோற்பொருமிமூச்சுப்
பெருகவாய்பிதற்றிநைவானென்செய்வான்பெருமைதேய்வான். (ருஎ)

ஓடுவான்மாடத்துள்ளும்வெளியினுமொன்றொன்றாக
நாடுவான்காணுதாகிநாவுலர்ந்தஞ்சிமெய்யும்
வாடுவான்றுயிலும்வாசமலரணையுதறிச்சும்மா
தேடுவானிருளினெல்லைதேறுவான்றெருமதீரான். (ருஅ)

இகல்புரிபவரொன்றாலுமுயிரினோடிருக்கிலோர்காற்
புகும்வழிதன்னிற்காணலாமெனும்பொருளாலன்றோ
சகவிலான்றனதுமன்னற்கிடர்செயுந்தன்மைகண்டும்
பகலவன்கருதாதந்தவிருள்வெளிப்படுத்திவந்தான். (ருகூ)

மாரன்பூங்குயில்காலன்றில்வாரிவெண்மதியமென்னுஞ்
சார்பெரும்பகைகள்யாவுந்தபனன்முன்னிமமேயாகித்
தீர்வுறவிருளும்பாரத்தியக்கமுஞ்சிறிதுமாறி
வீரனுமெழுந்துகாலைவிதிமறந்தவைக்கண்மேவி. (சு0)

(முற்றிற்று.) ஆகப்படலம்-உச-க்குத்திருவிருத்தம்-கூஉரு.

---

# வஞ்சவணப்படலம்

நந்தெரிகடனீர்சுவற்றிவிண்ணவர்கணாயகன்மணிமுடிவளையாற்
சிந்திமாமேருமுடியினைச்செண்டாற்சிதைத்துநம்செழியர்கோன்றனக்கிங்
கெந்தநாளினுஞ்சீர்வழங்கியகூடலிறைவனைமுறைமுறையிறைஞ்சி
யந்தகனாணைமுழுவதுநீங்கியழிவிலாச்செல்வமேலடைவாம். (க)

வேறு.

அங்கொருமணிசெய்பொன்னாசனத்திடையமர்ந்துவல்லை
யிங்குநம்மமைச்சர்தம்மிற்றுர்ச்சனனென்பான்றன்னை
நீங்கள்சென்றழைமினென்றானேர்நின்றதூதர்நால்வர்
பூங்கழல்வணங்கியோடிப்புகன்றனரவனும்புக்கான். (உ)

புக்கவனிறைவன்பாதப்போதுதன்றலையிற்சூடிப்
பக்கமுற்றஞ்சியென்கொல்பணியென்னையழைத்தற்கென்றான்
றிக்கெல்லாம்வென்றதிண்டோட்டேர்வலானிரவிற்பட்ட
சிக்கெல்லாம்புகன்றான்வாய்நீர்தீர்ந்திடக்கண்ணீர்சிந்த. (௩)

மாதினைமணர்ந்தும்பவளமுலைநலங்கடுய்க்கு
மேதுவொன்றிலையென்றாலுமினமொருதரமென்கண்ணாற்
றீதறநோக்குகில்லேனென்னிலென்னுயிர்தீர்ந்தின்றே
சாதன்மெய்யென்றான்கேட்டமந்திரிசகியானாகி. (௪)

அரசசின்கவலைநோய்திலகற்றுவனஞ்சலென்னா
வுரைசெய்துவெளிவந்தாங்குவள்ளுவற்கூவியொல்லைத்
தெரிவையைக்கொணர்ந்தார்க்கிந்தச்சிமையிற்பாதியோடுந்
தருகுதம்பிறவுமென்னச்சாற்றுதிர்முரசமென்றான் (௫)

மந்திரிபுகன்றவாறேவள்ளுவர்துள்ளியார்த்து
நந்துவெண்டிரைகொண்டெற்றுநளிர்கடன்முழக்கமென்னத்
தந்தியம்பிடரிற்செம்பொற்றடமணிமுரசமேற்றி
யந்தமாநகருநாடுமறைந்தனரிடைவிடாமல். (௬)

முரசொலிமுழக்கங்கேட்டமூரிமாநகரினுள்ள
வரசிளங்குமரரோடுமரிவையர்பிறர்மற்றேனோர்
விரைசெறிபுயத்தான்காமவெறியடைந்தனன்கொல்லோவென்
றுரைசெயவஞ்சித்தத்தமுண்ணினைந்திதனைச்சொல்வார். (௭)

ஒருவனான்முடிக்கவொண்ணாதொருபெருங்கருமமூரார்
விரைவினின்முடிப்பாரென்றுமவர்க்குமேற்பட்டுப்பாரிற்
பாவியதென்னினொப்பிற்பார்த்திபர்முடிப்பாரென்று
மாசறிந்தறியான்போலிவ்வுரைசெயற்கவாவென்கொல்லோ. (அ)

இப்பெருமூலகிலன்றியிதன்புறத்துலவாதற்ற
வெப்பெருமூலகிலேனுமிவளினைத்திடிற்கிட்டாமற்
றப்புதற்குளவோவெந்தப்பொருள்களுந்தகையோன்றின்றிக்
கைப்படுத்திடவல்லானிவ்வுரைசெயுங்கருத்தென்கொல்லோ. (கூ)

வேட்டைக்குப்போய்மீண்டுற்றவேந்தனுக்கென்னேவிந்தக்
கேட்டைத்தந்தள்ளவெல்லாங்கெடநினைந்தவர்களெந்த
நாட்டைக்கொண்டுய்யவல்லாரிதுவெலாநம்மான்மேனு
ணீட்டித்தவினையேயல்லாதிலையெனநிகழ்த்திநைவார். (க0)

வேந்தனென்செய்வானப்பாவினையெலாந்தனைநீங்காது
போந்ததுற்சனனென்றேதுமமைச்சன்செய்புலையாட்டென்பா
ராந்தினைப்பொழுதிலெல்லாமறியலாமென்றுநெஞ்சங்
காந்துவார்வாயில்வந்தபடியெலாங்கழறுகிற்பார். (கக)

வாவியைமூன்றுவைகல்காத்ததின்மறைந்துவைகுந்
தேவியைத்தேடற்கானதீரரெத்தனையோகோடி
யேவினுனிறந்தார்போகவெஞ்சினூர்மீண்டுமோளக்
கூவினான்முரசஞ்சாற்றியிதுநல்லகொடுமையென்பார். (கஉ)

மாதெனக்கனவுகண்டுமந்திரிவிழித்துச்சொன்ன
சூதறியாமலிந்தத்தோன்றலுமெய்யாய்நம்பி
வேதனையுழந்தான்காலவிதிவசநாமுஞ்சென்றிப்
போதெனசொலினுங்கேளானெனவுளம்புலம்பல்சொள்வார். (கங)

பத்தினியிருக்கமூன்றுபாரினுமேவல்கொள்ளும்
புத்திரரிருக்கவந்தோபூபனுக்கெவராலிந்த
மித்திரநடந்ததென்பார்வேந்தனுநாமுமெல்லாஞ்
சத்துருவாலேநாளைத்தவிக்குதல்சரதமாலோ. (கச)

வேறு.

இன்னணம்நகருளாரியம்புமேல்வையி
லந்நகர்குடபுலத்தமைந்துவைகுவாள்
மன்னவன்றீமையோர்வடிவுபோன்றுள
தன்மையாடழல்விடந்ததும்புநெஞ்சினள். (கரு)

வேதியர்தீக்குலமென்றமெய்ம்மையைப்
பூதலந்தன்னைக்கொண்டறியப்புக்குவெம்
பாதகிநிறப்பெனும்பரவைமூழ்கியெச்
சாதியரிலத்திலுமுண்டுசொருவாள். (கசு)

மங்கலமிழந்துதன்மானந்தீர்ந்துபின்
றங்குலம்புறஞ்சொலச்சமைந்தபொய்ம்மையாள்
வெங்கிடமாமறைவேதியர்க்கொரு
சங்கடமாமவடாயன்வெங்குவாம். (கஎ)

இலந்தனிற்றரித்திரஞ்செல்வமின்மையாற்
சலந்தருகதங்கொடுதாயுமோர்பக
லலந்தலைப்படமகன்றலையிலங்கையாற்
புலந்திடச்சட்டுவத்தடித்துப்போக்கினாள். (கஅ)

சிரந்தனிற்புடைத்துளநீயதாயைநீத்
தாந்தையுற்றவிர்மதியாவுகூவிளங்
காந்தைகொள்பவனுறைகாசிக்கேகினான்
வரந்தருமுனிவரின்வடிவமன்னியே. (க௯)

மகன்படர்வனத்திற்செல்லமற்றிவள்
சுகம்படாதன்னகர்முழுதுஞ்சோறுவேட்
டுகந்தவர்மனைதொறுமுண்டுவைகினாள்
முகந்தொறும்பறையொலிமுழக்கங்கேட்டனள். (உ௦)

கூனியிற்கொடியவள்பறையின்கூக்குரற்
றானறிந்தன்னுவாட்டத்தள்வைகிய
மானனையாளையும்வவ்விநல்கினாற்
கோனிவன்புவியினிற்பாதிகொள்ளலாம். (உக)

பசியினாலருவனம்புகுந்தபாலனைக்
கசிவினாலழைத்தவனுளங்களிப்புறச்
சசிநிகரொருத்தியைத்தாரமாக்கியே
சுசிமணிமகுடமுஞ்சூட்டிவாழலாம். (உஉ)

கண்ணினுக்கடங்கொணாக்காட்சியிங்கிருந்
தென்னுவதிவையலாதிலையென்றெண்ணியே
பெண்மையினலங்கெடுத்திருந்தபேதையு
மண்ணல்வாழாண்மனைவாயினண்மியே. (உ௩)

தூதுவர்சொற்கொடுதோன்றல்பாலினிற்
பாதகிபுகுந்தடிபணிந்துநிற்றலும்
வேதியர்குலக்கொழுந்தாயமென்கொடி
யேதிவண்வரவுநீயாரையென்றனன். (உ௪)

மன்னவாவிந்நகர்வாழுநாற்குலத்
தன்னிலந்தணர்குலத்தமியனான்விதந்
தென்னவோபுதுமையொன்றியம்பக்கேட்டன
னன்னதின்மெய்ம்மையையறியமேயினேன். (உ௫)

இரவலர்க்கொருதருவென்னவையே
புரவலநின்னுழைபுகறற்கென்னுளங்
காவுளதாயினுங்காதிற்கேட்டதிங்
குணைசெவிற்றீங்கடையாவென்றன்னினேன். (உ௬)

அரசநீவேட்டைவேட்டாடுங்காட்டினிற்
றிரைசெறிவாவியிற்றிருவையொப்பதோ
ரரிவையுளாளவடனையிங்காக்கினோர்க்
கிருநிலம்பாதியென்றெவர்க்குந்தோன்றவே. (உஎ)

முரசினமதகரிமுதுகின்மூரிநீர்த்
திரைசெறியொலியெனத்தெருக்களெங்கணு
முரைசெயமுழக்கினருண்மையாயினும்
மரசநின்னேர்புகுந்தறிதற்கெண்ணினேன். (உஅ)

மாதலவரசநீமனத்துளெண்ணியிங்
கேதொருபொருள்குறித்தேவினலுமிப்
போதினின்முடித்துமெய்காட்டப்போஞ்சநா
ளுதலாலுண்மையெற்கறைதல்வேண்டுமால். (உகூ)

என்றனண்முறுவலித்திறைவனின்மொழி
நன்றிதுபோலுமென்பாலினண்ணியே
யொன்றியநகருளாரொருவராயினுஞ்
சென்றவட்டருதுமென்றுரைதெரித்திலர். (௩0)

ஒருவரும்புரிவதற்குடன்படாதவிக்
கருமநான்செய்குவனென்றகட்டுரை
யருமைகண்டேதுனக்காற்றல்வல்லனென்
றருமமன்றிதுமுனோர்தவமென்றெண்ணினேன். (௩க)

ஓதுநின்மொழிகரிந்துளபைங்கூழினுக்
காதரத்தொடுபொழிமழையினைசைகூர்
காதினிற்கேட்டலுங்கவலைநீங்கினேன்
மாதினைக்கொணர்ந்தெனக்கீதல்வல்லையேல். (௩உ)

பூமியிற்பாதியும்பொன்மிகுந்துள
சேமமுந்தருகுவன்பிறவுஞ்செய்குவ
னுமிஃதுண்மையென்னுயுளின்வரை
சாமியென்றுன்னையென்றலையிற்கொள்வனால். (௩௩)

இதுமறேனெனவவட்கியைந்தபல்சிறப்
புதவிநீயவைபுரிவாயென்றேதலுங்
கதுமெனப்பணிந்தவன்விடையுங்கைக்கொடே
மதிவிநயத்துடன்மனையினண்ணினள். (௩ச)

நண்ணியவிதந்துபெண்ணனுகுஞ்சூட்சியொன்
றெண்ணினள்வல்விடமெவையுங்கூட்டினள்
பண்ணினண்மருந்தைப்பார்த்துக்கூற்றுவன்
தண்ணியவுயிர்நிலைகலங்கினனரோ. (௩௫)

மருந்தினைச்செப்பினில்வாங்கித்தானையிர்
கரந்துதன்னிடையினிற்கட்டிப்பின்னவ
ளருந்துதற்குணவுகையமைத்துவல்லைபோய்த்
தார்தான்சொல்லியவாவிதுன்னினள். (௩௬)

காவலன்சொல்லடையாளங்காட்டிய
வாவியுமையமண்டபமும்வாய்ந்தமென்
பூவிரிபொதும்பரும்புக்குநோக்கினள்
தேவருமருள்கொளச்செய்யுஞ்செய்கையாள். (௩௭)

துங்கவன்நமக்கடையாளஞ்சொல்லிய
பங்கயத்தடமிதிற்பவளவாய்க்கனி
தங்கியுள்ளிருந்ததைத்தவிரவேறினி
யெங்கணுமில்லையெனமனத்திலெண்ணியே. (௩௮)

மற்றொருபுறத்தினில்வைகியாங்கவள்
பெற்றதோர்தநயனன்றிறந்தபெற்றிபோன்
முற்றிலுமுறைமுறைமொழிந்துகூவென
வற்றிருந்தாற்றவுமொருப்பட்டாளரோ. (௩௯)

வேறு.

பச்சைக்கிளியேகற்பகமேபாலின்சுவையேபசுந்தேனே
யிச்சைக்கமைந்தவடிவழகேயிறையேகருணைக்கிருப்பிடமே
யச்சிற்கடைந்தவிரத்தினமேயரும்பொனணியேயன்பேயென்
கச்சம்பெறமுன்னுயிர்விடுத்தாயெனக்காருலகிற்கடன்கழிப்பார். (௪௰)

கட்டிக்கனியேசருக்கரையேகரும்பேகல்விக்களஞ்சியமே
மட்டுவிரியாமுகிழரும்பேமானேபசியமரகதமே
கட்டுக்கடங்காமதகளிறேகனந்தீர்ந்துலகிற்கடையழிய
விட்டுப்பிரிந்துநீயொளித்தவிதமென்விதமென்னறியேனே. (௪௧)

மைந்தாவயதுபதினாறில்வதுவையாற்றியுனைக்கொண்டே
சிந்தாகுலந்தீர்ந்திடநினைத்ததீயேன்மனச்சிந்தனைசிந்த
வந்தோவந்தோபுவியிலுயிரனைத்துமிருக்கச்சினத்தடர்ந்து
வந்தான்பாவிநமனுனக்கேயெனில்யானுயிரும்வாழ்வேனே. (௪௨)

மன்றல்புரிந்தகணவனுயிர்மடிந்ததுயரான்மனந்தளர்ந்து
பொன்றநினைந்தேனுனைநினைந்துபுவியிலிதுநாள்புகலாக்கி
யென்றுமிருக்கக்கருதியதற்கிடர்தீரவெவ்விருள்விடுத்துச்
சென்றுபரலோகம்புகுந்தசிறுவாகருணைத்திறமிதுவோ. (௪௩)

மண்ணிற்குமாருடன்கலந்துவரையுந்தரையுமாநதியும்
நண்ணிவிளையாட்டயர்ந்துநிதநடக்குந்தொழிலுநவையெனவே
விண்ணிற்புகுந்ததேவர்களுமரம்பைமாருனைவியப்ப
வெண்ணற்குரியதருநிழற்கீழ்விளையாட்டியற்றவெய்தினையோ. (௪௪)

மைந்தவுனக்குநான்புரிந்தவஞ்சவினையைநெஞ்சிலெண்ணித்
தந்தைக்குரைக்கக்கருதியவோதனிசென்றனைநீதந்தையையு
மந்தவுலகிற்கண்டுதொழுதுரைக்கவவனூரின்மீது
சிந்தைமகிழ்ந்துபரிவியற்றத்திராவுவகைசிறந்தனையோ. (௪௫)

அல்லாரிருளும்பகலுமுடலழிந்துமெலிந்துவிழிபுகைந்து
கல்லோமரமோசெடியோமுட்காடோமேடோகனவரையோ
வெல்லாந்துருவிநினைக்காணுதிடராலழுங்கியீடழிந்தேன்
வல்லோர்பழிக்கும்பழிக்குணின்றுவன்மியுயிர்தான்வாழ்வேனோ. (௪௬)

காடுமேடுஞ்செடியுமலைக்கல்லும்புல்லுங்கலையினமும்
பேடுங்குயிலுங்கிளியுமயிற்பெடையும்பிடியுங்கடகரியு
நீடுந்துணையாய்ச்சூழ்ந்தாற்றரைகண்புனலாறலையெறிய
வாடியரற்றுமெனைத்தேற்றமகனேயிவணீவருவாயோ. (௪௭)

மானேகுயிலேமயிலினமேவண்டின்குலமேவனக்குழுவே
கானேவனதேவதைகாளாய்க்கதறியழுதபெருங்குரல்கேட்
டேனோவெழுந்துபரந்துமகனிருக்குமிடந்தேர்ந்தெளியேற்குத்
தானேபகராதுரைந்தீர்களிறப்பும்பிறப்புந்தவிர்ந்தீரோ. (௪௮)

வஞ்சக்களவுகொலையகற்றிமண்ணிலெவர்க்குமுபகார
நெஞ்சிற்குறித்துப்பலதருமநிரப்பிமறையினெறிநின்றே
மஞ்சனினைநான்பெறக்கிடைத்ததவம்போய்மீண்டும்வல்வினையே
மிஞ்சித்துயர்தந்திடக்கிடந்திங்குழைத்தேற்கினியென்வினைநலமே. ()

என்றென்றேங்கிக்குழைந்துகுழைந்திரவும்பகலுமோயாம
னின்றுங்கிடந்துமிருந்துமிந்தநீலிபொய்மைத்துயர்காட்டி
யன்றுபுலம்பிப்பெருங்குரலிட்டழுதவமலைவனமலைப்ப
வொன்றும்ருகம்பறவைமுதல்யாவுமுருகியுழைந்தனவால். (௫௰)

புல்லும்வருந்தப்பொழில்வருந்தப்புனலும்வருந்தப்புறங்கிடந்த
கல்லும்வருந்தப்புலர்ந்தமரக்கானும்வருந்தக்கடைநாளிற்
கொல்லுநமனும்வருந்தமனக்கொடியாள்கொடுமைத்துயர்பெருக்கி
யல்லும்பகலுந்தனதுமனம்வருந்தாதழுதாளரசழிப்பாள். (௫௧)

வேறு.

தவ்வைக்கிணைதானலதில்லையெனுந்தகைத்தாள்
கௌவைக்கடல்போன்றழுதேங்குமக்காலையந்தச்
செவ்வைப்புனலுட்புகுந்தன்புசிறந்திருந்த
கொவ்வைக்கனிவாயினளோடிறைகூறுகிறான். (௫௨)

இரவும்பகலும்வெளியேறுதலின்றிநாமும்
விரவும்பொழுதாற்றினதாலுளம்வேடைமிக்குப்
பரவுந்துயர்தந்ததுபங்கயவாவியின்கட்
பொருவும்மணிமண்டபம்புக்குதற்போதுமென்றான். (௫௩)

அந்நாளுரைசெய்தலுந்தூயிளவன்னமன்னாள்
மன்னானதின்மொழியானுமறுக்கவல்லேன்
முன்னாளமர்நம்மொடுமூண்டுமுனிந்துவந்த
வொன்னாரவர்போலெவரேனுமங்குற்றுநேர்வார். (ருச)

அல்லாதபோதுமறிதற்கரிதாகியநம்மிருப்பை
யெல்லாருமுணர்ந்துறுவாதனாலுயிர்க்கீறுசேரு
மல்லார்திணிதோட்புயமன்னவவென்னமாது
சொல்லார்பொருளுள்கியதோன்றலுமீதுசொல்வான். (ருரு)

புறஞ்செல்வதினாற்றுயர்போந்துறுமென்றுநாடிக்
குறஞ்செய்துளமின்னநரும்படிகூறுநங்காய்
மறஞ்செய்வலியன்னவரில்லின்மறைந்துறைந்தா
னிறஞ்செய்துலகோரெவர்சொற்பணிநேர்ந்துதாழ்வார். (ருசு)

கண்ணில்லவரல்லதுகாண்முடமானமாக்க
ளொண்ணுமதியற்றவராதியராயவெல்லா
நண்ணும்புகழுன்னுபுமற்றவைநன்றுநீக்கி
பெண்ணின்றமுள்குவவோபெறும்பேருகொள்வோர். (ருஎ)

விதியால்வருவெவ்வினையாவர்விலக்கவல்ல
மதியாருளரென்பதுமவ்விதியன்றிவாயா
தெதுவுமெனவென்பதுநீயுணராததில்லை
மதிசுந்தரமாகியமாதரிலன்னமன்னாய். (ருஅ)

என்றேசொல்யாதுபினேதுசொலவல்லளாவ
னன்றேவழிகூடநடந்தவர்காரநீங்கிக்
குன்றேயிஃதென்றுயர்கொண்டுடன்மிடைந்துலாவும்
பொன்னூர்புரண்மண்டபமூடுபுகுந்துவைகா. (ருகூ)

வேறு.

வண்டொலிவனையினூர்ப்புவரால்வெடிப்புகழும்வாளை
கெண்டைபாய்தழனியன்னங்கெழுமொலிபுட்களோலம்
மண்டிடத்தென்றலந்தண்மதுமலர்வாரித்தூற்றக்
கண்டுகண்ணுவந்துநெஞ்சங்களிப்புறவிருந்தார்மன்னே. (சுப)

நோக்கினளிதற்குமுன்னாளேற்றயாதவத்தாலுற்ற
பாக்கியப்பொருள்போன்றிக்குப்பார்த்தனரினிவீண்காலம்
போக்கினனினைத்துவந்தபொருள்பயன்படாதென்றெண்ணி
மூர்க்கையுமழுதாண்முன்னின்மூய்மடியேங்கியேங்கி. (சுக)

மார்பினில்வலித்திலெந்தியணிக்காம்விரல்கள்சோர்ந்
சோர்நீள்விழியிற்கண்ணீர்சொரிதாத்துகிலேமுண்மார்
வேர்கொடிசெடிகிழிக்கமெய்யெலாம்வெயர்நீரோடப்
பேரினிற்பாய்ந்தமுட்டியார்த்தினன்பதியம்மா. (சுஉ)

அழுதபேரமலையண்டமலைத்திடவரசன்கேட்டுத்
தழுதழுத்தாவிசோரத்தநயனின்றிறந்தவாபோற்
பழுதுபட்டெவளோவிந்தப்பார்வனந்தனிலேகின்றிங்
கிழுதுவெங்கனற்பட்டாற்போலேங்கினாளென்னோபாவம். (௬௩)

புலியின்வாயகப்பட்டாவிபோம்பொழுதுள்ளமாழ்கி
மெலியுமான்கதறினாற்போற்கதறினாள்விரகின்சூட்சி
வல்தினிற்றேறியிங்குவருவனென்றுரைத்தான்மாது
நலிவுகொண்டையோவிந்தவினைக்கெதுநவில்வேனென்னா. (௬௪)

பதைபதைத்துள்ளநோவப்பனிமதிவதனஞ்சாம்பி
யெதையெடுத்துரைத்தபோதுங்கேட்குமாறிவற்கோயில்லை
விதிவலிவந்தாற்றத்தமதியினால்விலக்கவாழ்த
னதியணிபவற்குமின்றேனுங்கடந்துய்யப்போமோ. (௬௫)

என்றுதன்னுளத்தோடுன்னிமாதுபின்னிறைவற்போற்றி
நின்றுரைசெய்வாளந்தோநிமலன்மாலவர்போல்வாய்ந்த
வென்றியும்விநயப்பாடும்வினையறிதொழிலுமற்றுந்
துன்றினாய்காலமூன்றுந்துருவிமேற்சூட்சிதேர்வாய். (௬௬)

அரசநின்னுரைக்குச்சற்றுமறிவிலிவேறுகொண்டிங்
குரைசெயற்குளவோநாயேனுணர்ந்துளவொன்றுகோடி
அரவினாலுறுவகேடுற்றுன்னருட்டுணையகலாநின்றேன்
பிரிவெனிற்பேதுற்றுள்ளம்வருந்தினபிரிதென்சொல்வேன். (௬௭)

ஏவளோவெனமோபேய்போலிருந்தழுதுற்றுளந்தப்
பாவையைவினாவலாலென்பயனபடுமதுவலாமற்
காவல்நெறிக்கண்போவார்க்கேற்றனகருமங்கோடி
மேவுறுமதைநாம்பற்றிக்கேட்பதால்விழுமமென்றே. (௬௮)

தொழுகுலத்தவனுணில்லாளென்பதுந்துயரமெல்லா
மிழுதையென்பதுமெய்யாமென்றியம்புதல்போலுமந்நாண்
மொழிபுகன்றபற்றுமோசைசெவிப்புலன்மூழ்கல்கேட்டும்
வழுவிலாதுயர்ந்தமன்னவருந்துதல்வம்பேயென்றாள். (௬௯)

பின்னுயிர்பிரிதொன்றுண்டென்றெண்ணுறும்பீடுசாராக்
கன்னிகைகவன்றுசொற்றக்கருமங்களறிவிற்றேரா
மன்னவன்முழுதுமந்தமறையவளாற்றுமோதை
தன்னுளமகலானின்றங்கிதுரைசமைப்பதானான் (௭௰)

மக்கள்புன்மிருகம்புள்ளூர்வனமுதற்சீவகோடி
சிக்குதுன்புழலாவாநின்றுற்றுறுஞ்செயலுஞ்சீருஞ்
சக்கரநடாத்துசெங்கோற்றராதலவேந்தர்க்கென்று
முக்கணனுமைக்குமேனாண்மொழிந்தநான்முறைமையன்றே. (௭௧)

காந்தழல்விழ்ந்துள்ளாவிகலங்குகார்க்கோடனென்னும்
பாந்தளுக்கபயமீந்தாங்கெடுத்தபார்த்திபன்கைநோவச்
சாந்தவல்விடத்தாற்சித்தஞ்சலித்ததோதன்னைக்கொல்லப்
போந்ததோர்வேடற்காவிபுரக்கநற்புக்கிற்றன்றே. (௭௨)

நாமத்தைக்கவர்ந்துசென்றதசமுகன்றம்பியென்றே
வீரவில்லிராமனோர்ந்தும்விலக்குமற்றவர்சொற்கேளாப்
பாரினிலபயங்காத்தபண்புநீயறியாய்போலும்
கோனின்றடுத்துவார்த்தைநிகழ்த்துதனீர்மைத்தாமோ. (௭௩)

வனந்தனிலொருவரின்றிமகனிறந்தனனென்றேங்கித்
தனந்தனியழுதுசோர்ந்தாடன்னைநான்புகுந்துகேட்டு
மனந்திருந்துவதல்லாமன்மற்றுநீவாளாவின்னே
யினம்படச்சொலினுங்கேளேனென்றெழுந்தேகலுற்றான். (௭௪)

முன்னமேமுடுகிக்கோடமர்பொரமுனிந்துவந்த
வொன்னலாருளுற்றுங்குட்சிவினயமென்றுணர்ந்தேனீது
பின்னைநாடெரியும்போய்வாவென்றனள்பேதைதான்மற்
றென்னதான்செய்வாள்கேளாதேகினனிருந்தாளிப்பால். (௭௫)

தன்பெருபிடியைநீங்கித்தனிவருகளிறுபோன்ற
மன்னவன்வரவுகண்டவஞ்சகியிவனையந்தக்
கன்னியின்றலைவனென்னுக்கருத்தினுணினைந்தாளாகி
மன்னுதன்னுயிரைப்போக்குமாறுபோன்மாயஞ்செய்வாள். (௭௬)

தானையினுனியைவாவிற்றடிப்புறச்சுற்றிக்கையா
லூனுயிர்விலக்குவேனென்றுருத்தெழுவாளைநோக்கி
யேனமாவினையாகாதுவென்னபாவம்பாவங்
கூனிடையுடலைமாய்க்கக்கருதினுய்கன்னில்லென்றே. (௭௭)

அடுத்தனனுத்தொட்டீர்த்தவவள்கையைத்தன்கையாலே
தடுத்தனன்றுயினல்லோயென்கொனீதமியளாகத்
தொடுத்துழுதுயரினேருமுயிரினைத்துறக்குமார்க்க
மெடுத்தனைபாவம்பாவமீதயருத்தொழிகவென்றான். (௭௮)

அந்தணர்பாவைபோலுந்தோற்றினதம்மாநீயு
மெந்தவூரெதுபேரிங்குதனிமையாயிருப்புவிட்டு
வந்துசோர்ந்தாற்றிக்கண்ணீர்வழியமன்னுயிர்நீத்தற்குத்
தொந்தமையென்கொலுள்ளவாறினைச்சொல்லுமென்றான். (௭௯)

கேட்டனளடங்காதுள்ளக்கிலேசமோடபலங்காட்டி
நாட்டநீர்சொரியநாவும்புலர்ந்திடநெங்கிமெய்யுஞ்
சோட்டமுற்றயர்ந்துமண்மேற்குப்புறக்கிடந்துமூச்சு
விட்டிடவேதேம்பித்தேம்பிசெழ்த்துவாள்நீலியந்தோ. (௮௦)

தம்பிநீயாரேயென்னைத்தடுத்துயிர்மாளாவண்ணம்
வம்புசெய்தூர்பேர்கேட்கவந்தனை மைந்தன்றன்னை
வெம்புதீக்கூற்றமுண்ணவிருந்துசெய்திட்டுவேறோர்
தம்பமொன்றற்றபாவியுனக்கெதுசாற்றலாவேன். (௨௧)

விடுவிடுதம்பிநானென்னுயிரினைவிடுவேனென்று
படபடத்துரைத்துச்சோரும்பார்ப்பனிமுகத்தைநோக்கிக்
கடகரியனையானென்னகருமநீயுரைத்தாய்மாண்டோ
ருடனிறந்தவர்களெந்தவுலகினுமுண்டோசொல்லாய். (௮௨)

மைந்தனுக்கனலின்மூழ்கவஞ்சினமுரைத்துநின்ற
சுந்தரவில்லிக்கன்னாட்டுயமாமுனிவனாகி
யிந்திரன்றடுக்கச்சாந்தமெய்தினானிதுவல்லாமல்
வந்ததூதுவனாற்சீதைமன்னுயிர்தரித்தாளன்றோ. (௮௩)

என்னுரையெள்ளாதுள்ளவாறெடுத்தியம்பல்செய்வா
யன்னைநின்புதல்வன்மாண்டானாயினுநானேபிள்ளை
தன்னையொத்துனக்குவேண்டுந்தனமனமாடையாய
பின்னையெத்தனையென்றாலும்பிரியமுற்றளிப்பேனம்மா. (௮௪)

உண்மையீதென்றுசொன்னவள்ளறனுரையைக்கேளாப்
பெண்மையின்பெருமைநீத்துப்பிழையுறுகைமையென்னுந்
திண்மையாணினைத்துவந்தகாரியஞ்சித்தியாக
வண்மையிலரன்செய்தானென்றகமகிழ்ந்தடக்கங்கொண்டே. (௮௫)

வேதியர்குலத்துக்கெல்லாமேன்படவாழ்ந்தோனென்ற
றாதனன்மறையுமற்றைக்கலைகளுநவிலுநாவான்
றீதுரையாதோன்றீயநோயினாலிறந்துதீர்ந்தான்
சோதுளனெனினும்பின்னோர்குழந்தையைத்துணையாய்க்கொண்டு. ()

வாழுநாளகவையைமூன்றாகிப்பின்வருடந்தன்னி
லாழியின்மாதுக்கொப்போரணங்கினைவதுவையாற்றுஞ்
சூழ்வினைபலவுந்தேடிநிரப்பிடத்துணியுமெல்லை
யேழையேனிழைத்தபாவத்தாலுயிரிழந்தானந்தோ. (௮௭)

கணவனையிழந்துபெற்றகாளையையிழந்துதேடும்
பணமுதற்பிறவுந்தோற்றபாவிநானினிமேற்பாரிற்
பிணமெனவாழும்வாழ்விலாருயிர்பிரிந்துமாழ்தல்
குணமெனத்துணிந்தேன்செய்யாதகல்வனோகுறைமீக்கொண்டே. ()

மறையவர்குலத்துவந்தமங்கலமிழந்துபாரிற்
குறையெலாநிறையாநின்றகொள்கையினைப்பாவி
சிறையறுபுட்போனின்றுதேம்பினேனையாநீசொன்
முறையினையகங்கொண்டுய்தலெனக்குறுமுறைமைத்தாமோ. (௮௧)

ஆதலாலிறப்பேனியுமகலுவாயிதனையன்றி
யேதுரைசொற்றபோதுமென்மனமிசையாவென்னப்
பாதகிசூதுகொண்டுபகர்ந்ததோர்மாற்றந்தோரா
வேதனையுழந்தான்காலவலியினாலுளம்விம்முற்றே. (௬0)

இரக்கமுற்றம்மாநீயுமிறப்பதையிருந்துகாணற்
காக்கனேவலதுவேறோவுணனேவ்வனிமுற்றும்
புரக்குநானிதகாவாமற்போதலும்புகழோவென்று
வாக்கணீர்பெருக்குவானுக்கிவையிவைமறுத்துஞ்சொல்வான். (௬௧)

தாயுநீயெனக்குப்பெற்றதநயனுனக்குச்சொன்ன
வாயுரைதப்பேன்காப்பேன்வருகவென்றுரைத்தான்கேட்டா
ளேயெனவிருந்தசாலவனையினைநோக்கிப்பின்னுந்
தீயெனவருத்தஞ்செய்யுங்கொடுந்தொழிற்செய்கையன்னாள். (௬௨)

மன்னவன்குணமும்பேச்சுமற்றுந்தன்னிடத்தில்வைத்த
தன்மையுமுணர்ந்தாள்வந்தகாரியஞ்சமைந்ததென்று
புன்மையேபொருளாய்க்கொண்டபுலனிலியுளம்பூரித்து
வன்மைசற்றகற்றியின்பமருவல்கொண்டிதனைச்சொல்வாள். (௬௩)

நினையொருபொருட்கொண்டென்பால்வருவதற்குடனேர்ந்தாலும்
மனைவிபெற்றவர்மற்றேனோர்மாபுளோரென்மீதன்பு
புனைவரோகுலத்தாலொத்தபுகல்வரோபொருந்தாதையா
வினையினேன்வினைக்குநீயம்வருந்துதல்வியர்த்தமன்றே. (௬௪)

திங்களினிலவுங்காற்றுஞ்சேண்முகின்மழையுஞ்சந்தி
தங்குறுதருக்கனுள்ளகனிகளுந்தாணியாள்வோர்
துங்கவான்பொருளுமீசன்னிலையமுஞ்சொலுங்காலென்றும்
பங்குளவுயிர்கட்கெல்லாமென்பதோர்பான்மைகண்டாய். (௬௫)

அன்னைநீபுகன்றகூட்டத்தவர்களின்மனையாளின்றிப்
பின்னொருவருமிங்கில்லையவனுநின்பிரியம்போலச்
சொன்னதுகேட்பதல்லான்மறுத்துரைசொல்லானல்லா
னின்னுளம்வாளாவிக்குவேவுதனிக்குமென்றான். (௬௬)

வந்ததுபலித்ததென்றுமறையவன்மனதுபூரித்
சந்தரத்தமிழ்துண்டாரபோலவசனேடெழுந்துகூடி
யிக்குதிர்ந்தலர்சாண்டற்கிருந்தநீர்வனசமானுஞ்
செந்திருவனையாள்வைகும்வாயிலைபாங்கர்செல்வார். (௬௭)

வேறு.

தந்தாவளமனையான்முனமேசத்தனேர்களம்
பிந்தாதகைகொடுசெய்வினையவர்போலிவள்பிரியா
நந்தாதுமெய்நண்பாகிடைத்தேசலமாக
வந்தார்மதுசொரிதாமரைநிரைவாவியின்மருகே. (௬௮)

வருமிக்கொடியவள்வஞ்சகரிகவல்லவளெனவாய்
வெருவிக்குருகனநாரை குணலங்குழுமெலிவோ
டுருகிச்சிறையடிகொண்டுமெய்யுதறிப்புறமோடப்
பொருமிக்கதறுதல்போலலைபுரள்வாவிபுகுந்தே. (கூக)

உருவம்பரவியசீரழகொழுகுஞ்சுவையமிழ்தின்
திருவைந்தருநிறையிந்திரைசெயன்முந்தரமகளிர்
பொருவுந்தரமிகுசுந்தரபுனிதஞ்செறியிளமைப்
பருவம்பெருகியமங்கையினெதிரெய்தினர்பண்பாய். (கoo)

புச்சம்பணிதீபேய்வினைபொருவும்பொருளிவளென்
றச்சந்தருபெருமேனியிளுளங்குவரக்கண்
டெச்சங்கொடுமனநொந்தலம்வந்தேயிருநீர்வாய்
மச்சம்புரள்வதுநேர்விழிமடவாளிதுமொழிவாள். (கoக)

கவளக்களிறேயென்னுரைகருதாதுபுறம்போ
யிவளைக்கொடுவந்தாயிவளெவளென்பதுணர்ந்தா
யவளைக்கொடுவினவற்கெவரயனின்றுளதறைவார்
தவளக்கலைமதிவேணியனருளெவ்வினைதருமோ. (கoஉ)

கற்றாய்கலைமுழுதுங்கரைகண்டாய்பலவினையு
நற்றாயெனவுனையேபுவிமுழுதுந்துணைநணுக
வுற்றாயஃதுணராதுளமோடுநெறியோடப்
பெற்றாயெனிலினிமற்றுநின்னுரைமாறுதல்பெறுமோ. (கoங)

சுடுசெந்தழல்விடநீடியதொடர்நாணிலிசகரர்
தொடுதண்கடலினும்வஞ்சகவினைமிஞ்சியதொழிலா
ளடுவெங்கரியுடையாயுயிர்நமனூர்பதியணவப்
படுவெங்கொலைபுரிவாள்வருபாவம்பழிபாராள். (கoச)

இதுநாள்வரையெவருநமதிருவேமொருதனியே
மதிபோகியபடியேவதிமனையின்புலனறியா
ரெதுகாலமோதெரிஙன்றிலமின்றல்லதுநாளை
யதிகாலையில்வெளியாவதோர்மொழிமாமுரசறைவாள். (கoரு)

கொஞ்சுங்கிளிவரிகோகிலமனையாளிவைகூறி
மிஞ்சும்பழிவினைவந்ததுவிதியின்வணமெனவே
நெஞ்சம்புலர்வதுகண்டிறைநினைவுந்தடுமாறிப்
புஞ்சம்பொருமதியின்றெளிவுற்றேயிதுபுகல்வான். (கoகூ)

என்சொல்லியபொழுதும்மினதுளமுந்தெளிவிலதாய்
வன்சொல்லியென்மனதுங்கெடுவகைசொல்லுதன்மாறு
மின்சொல்லியவிடையாயிவள்விதியின்வினையுலகோர்
முன்சொல்லியுருடியாவகைபின்சொல்லுதன்முறையோ. (கoஎ)

வேறு.

வேதியர்தமக்குளாக்கமிக்குமேதினிக்குள்வாழ்ந்த
மாதிவன்கணவன்மாண்டுமைந்தனுமடியப்பின்னொ
ராதரவில்லாதேழையாகினாளலமந்துள்ளம்
வேதனைவிலங்காடன்னுளாருயிர்விலங்கநின்றாள். (க0அ)

சாதியிற்கொடியற்கேனுந்தாழ்வுவந்துற்றானீக்கிப்
பாதுகாப்புறுதல்வேந்தர்பண்பிவள்பார்மேற்றீரா
தேதுகோட்படினுமாற்றிநன்னெறிக்கேதுவாக்கும்
வேதியர்மடந்தைசாதல்கண்டோன்விலங்கற்பாற்றோ. (க0க)

உள்ளவர்சிறக்கவில்லாதவர்களுழலுறெய்தி
வள்ளல்கண்டிரங்குசெந்திவளர்த்தியகரத்தார்க்கீந்து
தெள்ளிமைபெறுவரென்றாலிங்கிவடியக்கநோக்கித்
தள்ளிநான்வருதற்கெந்தவழிநிலைசாருமாலோ. (கக0)

ஆதரவில்லாதேழையாகினாளிவளாலென்ன
பாதகம்வரும்வந்தாலும்பாரினிலதுவுமெற்கு
மேதகுபுகழேயன்றிவெம்பழிவிளைக்காவென்றான்
மாதுபின்கணவன்வார்த்தைக்கேதுரைமறுத்துச்சொல்வாள். (ககக)

செல்வமற்றணைந்தான்மாண்டுசிறுவனுமிறந்தானென்று
சொல்வதுமுழுதும்பொய்யேதுன்னலரிவட்கொண்டென்னைப்
புல்வதற்கானமாயம்புணர்த்துவிட்டனரென்றோரா
நல்வழியென்னச்சற்றுநபக்குதனன்மைத்தாமோ. (ககஉ)

ஆயினுங்கொழுநன்சொற்கேட்டமைதனன்மகளிர்க்கென்றுந்
தூய்மையும்வாய்மைதானுநல்லறத்துணிபுங்கண்டாய்
நீயெனசெயினுஞ்செய்காயினேனெறித்தப்பாக
வாய்பிழைத்தனனென்றாலும்பொறுத்தருள்வைப்பாயென்றாள் (ககங)

விற்பனமயிலுமந்தவீரனுமாறிமாறிச்
சற்பனபாசையாலேதன்பெருக்கருமமெல்லாஞ்
சொற்படப்பிரித்துப்பேசியிணங்கினாரொன்றுஞ்சூழ்ச்சி
கற்பழிந்தவளுங்கண்டாள்சாடையாய்க்கடைக்கணோட்டி. (ககச)

செம்மறைக்குலத்துள்வந்தேன்றிருவெலாஞ்சோரத்துய்த்தே
னெம்மறைக்குலத்துளேனுமெனைநிகர்ப்பவர்களில்லை
யம்மநான்செய்தமுத்தீவினையினோவலதெவ்வாறோ
விம்மையேயெல்லாந்தோற்றேனிருமையுங்கடைப்பட்டேனால். (சகரு)

மந்திரமுறையாற்கொண்டமணவனையிழந்தசேதஞ்
சிந்தைவிட்டகலாமுன்னஞ்சிறுவனுமடிந்தான்செல்வம்
வந்ததுபோலேபோனமற்றொருமார்க்கமின்றி
வெந்தழற்சருகாய்நீறிமெய்மெலிந்துள்ளம்விம்மி, (ககசு)

வாழ்பவர்தமக்குண்மிக்குவாழ்ந்தநானவர்கண்முன்னே
தாழ்வடைந்திருத்தறீதாமென்பதுதன்னையுன்னி
யாழிவாய்த்துரும்புபோலுமலைந்துளம்வருந்தியிந்தச்
சூழ்பெருங்கானில்வந்தென்னாருயிர்துறக்கின்றேன். (கக௭)

சொன்மகன்மணவன்மாண்டதுக்கமுந்துயரும்போக
நன்மகனான்முன்செய்தநற்றவப்பயன்போல்வந்து
பின்முகம்பாராதென்னைப்பிரியமோடழைக்கவுற்றே
னுன்முகங்கண்டேனெல்லாங்கிடைத்தல்போலுள்ளங்கொண்டேன்.()

மருகிநீயுனக்குவாய்த்தமாமிநான்றம்பியென்று
னருமைநன்மகனாமுங்களாக்கமுமென்னதாமென்
றுரிமையெத்தனையோபேசியுரைத்தனளுள்ளத்துள்ள
கருமமுட்கரந்துவார்த்தைவெளிப்படையாகக்காட்டி. (ககூ)

மாயம்வல்லவளுஞ்சொன்னவஞ்சகமுழுதுமிந்தச்
சேயிழையறிந்தாளேனுஞ்சிந்தையுள்ளடக்கிக்கொண்ட
நாயகன்கருத்துக்கொத்துநடப்பதுநியாயமென்று
தூயதன்னுளத்திற்கொண்டாள்பினுமொருசூழ்ச்சியோர்வாள். (கஉ0)

நாரியர்மனம்வானீளநளிர்கடலாழங்காணப்
பாரினின்முடியாதிந்தப்பார்ப்பனிகுணமும்பேச்சுங்
காரியமுடிவுநம்மைமுடிப்பதோர்கருமமின்றி
நேர்படவந்தாளில்லையென்பதுநினைந்தாளாகி. (கஉக)

வாயினிலினிமைதோன்றமதிமுகமலர்ச்சிகாட்டிச்
சேயிழைகரங்கள்கூப்பிச்செப்புவாடுணையொன்றின்றி
நாயகனோடுவாழ்ந்தநாரியென்பொருட்டாற்றெய்வந்
தாயெனவுன்னைக்கூட்டித்தந்ததுசரதமன்றோ. (கஉஉ)

மாமிநீயுனதுசொந்தமருமகணானுமிந்தக்
கோமகன்மகனாமென்றுகூறினையதுபோலென்றும்
பூமியிற்பிரியாநேசம்பொருந்தியென்னுடனேவாழ்வாய்
சாமளவினுநீங்காதுன்பணிவிடைகொண்டுசார்வேன். (கஉங)

சிறியைநானென்னுந்தன்மைக்கேற்பனசிந்தையுள்கி
நெறிபிழைத்தெதுவுமோர்காலுனக்குநான்குறைநேர்ந்தாலுங்
குறிபடநினைத்துமாறாதகத்தினுள்வருத்தங்கொள்ளா
தறிவுறுத்துதல்செய்தென்றும்புரப்பதுன்கடமையாலோ. (கஉச)

என்பனபலவும்பன்னியினிமையுங்குழைவுங்காட்டித்
தன்பதம்வணங்கிநின்றதையலையுவந்துபுல்லிப்
பொன்பதமின்றேவந்துபொருந்தினதென்றுபூரித்
தன்பினோடவளுக்கானமொழிபுகன்றாசிசொற்றாள். (கஉரு)

மூவருமகிழ்ந்துகூடிமுனிசெங்குமுதங்கா
வாவியுணிறங்கிச்சென்றார்மனையினிற்புனல்விலங்கும்
பாவலைதன்னையோராப்பார்ப்பனிதிருவியிந்தக்
காவலனணிந்தகைமோதிரமெனுங்கருமங்கண்டாள். (கஉசு)

விண்பதமெனினுமென்கையாலன்றியிவளால்வேண்டி
யுண்பதமொழித்தியென்றகொழுநனுக்கோதியன்னான்
றண்பதம்விலகாரின்றசார்ந்தனளுதையாழின்
பண்பதம்பாடுஞ்சோலைப்பசுங்கிளியனையபாவை. (கஉஎ)

பதப்படத்திருத்தியென்கையாற்றருபதார்த்தமெல்லா
முதற்குலத்துள்ளீரட்டித்தருவதுமுறையாமென்றாங்
கிதப்படப்புகன்றாண்மாதுகருத்தினுக்கிசைவுற்றுள்ளங்
கதப்படாதடிசிலாற்றுந்தொழில்வினைக்கொண்டாளால். (கஉஅ)

தண்டுலம்பருப்புநெய்காய்தயிர்முதலடுதற்கான
பண்டமுமமைப்புவேறுபண்ணினீர்குடைந்துமொய்நின்
முன்னையுஞ்சமையலாற்றிமுதலினுண்டிவருக்கிய
வொண்டொடியதனைச்சோறிற்றானுக்கூட்டியுண்பாள். (கஉகூ)

ஆன்னவாறுறைநாளிலருபிறப்பவளுமந்தக்
கன்னிகைகுணமும்பேச்சுங்கருணையுஞ்சவினுமற்றத்
தன்மையுநோக்கிநோக்கித்தன்னுளம்பூரித்தாளு
மன்னவட்காற்றுந்தீமைசெருமோரமைதியாய்வாள். (கஙo)

பூசனையன்பான்புனலிடைக்குளர்ச்சிபூவின்
வாசந்திக்குஞ்செம்பொன்னொளியிவைமாற்றிவேற
யாசறப்பிரிக்கும்விச்சைவிசுறிபவர்க்குமின்றோ
நேசநீக்குதற்கோர்விச்சையறிவுறுநீர்மைத்தாமோ. (கஙக)

கணவன்மேற்றணவாக்காதற்காதலிதன்னையின்னோ
யிணைபிரித்திடயதுவேந்தர்க்கீந்தவளுலேநல்கும்
பணமுதற்பூமிபாதிபகிர்ந்திடப்படுமேவமுள்ள
மணவும்வஞ்சனைபோய்வேறேரினைப்பதிங்கழகிற்றோமோ. (கஙஉ)

எனநினைத்துலைசமைக்குமிருங்கடல்காலநோக்கித்
தனதெண்ணங்கொடாதற்றன்மைபோலொடுங்கியந்த
மனைவயின்மொழிகளெல்லாந்தனதெனமருவியன்றூர்
வினைமெனவுறைந்தாள்பேதையனுவினும்வெளிதோன்றாமல். (கஙங)

கோள்வினையவனுந்தானுங்குறிசெலுங்கூடிவாழு
நாளினிலொருநாட்பூப்புநனுகலும்விலங்கியந்த
மாளிகைதன்னிலோர்பால்வைகினள்வதுவையாற்று
மானனுக்கேவலன்னாட்டேதற்கமைப்பானம்மா. (கஙச)

கண்டினுமினியதீஞ்சொற்காரிகைகவலையுள்ளங்
கொண்டனளெனினுமன்னங்கொழுநனுக்கெவரால்லட்டி
யுண்டிடப்புரிவாளந்தோவூழ்வினையுருக்கொண்டென்ன
வண்டையிலிருக்குமுண்டைதன்னைவிட்டயலிலம்மா. (கஙரு)

மறையவடன்னைக்கூவியம்மகின்மகனுக்கன்னங்
குறைவிலாதமைத்துன்கையாற்கொடுமெனநயந்துசொன்ன
முறைமையையுணர்ந்தாள்வந்தகாரியமுடிந்ததென்றுங்
கிறையினுந்தருகாளாகிச்சமைத்தனளினிமையாக. (கஙசு)

பருப்பினிற்சோற்றிற்சாற்றிற்பாறயிர்நெய்யினஞ்ச
நிரப்பியிட்டரசைக்கூவிநேயமோடிருத்தியன்னம்
விருப்பினூற்படைத்தாளுண்டான்விண்ணவர்கடலைமேனாட்
பொருப்பினாற்கடைந்ததுய்யபுத்தமுதெனப்பூரித்தே. (கஙஎ)

எமக்குவஞ்சகஞ்செய்தன்னமிதுவரையட்டியீயா
வுமக்குநான்புரிந்தகுற்றமென்கொல்லென்றுரைத்துப்பாரைச்
சுமக்குமன்னவனுமுண்டான்சுடுநெருப்பனையாடன்னூற்
கமுக்கமாய்விளைத்ததெண்ணியுள்ளுளேகளிப்புக்கொண்டாள். (கஙஅ)

தாய்தந்தைமகவுதாரந்தமருறவினர்மற்றேனோ
ரேயவெத்தனையோநண்பாங்கியற்றினும்பொருளீட்டற்கு
மேயவர்கருதார்வஞ்சம்விளைப்பதையொழியாதொன்ற
வாயுரைதீயாட்கொண்டிவ்வுலகின்றும்வழுத்திற்றன்றே. (கஙகு)

உண்டனன்முழுதுமுண்டுதீருமுன்முன்னூலுண்ட
பிண்டம்போயுடலைக்கவ்விப்பித்தலைத்தறிவையோட்டித்
தொண்டையையவறட்டிநாவைச்சுருக்கியுள்ளிழுத்துமூச்சு
மண்டிநெஞ்சடைப்பப்பஞ்சப்பொறிபுலன்மயங்கிற்றம்மா. (கசய)

மூச்சிலாதறிவுநீங்கிமொய்யுடற்றுடிப்பொன்றின்றிப்
பேச்சிலாதுடல்விட்டாவிபிரிந்திடப்பிணமாய்ச்சாய்ந்தான்
வாச்சுதென்றுவந்துமன்னன்மணிவிரலாழிதன்கை
பாய்ச்சினாள்விசையதேசம்பகிர்ந்தரசாட்சிசொல்வாள். (கசக)

இங்கிவன்பிணமாய்மண்மேற்கிடந்தனனிதுதேராத
மங்கைநீர்குடைந்துவேறுவத்திரம்புனைந்தங்கோர்பாற்
றங்கிவீற்றிருந்தாணின்றன்றலைமகற்கமுதிட்டாயோ
வெங்குளானொன்றுகூவிக்கேட்டனளிழுதைசொல்வாள். (கசஉ)

அன்னமேயன்னமிட்டேனையின்றுகண்விழித்திடாம
லென்னமோதுயின்றானென்றாளிருசெவிக்கெரிவேலூட்டுந்
தன்மைபோற்சொதித்துநெஞ்சந்தட்டழிந்தறிவுமாழ்கி
யென்னடியம்மாசெய்தாயென்றெழுந்தோடிப்பார்த்தாள். (கசங)

வஞ்சனைப்படலம்.

**முற்றிற்று.**

ஆகப்படலம்-உஉ-க்குத்திருவிருத்தம்-கயஎஉ.

# பூலோகரம்பைசோபப்படலம்.

மாமிமாதுலனோடுவேந்தினிதாடமறிதிரைக்கடல்களோரேழும்
பூமியின்மதுரைவயின்வரவழைத்தபுராரிமுப்புரந்தழன்மடுத்த
சாமியான்மறையோர்முனிவரர்தேவர்தருவிறைகமலவாலையன்கை
நேமியோன்பரவுமூர்த்தியிங்கவனைநெடுந்துணைக்கொள்ளுவைநெஞ்சே.

வேறு.

பார்த்தனள்கிடந்தகோலம்பதைபதைத்தங்கமெல்லாம்
வேர்த்துநெட்டுயிர்த்துவாடிமெலிந்திருகண்ணீர்பொங்கக்
கூர்த்தவாளரவுவானத்திடிக்குடல்குறைந்தாற்போல
வார்த்தைசற்றில்லளாயேங்கிமன்னன்மேன்மறுகிவீழ்ந்தாள். (௨)

மஞ்சுதோய்வரைமேற்பச்சைமயிலுளமருகிவீழ்ந்து
துஞ்சினாற்போலமாதுதோன்றறன்மார்பிற்சாய்ந்து
கஞ்சமென்முகமுங்காலுங்கரங்களுங்கருகிச்சாம்ப
வஞ்சியுள்ளேங்கிமூர்ச்சையடைந்தனள்பிணம்போலம்மா. (௩)

தன்னுயிர்ப்படங்கிமண்மேற்சாய்ந்ததன்றலைவனோடு
மின்னுயிர்ப்படங்கிற்றோவென்றிமையவரிரங்கியேங்க
மன்னுயிர்ப்படங்கிக்கன்னன்மூன்றுபோய்மயக்கநீண்டாண்
மின்னுயிர்ப்படைந்தாவென்னமீண்டுகண்விழித்துநோக்கி. (௪)

மூக்குகண்காதுசேரமுத்தமிட்டணைத்துவாயா
னாக்கினைச்சுவைத்துள்ளூறுநல்லமுதறியாளேங்கி
யாக்கையைமுழுதுங்கையாற்றடவினாளுயிரில்லாமை
நோக்கினாடழல்வாய்ப்பட்டவெண்ணெய்போலுருகிநொந்தாள். (௫)

வேறு.

கையிலெடுத்தாண்மார்பிலணைத்தாள்கனிவாயைப்
பையமுகந்துமீளவயின்றுபசைகாணாள்
செய்கைமறந்தாள்யாவுமறைந்தாடெருமந்தாள்
கொய்மலர்தெய்வக்கொம்பெனவாடிக்குழைவுற்றாள். (௬)

கோதிளவெல்லாமோருருவானகுடிகேடி
பாதகம்வஞ்சந்தீவினையஞ்சாப்பழிகாரி
சூதுசெய்தன்னம்வின்னமதாகத்துய்ப்பித்தா
னாதலினானம்மன்னுயிர்பொன்றியழிவானான். (௭)

நஞ்சோதியோகொல்வினைதானோநமனேயோ
வஞ்சாநின்றுபெண்ணடிபாவியறிவில்லாய்
மஞ்சார்பொன்னின்மால்வரைமன்னனுயிர்மாள
வெஞ்சாதின்னல்செய்தயனின்றேயின்புற்றாய். (௮)

மாமியுநானீ மருமகள் காணிம்மண்ணாளும்
நேமிவலத்தானன் மகனீ துரிசமென்றே
பூமிதனக்கும்வானுலகுக்கும்பொருள்காட்டித்
தாமதமின்றிமாறிமுடித்தாய்சண்டாளி. (௯)

நாலிருநாளாய்க்கானிடைமேவிநனிநீவிக்
கோலமெடுத்தேநீயழுமொப்புக்குரலாலே
காலனையேமுன்கூயிவராவிகவர்தற்கோர்
மூலமதென்றிங்கெண்ணினைநேர்க்கமுடித்தாயே. (௧௦)

அன்னையெனச்சொன் மன்னவன்மீதிலருளில்லா
வன்மைவலித்தேயின்னுயிர்போக்கிமாள்வித்த
தன்மையெதற்கென்றுன்னிவருந்துந்தமியேனை
யென்னசெயற்கோகல்லெனவஞ்சாதெதிர்நின்றாய். (௧௧)

பொய்யாள்பொய்மைச்சூதுசெய்வாணீபோகாதே
யையாவென்றவென்னுரைதள்ளியயல்புக்கி
வெய்தாய்நின்னாருயிர்கவர்கூற்றின்வினைகொண்டா
யெய்யாநின்றேன்செய்வகைகாணாதிடருற்றேன். (௧௨)

தாதைசெய்காவற்கன்னிகைமாடந்தனின்மேனாள்
பாதகிமூன்றுவருடமிருந்துபலனற்றேன்
நீதுமிகுந்தேனரவொருவருடஞ்சிறைவைக்க
வேதனையுற்றேனெவர்தவமோபின்விளைவுற்றேன். (௧௩)

சிந்தைகளித்தேனின்பெருநேயந்திறமென்றே
சந்தமலர்த்தார்வதுவைபுனைந்திசாயாத
விந்திரபோகமென்றதருக்கற்றிடர்மூழ்க
வந்தகனைக்கைகாட்டியழித்தாளறமற்றாள். (௧௪)

பாலமழற்கணீசனைவெல்வேனவர்பாலன்
வேலனைவெல்வேன்மாலினைவெல்வேன்விழியேனான்
சாலவருந்தேலென்றுபுகன்றதருக்கெல்லாங்
காலன்விழுங்கச்செய்திவளாண்மைகதித்தாளே. (௧௫)

வேறு.

மின்னிலைவேற்படைசுமந்துமருவலர்கள்பகைகடிந்துவீறுதோன்ற
விந்நிலமேலாமொருதன்குடைநிழற்கீழ்ப்பொதுவறநின்றிறைமைசெய்யு
நின்னிழல்போனீங்காதநேயமிகுந்திருந்தேனைநீங்கிநீயும்
பொன்னுலகம்புகுந்தனையோபுரந்தரனார்வரிசைசெய்யப்புகழ்பெற்றாயோ. ()

கரிமருப்புங்குரும்பையும்பொற்கலசமும்பம்பரமுமணிக்கனகச்செப்பு
மிருபொருப்புமிடந்துபணைத்தெழுந்தமுலைக்கோகிலமேயென்றும்நானும்
பெருவிருப்பந்தவிருகிலேன்றருவிருப்பாள்வரினுமனம்பேணேனென்ற
வருவிருப்பமறந்தொருநாணாற்றுதல்கேளாதிருந்தவருடானென்னே. (௧௭)

நாடிழந்துநகரிழந்தாற்றுயுந்தந்தையையுநனிதுநீத்துக்
காடுறைந்தபார்தனிலுற்கேடடைந்துசிறையிருந்துகவலைகொண்ட.
பாடிழந்தேனொருவருக்குங்கிடைப்பரியபெருந்திருவும்படைத்தேனெற்கிங்
கிடிலையென்றவந்திருந்தேனிடையிவிந்தவிதிவருமென்றெண்ணிலேனே. ()

மதிமுகமுங்குருநகையுமணிவாயுந்திருவுறையும்வரைத்தோண்மார்பும்
பொதியவிழ்செங்காந்தண்மலர்பொருகாமும்பதநளினப்போதும்பொன்
கதிர்பரவுமேனியுநற்கருணைவழிந்தொழுகியசீர்க்கண்ணுங்கண்ணு [போற்
னிசமுவந்தின்புறசுகம்போய்க்குறையுவந்திங்கிருக்கமனநேருவேனே.(கக)

பூலோகாம்பையிவள்புகிதமில்லாளெனநீத்துப்புயங்கந்தாங்கும்
மாலோனுந்திசைமுகனும்வானவனும்விருந்தாட்டமற்றோர்போற்ற
வாலோவல்லதுமலரோவமாபதியாதியதாயழகுவாய்ந்த
மேலோகவாம்பையரிலெவர்நலந்தோய்ந்திடப்புகுந்தாய்விளம்புவாயே (உ0)

என்றபலபலபிதற்றிப்பூலோகவாம்பையெனுமிளமானேங்கி
யன்றமுழுவதுமாற்றியவ்விருளுமயனுளுமழுதுமேனி
கன்றிடப்பூங்குழல்சோரக்கலைசோரவளைசோரக்கண்ணீர்சோர
வொன்றறிவிலதாகிநெருப்பையயின்றுமிழ்வார்போலுயிர்ப்புவீங்க. (உக)

வேறு.

கைநெறித்துவயிறலைத்துமுகத்திலெற்றிக்கண்ணருவிவான்மழைபோற்
காலக்கோல,மெய்முழுதும்புழுதிபடப்புரண்டுவேடர்விடுமுனையின்கணைபட
வேவெருவியோலஞ்,செய்யிளமான்பிணையெனவேகதறிச்சோலைதிகழ்ந்தபசு
ங்கிளிமொழிமென்மழலைதேங்கப், பொய்யிடைநொந்தலமுறவாய்ந்தெழுந்த
கும்பப்புணர்முலையாள்பட்டதுயர்புகலப்போமோ. (உஉ)

கற்பிலருந்ததியனையாளழுதனேக்கிக்கலைமாதும்மலைமாதுங்கரியமேனித்
தற்பரன்மாதுமழுதார்பொனனாட்டுள்ள தடமுலையின்னாரழுதார்தவஞ்செய்
மௌன, விற்பனமங்கையாழுதாரியக்கர்நாகர்விஞ்சையர்கன்னியரழுதார்வி
ளம்பற்கொவ்வா, விற்பிறந்தார்முழுவதுமின்றழுதார்தன் மதேவதையும்ம
ழையுமழுதேங்கிற்றலோ. (உ௩)

மண்ணழுதமாமழுதவிலங்குபுள்ளூர்வனமழுதவனமழுதவடிவொன்றில்
லா, விண்ணழுதபுனலழுதவழுதவெங்கதிர்தண்மதியழுதவியனுர்சோ
ங்க, மென்னுழுதாரகைமுதலாயழுதவெல்லாமினிப்புவியிலழாதபொருளி
ல்லையத்தா, பெண்ணைவில்கண்டாளமுண்டைமட்டும்பெருவகையுளுஞ்சா
ய்த்துப்பேய்போனின்றன். (உச)

மாண்டமணவாளனொருடுதானுமாண்டுமாகிலத்திற்புகழ்பெறுதன்மாபா
மென்ற, பூண்டபொலனகொடிகளையுமனைவிற்கண்டபொல்லாதாணல்லா
ளைப்புகழ்ந்துபேசி, வேண்டுமனம்போனடந்தகவறன்மாற்நிவிசையதே
சத்திறைபால்விடுத்திலோமே, வீண்டுபுரிவினைமுழுதும்பாழ்போயத்திா
தென்றலைக்குப்பழியொன்றேயெய்துமாலோ. (உரு)

என்றுநினைந்தோவியம்போன்மாழாந்துள்ளமேங்கியழுதாளைமனத்தினி மையோடுஞ், சென்றிருகையாற்றாக்கிக்கண்ணீர்மாற்றிச்செம்பொனவளை திருத்தியிடைச்சீலைசேர்த்தி,மன்றன்மலர்க்குழன்முடித்துமேனிமுற்றுமண்டு துகள்போக்கியுற்றவாட்டந்தீர,வொன்றலவெத்தனைகோடிபொய்சேர்வார்த் தையோதினள்பெரும்பழிசெய்தீதினளே. (உ௬)

இன்னவூரின்னபெயரின்னசாதியென்பதறியாதிவனோடேனோமேனன் மன்னியுறவாகிமனையவளுமாகிமாறுதபெருஞ்சுகம்போற்றுயரில்வாழ்ந்தாய் பின்னிவனிங்கிறந்ததுநின்முன்னோராற்றும் பேசரியமாதவத்தின்பெற்றி யென்றே, கன்னியெனதுளமதித்தேனிதுவோராமமற்கவலுங்கொன்றாய்நானபுக லுங்கருமங்கேண்மோ. (உ௭)

பாராசும்பெருந்திருவும்பெற்றுவாய்ந்தபலவரசர்கழலிறைஞ்சிப்பணிநி ன்றுற்றப், பேராசுபுரிந்திருந்தநினதுதாதைதபெருந்தவத்தாலீன்றெடுத்த பேதைநீயு, மோரரசனற்னைமதித்துமாலைசூட்டியொருகுடைக்கீழிருந்தெவ ருமுனையேபோற்ற, வார்சிலையாரேவல்செயக்கவரிவீசவாழ்வதுபோயிதற் குள்ளமகிழ்ந்ததென்னே. (உ௮)

செல்வமில்லான்கல்வியில்லானழகுமில்லான்றிறமையில்லானிவனுமொ ருசிறுவனீங்கு, புல்லிமனதுவந்தணைந்தபழுதுதீர்த்தென்போல்வாலைக்காத் தருளும்புகழ்கைகொள்வாய், வல்லிமடவார்க்கிளமைகழிந்தாலின்பம்வாய்க் காதென்றந்நாளில்வானுலாவு, மெல்லிநமன்றருவேந்தன்காலானேனைபெழி ற்குந்திதோய்ந்துநலமெய்தினளால். (உ௯)

அகப்பற்றும்புறப்பற்றுங்கடிந்துசுத்தவறிவானகோதமனுக்கமைந்ததேவி மகப்பற்றின்றொடர்புவிடாதொருநூற்றும்வானவனைத்தோய்ந்துநலம்வ ழுவுற்றாலு, மிகப்பற்றோவளையுமோர்தெய்வமாகவின்றுமுவந்தங்கைகுவி த்திறைஞ்சினரா, னகப்பற்றுவிட்டுமதக்கரிக்கோடேற்றநறுங்களபக்கொங் கைதிகழ்நங்கைமானே. (௩௦)

வேறு.

மாதருக்கரசாகியவனநடைமடந்தா
யீதுரைக்குவனின்னமுந்தேறுதற்குறுதி
வேதமோதியகுருமொழியாமெனவிரும்பிக்
கோதிலாதநின்மனத்தினிலுணர்ந்தவைக்காடி. (௩௧)

கரும்புஞ்செந்நெலும்பூகமுங்கதலியுங்கலந்து
பெரும்புயற்றலைகிழிபடத்துவன்றிவிண்பிறங்கு
மரும்பருமபியசோலைவாய்த்தீந்தறலையருந்திச
சுரும்பர்பாண்செயமயினடங்கொளக்குயிறொனிக்கும். (௩௨)

பரவுபல்வளமோங்கியபனிக்கடற்புவியிற்
பொருவிலாதுயர்விசையமாநகரதுபோலும்
விரவுநான்முகன்மால்சிவன்மலர்கடல்வெள்ளி
வரைதெரிந்தனர்மாசெனப்பினுந்தவம்வதிந்தார். (௩௩)

ஆயமாநகரிருந்துபெருலகெலாமளிப்பான்
காயுமொன்னலருக்கழுஞ்சீர்த்தியுங்கவரு
நாயகன்வலிமையாளெளியோர்களைகலயா
தேயவாணையான்செல்வமோதன தனுமிசையான். (௩௪)

தருவிருந்தசெங்கரத்தினன்றருமங்கொடலையா
னுருவமைந்தசித்திரத்தினுமதனினுமொளியான்
மருவிருந்தசெந்தாமரைமலரெனமதியாத்
திருவிருந்தாசியற்றியசெழுமதிமுகத்தான். (௩௫)

வங்கர்சோனகர்மகதர்மச்சரர்கௌடத்தர்
கொங்கர்தெங்கணர்சிங்களராரியர்குலிந்த
ரங்கைகூப்பிநின்றனந்திகழ்திறைநிதியளக்கர்
பொங்குசெங்கதிர்த்தேர்ப்பரிதகைந்துவிண்பொருவும். (௩௬)

விடைவலான்றிருமார்பினன்வேதன்விண்ணவர்கோன்
கடையுநாட்கலந்தெழுந்தபேரோதைவான்கடல்போற்
றடைபடாதமும்முரசமெந்நாளினுந்தவிரா
தடையலர்க்கிடியேறெனமுன்றினின்றதிரும். (௩௭)

உரனுமூக்கமுங்கல்வியுஞ்செல்வமுமுயர்வும்
வரனுநீடுமுத்தேவராற்றரக்கொடுவாழ்ந்தா
னமனெனச்சொலுஞ்சொல்லானவிலுங்கால்விசைய
தானவர்க்குமூவுலகினுமிணைசொலச்சமையா. (௩௮)

கோகிலக்குரல்கிளிமொழிமயிலியல்குறித்த
போகமங்கையர்புவனத்தல்வானத்திற்பொலியு
நாகலோகத்திலெத்தனைகோடிநானவில்வேன்
வாகுமன்னவனவர்களைக்கனவிலுமதியான. (௩௯)

முன்னைநாடிநின்மாபுளார்புரிதவமுறையா
லுன்னைநாடினனென்பதுதேர்ந்துகொண்டொருகாத்
தன்னைநாடியன்மதன்விடுசரங்களாற்றவிப்புண்
டென்னைநாடினனவன்கருத்தாய்ந்துகாமனைமூர்ந்தேன். (௪௦)

இங்குவந்துமதனமையங்கண்டிவனுயிர்வாட்டி
யங்கவற்குனையளிப்பதற்கெண்ணியவனடைவே
சங்கைகுடியின்கருணையான்முடிந்ததகனிவாய்
மங்கையாகுலமறாததுசெய்யமனவலப்பாய. (௪௧)

இல்லையாமெனினின்னுயிரிதரவாட்டி
யொல்லையேகுவனெனறசொற்கதினிலூதங்
கொல்லனவாயுலைத்தீப்படுங்கோலெனசகுறாக
வெல்லையற்றதன்பெய்திரின்றுய்குவாள்தனை. (௪௨)

என்னின்றுன்னவர்தீமையோவலதுநாளிழைத்த
பன்னரும்பெரும்பாவமோவித்துயர்ப்படவென்
றுன்னிமுன்னயன்படைத்தனனினியவையுள்கிக்
கன்னிலென்பயனென்றுளந்தேறியக்கன்னி. (௪௩)

மன்னையின்னுயிர்நீக்கினான்மற்றொருமன்னன்
றன்னையென்றனக்கருமணம்புணர்த்தவுஞ்சமைந்தாள்
சொன்னவாய்மொழிநீக்குவனேலெனைத்தொலைக்கப்
பின்னையுந்துசங்கட்டினான்முடிக்கவும்பெரியாள். (௪௪)

தந்தைதாய்கிளைமுதலியதிருவெலாந்தமியேன்
முந்தநீத்தொருபாந்தளாலிவன்றனைமுற்றுஞ்
சொந்தமாக்கினேனிழந்துயிர்சுமப்பனோயினிமே
னந்தலன்றிமற்றெதுகொண்டுவாழ்வுறநயப்பேன். (௪௫)

அரசனாருயிர்க்குயிர்நிகர்த்தருந்துணையாகப்
பரசுமந்திரிநீங்கினான்படிமிசையெவரு
முரைசெயுமுயிர்நீங்கிடின்மீளவுற்பவிக்கு
நிரைசெய்விச்சையென்றுசொன்னெறியுமொன்றுளவால். (௪௬)

இன்றுமற்றிவளோடுசென்றவனையெவ்விதத்து
நன்றுகண்டுசொற்றித்துயர்நீக்கிநன்னலங்கொண்
டென்றும்வாழ்குவனன்றெனிலெளியளென்னுயிரும்
பொன்றுவன்மறுத்துறுதிவேறிலையெனப்பூவை. (௪௭)

தாயுந்தந்தையுந்தமர்களுந்தனமுதற்பிறவு
மாயுந்தெய்வமுநீயலாதில்லையெனவந்நாள்
வாயுரைத்தநானின்பெருநேயத்தைமறக்க
வேயுமோவுனையலதுவேறெனக்கென்னகதியே. (௪௮)

இன்றுநாள்வரைமதியிலாதெனதுபெண்ணலமுஞ்
சென்றதேனுநின்றிருவருளுண்டெனிற்றீயேற்
கன்றுநல்லனவாமெனவெண்ணினேனம்மா
நின்றநின்னுரைநன்றுதீதென்னினுநீக்கேன். (௪௯)

ஆதலாலிவனுறவுந்தப்புறங்கடத்தற்
கேதுவன்றுகொண்டிருந்தனளிவையெடுத்துன்பா
லோதவென்னுளமரசனுக்குரிமையிற்பிரியா
வாதரத்துளீரொன்பதுகருதியஞ்சினவால். (௫௦)

அறந்தவாக்குடியொழுக்கிலேனெனினுமாருயிர்போ
யிறந்தவிக்களேபரமெடுத்தொருபுடையிட்டு
மறந்திடாதற்குறிக்கொடுநடக்கவுமதித்தேன்
சிறந்ததாயினோயென்றவட்காவனசெப்பி. (௫௧)

பொன்றிருன்றனைத்தயிலமிட்டறையிடைபோக்கி
யொன்றுமாமனைத்தாள்வலித்ததிற்குறியூன்றி
யின்றிலாதுபின்னவனொடுநேயமாய்ப்பேசி
யன்றுபோய்மறுநாட்செலவமைந்தனரம்மா. (ருஉ)

மதியிலாதவான்வனசமில்லாதநீள்வாவி
நதியிலாதவூர்நாதனிலாப்படைநலஞ்செய்
நிதியிலாதவர்வாழ்க்கையென்பதுசேர்த்திவளும்
புதியவாண்முகம்பொலிவிழந்துள்ளமுய்புழுங்கா. (ருங)

இறைவனைப்பிரிந்திருப்புவிட்டிமுதைமுன்னேகப்
பிறைநுதற்றிருமடந்தைபின்னேகியேபெருநீர்
நிறையும்வாவியைநீத்தனிநெருங்குபாண்மிழற்று
நறையுலாமலர்ப்பொழில்கடந்தருநெறிநடவா. (ருச)

வேறு.

கடகரியும்பிடியுமயிற்கணமுமுறுபிணிமுகமுங்கலையுமானும்
தொடர்புதராத்திரிவனவும்வருவனவும்போவனவுஞ்சூழநோக்கி
மடவாறன்கணவனையுமருவுமலரமளியையுமனதிலுன்னி
நெடுவிழிமுத்திறைப்பதெனத்தாரைமுலையிற்பாயநெட்டுயிர்த்தே. (ருரு)

போவதுகண்டவ்வனம்வாழ்புள்விலங்கூர்வனமுதலாம்பொருள்களெல்லாம்
பாவையிவடுயர்க்கிரங்கிப்பரதவிப்புற்றலம்வருமோர்பான்மைபோலக், - காவ
னமுந்திருநதியுங்கழனிசளுமொலிபரப்பிக்கலந்துலாவச், சேவடிநொந்தொ
சிந்துமலர்க்கொடிதுவண்டுநடப்பதுபோற்சென்றாண்மனனே. (ருசு)

கல்விடாமுட்பொதுத்கைக்காலுதிரஞ்சிவந்துவனக்காட்டநீண்ட
சில்லுடைமாருடல்கிழிப்பச்செடிகொடிபூந்துயின்மயிரைசிக்கியீர்ப்ப
நல்லவளும்பொல்லாதாணடந்தவழியத்தனையுநடந்துசெல்ல
வெல்லவன்கண்டிவடுயாற்றுதொழித்ததெனக்குடபாலெய்தும்வேலை. ()

பூலோகாம்பைசோகப்படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-உங-க்குத் திருவிருத்தம்-ககஉக.

---

# பெண்ணழைத்தபடலம்.

ஏடெதிர்செல்புனலின்வைகை
மாடுகொள்செம்பொன்மதிள்க்கூடல்
நீடுவிளங்கநிறைந்தானைப்
பாடுதல்செய்குவைபாழ்நெஞ்சே. (க)

வேறு.

விசையநகரெயிற்புறஞ்சூழ்ந்தாகாயமுடிகடவிவிரியுங்கொப்பூ
டசையுமலர்த்தேன்சிதறியாறுகுளம்வயல்பெருக்கியழகுகாட்டித்
திசைமடக்குமிளஞ்சோலைமயிலினமென்சிறைகோலித்திருக்கூத்தாட
வசையகற்றுமவ்விடத்தின்மறையவணன்மாதினொடும்வந்துவைகா. (உ)

ஒருவனைக்கூய்நீவிரைவிலோடிநமதிறைவனிடத்துனக்காயிங்கோர்
திருவனையமாதினொடுமறையவள்வந்தாளெனவேசெப்பினாலுன்
பொருகலியெலாமகலவரிசையவனாலுதவப்பொறுப்பாயென்றா
டுரிதமுடனவனெழுந்தங்கரசவையிற்புக்கியிவைதொழுதுசொல்வான். (ங)

மன்னவநின்குலம்வாழிநீவாழிநகர்வாழிவளமைவாழி
யென்னசொல்வேனெப்பொழுதுங்கண்டறியாத்திப்பியநானோந்தானீயு
முன்னம்வனவேட்டைசெய்தமுளரிமலர்த்திருவாவிமுன்னிவாழ்ந்த
கன்னிகையுமறையவனுங்கடிநகரின்புறத்திலுற்றார்காண்டியென்றான். (ச)

உடல்பிரிந்தவுயிர்மீண்டதெனப்பசியானெடுங்காலமுழலுற்றோர்க்குக்
கடலமுதம்வலியவந்தகாட்சியெனப்புகன்றமொழிகாதிற்கேளாச்
சுடர்வலையந்தெரிப்பமணிமார்பகன்றுதோளிரண்டுஞ்சுடரோன்சுற்றும்
வடவரையிலோங்கிவிசும்பணவமரிற்கூச்செறிந்துமகிழ்ந்தான்மன்னோ. (ரு)

சொன்னவனைமுகநோக்கிக்கருணைபொழிந்தினமொருகாற்சொல்லுமென்
தன்னுளத்திலடங்காதவுவகைநெடுங்கடல்குளித்ததரையாள்வேந்தன் [னத்
பின்னவனுக்கியைந்தவெலாம்பெறுகவெனவளித்துமுன்னம்பெண்ணைக்க
ண்டு,மன்னியநட்பாலுரைத்தமந்திரியைச்சென்றழைத்துவாபோவென்றான்

இறைசாற்றுமவன்கருத்தையுணர்ந்தமதிமந்திரியுமிறைஞ்சியேகி
முறைசாற்றும்வள்ளுவரான்மூரிமதயானையின்மேன்முரசந்தூக்கிக்
குறைசாற்றுங்கோநகரமுழுவதுமின்றறிந்துமணக்கோலஞ்செய்யப்
பறைசாற்றுமெனவிடுத்துப்பாவையயழைப்பதற்குரியபலவுங்கண்டான். (எ)

முரசெறியுந்திருவோலஞ்செவிக்கமுதமெனத்தேக்கிமுழங்கிநீண்ட
கரைசெறியாவுவகைநெடுங்கடற்றலையிற்படிந்துதிரைக்கடல்போற்பொங்கி
வரைசெறிசிந்துரக்களபமருப்புமுலைத்துவரிதழ்வாய்மடநல்லாரு
மரசிளங்குமரர்களும்புதுக்கோலந்திருத்திநகர்க்கழகுகாண்பார். (அ)

கதலிகுருத்தெழுந்துவிசும்பணவவிளங்கரும்பதின்மேற்கவினப்பூகம்
மதிக்தர்சென்னெறிக்கிடர்செய்வதுபோலுங்காவணங்கள்வகுத்துப்பொன்
புதியநவமணியான்மென்மதுமலராற்றுமரிமைபொலியத்தூக்கி [ஞற்
யிதுபெரிதிந்திரபதிக்கென்றெத்தெருவுமொத்திருக்குமெழில்செய்வாரால்.

சந்தனத்தானிலமெழுகித்தமனியத்தாற்சுவர்புதுக்கித்தாளம்வேய்ந்த
யிந்திரநீலத்தகட்டாணிலதெரிந்துதெற்றிமனையிடங்கடோறுங்
கொந்துகமுகெழிற்பாளைதலைவிரியப்பூரணப்பொற்குடங்களேற்றி
யிந்துநிலாக்குருத்துமுளைத்தெழுந்ததெனமுளைப்பாலியியையவைப்பார். ()

வெள்ளைநிலாத்துளிமுறிந்துவிழுந்ததெனவெண்சுதையால்விளக்கிமாடத்
துள்ளும்வெளிப்புறனுநவமணிகுயின்றுவிதானமலரொழுங்குசேர்த்துக்
கிள்ளைகுயின்மயில்பூவைபாவைபசும்பொன்னிராற்கிளரக்கிறிக்
கள்ளொழுகுநறுந்தெரியல்சுருங்கைவழிபடிநீளக்கட்டுவாரால். (கக)

வீதியினிற்சாந்தெறிவார்மணியெறிவார்மலரெறிவார்விருப்பங்காண்பார்
வேதியர்க்குமாதவர்க்குஞ்சோறளிப்பார்தாமுமொருவிருந்துமாவார்
சோதிமணிக்கலன்றெரிவார்சிவிகைபரியிரதமிசைசூழ்ந்துசெல்வா
ரேதினந்தாமதமெனச்சென்றருங்கடிநல்லோரைகன்னலியையப்பார்ப்பார்.

சொந்தமனையெனவயலார்மனைபுகுதவவருமந்தத்தொழிலேசூழத்
தந்தமதுமனையுருப்புத்தெரியாமன்மனமருளத்தயங்குஞ்சோதி
யிந்தநகரெழிலிரேக்கியிந்திரர்கந்தருவர்சித்தரியக்கர்நாகர்
சிந்தைமகிழ்ந்திமையாதுவிழித்தவிழிக்குருடெனத்திரிந்தாரின்றும். (கங)

(வேறு)

சிந்தூரத்திட்டிநெற்றித்திருமணிச்சுட்டிசாத்தித்
தந்திடைக்கொட்டியானைந்தரித்துநூபுரந்தாளேங்கப்
பந்தணிமுலைமேற்செம்பொற்பதக்கமிட்டாரந்தூக்கிச்
செந்துவர்ப்பவளச்செவ்வாய்மயிலெனச்சில்லோர்குழ (கச)

மலையிரண்டேந்திவாசமலர்பலபூத்துச்செய்பொற்
கலைபுனைந்தங்கமெல்லாங்கவின்மணிக்கலன்கள்பூட்டி
நிலவிசைத்தருமென்கொம்பர்நடந்துசெல்நீர்மையென்ன.
சிலதாதற்களபக்கொங்கைமங்கையர்சில்லோர்குழ. (கரு)

கல்வளைசிலம்பிரேனைகைவளைகுலுங்குமோசை
யால்செயநோக்கிமைந்தர்வழிதோறுமறுகிநிற்பக்
காலனுக்குதவுகாட்டிக்கருவிழிமலைவாட்டிச்
சேமெல்லனப்புரளும்வாட்கட்பாவையர்சில்லோர்குழ. (கசா,

மயிலினிற்சாய்கைதாங்கிமானினிற்பார்வைவாங்கிக்
குயிலினிற்கிளவியோங்கிக்கொடியிடைநீங்கிமண்ணிற்
பயில்சிறைப்பனவாயோதியம்பார்த்தலவித்தென்ன
வெயில்விரித்தொளிருமேனிமெல்லியர்சில்லோர்குழ. (கஎ)

வண்டடைகிடக்குஞ்சஞ்சமலர்மிசைவாள்போற்றுவுங்
கெண்டைகண்மிளிர்வதென்னக்கிளர்விழியழகுகாட்டுந்
துண்டமும்பவளவாயுந்தூயவெண்மதியங்காட்டச்
செண்டணிகலசக்கொங்கைமங்கையர்சில்லோர்சூழ. (௧௮)

வாசமென்கலவைச்சாந்தம்மான்மதம்பனிநீர்செம்பொற்
றேசணிமுத்துமாலைசெழுமணியாரந்தாமங்
கோசிகங்கடகமேனைநிறைத்தசோடிகங்களேந்திப்
பாசிழையவர்கள்கோடியேய்ந்தனர்பக்கமெல்லாம். (௧௯)

தேர்நிரைமதமாவாசிசிவிகைவெண்கவிகைகுஞ்சம்
பார்நிறைந்தேகவேழுபரவையின்னியங்களார்ப்ப
வார்முரசோதைசங்கம்வழங்கொலிமறையோராசி
கார்மழையஞ்சவண்டங்கலங்குறக்கலக்கிற்றம்மா. (௨௰)

மதமலைவயவெஞ்சியமழவிடைகுழுமியேகும்
விதமெனவாசர்வீரர்வினைபுரியுழையர்வெள்ளம்
புதுநலங்கொண்டுசெல்லப்பூரணகலசமேந்தி
விதிமுறைமனுவாயோதிவேதியர்மருங்குமேவ. (௨௧)

இந்துவெண்கவிகையோங்கவெங்கணுங்கவரிதுள்ளத்
தந்திரபாலர்சுற்றத்தமணியத்தேர்மேற்கொண்டு
மந்திரிதானையோடுமணிநகர்ப்புரிசைநீத்துச்
சுந்தரியிருந்தமென்பூஞ்சோலையைத்துன்னினாரால். (௨௨)

சோலையிற்புகுந்துமாதராயங்கள்சுமந்துவந்த
மாலையுங்கலவைச்சாந்தும்வடங்களுங்குழையும்பூணும்
பாலையுங்கசப்பித்தூறும்பனிமொழியவண்முன்வைத்து
வேலைசெய்யடியேங்கட்குன்றிருவுளம்விளம்புமென்றார். (௨௩)

மருமலர்சுமந்தகூந்தன்மயிற்குலமனையாய்நின்றன்
றிருவுளம்விளம்பவென்றுசேவித்துப்புறம்புநின்ற
வரிவையர்தம்மைநோக்கிவேதனையகத்துள்ளாக்கிப்
புரிநகைமுறுவல்காட்டிமுகமதிபுதுக்கினாளால். (௨௪)

வேறு.

வாசநறும்புனலாட்டியகிற்புகையாற்குழல்புலர்த்திமலர்கள்சூட்டிக்
கோசிகநுண்டுகில்புனைந்துகுவிமுலையிற்களபநறுங்கோலஞ்செய்து
வீசுகதிர்மணிப்பணியாலுடல்புதைத்துத்திலதநுதல்விளக்கித்திட்டி
கூசவலங்காரமிட்டாரோவியத்துக்கழகளிக்குங்குமரிதன்னை. (௨௫)

சுற்றுமயினீர்போக்கிக்கண்ணெச்சில்கழித்துமயிற்குழலூடு
கொற்றமயிற்பெடையெனநின்றொளிர்குலவுமரசர்குலக்கொடியைச்செம்
பற்றுநவமணிகுயின்றதேரேற்றியிருமருங்கும்பதாதிமொய்ப்பப் [பொன்
பொற்றொடியார்கவரிதாக்குடைநிழற்றநகர்நோக்கிப்புறப்பட்டாரால். (௨௬)

சிவன்மனைவிதிசைமுகத்தோன்மனைவிதிருமான்மனைவிதேவரூர்வா
ழவன்மனைவியவர்களிலிங்கிவளொருத்தியின்றெனில்வேறவனிமீதி
லெவன்மனைவியெனச்சொலலாமிதுவரைக்குநம்மரசனிவளைக்கண்டும்
புவனதிசைபொறுத்திருந்தகருமையெனநகர்முழுதும்புலம்பிற்றம்மா. ()

இத்தனைபேர்நகரிருந்தோமிதிற்றுணிவாய்மறையவனுமெழுந்துசென்றிங்
கத்தனைபெரும்வியக்கவலையுதவுந்திருமகள்போலழகுவாய்ந்த
சித்திரப்பொற்பாவைதனைச்சேர்த்துவந்தாளவனுமணிச்சிவிகைமீது
தத்துபரியானரசுபாதியின்மேற்கொடுத்தாலுந்தகுமேயம்மா. (௨௮)

துற்சனன்போல்விரகரிந்துருட்சிவிநயம்புரியுந்தொழிலிற்றூய
சற்சனரெத்தனைகோடியாமெனினுமொவ்வார்காண்டரையாள்வேந்தன்
முற்சனனந்தனிற்புரிந்ததவப்பேற்றாலமைச்சியலின்முறைநின்றுற்றற்
கிச்சனனந்தனிற்கிடைத்தானிவன்போன்மற்றரசர்களுக்கெய்துமாலோ. ()

மாதிவடன்மனத்தெளிவுமுகக்குறிப்புநோக்கிடிலெம்மடநல்லாளைப்
பாதகிநம்மறையவனும்பழிவிளைத்துப்பெருங்கலகம்பண்ணியேதோ [ப்
சூதுசெய்துகொணர்ந்ததுபோற்றோற்றினதிம்மங்கையினாற்றொல்லைமெத்த
பூதலமன்னனுக்குநம்போல்வார்க்கிவ்வூரிருப்புப்பொருந்தாதம்மா. (௩௦)

இந்திரனுந்தருநிழற்கீழிருத்தினன்மான்மார்பகத்திலேற்றானவி
லந்தணன்வைத்தான்சிவனுமங்கத்தைப்பங்காக்கியளித்தானிந்தச்
சுந்தரியைநம்பெரியதோன்றலெந்தவாறமைத்துத்துய்ப்பானென்பா
ரந்தரங்கந்துற்சனனுக்கல்லாமலெவர்க்குவெளியாகுமென்பார். (௩௧)

வாவியினுட்புகுந்திருந்தமடமயிலையொருமூன்றுவைகலுற்றுக்
காவலவன்றனனாலேயானமட்டுஞ்செய்துபலன்கைக்கெட்டாமற்
சேவலமுற்றானிந்தக்குடிகேடியெவ்வாறுகிடைத்துவந்தா
டேவர்மனைவியரெனினுங்கொணர்வாண்மங்கையர்க்கிவளோர்தீப்பூடம்மா.

மானகரமுழுவதுமிவ்வாறியம்பநகரைவலமாகவந்து
மேனகைக்குநலனுதவுபூலோகவரம்பைதனைமிளிர்செம்பொன்னாற்
றானமைத்தமண்டபத்தினிடைசேர்த்தாதுவறிந்துதமர்போல்வாரை
யானவட்குக்கடிபுரிந்தேதவற்பணிக்குவேறுசிலவாயமீயா. (௩௩)

வந்தவர்க்கெல்லாங்கனகமழைமேகமெனப்பொழிந்தியாதைத்தேடித்
தந்தவட்குக்கரிபரிதேர்சிவிகைகொடைபொன்றுகில்பூண்டந்தேயம்மா
விந்தகலத்திற்பாதியுனதென்றானவனுமகிழ்ந்திறைவாவென்றன்
மைந்தன்வருமளவுனதென்றுதவும்வரிசையொடுமனையிற்புக்கான். (௩௪)

ஆதவனிங்கிதுகாணாற்காற்றான்போன்மேற்றிசைசென்றடையவேந்தன்
பாதகமும்மறையவன்செய்பாதகமுமெனக்கருகிப்பரந்தகங்குற்
பூதலமெலாம்விழுங்கத்திசைமறைத்துக்காமிகள்வெம்போர்மேற்காமன்
மோதவிடுத்தேவியமும்மதனால்வாய்க்களிறெனவேமொய்த்தவன்றே. (௩௫)

ஆகாயமும்புவியுந்திசையுமிருள்வலைவீசியதனிற்றப்பிப்
போகாமற்காமுகராம்புட்படுக்குமதவேடன்புறப்பட்டானென்
றோகாளக்குயிலின்றொனிமுழங்கத்தென்றலினாயுருத்துப்பாய [னி.
வாகார்மன்னறிந்தொருபூமடந்தைதுணைக்கொண்டுவெல்வான்மனத்திலுன்

கங்குறொலைத்தொருகோடிகதிர்பரப்பிவெயிலெறிந்துகடலிற்றோன்றுஞ்
செங்கதிரின்மணிமகுடந்திருத்திநுதல்வீரபட்டந்திகழத்தோளி
னங்கதங்கொண்டணிகவசம்புனைந்துகழல்கழற்கணிந்தங்கவிருஞ்சோதித்
திங்களிரண்டெனப்பசும்பொற்குண்டலங்களொளிவருடச்சேர்த்துப்பின்
[னும்.

வரையருவிமணிகொழித்துவார்ந்ததெனவுத்தரியம்வயங்கப்பூணூற்
கருமுகில்வாய்விண்டகொடிமின்னலெனத்துவளநறுங்களபமார்பின்
விரைதிசைகடொறுங்கமழக்குற்றுடைவாளொளிபுரண்டுவிசும்பிலேற
மருமலர்த்தாரசையமணிவடங்குலவத்தடங்கையின்வேல்வயங்கமன்னோ. ()

தவளமதிக்குடைககனந்தடவியிளநிலவெறியத்தயங்குஞ்செம்பொற்
கவரிபுடைசாலிரட்டவந்தியர்கட்டியங்கூறக்கணிதர்வாழ்த்தப்
பவளவலிக்கொடியிடையார்மணிவிளக்கம்பலகோடிபற்றிச்செல்லப்
புவிமகள்கால்வருடநறுங்குதலைமொழிமடவியர்கள்புறம்புசூழ. (௩௯)

சங்கேங்கமுழவதிரக்கற்பகக்காப்பசுந்தேறல்சாய்த்ததென்னச்
செங்கனிவாயரும்பமடவியர்பாடுஞ்சுருதிநயஞ்செவியிலேற
மங்குல்வரவானடிக்குமயிலெனநின்றருநடனமாதராடக்
கங்குலிடைநிலவுவெயில்கலந்தெழுந்ததெனவெழுந்தான்காவல்வேந்தன். ()

அவ்வளவிலொருதூதிவிரைவினடந்திறைவன்வரவறையக்கேளாச்
செவ்விநிறையெழினிநடுவாகவிடுத்தப்புறத்திற்றிகழுஞ்சோதி
தவ்வுமணியாசனமொன்றமைத்திருத்துகவலைமனந்தாக்கத்தாங்கி
யொவ்விமகிழ்ந்தவள்போலவெதிர்தூதுபோகவிடுத்துறையுங்காலை. (௪௧)

மங்குறோய்ந்தெழில்பரவுமாடநிலைகடந்தெவர்க்கும்வருதிபோக்கி
நங்கையரிற்சிலருடனாய்நாற்புறனும்பணிமாறநடந்துவேந்த
னங்கவளாற்றிரைக்கிப்பாலமைத்தமணியாதனமேலமர்ந்துசோலை
தங்குபசுமழலைமொழிக்கிளிக்கமுதமூட்டுவர்போற்சாற்றுவானால். (௪௨)

இன்னமனதிரங்கலையோவிடங்கொடுக்கமுடியாவோயிருவர்க்கூடும்
மன்னுதிரைபுரிவித்துமறைவின்மொழிபேசாமன்மௌனமாகி
யன்னமேதனியிருந்தாலகன்றபொழுதிராவேயிவ்விராவல்லாம
லென்னபலன்கலகமிடுமோராணுக்கார்சமாதானமியம்பவல்லார். (௪௩)

வட்டமதிதருவதனத்திருநுதலாய்வின்மாரன்மலர்ப்பாணங்கட்
கிட்டகுறியெனப்பொலிந்தவ்வாளிபொதுளியகூடாமெனவென்னுள்ளங்
தட்டழிவுற்றணியூசலாடுவதையெடுத்துனக்குத்தமியனான்வாய்
விட்டுரைக்கமுடியாவேகட்டுதிரைநீக்கிலுண்மைவெளிச்சமாமே. (௪௪)

திருவதனமொவ்வாதசிறுமதிக்கென்பெருமதியைச்சிதறியுன்ற
னிருவிழியொவ்வாதகடற்கெனதுளத்தைத்துயர்க்கடல்வாயீடுகொட்டிப்
பொருவுகுரலாலகன்றபூங்குயிலுக்குருகியுடற்பொலிவுமாறிக்
கருகியபுல்லுருவாகிக்காலினுக்காருயிரினைக்கைகாட்டிநொந்தேன். (சரு)

மாலையெனும்பெருங்கூற்றம்வரும்பொழுதெலாமுனதுமாலையன்றி
வேலையறியேன்வேலைத்திரைமுகட்டிற்கதிர்பரப்பிவெய்யோனெய்துங்
காலையினுங்கனியிதழ்த்தேன்மாந்துவதெக்காலையெனக்கருதிச்சோர்வுற்
றுலைநெரிந்திடுகரும்பின்கோதுங்கர்த்துடறேய்ந்தென்னுவியோய்ந்தேன்.()

வண்டலம்புபூக்குழலாய்மானலம்புவரிவிழியாய்வாசத்தண்பூச்
செண்டலம்புதுடமுலையாய்சிலம்பலம்புசிற்றடியாய்சிறியேனுசை
கொண்டலம்புமதிமுகத்தாய்கொவ்வையலம்பியகனிவாய்க்கோதாய்நின்னைக்
கண்டலம்புமெனதுள்ளத்துயரலம்பாதெடுத்தெவரேகழறுவாரால். (சஎ)

கனமொழித்தகருங்குழலாய்கனியொழித்தபனிமொழியாய்கயத்துணீயு
முனமொழித்தாயன்றமுதன்முழுதுமொழித்தேன்றுயிலைமுதிர்தீம்பாலி
னனமொழித்தேனுடுப்பதொழித்தணிவதொழித்துள்ளவெலாமகலத்தள்
ளி, யினமொழிக்காதயிரிருந்தேனினைக்காணுமாசையெனுமேக்கத்தாலே.

இந்திரனில்வாழ்வுகண்டேனுரகனுக்குக்கலைதெரித்தேனெயிற்றுப்பேழ்வா
யந்தகனிலாணைதந்தேனருந்தவங்கள்பலகிடந்தேனலர்பூவாளி
சிந்துமுருவிலிவலிக்கென்னுயிரழிந்துபுவியினிடைதீராவண்ண
மிந்தவாஞ்சுரந்தெனதுகுடிபுரப்பதறமாமென்றிறைஞ்சிச்சொன்னான். ()

வேறு.

பொல்லாதவனங்குபுகன்றமொழி
நல்லாள்செவியேறுதலுநகையா
வல்லானிவன்மையலைமாற்றுவதெச்
சொல்லாலெனவுள்கிமனந்துடியா. (ருO)

ஒமாக்கினியிற்பெரிதுற்றிடுவெங்
காமாக்கினியிற்றளர்காவலனை
யேமாக்கநயந்துளவின்சொலினற்
போமாக்கமியற்றல்புணர்ப்பலெனு. (ருக)

சாந்தர்த்தனதுள்ளமுறுங்கவலை
வேந்தன்றுணராமல்விலக்கியவன்
பார்ந்தம்பெரிதாகமுன்னுட்பழகும்
பூந்தண்குழன்மாதெனவேபுகல்வாள் (ருஉ.)

அரசேயெனதுள்ளமறிந்துகொளா
துரைசெய்குவதென்னையுமைத்தவிர
விரைசெய்மணம்யார்க்கணிவித்திடவித
தரைவந்துபுகுந்ததுநான்றனியே. (ருங)

ஓயாதுநீரோதியவாய்மொழிபோ
னாயேன்மொழிசொற்றனலம்பெறுமோ
பேயேபெரிதானுழைபேசவெனி
லாயாதொருநாணமமைந்துறுமால். (௫௪)

நின்றேய்முநின்குலமும்பெயரு
மென்றுதைதன்மாசமுகந்தனிலே
சென்றேவருயாதவர்செப்புதல்கேட்
டன்றேமயல்கொண்டதறிந்திலைநீ. (௫௫)

நென்னற்பொழுதென்னுருவங்கணிறைத்
தின்னற்படுகின்றமையென்னையுமை
முன்னைத்தெரிவுற்றுமுதிர்ந்தமய
லென்னைத்தெறுமென்பதியம்புவதோ. (௫௬)

நந்தாதொருகூபநறும்புனலை
வந்தோடியவெள்ளம்வலிந்துறுமோ
சிந்தாகுலநீக்குதல்சிந்தைசெய்வாய்
சந்தார்மணமாலைதரிக்குவனால். (௫௭)

மன்னாவுனைநான்மணமேபுரியிற்
றன்னான்மதிமூன்றுதணப்பளவும்
முன்னான்மறைநோன்புமுடிக்குவலென்
றன்னாளொருவாய்மையமைத்துளனால். (௫௮)

நானெண்ணியவெண்ணநலம்பெறவே
வானெண்ணியதேவும்வழங்கினவான்
மீனெண்ணியகண்ணியர்வேளனையாய்
கானெண்ணுதனீகருதாதொழிக. (௫௯)

முற்சொல்லியநோன்புமுடித்தொருநா
ணிற்சொல்லியநேயம்விளைப்பனெனல்
பிற்சொல்லுவதின்றுபிதற்றுதலா
னற்சொல்லலவென்பரெனாளுநலோர். (௬௦)

எலியென்பவையிற்பெருமாவெலிதான்
வலிகொண்டுசெய்மாதவமண்டினதா
லொலிதண்கடனீளுலகத்தரசாய்
நலிவன்றியிருந்தமைநாமறியேம். (௬௧)

மிருகண்டர்மகற்குவிளம்பகவை
கரிகண்டனுரைத்தல்கடத்தியநாள்
வருகண்டமிதென்றெயன்மாவலிபோய்ப்
பெருகண்டம்வியந்தமைபேசுவதோ. (௬௨)

வேறு.

பருவநேர்ந்தரியவானம்பொழிவதும்பருதிப்புத்தே
ளிருளொப்பதுவுமேரியாறுநீரெஞ்சலின்றிப்
பெருகுகிற்பதுவுநன்மைபேணியபெரியோருள்ள
மருள்சுரப்பதுவுங்கைம்மாறெண்ணியோவியற்கையாலோ. (௬௩)

ஆதரம்புரியுமாண்பாலவரினுமரியகாதன்
மாதருங்கொள்வாரென்றவாய்மைநான்வாயாவெள்கா
லோதவுந்தகுமோவேந்தேயுனதுளங்கருணைகொண்டு
பேதையேற்கருள்செய்தென்றும்பெரும்புகழ்பெறுவாயின்றே. (௬௪)

அம்பிகைவளர்த்தவெண்ணான்கறத்தினுள்விரதபங்க
மிம்பரிலெவர்செய்தாலுமிழிமலனுகர்ச்சிமாறு
வெம்புபுன்புழுவாய்ப்புள்ளாய்மிருகமாய்ப்பிறப்புற்றம்மா
கும்பியில்வருந்தியெந்நாளினுநலங்கொள்ளாவால். (௬௫)

அடிமையாலுமதுநேயம்விளைப்பதற்கானநோன்பு
முடியுமுனதற்குப்பங்கமுறுவதோர்முறைமைநேரிற்
படியின்மேலெவரென்றாலும்பழியவர்தலைமேற்போட்டுக்
கொடியதீக்குழியிற்பாய்வலென்பதோருண்மைகொண்டேன். (௬௬)

கல்வியுங்குணமுந்தேசுங்கருணையும்வரையாநீண்ட
வில்வரையகலத்திண்டோள்விறல்செழும்வேந்தாலிங்கு
புல்லியநான்சொல்வாய்மைப்பொருள்குறித்தவையின்றுற்றற்
கொல்லையினிதியந்தானமுறையர்களுதவல்செய்வாய். (௬௭)

உன்மனக்கருத்துங்கண்டேனுனதுமேற்றீராமைய
லென்மனக்கருத்துஞ்சொன்னேனிதற்குமேலெதுசெய்தாலு
நன்மனங்கொள்வேனென்றுணரிசொல்விநயந்தோராத்
தன்மனத்துள்ளதென்றுநினைந்தனன்றவம்போய்த்தாழ்வான். (௬௮)

களைபூண்டெழுந்தவெள்ளங்கண்டபின்கரைகொண்டாற்றி
வளைசெயவொங்கிச்செல்லுமாறுபோல்வரைசெய்திண்டோ
ளாசனமடங்காதோங்கியார்த்தெழுங்காதனித்தந்
தெரிவைசொல்லிணக்குளாகிப்புறங்கடந்தேகல்செல்லா. (௬௯)

பெருகுநீர்வெள்ளமுந்திப்பிறந்துளவேகமாறி
வாவாக்குறைந்துமுற்றும்வற்றியவாறுபோலக்
காவழித்தெழுந்தநெஞ்சிற்கதித்துளகாதல்வெள்ள
மரிவைகற்பனற்பட்டின்னேசுவரினவாசற்கன்றே. (௭௰)

மங்கைசொல்லறமேயந்தமன்னனுக்குண்மையான
சங்கையைத்தேற்றத்தேறித்தன்னுளமகிழ்ந்துமுற்று
நங்கைசொனம்பிகோன்புடாத்துதந்தமைச்சனுலே
பங்கமில்லாதசெய்யவிளித்துரைபணித்துப்போனான். (௭௧)

தெய்வதங்தொழுதன்மாற்றிக்கணவனைத்தொழுதல்செய்து
கைதவமகற்றிக்கற்பினெறிநின்றுமரபுகாக்கும்
பெய்வளையவர்களாற்பெய்யெனப்பெய்யும்பெருவானென்னிற்
பொய்கொலைகளவுகட்காமங்களிங்கவர்ப்போற்றுவோ. (எஉ)

மன்னவனுரைத்தவாறேமந்திரிதொழில்செய்வோரா
லன்னவண்மனமுமின்னதென்னவேயறிந்துகொண்டு
பின்னதற்கானவெல்லாம்பெறுவதற்குரிமையான
பொன்னறைமுழுதுமாதுதன்வயம்புகுத்திப்போனான். (எங)

பெண்ணழைத்தபடலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-உச-க்குதிருவிருத்தம்-கஉ௰உ.

## பூலோகரம்பைபூசாவிதிப்படலம்.

கருக்குமைக்குழற்கன்னியர்மையாலாற்கலங்குந்
திருக்கறுத்துநற்கதிபெறவேண்டிலோர்தெய்வ
மிருக்குமென்பதைமறந்துசொக்கீசனையென்று
முருக்குமுற்றடிபோற்றுவீர்மெய்ப்பதமுறவே. (க)

வேறு.

மாதுபொன்னறைகைக்கொண்டுமன்னனுற்றனக்குத்தந்த
தாதியர்வேலைக்காரர்தங்களைக்கூவிநீவீர்
வீதிநான்குளதாயுள்ளவெளியினில்வேர்விச்சாலை
சாதுகட்கினிமையாயதண்ணமுதூட்டுஞ்சாலை. (உ)

நீர்த்துறைவாவிதண்ணீர்ப்பந்தற்கணிறைபல்பண்டஞ்
சேர்த்துறுமாங்குபூரிசெயத்தகுமிடமங்காதி
மூர்த்திகள்கோவின்மற்றோர்முறைதரவிருக்குந்தானம்
பார்த்துறவழகாயோலைகழியினூற்படைமினென்றாள். (ங)

எப்பெரும்வழிச்செல்வோருமாங்குவந்திருத்தற்சேற்ற
துப்புறவானதானந்தருவினிள்வேலிசூழ்வித்
தப்பெருமிடத்திற்கோவிலரண்மனையாகசாலை
செப்பருமனநீர்ச்சாலைதெருக்களுற்சந்திமற்றும். (௪)

ஒல்லையிலியற்றிவந்தாங்குரைசெய்தாரதனைக்கேளா
வல்லியும்விரைவினெய்திமலர்க்கண்ணுனேக்கிநோக்கி
யெல்லையிலாதவின்பமெய்தியாங்கவர்கட்கெல்லா
நல்லனபுகன்றுசெம்பொன்கைமணித்தூசுநல்கா. (ரு)

வானமுதனையமூரற்பருப்புநெய்வடைபாயாசந்
தேனறுங்கருணைதீம்பால்செழுங்கனிமுதற்சிற்றுண்டி
யானவையெல்லாமோயாதிரவுநண்பகலுமாக
மேனனிகளிப்புக்கொண்டிங்கடுதொழில்வினைசெய்வித்தே. (௬)

வருபவர்க்கெல்லாமன்புற்றுதவிப்பின்மருவுநட்பா
ரிருவரிலொருவர்தம்மையிதிற்பிரிந்தவருண்டோவென்
றருமைகொண்டுரைத்துநங்களுரைக்கெதிர்யாவரேனுந்
தருவரேலவரையென்பாற்றருகுவீரென்னச்சாற்றி. (௭)

தன்பெருங்கணவன்மீண்டாருயிர்பெறச்சமைக்கும்விஞ்சை
யன்பனென்பாலினெய்தற்கானருளன்றிவாயா
தென்பனவுன்னிமின்னாளென்பரவாரம்பூண்ட
முன்பனைமுறையாற்பூசித்தருள்பெறுமுயற்சிகொண்டாள். (௮)

ஆயதோரளவையின்கணருமறைமுழுதுமோர்ந்த
ஆயமாமுனிவர்குழத்தொன்முனிமரீசியாங்கு
மேயவான்கடவுட்கங்கையாடுவான்மேவலோடும்
நாயகியெதிர்கொண்டேற்றுவான்முறைக்கடன்கணல்கா. (௯)

மாதவம்பழுத்ததன்னமாமுனியாசேநிரு
டேதொருநலனுமில்லாவெளிமைநானிருக்குமிந்தப்
பாறையிற்படர்தற்கென்னபழந்தவம்பயின்றேனென்னாத்
தீதெலாம்வினையமாகச்செப்பினான்முனிவன்றேர்ந்தே. (௧௦)

மும்மையுமொருமையாயிங்கிம்மையின்முடிக்கவல்ல
செம்மையோரெனினும்பண்டூழ்வினைத்திறந்திறம்பற்போமோ
வம்மைநீவருந்தல்வல்லையானருளிப்பானென்றே
கொம்மைவெம்முலையினாளுக்கிதையுங்கூறுவானால். (௧௧)

சந்திரமதிபாஞ்சாலிதமயந்திசனகியாதி
முந்தியவிறைவர்தங்கண்மொய்குழலவர்கள்கோடி
தந்தமதூழாற்பட்டசனக்கெடுத்தியம்பயாவ
ரிந்தமாநிலத்திலுள்ளாரென்பதுமுணர்வாய்நீயே. (௧௨)

வென்றியொன்றியற்றற்கெண்ணிவேலைசூழ்ஞாலத்தன்னை
யாளுமன்னவரிலுன்சென்றேறுமுன்னன்பினோடுந்
தான்பணிந்ததற்குவேண்டுந்தனமுதற்பிறவுந்தந்தான்
நின்விழியணங்கேநின்றன்றுதையாம்நிருபர்கோமான். (௧௩)

அங்கவன்மகளியாதலாலவன்றவமுநின்றன்
பங்கமில்கற்பும்வாளாநிற்குமோபயன்படாமற்
செங்கையின்மழுமானேந்துஞ்சிவன்றிருவருளால்வல்லை
மங்கையித்துன்பம்வானத்திரவிமுன்பனிபோன்மாயும். (௧௪)

நன்றறிபவர்கடன்பநண்ணிநிற்பதுவும்பொல்லாப்
புன்ெறுழிலவர்களின்பம்பொருந்திநிற்பதுவும்மேலை
யொன்றுமூழ்வினையினல்வந்துறினுமோர்தொடர்பாய்க்கூடி
நின்றிடாதென்னும்வாய்மைவேதத்தினின்றதன்றே. (க௫)

வருந்துதனீக்கியீசன்மலர்ப்பதமனத்துட்பாவித்
திருந்துமாதவநீநோற்கிவிடர்தவிர்ந்தின்பமெல்லாம்
பொருந்துவாயென்னச்சொன்னான்புனிதையம்முனிவற்போற்றி
யருந்தவம்புரியுமார்க்கமியாதெனவறைவதானன். (க௬)

ஈசனைப்பணிதற்குள்ளமெண்ணுவார்முதலிலீசன்
றேசுருவானவெண்ணீற்றியல்பினைத்தேர்ந்துகொண்டிங்
காசறவெவ்வேறாயபொருள்களுமமைத்துளன்பாய்ப்
பூசனைபுரிவாரந்தநெறிமுறைபுகலக்கேண்மோ. (க௭)

பூதிசாதனமல்லாமற்புகலுதற்குலகில்வேறு
சாதனமில்லையென்றுசவுனகாதிகளுக்கீச
னோதியமுறைமையீதாமென்றுமுன்னெழுதியோதா
வேதமும்பினுமற்றுள்ளநூல்களும்விளம்பிற்றம்மா. (க௮)

சிவனுருவாகுநீறுதிருவிழியாகுமக்க
மவனிறமாகுங்காவித்துகிலிவையங்கங்கொண்டிங்
கெவனெவளெனையுள்ளத்தெண்ணிமெய்யன்பினோடுந்
தவங்கனிந்தியற்றுவாரேலப்பயன்றன்னைச்சார்வார். (க௯)

நீறமைப்பதற்குப்பேறுமூன்றதாநிகழ்த்துங்காலை
யூறமையாதகர்ப்பமனுகர்ப்பமுபகர்ப்பங்கள்
வேறுவேறாகத்தூயமறைகளாகமங்கள்விள்ளும்
மாறிலாவதனிற்கர்ப்பஞ்செயுமுறைவழுத்தக்கேண்மின். (௨0)

காதிழந்ததுவுமீனுக்கன்னியுமலடுங்கன்றும்
வாதைகொள்வதுவுங்கூலமில்லதுமடிகன்றுவுங்
கோதுறுமலங்கடின்றுதிரிவதுங்கொம்பிலானு
மேதைதீர்ந்தறவுமேனிமெலிந்ததுமானபத்தும். (௨க)

உடலிடைக்குற்றமாமென்றுணர்த்துவதகற்றிநல்ல
நடையதாய்நாளும்பார்வைக்கினியதாய்நறியமேனி
யுடையதாய்நிறங்கொள்காந்தியுள்ளதாய்க்குறுகுரோம
மிடைவதாய்நிறைந்தவான்கள்விளங்குபைங்குனிமாதத்தில். (௨௨)

தண்பணைச்சாலித்தாண்மேய்ந்தம்புயத்தடநீருண்டு
நண்பினிலுரியதேவாலயங்களின்வாயினண்ணி
வட்பிடர்குடநிற்கூலங்குணக்கினில்வதிதனோக்கி
மண்படாவாகவீழ்கோமயத்தினைமனுவாயோதி (௨௩)

தடக்கையாலிலங்குபொற்றாமரையிலைதன்னிற்றாங்கித்
தொடர்குறவழும்புநீக்கித்தூயதானத்திலீசற்
றொடுத்தவைம்முகத்தில்வாமஞ்செறித்துநற்றூபதீபங்
கொடுத்துக்கோசலத்தின்மட்டித்துறும்புருடத்திற்கூட்டி. (௨௪)

உண்டைசெய்துலர்த்தபின்னருவாக்களட்டமியிலோம
குண்டமிட்டதைப்பூசித்துக்குறுங்கனற்பதடிகொட்டி
விண்டநாண்மூன்றுசென்றீசானத்திலெடுத்துவெண்மை
கொண்டகோசிகத்திற்கொட்டிவடித்தவைபாண்டங்கொண்டே. (௨௫)

அள்ளியேவாயிற்பட்டிட்டடைத்துநற்றரையில்வைத்தே
யெள்ளில்வெண்முல்லைவில்வமிலங்குபூமலராலர்ச்சித்
துன்னுசங்கற்பங்கூறிமண்டலமுருக்கொண்டேற்றிக்
கொள்ளுநீறதனைக்கர்ப்பமென்னநான்மறைகள்கூறும். (௨௬)

அன்றைக்கன்றெடுத்தேயிந்தமுறைப்படியமைத்தநீறு
நன்றதுவாகுஞ்சொன்னவனுகர்ப்பநவிற்றல்கேண்மின்
றன்றசித்திரைக்காறுவின்முட்டையைக்கொணர்ந்துதாள்செய்
தொன்றகோசலம்பெய்தந்தப்படிகொள்வாருணர்ந்தமேலோர். (௨௭)

வன்னிபட்டெலர்ந்தகானின்மருவுநீறள்ளிமுன்னஞ்
சொன்னவானைந்தாற்சேர்த்துக்கனலிடைச்சொரிந்துதூய்மை
மன்னுவதுபகர்ப்பத்தின்வரம்புகாண்வழுத்துங்காலைப்
பின்னியற்றங்கள்வெவ்வேறுள்ளதுபேசக்கேண்மின். (௨௮)

பொன்னிறமிலம்பாடெய்க்கும்பொலிமாகதநோயாற்றி
மன்னுயிரழிக்குஞ்செந்தீமாட்சிமைவடிவைமாய்க்கு
மின்னிறங்கழித்துவானின்மதிநிறமெய்துமாகி
லன்னதேயாயுள்செல்வமானருளளிக்குமன்றே. (௨௯)

இதுவறிந்தியற்றல்செய்தற்கறிவிலாரெனினுமீசன்
பதமினைத்துமிநீறள்ளிப்பூசினும்பவந்தீர்ந்தென்றுஞ்
சதுருகமுகமாய்ச்சொர்க்கஞ்சார்ந்துறுவார்களென்னி
லதுவலான்மாற்றிவேறென்னேற்றமிங்குறைவனம்மா. (௩0)

மானுரியுழுவையென்றேல்வயங்குகோசிகக்கூற்றித்
தானளவாகுநீறுறக்குலநிலந்தன்னிற்
பானுவின்வட்டமாயெட்டங்குலமகன்றபைக்குண்
மேன்மைகொணீறுபூரித்தணிவதுவிதியாமன்றே. (௩௧)

அணியவர்த்திபூவோடையம்புயத்தடங்கண்ஞாங்கர்
திணிபொருமடங்களாவின்கொட்டங்கடிகமழ்பைஞ்சோலை
மணிநிறைகோவிற்பூசைக்கமைத்தமண்டபங்கண்மேலோர்
பணையுடையசுபர்ப்பரமுமாமறையோரில்லம். (௩௨)

உத்தமமாகுந்துய்யோருறைவிடங்கூபங்கால்வாய்
சுத்தமாம்பொட்டல்குட்டமூற்றுநீர்தொகுத்தவீது
மத்திமந்தெருக்கள்சந்தியசத்தியர்மனைமற்றுள்ள
வத்தனையிடமுங்கூடாவதமமென்றருநூல்சாற்றும். (௫௩)

உத்தமதானஞ்சாயுச்சியபதந்தன்னையுய்க்கு
மத்திமதானஞ்சாரூபத்தினைமருவவைக்கும்
மித்தைகொளதமத்தாருக்கிதுபுரியாதுவீணும்
பித்தர்கள்பதமுங்கிட்டாதெனிலவர்பெறும்பேறென்னே. (௫௪)

வாமத்திலிருந்துமத்திமையனாமிகையாலீர்த்து
நேமத்தங்குட்டையாலேவலப்புறநின்றுநேரி
லாமத்தினெதிரிலீர்த்துப்புனைகுதலங்கமாமென்
றாமத்தஞ்சூடிமேனளுமையினுக்குரைத்தவீதால். (௫௫)

முற்சொன்னமுறைமையன்றியினுமொருமுறைமைகொண்டு
தற்சனிமத்திமையனாமிகைதனையுங்கூட்டிக்
கற்றவராதிகல்லார்முழுவதுங்காலந்தோறு
நெற்றிநீறிடுவாரந்தெஃறியுநன்னெறியேயம்மா. (௫௬)

அங்குட்டங்கனிட்டைநீக்கியணிவிரன்மூன்றதானும்
பங்கிட்டவுறுப்பிலுச்சிநுதலுராமுந்திபக்கந்
தங்குதோண்முழங்கைமுன்கைதகுமணிமுழந்தாள்கேள்வி
பொங்கியவெரிந்பொற்கண்டம்புகல்பதினாறுதானம். (௫௭)

பொலிநுதன்மார்புதிண்டோள்புண்ணியத்திருநீறள்ளி
மலிவிரலளவாறிட்டுவினைதன்மற்றவைகட்கொன்றா
மொலிநிறைகன்னமுச்சிபரிசித்தலொன்றேபோதும்
வலிபெறச்சதுக்கம்வட்டம்பொட்டிடன்மாசுதானே. (௫௮)

மங்குதல்வன்மைமத்திமறைபடல்விலகல்கோணல்
பங்கமாயொன்றோடொன்றுபொருந்துதல்பாரிலாறுந்
தங்கியகுற்றமாகுந்தலைநுதலகலமுந்தி
செங்கையாற்றரிப்பார்நல்லீசானமந்திரமேசெப்பி. (௫௯)

தலைநுதலகலமுந்திதவிரமற்றவைகட்கெல்லா
மலகிறற்புருடம்வாமமகோரநற்சாதமாண்பென்
றலகினிற்பெருநூற்கொள்ளையோதினததுவுமன்றிச்
சிலைநுதலணங்கேநான்குவேதமுஞ்செப்பிற்றன்றே. (௬௰)

பொருவியசந்திமூன்றுங்கனற்கையார்புனலினோடு
மருவுதல்செய்வார்மத்தியானமேல்வினைவரவ்வா
றுரியநாட்பகன்முன்பின்னிலுற்றநீர்மாற்றித்துய்ய
வரிவையரோடுமாருவிரதருமணிவாரம்மா. (௬௧)

ஆயநான்மறையோராதிமுனிவர்க்குமரியவீசன்
னேயமுற்றவர்க்குக்கற்பநெறிமுறைமற்றிரண்டி
லாயதிக்கையினேர்க்கொன்றுமலாதவர்க்கொன்றுமாக
தூயநான்மறையாறங்கநூல்களுந்தொடர்ந்துசொல்லும். (சஉ)

மறையவர்வனைவர்பாதம்வரையிலுத்தூளஞ்செங்கோ
லிறையவருந்திமேலிட்டேற்றவர்வணிகராஞேர்
குறைபடாப்பட்டம்போலுமணிவர்சூத்திரர்குன்றாத
பிறையெனவிரலான்மூன்றுநீற்றணிபிறங்கச்செய்வார். (சங)

இம்முறைதெரிந்தம்வாளாவிகழ்ந்துகைதீண்டாதுற்ற
வெம்மையர்விலங்காய்ப்புள்ளாய்ப்புளினுமாய்மெலிந்துவெந்திச்
சும்மைவானாகில்வீழ்ந்துதொலைவாற்றுறைதேராதா
ரம்மைபாகனையேபோற்றிப்புனைவரேலருள்கொண்டுய்வார். (சச)

மந்திரம்வணச்சநோன்புயாதவம்வேள்வியாதி
வந்துளவினைகட்கெல்லாங்கற்பமேவாம்பாமென்ன
முந்துநான்மறைகள்சொன்னமுறைமையீதாகுமித்தச்
சுந்தரத்திருநீறன்றித்தொழிலொன்றுந்தொடங்கார்தூயோர். (சரு)

ஈசனல்லுருவத்துட்பூத்தெழுந்தநீறிதனைமுன்னை
வாசவனாதிவானேர்வனைந்தனரவ்வாறேரு
மாசறவானகட்கோரோரவயவமாகியெனறந்
தேசுறவிருந்தலாலவ்வான்களேதெய்வமாயால். (சசு)

இந்தநின்மயத்தைமேற்சொல்விதிப்படியியற்றுநீறந்
தங்குவைதிகஞ்சைவஞ்சாற்றவைதிகந்தனனிற்
பங்கிரண்டிளதுசைவத்துன்னதுபங்குமூன்று
மங்கதுவாகுங்கற்பமனுகற்பமுபகற்பங்கள். (சஎ)

வேதனுாதன்மார்க்கண்டன்விராடனத்திரிவசிட்டன்
சிதமெனமுகத்தான்சாவித்திரிசிமந்தனிமற்றுள்ளா
ராதியினேற்றப்பெற்றபேறும்பின்னவர்களேற்ற
சாதையுமுனக்குத்தோன்றுவளதுகொல்கழறுதற்கே. (சஅ)

சின்றதோர்கற்பமாதிசெறிகடந்திதற்குமுன்னம்
கன்றடைந்தவர்கள்கோடிநானறிந்தளவிற்கொஞ்ச
மின்றனக்குரைப்பக்கேண்மோவெரிதிரைக்கடல்சூழ்வைப்பி
லொன்றியெவ்வளமுந்தாங்குமுத்தரத்திசைக்கணமமா. (சகூ)

வேறு.

பருவந்தளவத்தாரணிந்ததிருமான்மனைப்பொன்மலர்க்கழலைப்
பரவும்பூசைனிதியற்றித்திரிவான்போறும்பலதெய்வம்
விரவிப்பழிப்பான்பழிக்குலவாமகாலயம்போல்வெறிதுடையா
னொருவனுசிப்புறக்கறுளானிரக்காவரக்கப்பெயருடையான். (ருo)

கையிற்பொருளைநான்றுறினுங்கொடுகானொருவர்கைப்பொருளை
நொய்திற்கவரும்பாதாளகாண்டிவிரகநோய்பிணிக்கத்
தையலொருவேசையினிருகண்வலையிற்சாம்பித்தனமனைத்து
மையோகொடுத்தானவடனைத்தாற்பின்னுந்தன.த்துக்கலைவானால்.(௫௧)

காடேதுறுவான்கொலைபுரிவான்கரவுபயில்வான்பொய்க்கரிக்குக்
கோடேபுகுவான்பொருளெனிலோகுறியான்மானநவைகுறியா
னூடேதிரிவானவன்குலத்தோர்நல்லோர்வல்லோரெல்லோரு
மாடேகரமேகெடுபூடேயெனச்சொல்வசையுமகிழ்ந்தேற்பான். (௫௨)

இச்சையடைந்துமூரூராயெய்திப்பொருள்கைக்கிலனாகிப்
பிச்சையெடுத்துநாட்கழிப்பான்பினுமங்கதுவுங்கிடையானா
யச்சமுறுத்தவேசைமயலதன்மேலுறுத்தவரும்பிணிநோய்
மிச்சமுறுத்தநடைதளர்வுற்றரவைப்பிணம்போல்வெளிகிடந்தான் ()

அங்கணடைந்தனுமவிகுப்பைச்சாம்பரணிகாலுறவூன்றித்
தங்குமவன்றனுபியுரநுதலின்மிதித்துத்தணந்தேக
விங்குகிடந்தானுயிரிழப்பவதனைக்கவர்வானிருட்படல்போற்
பொங்குநிறங்கட்டழற்சண்டனொற்றர்புகுந்தார்பொருக்கெனவே.(௫௪)

ஆழிவலவன்கணத்தவருமடைந்தாரீசனடிபரவும்
வேழமனையகணத்தவரும்வந்தார்வாதம்விளைத்திகலிச்
சூழுஞ்செருச்செய்தெமன்கணத்தின்றலைவர்தமையுந்துளவனடி
வாழுங்கணத்தின்றலைவரையும்வாட்டிக்கயிலைவாழ்கணங்கள். (௫௫)

பொன்றிக்கிடந்தானுயிரைமணிவிமானத்தலையினிடைபொருத்தி
நன்றிக்கைலைவருமவரைப்பின்னுந்தடுத்துநான்மறையோன்
றன்றிக்கடைந்துகூறுதலுமவனுமங்குதான்புகுந்து
வென்றித்தலைவர்மூவரையுங்கேட்பவெமன்றூதரும்விரிப்பார். (௫௬)

ஐயாவிவனுமறக்கொடியன்றேவைக்கோவையந்தணரை
வையாநின்றுமீனரிலமருவாநின்றுமறைமறந்தும்
வெய்தாயுறைந்தானெமதிறைவனதற்குத்தண்டம்விதிக்கவெணி
நொய்திற்செலுத்தப்புகுந்தனமாலெனமாலவன்பாலவர்நுவல்வார். ( )

தேவேயெமதுதிருமாலுக்காழ்வாரிவர்த்திருத்துளவக்
கோவைக்குறித்துக்கெடாதவட்டாட்சரத்தைக்குறித்துக்கூறுமறைப்
பாவைக்குறித்துநிதம்பூசைப்பணியைவிலகாதியற்றிவந்தார்
மேவற்கரியவைகுந்தங்கொடுபோவற்கேமிடைந்தனமால். (௫௮)

என்றார்பரமன்கணத்தலைவர்தமைநான்முகவனினிதிறைஞ்சித்
துன்றுமறைப்பண்ணணிசைமொழியாற்றுதித்துக்கேட்பவருமையா
வொன்றுமறியோமிழிகுலத்தோருயர்ந்தகுலத்தோரெவரேனும்
பொன்றுபொழிதின்றணிந்தாற்கைலைக்கிறைபாற்புகுத்திடுவோம். ()

அதனாலிவன்றன்சடத்தினொருமூன்றுதானத்தணிபரமன்
பதனான்குகத்துந்தாற்குரியநீறுபதித்தான்பாருமென
விதனாய்மிதித்தபதத்துணைக்காட்டவேதன்மிகமகிழ்ந்து
கதயாற்றுவதற்குளத்திலெண்ணிக்கனிவாயிதனைக்கழறுவனால். (சுய)

உலகம்படைப்பேன்படைத்தளிப்பானொருமாலவன்முத்தொழிலோடி
கலகிற்றொழின்மற்றெத்தொழிலும்படைத்துக்காத்தேவழிக்கவல்லா[ங்
திலகனவனுமம்புகல்வோர்தெரிசித்தோரங்கவர்க்கண்டோ
ரிலகுதிருநீறணிபவர்களிவர்கட்கிமவாதனையிலவாம். (சுக)

ஆதலாலிங்கிவற்றடுப்பதழகன்றென்றேயயனுரைத்துப்
போதவிண்டுசெண்டனுலகத்திற்றாதுவரும்புகுத
வேதங்கழிந்தும்புண்ணியனாய்மேவுமறையோன்றனைப்பரமன்
பாதம்பரவவிரைவினுயிர்பற்றிப்போனார்பரிவாக. (சுஉ)

வேறு.

நீற்றினுக்குள்ளபெருமைகழ்த்திறனேகமலன்கண்ணெனன்
றேற்றியவணிகொளக்கயணிகளினியல்புமுற்று
மேற்றுடையவனல்லாலெம்போலியாளவையெண்ணிச்
சாற்றிடமுடியாவாமென்றுள்கினுஞ்சமைத்தல்கேண்மின். (சுங)

வேறு.

உச்சியிலொன்றுசிரத்தினாற்பதுகாதொன்றினுக்காறுபொற்களத்தி
னச்சுவதெண்ணான்குரத்தினாற்றெட்டுமாணிலந்தன்னிலுள்ளவர்க
ளிச்சைகூர்ந்தென்றுமுருத்திராக்கமெழில்பெறத்தரிப்பரேலவரை
வச்சிராயுதன்மாலயன்முதல்வானோர்வணங்குவார்சிவமெனமதித்தே. (சுச)

ஒருமுகமைந்துமுகம்பதினொன்றேயேர்முகம்பத்துநான்கான
திருமுகமணிகொண்டணிபவருலகிற்றிருவெலாமொருங்குறத்துய்த்து
வருமுகந்தோறுந்தம்புகழ்மாயாதிருப்பர்காண்மற்றினியொன்றே
குருமுகங்களிற்சென்றறிகுவர்மனத்திற்குறித்ததுசெயத்துணிகுவரே. ( )

ஒன்றினுக்கொன்றொன்றேறியமுகங்கொண்டொளிர்மணிக்குவைகளிலொ
ன்று, தன்றிருமெய்யிற்றரித்துநீர்குடைவார்தமக்குப்புண்ணியநதிபலவுஞ்
சென்றுவந்தாடிப்பலனெலாங்கிடைக்குந்தெறியலகைபேய்பூத
மொன்றினும்வருந்தாரும்பருக்காசாயுயர்பதமுதியினுறுவார். (சுசு)

உருத்திராக்கப்பெருமையீதாகுமோங்குகாவியத்துமின்பக்கமை
விரித்திடக்கேண்மின்காவியேவிமலன்மெய்க்கிறமென்னநான்மறைக
ளுரைத்தனவதனைக்காணினுங்காணார்குளத்தினுணினைப்பினுமவர்கட்
கருத்திகொளெதவுங்கைவருமென்றரன்றிருவாணைதிச்சயமே. (சுஎ)

நவைபடாநங்காயிம்முறைநங்யுநற்றவநோற்கவென்றுரைத்தாங்
கிவைதிருநீறுகண்டிகைமுதன்மற்றிவைதுகில்வைமெனச்சிறந்த
செவைபெறச்சிவசாதனமளித்துஞற்றத்திகழ்திருமந்திரம்புகன்றே
கவைதரும்விரதநோற்குமாறிதனைக்கழறுவான்றன்மனங்கனிந்தே. ()

சிவந்தனக்குரியவிரதமெட்டாகுந்திங்களாதிரைசிவனிசிமுன்
றவந்தரும்பரஞோன்புமாமகேச்சுரங்கேதாரஞ்சூற்படைமதால்லவிரத
முவந்துசெய்வதுவாமதுவெலாமொருங்கேயுதவுவதிங்கஞோன்பந்த
நவந்தருநோன்புநோற்குநாளவதினானறிந்துள்ளவாநவில்வேம். (சுகூ)

வேறு.

முதற்பெருங்கடவுள்சன்மொய்குழற்சத்திமாருட்
பதப்பெருமுதல்விமுக்கட்பரையென்பவவர்கட்கான
விதப்பெருநோன்புகட்குட்டிங்கஞோன்பெனபவெண்ணின்
மதப்பெருநூல்களாதிமறைகளும்வழுத்திற்றன்றே. (எ0)

ஆதலான்மதிநாட்டொட்டுமும்மதியளவுங்கஞ்சப்
போதலர்வாவிவாசப்புனல்படிந்தரையிற்காவி
மேதகவுடுத்துநீறுமெய்யணிந்தக்கமாலை
கோதறவிதியிற்சொன்னவுருப்பெலாங்குலவப்பூண்டு. (எக)

மல்லிகைபிச்சிமுல்லைவனசமந்தாரைவில்வம்
வல்லனகொண்டுவேழமுகவனைமுதலிவாயாற்
சொல்லுசங்கற்பங்கூறித்துணையடிதொழுதுவேலன்
நல்லபொன்னடியையவ்வாறர்ச்சித்துநயந்துபோற்றி. (எஉ)

பாவனைக்குரியவீசன்படிவமுப்பதுகளஞ்சுக்
கேவளவேனுமேற்பட்டிருக்கினும்வெள்ளிதங்க
மாவதுகொண்டிலிங்கமாவடையடைவேயாற்றி
காவியங்கட்பிராட்டியுருவுமவ்வாறுகண்டே. (எங)

கனியமுதைநதானைந்துகரியமுதைந்துகூட்டி
யினியநீரிளநீரிக்குநீர்பனீரியல்பானன்னீர்
நனியுறுதயிலஞ்செந்தேன்சந்தனநலங்கொண்டாட்டித்
தனியவிர்பசுமபொற்பட்டுத்தரித்துவெண்ணீறுசாத்தி. (எச)

மணிமரகதம்வெண்முத்துவயிரந்துப்பவிருஞ்செம்பொற்
பணிபலகூட்டிப்பள்ளித்தாமம்பைந்தாமங்கோவை
யணிபெறமார்பிற்சூட்டியறுகெருக்கலர்பூந்தும்பை
திணிமுடியிலங்கச்சேர்த்தோராயிரம்பெயருஞ்செப்பி. (எரு)

ஆயிரம்வில்வங்கொண்டேயருச்சனைபுரிந்தவ்வாறு
காய்பசலிரவுக்காழுவிருகாலந்தாழா
தேயவன்போடுபார்வீழ்ந்திறைஞ்சித்தன்குறைகண்முற்றும்
ஈயகதீர்க்கவென்றேக்கருள்கெனநவின்றுபின்னர். (எசா)

ஒருபொழுதுண்டுமற்றைப்பொழுதெலாமுறக்கநீத்து
வருபொழுதானமூன்றுமதிவலையினுமோர்ப்போர்க்குத்
திருவலகரிதேர்வாசிசிவிகைபொற்கவிகைசெம்பொ
னருமணிப்பணிதாசனமளிப்பதும்விதியாமன்றே. (எஎ)

மூவெழுவிரதந்தன்னின்முதலுளவிரதமீதென்
றேவருநதேவர்தாமுமறைகளுநிசைத்தபொல்லாப்
பாவர்களெனினுமின்றேன்பாற்றவார்பக்கமோர்கான்
மேவுவார்பாதைதப்பியாயினும்விடுகோண்பார். (எஅ)

ஒன்றுபாதலம்பார்வான்மூன்றுள்ளவரனந்தகோடி
நன்றுகொண்டாற்றிப்பெற்றபேற்றினைநவிற்றற்காகா
தென்றுமாமுனிவன்கூறியுத்தாதிசைக்கனேக
மன்றுபோயவனட்டிங்கனேற்பதற்கமைந்தாளம்மா. (எகூ)

பூசாவிதிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் உரு-க்குத்திருவிருத்தம்-கஉஅச.

---

# பூலோகரம்பை பூசவிழப்படலம்.

மும்மையுந்தருசெல்வமுழுவது
மிம்மையிற்றரவேண்டினர்க்கியவே
யம்மையோடுதென்கூடலமர்ந்தெளி
தெம்மையாண்டருளீசனையேற்றுவாம். (க)

முனிவன்பூசைவிதிமுறைமுற்றிலு
மினிதுகூறியகன்றபினிங்கிவள்
புனிதனேன்புபுரிவதற்சேயுளம்
கனிதுகொண்டவதன்மைநவிற்றுவாம். (உ)

வேறு

விடியமுன்னெழுந்துவாசமென்புனல்படிந்துகாவி
துடியிடைக்கணிந்துமெய்யிற்றவளவெண்ணீறதோய்ந்து
முடியிருசெவிபொற்கண்டமுன்கரந்தோணிண்மார்பு
படிதாவக்கம்பூண்டுபேட்ர்சடைப்பாப்பியம்மா. (ங)

சிவனுதல்விழியிற்பட்டசிலைமதனுருவமீண்டாங்
கவனுழைவாங்குகின்றவான்றிருமகளைப்போலுந்
தவவடிவணிந்துநித்தக்கடன்முறைசமைத்துப்பின்னர்
நவநவமாகவந்தோர்தமக்கெலாந்தானநல்கி. (௪)

பிறைநுதன்மடவாள்பெண்மைக்கேற்புறுபெருமைவாய்ந்து
நறைபடுதருக்கணுணநவமணிவெறுக்கைதூசு
மறையவர்குருக்கள்வாணர்வறிஞர்மற்றிரப்போர்க்கெல்லா
முறைமுறைவழங்கியீசன்பூசனைமுடிக்கநேர்வாள். (௫)

பொன்னினாவீசனாதிதிருவுருமுழுதம்பூவை
யுன்னுமுனிருமித்தாங்குப்பிரதிட்டையுடனேயாற்றிச்
சொன்னசிப்பிகட்கும்பூசைத்தொழில்புரிபவர்க்குஞ்செம்பொன்
றன்னுளப்படியேநல்கிப்பின்னிவைசமைக்கநேர்ந்தாள். (௬)

அமுதமோரைந்தானைந்தோடாரந்தெங்கருந்தேன்பன்னீர்
கமழுநெய்நறுநீரின்னபூரணகலசமாட்டித்
தமனியத்தூசுசாத்தித்தனிமணிப்பணிகள்பூட்டிக்
குமிலவண்டிதழிவில்வங்கொய்யறுகலர்பூவேய்ந்தே. (௭)

தித்திப்புப்புளிப்புக்கைப்புத்துவர்ப்புக்காருவர்ப்புச்சேர்த்து
மத்தித்தவன்னமாதிநிவேதனம்வழங்கிப்பின்னு
நத்தித்தன்கையாற்றீபதூபமுநனிதுநல்கிச்
சித்தத்தினன்புகொள்சோடசவுபசாரஞ்செய்தே. (௮)

மறைகளாயிரஞ்சொன்னாமமுழுவதும்வாயாற்கூறிப்
பிறைகளார்கடுக்கைநாகம்பிறங்குசெஞ்சடிலன்றாளி
னிறைமலரொன்றொன்றாகவருச்சனைநிரப்பிமாது
முறைமைகொண்டினிதுபோற்றித்தன்குறைமொழிவாணின்றே. (௯)

சோதியாய்மூலாதாரந்தொட்டுநீண்மேலாதார
மாதியாயனாதியாகியைம்பெரும்விரிவாய்த்தோன்றும்
பூதமாய்க்கலந்தவிச்சைப்பொருட்படத்தோற்றிநின்ற
நாதனேபோற்றிபோற்றிநண்பனேபோற்றிபோற்றி. (௧௦)

கற்றவர்வளைத்தாய்போற்றிகாமனைக்காய்ந்தாய்போற்றி
யுற்றநஞ்சயின்றாய்போற்றியுவாவுரிவுடையாய்போற்றி
புற்றரவணிந்தாய்போற்றிபுலிவளர்பதத்தாய்போற்றி
நற்றவர்க்கருள்வாய்போற்றிநான்மறைநாதாபோற்றி. (௧௧)

எங்குமாய்நிறைந்தானந்தவின்பமேவடிவாய்த்தோன்றி
யங்கங்கேயமர்ந்தாய்போற்றியடியருக்காளாய்நாளுந்
தங்கியகருணைவள்ளானின்பெருந்தாளைச்சேர்ந்த
மங்கையென்மனுவேற்றயக்கவந்தருள்புரிவாய்போற்றி (௧௨)

என்றுறுபிறப்புக்கெல்லாமிழிந்திழிக்கடையதான
பெண்ணுருப்பிறப்பிலென்னைப்பிறப்பித்துப்பெறும்பேர்கொள்ளா
வண்ணநீபுரியநான்செய்வல்வினைப்பயன்றானென்னே
கண்ணியகுறைநோக்காதுலகயந்துதவுநாதா. (கங)

முப்பரம்பொருளேயாதிமுதல்வனேயாப்தர்போற்று
மப்பனேயெளிமைவாய்ந்தவடிமைநான்புரிந்தகுற்ற
மெப்படிக்கிருந்தபோதுமீண்டருள்சுரந்திங்கின்றே
கைப்படுத்தெனையாட்கொள்ளக்கருதுவாய்கருணைமூர்த்தி. (கச)

மனக்குறம்பகலாநீலிவஞ்சனைபுரியமாய்ந்த
வெனக்குமகிழ்ந்தளவிலையதியென்றேநீமீண்டுங்
கனக்குறம்படிநான்வாழக்கருணைநீபுரியாயென்னி
லுனக்குமுன்பழிபோட்டாவிதுறப்பலிதுண்மையென்றே. (கரு)

நனவினிவிடைவிடாதிவ்வாறுரைநவின்றுபோற்றிக்
கனவினுமறவாட்சோர்நாட்கங்குலினகனவின்மெய்யிற்
புனைதிருநீறங்காளகண்டமும்புரிமுன்னூலும்
பனிமதிச்சடையும்பார்த்தட்டணிதருபடிவமோடு. (கசு)

சங்கரனங்கைகண்முன்சார்ந்தின்றணங்கேநீயும்
பங்கமுற்றழுக்கேனிற்காம்பயன்படுசருமமுற்று
நிங்குணதமைச்சனெய்தவானவனுலெய்துஞ்
செக்கதிர்ப்பனிபோன்மாய்ந்துதின்பெலாஞ்சிதையுமாலோ. (கஎ)

என்றுவந்தருளித்தன்பாலடியருக்கெளியனான
மன்றணின்றருளெக்கண்வானவன்மறைதலோடுந்
தன்றுயினீக்கியின்பந்தழைந்தவகையளாய்ச்செங்கை
யொன்றிடத்தலைமேற்கூப்பியிறைஞ்சியேவுருசண்போக்கி. (கஅ)

ஈரிருமறையோடாறுசாத்திரமிரண்டெட்டுப்
பேர்பெறுபுராணமுப்பத்திரண்டுபேசிடதம்பின்றுஞ்
சாறுபத்துநான்குசால்கலைக்கியானமாதி
நேருறுதொண்ணூற்றாறுதத்துவர்தமுஞ்சூழ்ந்தே. (ககூ)

தருவியேதெரியாதற்றத்தங்களிற்றுயரக்கூர
வருபெருந்துரியாதீதமணிச்சுடர்ப்பப்புஞ்சோதித்
திருவருமலினம்வாய்ந்தசிறகன்றூர்சிறுமிதோக்
கருணைதந்தகன்றபோனகளிவுமென்கண்ணதன்றே. (உ௦)

மலவலிவினையாற்சிக்கிவருந்துமாதேயமான
வலிவிக்குரியதாராதவோவென்றபோற்றித்
தலைவிமாதவம்விடாமற்சரித்தனஞ்சலிப்பொன்றின்றி
சிவமிசையிருந்தான்மாண்டகணவன்மேனேயநீட்டி. (உக)

மடக்கொடிபுரியுஞ்சூட்சிமாதவவினைதேராம
லடிக்கடிவொற்றுள்விட்டுக்கேட்டுமேலடங்காவோகை
தொடுத்தநெஞ்சினனாய்மன்றல்சூட்டுநாடுருவிநோக்கி
யெடுத்தகைவிரல்கடேயவெண்ணிவீற்றிருந்தான்வேந்தன். (உஉ)

மங்கையுங்கணவற்காகமாதவம்வலித்தாள்வேந்த
னங்கவள்சொலுநாளெண்ணியணிவிரல்வலித்தான்முண்டை
யெங்கணுமகனைத்தேடவேவலாட்போக்கிச்சீமை
பங்கிடவலித்தநெஞ்சோடிருந்தனள்பாதைபார்த்தே. (உங)

பூலோகாம்பை பூசனைப்படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம்-உசு-க்குத் திருவிருத்தம்-கங0ச.

---

# மந்திரியாத்திரைப்படலம்.

பாவனையைப்பாவனைதீர்ந்ததீதமான
    பழம்பொருளைப்பேசரியபான்மைக்கெட்டா
மேவியசற்காரியயூகத்திற்றோற்றும்
    விவேகநிறையானந்தவெள்ளந்தன்னை
மூவிதமாகியதலத்துந்தானேதானாய்
    முதிர்ந்துநின்றமுழுமுதலைமலத்தான்மூடுஞ்
சீவனுக்காதாரமுறுஞ்சாட்சியான
    சித்துருவைநித்தியத்தைச்சிந்தைசெய்வாம். (க)

வேறு.

வாக்குமெய்மனதுமாறாமாதவம்வரித்துநின்ற
தாக்கணங்கனையாட்குற்றதன்மையீதபசைநீத்த
வேக்கரவாலூண்டுக்கமிழந்திருவிழிநீரோடக்
கூக்குரல்கொண்டுதேடுமமைச்சியல்கூறுகிற்பாம். (உ)

சடையும்வெண்ணீறுஞ்சங்கக்குழையுஞ்செங்காவிசாந்த
வுடையுமுந்நூலும்யோகத்தண்டுமானுரியுங்கையிற்
குடையுங்காவடியுந்தாங்கியுண்பலிக்கலனுங்கொண்டு
விடைவரும்பரமன்போலுமெய்த்திருவேடம்பொங்க. (ங)

இரவுநீள்பகலுந்தூக்கமிழந்துணவிழந்துவாயா
லரகரசிவாவென்றோதுமொலியமுதாமென்றோர்ந்தோர்
விரிசெவிபருகத்தோய்ந்தமெய்யினீர்பிழிகண்ணீராற்
கரையவுள்வருந்தியங்கந்துரும்பினுமெலிந்துகாட்ட. (ச)

காவலர்ந்தங்கமெல்லாநடுக்கிநெட்டுயிர்ப்புவீங்கிப்
பூவலர்ந்ததுபோனெஞ்சம்புலர்ந்திடப்புறம்பிற்கண்ட
பாவையர்மைந்தர்வான்செல்பறவையூர்வனவிலங்கு
கேவலித்தழுதனன்றன்பினிற்பெருங்கேதங்கூர. (௫)

படுத்திடானிருக்கானில்லான்பல்பெருங்காதமெல்லாந்
தொடுத்தொருகாதமாகவனிலம்போற்றுருவிச்செல்வான்
றடுத்திடைக்கண்டுகேட்டோர்க்கரசொடுதான்வந்துற்ற
தெடுத்தெடுத்துரைத்துக்கண்ணீரிறைத்திறைத்தேக்கங்கொள்வான்.

அல்லும்வெம்பகலுமோயாதலைகடற்புடவிக்குள்ள
வெல்லைகண்முழுதும்போய்ப்போய்த்தேடுவானிதயத்தெண்ணிப்
புல்லொடுபுதருஞ்சூழ்ந்தபுறவமும்பொழிலுமான்மேய்
கொல்லையுங்குறிஞ்சிக்காடுங்குடியிருப்பிடமுங்காண்பான். (௭)

பல்லிபாம்பெறும்புதேரைபறவைவன்மிருகமாதி
சொல்லியவுயிர்களெல்லாமொன்றொன்றாய்த்துருவிநோக்கி
நல்லனமனிதர்க்குள்ளுநாடியென்னாடுந்தேடிச்
செல்லுமிங்கிவனைக்கண்டாரியாவரேயுணர்வதீரார். (௮)

அங்கமாந்திரமிலாடமவணக்கன்னடங்காசஞ்
சிங்களமாடமக்கஞ்சினஞ்சோனகநேபாளம்
வங்கம்வங்காளம்போடமகதமச்சரங்காஸ்மீரங்
கொங்கணாடதக்கொல்லிகூர்ச்சரங்குருகுலிந்தம். (௯)

பப்பரம்பாண்டிசோழம்பல்லவம்விதர்ப்பமீழஞ்
செப்புகேகயம்பாஞ்சாலந்திராவிடந்துளுவமாதி
யொப்பெருந்தேயமெல்லாமொன்றொழியாதுபோய்ப்போய்த்
தப் பறநாடிக்காணாதாகினான்றருக்குத்தாழ்ந்தான். (௰)

கானென்னமலைதானென்னகடலென்னசிறிதாதேட
னானென்னபெரிதாவென்றலைந்துதன்கன்றுமாய்ந்த
வானென்னவறிவுமாழ்கியாருயிர்தனையுநீக்கு
வானென்னவொருபூந்தேமாமாநிழல்வந்துபுக்கான். (௧௧)

புக்கவன்பசியுந்தண்ணீர்த்தாகமும்பொருந்தியாவி
யுக்கமண்மீதுசாய்ந்தானுணர்வுபோய்மூர்ச்சையாகித்
தக்கவன்றயின்றுறுதிதற்பானிரங்கியாங்கு
மிக்கிவன்கனவிற்றோன்றுந்தன்மைகொண்டெதிரின்மேவி. (௧௨)

காவிதோயுடையும்யோகபட்டியுங்கவின்மான்றோலு
மேவவெண்ணீறுஞ்சங்கமிளிர்குழைக்காதுங்கிளார்
கோவணப்பொலிவுங்கையிற்குடையுமுந்நூலுந்தண்டு
நாவினில்முதமன்னபாடலுநனிதகாட்டி. (௧௩)

அல்லல்கூரமைச்சன்பானின்றமைச்சரின்றுன்பமெல்லாஞ்
செல்லுநாளரசன்வந்துசேருநாளணித்தாயுற்ற
தொல்லையிற்றரங்கஞ்சிந்துமுவரிசூழுலகினீயும்
புல்லியகவலைநீங்கிவிசையமாநகரிற்போனால். (௧௪)

மற்றுளபொருள்களெல்லாந்தேற்றுதும்வருந்துறாம
விற்றெழுந்தேகுவரென்றிறைதிருவருள்கொண்டோதி
யற்றகன்றிடக்கண்டுக்கமகன்றவன்விழித்துக்கண்ட
நற்றிருக்கனவினீர்மைநயந்துளங்களிப்புநல்கா. (௧௫)

தன்னுருகண்பாடெல்லாந்தணந்தன்புதழைப்பவீசன்
பொன்னுருசித்தவேடம்பொலிந்துநின்றருளிச்செய்த
நன்னலந்தனக்குநாயேன்செய்தநற்றவந்தானேதென்
றுன்னினானிரண்டுகையுமுச்சிமேற்குவித்துச்சொல்வான். (௧௬)

போதுளான்புணரியுள்ளான்புகுந்தினந்தேடிக்காணாப்
பாதசேகரமுந்தூயபனிமதிமுகமுமென்க
ணாதரித்திடவோர்சித்தவேடங்கொண்டருளிப்போன
நீதமென்னளவதாக்கிநினைப்பருந்தகைமைத்தன்றே. (௧௭)

ஆதியேயநாதியானவப்பனேயொப்பில்லாத
சோதியேசுடரேயிந்தத்தொல்லைமாஞாலந்தன்னி
லேதொருநலமுமில்லாதிழிந்துநாயினுங்கேடான
பாதகன்றனக்காயிங்கணெளிவந்தபான்மையெற்றே. (௧௮)

வில்லினாற்பிரம்பாற்காலானின்றிருமேனிக்கந்நா
ளல்லல்செய்பவற்குமாறாதலர்சொரிந்தன்புகாட்டிச்
சொல்லணிபவற்குமொன்றாய்வேற்றுமைதோற்றாவண்ணம்
புல்லநல்லருள்கொண்டெய்த்தோய்க்கிதுவுமோர்பொருட்பாலாமோ. ()

இயக்கமற்றங்கிங்கெண்ணாதெங்குமாய்நிறைந்தவள்ளல்
வியக்கவென்கனவிற்சித்தவேடங்கொண்டருளிச்செய்த
நயக்கரும்பொருளுமெய்யேயல்லதுநாயேனெஞ்சின்
மயக்கமென்றறிதல்கூடாவென்பதோர்மகிழ்ச்சிவாய்ப்ப. (௨௦)

பார்மிசைவீழ்ந்தாங்கீசன்பதமலர்பணிந்துபோற்றிக்
கார்வரைக்காடுங்காடுங்கனிதருசோலைக்காடு
நேர்படவொதுக்கிக்காசிநின்றரன்றனைவந்தித்துச்
சீர்தரும்விசையநாட்டைத்தென்முகம்வைத்துச்செல்வான். (௨௧)

அந்நகர்நோக்கிமூன்றுநாணடந்தயனாட்காலை
மன்னெறிசெல்லுமந்தமந்திரிதனக்குமுன்னாற்
சொன்னவந்தணர்கள்வாணர்சோதிடர்வறிஞோராதி
யெந்நிலத்தவருமாங்கனொருநெறியேகக்கண்டான். (௨௨)

அன்னவரேகுஞ்சுட்சியினதெனவறியானேனுந்
தன்றுறுசெலவுக்காண்டோர்சார்பெருந்துணையாமென்றுங்
குன்னியேவிரைவிற்புக்குநடந்தனனுடன்றைதயாக
மன்னியநட்பால்வேண்டுங்கருமங்கள்வாய்ப்போக்கிட்டே. (உ௩)

ஒருத்தனையுவந்துநோக்கியுனைதருமூப்பாற்றுன்பம்
பொருத்துளிர்நடத்தற்கென்றேபொருட்படுங்கவைதானீங்கெ
ணருத்தியாலெவருஞ்செல்லுமடைவென்கொலருண்மினென்று
விருத்தனுமிவனைநோக்கிநகைத்திவைவிளம்பலுற்றான். (உ௪)

எந்தவூரப்பாதம்பியிப்பெரும்புதுமைகேட்க
வந்தனையறியாய்சொல்லோமானிலந்தனிலெஞ்ஞான்று
மிந்திரபதியையொக்கும்விசையமாநகரினேந்த
லந்தணமடவாட்கொண்டோர்மங்கையையழைத்துவந்தான். (உ௫)

மங்கையுமன்றுமாதம்வரையொருவிரதம்வைத்துச்
சங்கையில்லாமலன்னதானமும்பொருளும்வாறி
மங்குறுந்தருநாணவழங்கினளென்றுமோசை
யெங்கணும்பரவக்கேட்டாங்கேகுமிக்கூட்டமென்றான். (உ௬)

நம்பிநீதன்றிவேறென்றிலையெனச்சாற்றிநீயு
மெய்பினால்வருவதானால்வாவெனவெழுந்துநொய்திற்
கம்புகண்கைகாலாகக்கலைப்புக்கொண்டோய்ந்தமூப்பன்
றும்பிபோறபறந்தானன்றனவாவிளைச்சூழநோக்கி. (உ௭)

புன்னகைபுரிந்தன்றன்சொற்பொருள்குறித்தாய்வானிசன்
சொன்னதோர்கனவின்குட்சிரமித்தமுமிவன்றன்சொல்லு
முன்னிடிவிதற்குளேதோர்புதுமையுண்டதனுனித்த
மன்னனைக்காண்டற்கானகாலமும்வாய்க்குமென்றே. (உ௮)

எண்ணியக்கூட்டத்தோடேயேகினன்விசையநாட்டை
நண்ணினனுவணம்போத்தாலத்தருகுறிக்கொண்டார
கண்ணினுநேர்ச்சியுள்ளங்களிப்பினனடப்பான்செய்த
புண்ணியம்போலவூர்வாழொருவன்வந்திவன்முன்புக்கான். (உ௯)

புக்கவன்றன்னைநோக்கிப்புலமகன்றன்முன்னீத்த
தக்கமன்னவனைக்கண்டதாமெனத்தழைக்குமன்பாற்
பக்கம்வைத்துறவுகூறிப்பலவிதநலம்பாராட்டி
மிக்கருட்சியினுலன்றன்பாலிவைவினவலுற்றான். (௩0)

எந்தவூரிருந்துநீவிரெங்குபோவதற்காயிங்கு
வந்துளிரிந்தவூரின்மார்க்கத்திலெவருங்கூடிப்
பந்தியாய்த்திரண்டுசெல்லும்பான்மையென்பகருமென்றே
மந்திரிபகரக்கேட்டவமுவிலான்வமுத்துகிற்பான். (௩௧)

இந்நெறிக்கெதிர்ற்றேன்றும்விசையமாநகரிருந்தென்
பன்னிவாழ்பதிக்குச்செல்லப்பயணங்கொண்டுற்றேனையா
நன்னகராள்வான்வேட்டைபோயொருநாரிதன்னை
மன்னியமறையாட்கொண்டுவரித்தனன்வந்தமாதும். (௩௨)

சத்திரங்கட்டியன்னதானஞ்செய்கொடியுங்கட்டி
யெத்தனைபேரென்றாலுமிராப்பகலோய்வில்லாமற்
புத்தமுதளித்துவேண்டும்பொருள்களுமீந்தாளந்த
வுத்தமிமதியமூன்றுவரைக்குமோர்நோன்புண்டென்றே. (௩௩)

அன்னசத்திரத்துக்கேகுமிப்பெருமநீகமென்றே
சொன்னவனிடத்திற்பின்னுந்தூய்மதியமைச்சனையா
வென்னவற்புதமீதந்தவேந்திழையாண்டையுள்ளாள்
பின்னிவளெவ்வாறேகிக்கொணர்ந்தனள்பேசுமென்றான். (௩௪)

மன்னவன்வேட்டைபோனகாட்டினின்மலர்பூவாவி
தன்னிலங்கொருவனேடுசார்ந்துவீற்றிருந்தமாதை
முன்னறிந்தவளைத்தந்தார்க்கிந்நகர்முழுதிற்பாதி
பின்னுவந்தளிப்போமென்னப்பெரும்பறைசாற்றக்கேட்ட. (௩௫)

மறையவடுணிந்துசென்றுவாவியுளிருந்துவாழ்ந்த
பிறைநுதலவளுக்கென்னபேசியோபொருத்தமாக்கி
யறைகழலவன்பாலீந்தாளதுநினைந்திட்டாலெனஞ்சம்
பறைதருமெவர்க்குமென்றான்கேட்டவிற்பனனுஞ்சொல்வான். (௩௬)

சங்கரனயன்மாறேவர்தானவர்முதலாயுள்ள
விங்கொருவருக்குங்கூடாதிப்பெருங்கருமஞ்செய்த
நங்கைமாசமர்த்தியிந்தநகர்வயினவடன்னில்ல
மெங்குளதிருக்கின்றாளோவில்லையோசொல்லுமென்றான். (௩௭)

கேட்டவனகைத்துப்பின்னுங்கிளத்துவானையாவந்தக்
கோட்டியாண்மறையோர்தங்கள்குலத்திலுக்கொருகோடாலி
தாட்டிகனிறக்கவோராதரவின்றித்தனிமையாகிச்
சேட்டைதன்னுறவுகொண்டுதிரிபவட்கொருசேயுண்டு. (௩௮)

மாதுபேர்வெங்கிட்டம்மாண்மகன்பெயர்வெங்குபொல்லாப்
பாதகியொருநாளன்னம்படைக்குஞ்சட்டுவத்தான்மண்டை
வேதனையுருத்தத்தாக்கிவிட்டினளவனும்போனான்
யாதமோபெட்டுமெட்டுவருடமுமானதம்மா. (௩௯)

மகனையுமிழந்துகொண்டவனையுமிழந்தமுண்டை
யகன்மனைகுடபாலிந்தவூர்ப்புறம்பமர்ந்துபேய்போற்
சுகமனைவாழுமெந்தச்சாதியார்சோறிட்டாலுந்
தகவிழந்தேற்றுண்டின்பந்தரித்திரமாகவாழ்ந்தாள். (௪0)

மங்கைதன்பொருட்டாலிந்தமன்னவன்மிக்கவெல்லாந்
தங்கமாய்க்கொடுத்தானின்பந்தருக்கினள்பாதிச்சீமை
பங்குகொண்டாளச்சென்றபாலனைவரவுநோக்கி
யிங்கிவளிருந்தாளேவலாட்களைப்போக்கியின்றே. (சக)

என்றவனுள்ளதெல்லாமிடைவிடாதெடுத்துக்கூறி
யன்றவன்விடைகொண்டேகவமைச்சனுமறிவாளுேக்கிக்
கொன்றையஞ்சடையான்முன்னங்கூறியகனவுமார்க்கந்
துன்றியநிமித்தமாதிச்சொற்களுந்துருவியாய்வான். (சஉ)

மந்திரியாத்திரைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-உஎ-க்குத் திருவிருத்தம் கஙசரு.

---

# மந்திரிதந்திரப்படலம்.

பொன்னிலையொன்றுகியுலகமெல்லாம்
பொன்படைத்தபூடணம்போற்பொருள்வேறுகித்
தன்னிலையிலன்னியமில்லாதுநீண்ட
சர்வசுதந்தரமானசாட்சிதன்னை
யன்னிலைக்கேயெனைத்தெளியத்தெளிவுகாட்டு
மருணலத்தைமருண்மிருத்தாரறிவுக்கெட்டாச்
சொன்னிலையைத்துரியநிறைபொருளைக்கண்ணீர்
சொரியவனுதினம்பாவித்துதித்தல்செய்வாம். (க)

வேறு.

வழுவிலாதவன்வாய்வழங்கிய
பழுதிலாதசொற்பான்மையின்பொருண்
முழுவதுமுணர்ந்தார்வமுற்றியே
யெழுதரும்புகழாழியெண்ணுவான். (உ)

மன்னன்வேட்டைபோயாடுமாவனந்
தன்னையெண்ணியவ்வாவிதன்னையு
முன்னினுன்முனமுற்றுவைகிய
வன்னதானமேயாகுமாலரோ. (ங)

மாதையெண்ணினுனமதுமன்னனைக்
காதல்கூர்தரக்கைவயங்கொளும்
பேதைபோலுமாலவளையும்பிரித்
தேதமாக்கினுளிருபிறப்பினுள். (ச)

ஈதெலாம்வெளியாகுமீங்குறை
பாதகம்புரிபார்ப்பனத்திபாற்
போதன்மேயினுலென்றுபுந்தியு
ளாதரித்தவனகரையண்மினன். (ரு)

விசையமாநகர்மேவியங்கொரு
திசைபொருந்துசத்திரந்தெரிந்ததி
விசையும்பாத்திரைக்கேய்ந்தபல்பொரு
ணசைவிலக்கியங்குய்த்துநல்லவன். (சு)

மாசுதோய்கரிவாங்கிமெய்யெலாம்
பூசியங்கொருகந்தைபொத்தியே
கூசிடாதபேய்க்கோலங்காட்டினற்
றேசுமாநகர்வீதிசெல்லுவான். (எ)

வீதிவீதியாய்மேவியேபல
சாதியோருமஞ்சாதிவன்றனை
யோதுதீதுகேட்டுள்ளுருத்தெழு
வேதைதீர்தருநகைவிளக்கியே. (அ)

கோநகர்ப்புடைக்குடபுலக்கணி
வீனமானவளுறையுமில்லினைத்
தானறிந்தவண்சார்ந்துவாய்விடா
மோனமாகியேமுழுதுமோருவான். (கூ)

அண்டையில்லின்வாயமர்ந்துவாழ்வுறும்
பெண்டுபிள்ளைகள்பேருமூருநேர்
கண்டுமற்றுளகருமமுங்குறிக்
கொண்டுதேறுவான்றனிகுலாவுவான். (க0)

அந்தவீதிவாயண்மிவாழ்வுறும்
மந்தணம்பொருமறையவர்க்குள
சொந்தமன்னியந்துருவல்கொண்டுதன்
றந்திரந்தெரியாதுதங்குவான். (கக)

கோத்திரங்குலங்குடிமையும்புரி
சூத்திரம்புகல்வாய்மைதூய்மையு
மாத்திரஞ்செறிந்தைந்துமூன்றுநாள்
பார்த்தறிந்தவன்பழையவேடமாய். (கஉ)

பூசினன்றிருநீறுபொன்மணிக்
காசுகுண்டலங்கதிர்விரிந்தெழ
வீசனென்றமெசங்காவியேய்ந்தசீர்த்
தூசுசாத்தினன்சுவண்டிசைக்கனே. (கங)

னாக்கிலைவத்தகாவடிதுலங்கமுத்
திக்கொழுந்துபோற்சிகைமுடித்தவ
னாக்கினான்மறைநவிலுபாடலோ
டாக்கும்வாயொலியாகாவென. (கச)

அக்குமாமணிக்கோவையார்வரை
புக்குமார்பினிற்புரளவோர்கையிற்
றக்கமாமயிற்பீலிதண்டொடெண்
டிக்களாவுமான்றோல்சிறப்பவே. (கரு)

தவமெலாந்திரண்டுருவுதங்கிய
திவனலாதிலையென்றுகண்டவர்
பவம்விலங்குற்படிவமெய்தினா
னவமிகுந்தசீர்புதுமைநாடுவான். (கசு)

வேறு.

சிதக்கலைவெண்மதிவதனத்திருவுந்திருத்தாமரையிணைந்த
பாதத்துணையுங்கனிவாயும்பனிமென்னகையும்பதம்பாடுங்
கீதத்தொனியுமருண்மிகுந்துகிளர்ந்தமலர்க்கட்கடைநோக்கும்
போதத்தழகும்போழகும்பொலியப்புதியதவம்போல்வான். (கஎ)

கந்தனிவனேயலதெழிற்பூங்காமனிவனேயலதிவர்க
டந்தையிவனேயலதுபெருந்தவஞ்செய்தவந்தானிவனெனவே
சிந்தையடங்காதணிகாமுழுதுந்தியங்கிக்களிதேங்க
வந்தத்தெருவின்மருகணைந்தானலரிகுடபாற்றிசையடைந்தான். (கஅ)

கல்லாப்பதகனுள்ளமெனக்கருகிக்கடியகொலைபுரிந்தப்
பொல்லாப்பதகிதீவினைபோற்புவிவான்றிசைமுற்றிலும்போர்த்தங்
கெல்லாப்பொருளுந்தலைமயங்கவிருள்சேர்ந்தெழுந்தமருண்மாலை
யில்லாப்பெறம்பேரியைந்தானுக்கருநற்றுணைபோன்றிருந்தனவால். ()

தையலிரதிசேன்வன்முனந்தழலான்மடிந்தபழிமாறச்
செய்கைமறந்துதவமிழைக்குஞ்செயலொத்தங்குவருபவனை
ஐயமறநான்மறையாய்ந்தோர்நோக்கியிவன்செய்யருந்தவத்தான்
மையற்படுசிந்தையாகிமுகமன்னோடும்வரவேற்பார். (உo)

கூட்டங்கூட்டமாகவந்துகுவிந்தமறையோர்குழாங்களெல்லா
நாட்டங்களுழன்பினாகிநனியாய்ந்துவகைகலந்தோய்ந்து
கேட்டுமிதுவாட்கண்டறியக்கிடையாதிந்தநெடுந்தவனெந்
நாட்டிலுள்ளான்பெறக்கிடைத்தோநாஞ்செய்தவமோநமர்தவமோ. ()

வண்டுபுதப்பூமதுவருந்தமறுகித்தவிக்கும்யாறதுபோற்
கண்டுபேசக்கிடையாதெம்மருங்குநெருங்கிக்கவலையுளங்
கொண்டமறையோரொருவரின்முன்னொருவர்விலக்கிமுன்குறுகிப்
பண்டுதவனத்திருவழகைப்பார்த்துப்பார்த்துப்பரிவாவார். (உஉ)

நாப்பாவலருநான்மறையுநமக்குமுன்னேநவின்றதொரு
பாப்பாரெனும்பேர்பலித்ததெனப்பார்ப்பார்பேசப்பாபரப்பார்
பூப்பாலவனுமவனளித்தபூப்பாலகரும்பொருந்தாத
கோப்பானதுமெய்நீக்கமுறுத்தவக்கண்படைத்தானெனக்குழைவார்.()

அட்டாட்சரமுஞ்சடாட்சரமுமதின்மேலெழுபஞ்சாட்சரமுந்
தொட்டார்ந்துறுமந்தணமறையோரிவன்றன்றவத்தின்றொழினோக்கி
யெட்டாப்பழமேனினைப்பாகியிருகான்முடவனருகார்ந்து
கொட்டாவிக்கொண்டதுபோலுங்குறையாநாணங்குறைவாவார். (௨௪)

தவமேபெரியதவம்விளைவுதாங்கிமற்றோர்தமக்கருளுஞ்
சிவமேபோலிங்கெழுந்தருளுந்தேவரீர்நீரிருப்பதற்கு
நவமாகியநாடேதுமதுபதங்கொண்டெமதுமனைநண்ணப் [ப்பார்.
பவம்போய்க்குறையாப்பெருந்திருவும்பலனும்படைத்தோமெனத்துதி

துதிசொன்மறையோர்முகநோக்கித்தூய்நித்திலவெண்ணிளமூரன்
மதிவெண்கலையினிலவெறிப்பமணிச்செம்பவளவாய்திறந்து
புதியவதிதிதனைப்போலுமெனைநீர்வினவப்புகுந்ததுவும்
விதியின்வணமென்றதிவிசனமுற்றேயிதனைவிளம்புவான். (௨௬)

தாயாம்வெங்கிட்டம்மாள்சொற்சகியாதெழுந்தேன்றலைவிதியாற்
போயாதரிக்கவோரிடமும்பொருந்தாதழுங்கிப்புழுங்கியநான்
காயாசமுமேதரித்துநெடுங்காசித்திருக்காவடிதூக்கி
யாயாசமுந்தீர்வதுநோக்கியயாதிரவும்பகலுமாய். (௨௭)

காசிகன்னியாகுமரிமுதன்மற்றீசன்கலந்துறையுந்
தேசமுழுதும்பணிந்துநதித்தீர்த்தமுழுதும்புகுந்தாடி
மாசுகழீஇநற்றிருத்தொண்டுமருவிமறையாய்ந்தருவினையுங்
கூசக்கடைந்தநவமணிபோலுள்ளந்தெளிந்துகுணப்பட்டேன். (௨௮)

அண்டந்தனிலேயிருபாதிக்கப்பாலாகுநான்புகுந்து
கண்டுதெரிசித்தாடிவந்தகடவுட்டலமுந்திருநதியும்
பண்டுவினையும்புதுவினையுமினிமேல்வினையும்பற்றுமற்
றொண்டுபுரிந்துநமதரன்றாட்டுணையேதுணையாய்த்துணிந்தனனால். ()

அற்றேமறந்தேன்பெற்றெடுத்தவன்னைதனையும்பொருடனையுங்
குற்றமகன்றேன்றவக்கோலங்கொண்டேனெனினுநமதுபெருஞ்
சுற்றத்துள்ளீருமதுநட்பின்றொடர்புமறக்கத்துணியாதிங்
குற்றேன்முன்னூழ்வினையிருந்தாலோவுமையுங்கண்ணுற்றேன்.(௩௰)

என்றுபுகன்றபுத்திசிகாமணியுமவர்தம்மிருப்பிடமு
நன்றுபெயருங்குலமுறையுநலமும்பலமுநனிதாய்ந்து
நின்றுமுறுவலடிக்கடிசெய்தன்புகாட்டிநெறிதவறு
தன்றுபுகல்வான்றனதுமதியாலுமீசனருளாலும். (௩௧)

மாமிமாமன்றாய்தந்தைமகவுதாரமுடன்பிறந்தார்
பூமிகிதியம்ஞாதிகட்குட்பொருந்தும்வழக்குப்புகன்முடிவு
மாமிதெனவேபன்னெடுநாட்பழகுமவர்போலயிர்ப்பகற்றிச்
சேமமுழுதுந்தனித்தனியாய்வினவிக்களிப்புச்சிந்தைசெய்வான். (ஙஉ)

சிங்கமையர்மகளிவிரிவருஞ்சிறந்ததிருக்காஞ்சித்
தங்கமையர்மகனத்தச்சாமிநாதவையர்மக
னங்கண்மாமன்பிள்ளையொடுமுறவுநயந்தாரிருவோரு
மெங்குபோனார்தம்பியிவரியாரோபுதிதாயிருக்கின்றார். (ஙங)

குப்பாவுனதுதம்பியெங்கேகுமாகுருநம்பியரீன்ற
சுப்பாவெனவோர்பயலுண்டாங்கவனுமெத்தப்படுசுட்டி
யப்பாவையர்நமக்கதிகப்பிரியமவர்தந்திருமகனு
மெப்போதேனும்வீண்காலம்போக்கான்றொழில்செய்திருப்பான்காண்

காடாகுடிக்கண்ணப்பவையர்மகனுமெத்தக்களவாணி
தேடாதளித்தான்பொருளையெலாஞ்சித்தனுதவையர்மகன்
பீடார்தவமும்புகழ்நிதியும்பெற்றுச்சிறந்தாரவர்குடும்பம்
வாடாதிருந்ததெனக்கேள்விநீவிரென்னைமறந்ததென்னே. (ஙரு)

நீருமாவுநிறைசடிலனினைவிலுதவுந்திருவருளா
லூரும்பேருங்குலமுறையுமுள்ளதாகவெடுத்தெடுத்தங்
காருமறியப்புகன்றிடும்போரடையாளங்கேட்டதிசயித்துச்
சாரும்பெரியமறையவர்கண்முழுதுமுவகைதழைத்தனரால். (ஙசு)

மனைக்குட்புதைத்தபெரும்புதையன்மறந்துவருந்தித்தவிப்புறுங்கா
ளினைப்புற்றெடுத்துமகிழ்ந்தவர்போலிவன்சொன்முறைமைநெறியுண
யனைக்கும்புகல்வோமெனப்போனார்சிலவரிவனையகலாமற் [ர்ந்தே
றனக்குட்டானேவியந்துவியந்திதனையுரைக்கத்தலைப்பட்டார். (ஙஎ)

வெங்கிட்டம்மாளின்றதிருவெங்குவையாநீயுமுனிந்
தெங்கிட்டெழுந்தேகினையோவென்றெங்கண்மனதுமிகவருந்திச்
சங்கட்டங்கொண்டதுசிவனார்தாமேயறிவாரவாருளா
லங்கட்டமுமின்றகன்றிடவேவந்தாய்மெத்தநலமாச்சு. (ஙஅ)

தாயார்பொல்லாதவளெனவேசாற்றினுயங்கவள்போலும்
வாயாதப்பாவுனக்கினிமேன்மண்ணில்விசும்பின்மற்றுலகி
லேயாதெனவெல்லாந்தேடியிருந்தாளுன்னையெதிர்பார்த்தே
போயாதாவாய்வார்த்தைசொல்லிப்பணிவாய்போவோம்வாவென்றார்.

அரசர்க்கரியபெருங்கருமமுடித்தாளதனுலவட்கரிய
வரிசைக்கடற்குட்படிந்துள்ளங்குளிர்ந்தாண்மைந்தாநம்போல்வா
ருரைசொற்றெரிந்துபுகன்றிடவுமுளவோமறையோர்தங்களுக்குட்
பரவுத்தமர்போற்றவம்புரிந்தாரியாரேயிந்தப்பாருலகில். (சo)

அவனிக்கரசேயுமதேவல்கடவாதுறைவோங்களையுமினிக்
கவனிப்பதுநின்கடமையெனக்கழறிக்கூட்டிவருமளவி
லிவனைக்குறித்துச்சொலப்போனார்புகலவிவனையெதிர்நோக்கித்
தவனத்தொடுகாத்திருந்தவளுங்கேட்டங்குள்ளந்தரியாளாய். (சக)

வாவிமடிந்தான்புரிந்ததவத்தோடுமதிமான்புரிதவமுந்
தேவிபுரிந்துவருதவமுந்திரண்டாங்கிவடன்பழவினையைக்
கூவியுளத்தைமயக்கவெனக்குறித்துவிடுத்தவாறதுபோன்
மேவுமிருள்வாய்வருபவனைமகனென்றெண்ணிவிரைந்தோடி. (சஉ)

கண்டாளகன்றகன்றுவரக்கண்டுமறுகுமானினம்போற்
கொண்டாளன்புமுழுவதுந்தன்குழந்தையிவனென்றேங்கிமொழி
விண்டாள்கரைந்தாளழுதிருகண்விழிநீர்பரவவெங்கொலைசெய்
சண்டாளஞ்சேர்கொடுந்துட்டமுண்டையின்பந்தருக்கினாள். (சங)

ஐயாவருகவெமதுகுலத்தரசேவருகவருள்பரவுந்
துய்யாவருகப்புவிபுரக்குந்துரையேவருகத்துயரகற்று
மெய்யாவருகவிப்பிரர்க்குண்மேதாவிகனேவருகமனங்
கையாமருந்தேவருகமணிவருகவிருகண்மணிவருக. (சச)

வள்ளைக்குழையார்மடலெழுதும்வடிவினழகேமாநிலமேற்
பிள்ளைக்கலிதீர்த்தருளுதவும்பெருந்தெள்ளமுதேபெறும்பேறே
யுள்ளத்துணையெள்ளளவுமுள்ளாவொள்ளியிகழ்ந்தவுரையுறப்புங்
கள்ளக்கொடியேன்றனைநோக்கிவலுவில்வருநின்கருணையென்னே. ()

அப்பாவையாவரசேயென்றளவளாவியருண்மிகுந்து
செப்பாவினிமைவசனமெல்லாஞ்செப்பிச்சிந்தைதியக்கமுறக்
கைப்போதாலேயணைத்துமுத்தங்களிவாயிட்டுமுகமோந்திங்
கெப்பாரவருமுருகமனதுருகியுடல்பூரிப்பெழுந்தாள். (சரு)

பக்கம்விலகாதவனையொருபாங்கரணைத்துப்பாதகியு
மிக்கநடந்துமனைபுகுந்தாங்கிருக்கவிதித்துவிரும்பியுற்ற
தக்ககிளைக்கும்பிறர்க்குமுபசாரஞ்சாற்றியடைக்காயோ
டொக்கநிதிபூந்துகினல்கவுவந்தாங்குற்றமதிமகனும். (சஎ)

தாயைப்பணிந்துதிருநீறுங்கங்கைநீருந்தாவெனடுத்துத்
ஆய்மையுடன்முன்னுதவியந்தமுறையேசூழ்ந்தகேளிர்க்கு
மாயபிறர்க்குமனக்கனிவோடளித்தாங்கவர்களகன்றதற்பி
னேயம்பெருகவிருவர்களுந்தனித்தங்கிருக்குநேரமதில். (சஅ)

அம்மாநிரப்பேசமக்குரியபொருளாய்க்கைக்கொண்டனுதினமும்
விம்மாநின்றகொடுந்துயரான்மெலிவுற்றெனைநீவிரட்டியநாட்
சும்மாகிடந்தபாழ்மனையின்றமாருலவுஞ்சுவர்க்கநிகர்த்
தெம்மாநிலமும்புகழ்தரநல்லழகுவாய்ப்புற்றிருந்தனவால். (சக)

மறையோரெல்லாநமையிகழ்ந்துவைதுபேசத்தலைப்பட்ட
குறைபோய்ச்சிறந்தமரியாதைகொடுத்திங்குனையுங்கொண்டாடி
முறைநின்றேவற்பணியுடற்றிமுழுதும்வணக்கமுதிர்ந்துலகி
னிறைமைமதித்திங்கெனக்குமவர்வரும்போதெனமோவியம்பினரால்.

தாயேயிதனைநினைந்துநினைந்துளத்திற்றீராச்சமுசயங்கொ
ணாயேற்கரியவெளியாக்கிநவில்வாயெனவேகரங்கூப்பிச்
சேயோனுரைக்கவருகிருந்துசிந்தைகளித்துத்தீயவளும்
வாயாற்புகலத்தலைப்பட்டாளிவனுங்கேட்கவகைப்பட்டான். (ருக)

அப்பாவதுவிங்கொருபுதுமையிவ்வூராளுமரசனுக்கோர்
செப்பார்முலையாண்மேற்காதல்செறிந்தக்கவலைக்கொணர்ந்தாருக்
கிப்பாரளிப்போம்பாதியின்மேலெதுவுங்கொடுப்போமெனப்பறைக
டப்பாதறைந்தாரப்பெரியசத்தங்கேட்டுநான்புகுந்தே. (ருஉ)

அங்கமடையாளங்களெல்லாமரசன்புகலவறிந்துகொண்டு
பொங்குவிடங்கள்பலசேர்த்தமருந்தொன்றமைத்துப்புறப்பட்டே
கங்கையுறையுமலர்வாவிக்கரையைநண்ணியொருவாரந்
தங்கியிருந்தாங்கிரவுபகலோயாதழுமென்றனையறிந்தே. (ருங)

கன்னிநலம்பெற்றவளுயிர்போன்றிருந்தவொருபொற்கழல்வேந்த
னென்னையணுகியழைக்கவினிதெய்திவாவியுட்புகுந்து
தன்னுசாங்கமிருந்தவர்களமையந்தெரிந்துசூழ்வினையான்
மன்னவனைத்தம்மாதினையிம்மன்னற்களித்திவ்வாழ்வுற்றேன். (ருச)

பாரிற்பாதிபகுந்தனக்குப்பசும்பொன்மகுடமுடிவேய்ந்து
நேரிலரசரடிவணங்கநிறைவெண்கவரிபுடையிரட்டச்
சீரினெழினித்திலக்கவிகைநிகழ்தண்ணிழற்கீழிருந்திறைமை
பூரிப்பதுகாண்பதற்காசைபொருந்திவரவுபுரிந்திருந்தேன். (ருரு)

பிள்ளையெனுநீர்மையினாலிப்பெருங்காரியத்தைக்காவாது
விள்ளத்துணிந்தேனூராளும்வேந்தன்றனக்கும்விண்டிலனல்
வள்ளாலிதனைப்புறம்பினுக்குவாய்விடாதிங்கொழிகவெனக்
கொள்ளையுபசாரம்புகன்றகொடியாடன்னைக்காக்கூப்பி. (ருசு)

அம்மாவுனைநானினைப்பளவிலமாரயன்யான்முதற்சிறந்த
கைம்மாவனுஞ்செயற்கரியகருமமுடித்தாயதுபெரிதன்
றிம்மாநிலத்திற்புனற்றடத்துளெய்திமீண்டிங்கெளிதின்வரச்
செய்யாமணியந்திரம்யாவையாண்டையறிந்தாய்செப்பென்றான். (ருஎ)

கற்றுயரர்பதிபுகவேகற்றவிசும்பின்மிசைப்பறக்க
வுற்றோர்க்குற்றகூற்றமிதற்கொவ்வாதம்மாவிதைநினைக்கச்
சற்றேவினவவெனக்குரியதாமோதவங்கள்சிறிதுமிலாக்
குற்றமிருந்தேற்கிதன்மேலுஞ்செய்வலங்கள்குறையுளவோ. (ருஅ)

கானம்புகுந்துபகலிரவாய்த்தனியேவாவிக்கரையிருந்து
மானந்துறந்துவாயரற்றிமன்னனுடன்போயவன்றனையு
மீனம்படக்கொன்றிவ்வூராளேந்தற்கவளையினிதளித்தோய்
வானம்புவியிற்பாதலத்திலிணையாருனக்குவழுத்துகிற்பேன். (௫௯)

என்றுபுகன்றபுத்திசிகாமணியுமிறைஞ்சிவிரும்புனற்குட்
சென்றுபுகுந்துமீளவுநீதிரும்பிவந்தபெருங்கதையை
யொன்றுங்கரவாதெனக்கறியவுரைப்பாயெனப்பன்முகமனொடு
நன்றுபுகலமேன்மேலுமகனென்றுள்ளநனிதுவந்தே. (௬0)

மகனேபுதுமையதுகேளம்மன்னன்காத்தோர்கணையாழி
பகலோனொளியுமொழியுமெனிற்பலவேறொளியைப்பசர்தன்மனத்
தகவோவதையென்னுழைகவர்ந்தேனதனின்பெருமைசாற்றுங்கா
லிகலின்கடலும்பெருங்கடலுங்கடக்கும்வழியுமீந்திடுமால். (௬௧)

இதுபாரெனக்காட்டினளிருள்வாயெழுவெஞ்சுடர்விட்டெரிகதிர்நே
ரதுநோக்கிடக்கண்ணொளிகூசியமைச்சனொதுங்கியதிசயித்தே
யெதுகாரியமுஞ்செயவல்லதிவள்கோசலைநாடரசழித்த
சதிகாரிகளாங்கூனியுங்கேகயர்கோன்மகளுஞ்சரியாகார். (௬௨)

பொல்லாளிவளைக்கடத்திவெளிபுகுந்துமடத்திற்புக்குறையு
நல்லாளவட்குள்ளனகுணங்களுடியாய்ந்துநமக்குரிய
வல்லாளைக்காண்பதற்கானவழிதேறுதனம்மாபென்றே
யில்லாளைத்தோற்றிருந்தாட்குமகனாயிருந்தானிதுபுகல்வான். (௬௩)

ஊழிக்கதிர்களொருங்கெழுந்திங்குதித்ததெனநல்லொளிபரப்பு
மாழிக்கதிர்வெவ்விருள்சீத்துவெயில்விட்டெரியுமழகதனை
யேழிப்புவனமொடுபுவனமேழுமெழுநாட்பலகோடி
வாழ்வித்திசனுக்கிறையளவுமுவமையுரைக்கவரையாவால். (௬௪)

என்னைக்குறித்தித்தனைபெரியதிருவும்படைத்தாயென்றுய்கின்
றன்னைக்குறித்தெத்தனைகோடிதவங்கடலைநின்றாற்றியதின்
பின்னைக்குறித்தெத்தனைசெயநான்பெறினுஞ்செய்பேறெதிரே
மின்னைக்குறித்தத்தனையலதுபுவிமேன்மலைபோல்விளங்கிடுமோ. ()

பொருளைவிடுத்துப்புவிவிடுத்துப்பொருப்புமுலைமேல்விருப்பமுறு
மருளைவிடுத்நீரைந்துமதிசருவாய்ந்துயிர்த்தயாதாரின்
னருளைவிடுத்துப்பற்றற்றவெனக்கேயிதின்மேலவாவுற்றுற்
றெருளைவிடுத்தார்க்கிம்மணிமோதிரமென்செயுமோதெரியேனால். ()

எனக்குரினைக்கரினைக்கவியப்பெய்திற்றுமென்றினிதுவந்து
தனக்குட்டானேவுருகிமனத்தனிமைகாட்டுந்தனிமகனை [ய்
யுனக்குத்தானேயலதெவர்க்கிங்குதவக்கொணர்ந்தேனிதுவெனப்பொ
சனக்கச்சிறந்தாள்சிலபகல்போய்த்தருவன்கவறல்கழிமினென்றாள். ()

கேட்டாளுள்ளேயொருவிநயங்கிளரவடக்கிக்கொடியவடன்
றாட்டாமமையைப்பணிந்தெனதுதாயேநின்கட்டாவிதனை
வேட்டற்கெனதுமனத்துணலம்விளைவுற்றனவோபழமையுள்ள
கோட்டித்தனம்விட்டகலாதகுணங்கொண்டுரைக்கக்குறுகினையால். ()

எந்தவுலகிலெவரிடத்திலெந்தப்பொருள்யான்விருப்புறினு
மந்தப்பொழுதிற்றருவர்பின்னுமயன்மாலீசன்வாவெனவே
சிந்தித்துறினும்வருவரிந்தத்திறமையடைந்தவெனக்குனது
புந்திக்கிதவோர்பெரிதெனக்கொள்ளதன்மேலாசைபொருந்துவனே.

புதியமனையொன்றெடுத்ததிலேபுதிதாய்க்குடிபுக்குறினுமவர்
மதியும்வனப்பும்புரிசெய்லும்புதிதாய்மாறிவாவற்றே
விதுவுமொருவர்க்கொருவர்சொலிக்காட்டற்கறிவற்றிருப்பவரெப்
பதியுமுளரோநினைக்கில்வெகுதுக்கம்படைக்கும்பரிதாபம். (எ0)

செல்வம்பெருக்கிமுறைபுரக்குஞ்செங்கோலரசுநீயெனக்கு
நல்கக்கிடைத்துநலம்பெற்றேன்போதும்போதுநானெழுந்து
செல்லப்பெறுவேன்பழங்கானந்திருவுஞ்சிறப்புநனிசேர்த்தே
யல்லற்படுதீவினைவிலக்கித்தனியேயாள்வாயறனேனாய். (எக)

காசிதொலையோகாவடியுங்கனமோநடந்துகாலலுத்துக்
கூசிவருந்தித்தளர்வெய்துங்கிழமைப்பருவங்குறுகினவோ
சீசியிருவென்றெழுந்ததிருச்செல்வன்முனிவின்செயனோக்கிப்
பேசாதளித்தாடோசியவன்பிழையில்லான்செய்தவப்பேற்றால். (எஉ)

காசிமுதன்மேதாவிகளின்கூட்டங்கலந்துகடவுளைப்
பூசைபுரிந்துமறையாய்ந்தபுனிதஞ்சிறந்தபுதல்வாநின்
னேசம்பெருகிவாவெதிர்பார்த்திருந்தகொடியநீலியென்மேற்
பாசமபிரித்துப்பேசியதும்பண்டைவினையின்பயனன்றே. (எங)

மையல்புரியும்புலனொடுக்கிமறையாறொழுகிவாழ்மனைக்கண்
செய்யுமறங்கள்பலவாற்றித்தீர்த்தங்குடைந்துமூர்த்திகளைப்
பொய்யின்மனமெய்வாக்கொன்றப்போற்றிவிரதாதிகளோற்று
வையமிசையோர்மகவின்றித்தவிப்புற்றுடலம்வருந்துவால். (எச)

மகனேயெளிதிற்பெறக்கிடைத்தேனின்னையதுவுநம்மாபோ
ரிகதீர்தவமோநான்புரியுந்தவமோவறியேனுனையிழந்து
சுகமென்பதுபோய்க்கடையழிந்தேன்சுவாமிசெயலானீண்டுவா
ரிசவிம்பிதங்கொள்வேன்மறந்துவிளைவிப்பதற்கென்வேட்கையவோ.

முதலாயிம்மைக்கண்மறுமைக்கண்வந்துறுயாதவையெல்லா
மிதனாற்கிடைக்குங்குறையாவாலெவர்தஞ்செவிக்கும்புலப்படுத்தாப்[ல்
பதனம்புரிவாய்நினைக்கொண்டேப்பலனும்படைக்கவேண்டுமென்சொ
லிதனம்படாதின்றொழிகவெனவிண்டாளமைச்சன்வியப்பெய்தி.(எசு)

தாயேதெய்வமலதிலையென்றருமாமறைநூல்சாற்றியவா
ருயாதொருபுல்லறிவானனைறந்தமொழியின்பிழையனைத்து
நீயாதரிப்பாயெனவெகுவாய்நேயம்பெருகவணங்கியநற்
சேயானவனேடகமகிழ்வாயிருந்தாட்கிவனுஞ்செப்புவான். (எஎ)

சோரும்பசியாற்சுழன்றுவெகுதொலைவெங்கானநடந்தலுத்தே
சாருமெனக்கின்றிரவுமட்டுஞ்சமையல்செய்துசோறளிக்க
நோநடுநெண்ணிசியடைந்தநீர்மையதனுற்றவமுனுற்றும்
வார்பொன்முலையாண்மடத்துண்டுவருவேனெனச்சம்மதித்தனளால்.

கைக்காவடியுமேற்றுகிலுங்கவிகைதண்டுமொன்றேலும்
பொய்க்காரிக்கேமெய்க்கவவண்போட்டுக்கட்டுங்கலையோடு
செய்க்காரியத்திற்கண்ணுள்ளான்றீர்ந்தாங்கிருந்துவெளியேறி
மைக்காரிருளிற்றனிநடந்துவந்தான்மடத்தின்மருங்கம்மா. (எகூ)

வேறு.

தீதானவள்சொற்றேருங்காற்
கோதாகியசூழ்வினைகொண்டே
மாதாநிகாம்மடவாளை
யீதாக்கினளாலிதுபாவம். (அ0)

மாண்டான்மாதவமாதாலே
பூண்டார்காதல்புறம்போகா
நீண்டோானபினெறியற்றே
தூண்டாவினையின்றொடர்பானன். (அக)

பொங்கர்மடிந்தேபுலர்வான
வெங்கணாக்கன்வினையாலே
நங்கையிடற்பட்டதுநாடா
தங்கவள்போகத்தடைவானன். (அஉ)

நங்கோனல்லதுநாமாய
விங்கேநன்மனமேயாவால்
சங்கேதப்பொருடானெல்லாம்
பொங்கார்மின்கட்புகினேரும். (அங.)

அல்லாவாயாதெனவாயா
சொல்லாலெண்படுதூயோனு
நில்லாதாகிச்சிக்கண்ணே
யெல்லோரும்புகுமடமெய்தா. (அச)

ஊழித்தண்கதிருள்ளாக
வாழ்விக்குந்திருமணியாழி
பாழிக்கண்ணவர்பாராதே
யாழிக்கையுளமைத்தானால். (அரு)

சென்றான்செல்பவர்நிரளோடே
யொன்றாதவ்வயினுளவெல்லா
நின்றேநோக்குதனேர்வாணு
யன்றேசுற்றினனுய்வுற்றே. (அசு)

மந்திரிதந்திரப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-உஅ-க்குத் திருவிருத்தம்-கசாஉ.

---

# பூலோகரம்பைமீண்டுற்றபடலம்.

விண்ணாகிவாயுகனனீர்மண்ணாகி
விரிந்தசராசரப்பொருளின்வீக்கமாகி
யெண்ணாகியெண்ணிறந்தசேடமாகி
யெவ்விடத்துமாங்காங்கேயிருந்துநோக்குங்
கண்ணாகிக்கண்ணிறைந்தகாட்சியாகிக்
கருத்திலுறுசிவனுக்கோர்கலாகணாகி
நண்ணாதசேயணிமையகலமாகி
நடந்துவரும்பெரும்பொருளைநாடிநிற்பாம். (க)

வேறு.

வேலியிட்டணிசொனான்குவீதியிட்டதில்வெவ்வேறு
கோலியிட்டமைத்ததானமுழுவதுங்குழாங்குழாங்கள்
பாலியிட்டுவமஞ்சொல்லாப்பதப்பலபண்டங்கொண்டு
சோலியிட்டார்ற்றான்றவயின்வயினுருவல்காண்பான். (உ)

தண்லெமொருபாலான்பாற்றசும்பொருபானெய்மொரு
கொண்டடைகுடங்களோர்பாற்கொழுங்கனிடசுங்காய்மூல
மண்டியகுவியல்லோர்பான்மற்றுளபொருளுமவ்வா
றெண்டிசாமுகமுமண்டமுகடுதொட்டிலங்குமாலோ. (ங)

வெள்ளியங்கிரியுமேருகிரியும்வேறமையவெள்கி
யுள்ளினிற்கலங்குபல்வேறுருவெடுத்திருந்தாலொப்பத்
தெள்ளரிப்பதம்பருப்போடறுசுவைக்கருணைசேர்ந்த
சொன்னைவான்குவியற்காடெம்மருங்கினுங்குறையாநிற்ப. (ச)

அடுபவர்கோடிகோடியஃதினையள்ளிவந்தோர்க்
கிடுபவர்கோடிகோடியிடவிடவுண்டாங்கேப்பம்
விடுபவர்கோடிகோடிவிருப்பந்தீராதுபின்னுங்
குடுவைபாத்திரநிரப்பிக்கொண்டுசெல்வார்கள்கோடி. (ரு)

சடையினர்முண்டித்தார்ந்ததலையினர்தயங்குகாவி
யுடையினர்பூதிதோய்ந்தவுடலினர்சுருக்கிவைத்த
குடையினரொருவர்முன்னேயொருவர்போய்க்குந்தவாய்ந்த
நடையினர்கிடையாய்க்கூடிநுகர்வர்நாவுரிசைநாடி. (சு)

மந்தம்வாயூமைநொண்டிவடிவினிற்குறள்கூனேய்சா
லந்தகமுதலாயுள்ளபெருங்குழாமனேகமான
பந்தியெம்மருங்குஞ்சூழ்சச்சடிப்பெரும்பரவைதள்ளி
யந்தரமுழுதும்வானமழையெனவமலையார்ப்ப. (எ)

அயில்பவரோதைமூரலமைப்பவரோதையாற்றப்
பயில்பவரோதைசாவற்பண்ணுவரோதையுண்டு
துயில்பவரோதைதானஞ்சொரிபவரோதையின்ன
வியல்பினவோதைநீங்காதிரவும்வெம்பகலுமேங்க. (அ)

உண்டவருண்டுசெல்லவுண்டிடவருவோர்தம்மைக்
கண்டுபின்னுண்டுபோகக்கையமைத்தின்னமுண்பா
ருண்டுகொல்லோவென்றுங்காங்கோலிபறையறைந்துகூவி
மண்டலமுழுதுஞ்சுற்றிவருவர்கண்மாறிமாறி. (கூ)

இதுவெலாநோக்கிநோக்கியிரும்புவிமுதலாயெந்தப்
பதியினுந்தவநோற்பாரிப்படியிலையென்றுபூரித்
ததிசயமடங்காநெஞ்சோடமைச்சனும்பின்னுமாங்கு
மதிவளர்சடையான்கோயின்மருங்கணைந்தெட்டிப்பார்த்தான். (க0)

பவமெலாமகன்றுதீராதறமெலாம்பரித்துப்பார்மேற்
றவமெலாந்தழையமல்குந்தருவின்மென்கொடிபோனின்ற
திவளெனத்தவாங்கம்பொங்கவிந்திரதிருவுநாணச்
சிவமெனக்கருணைவாய்ந்துசிவனைப்பூசிப்பாளாகி. (கக)

மின்னினிற்கதிர்களாய்ந்துவெவ்விருட்சீக்குஞ்சோதி
பொன்னினன்விளக்கங்கோடிபுறம்பெலாம்பொலிவித்தீசன்
றன்முடிக்கணியுமாலைசந்தனந்தாமந்தூசோ
டன்னமானைந்துமாதியாவனபிறவுமாக்கி. (கஉ)

வார்முலைமகளிர்வெள்ளமருங்குசூழ்ந்தேவலாற்றக்
கார்மயிலனையாளீசன்கதிர்மதிமுடிமேற்கங்கை
நீர்மலிகலைசமாட்டிநித்திலப்பணிபொன்னுடை
சீர்பெறச்சாத்திச்சந்திருப்பளித்தாமஞ்சேர்த்து. (கங)

பலவுபசாரத்தோடுகிவேதனம்படைத்துவில்வஞ்
சலசமந்தாரைமுல்லைமல்லிகைசாதிபிச்சிக்
குலமலாருச்சித்தேத்திக்கும்பிட்டுக்குறைகள்வேண்டி
மலைமகன்கொழுநன்ஞமமாயிரம்வாயால்வாழ்த்தி. (கச)

விண்முதற்பூதமாகிப்பூதத்தின்விரிவுமாகிக்
கண்முதற்காட்சியாகிக்காட்சியின்கருணையாகி
யெண்முதலெல்லாமாகியெண்கடந்தில்லாவான
வண்ணலேயனுதிமுத்தவநீதமேவமலமூர்த்தி. (கரு)

கருவகங்காரவன்பேய்க்காடகழ்ந்தொருமூலத்து
ணிருவிகற்பாங்கயோகநியமமேமதியஞ்சூடு
மருள்பொழிமுகிலேதேனேயமுதமேயென்னப்போற்றித்
தருணியுந்தவின்ருற்றந்தன்மையுமனத்திற்கொண்ட. (கசு)

வருத்தமுமானத்தியுமனத்தினைவருத்தமேரு
பொருத்தபூண்முலையாள்வாடிப்புலர்வதும்புறம்போர்தோாத்
தரித்தமாதவத்தின்வேடத்தனிமையுஞ்சடைப்புநீங்கா
விரித்தபூங்குழலுமாருவிம்முநெட்டுயிரொப்புமோங்க. (கஎ)

உண்டிடாதுறங்காதுற்றவொண்டொடிதவத்தின்கோலங்
கண்டனன்றனக்குத்தோன்ருகட்புலன்றளிப்பத்தன்பு
கொண்ளேனையமெய்யுங்குழைந்துபாழ்பட்டுநின்ருன்
பண்டையதவமுமின்றுபயில்பெருந்தவமுமுள்ளோன். (கஅ)

என்னையிம்மாதைநோக்கியென்மனமேனுேவென்றன்
றன்னையுமறியாதேங்குந்தனிமையுஞ்சலிப்புஞ்சார்ந்த
துன்னினுலிவனேவேந்தோடுறவுகொண்டுற்றுவாழ்ந்த
வன்னமேயாகுமல்லாலறத்தினதமைவேயாகும். (ககூ)

கருமத்தின்கனகட்டெல்லாவுலகமுங்கடைநாட்கூட்டும்
பருமித்தபதங்கள்வாய்ப்பப்பண்புதந்தின்புதோற்றி
நிருமித்தநெறிநின்ருற்றநிறைதவக்குறையாநின்ற
தருமத்தின்வடிவமென்பதிப்பெரும்வடிவுதானே. (உ0)

கற்பினிற்சிறந்தபஞ்சகன்னியர்தாமுமிந்த
விற்பிறந்தாளுமொக்குமென்னினுமவர்கட்கெல்லாஞ்
சொற்புகழ்குறைந்தவோரோர்துகளுண்டிங்கிவளுக்கெல்லா
நற்புகழாகக்கூடித்திருடாநடியாநின்ற. (உக)

மாதிவடவமீதாயின்வாவியிலாவிமாண்ட
காதலனுயிருநம்போல்வார்க்கொருகருமப்பாடுந்
தீதுறவாரதெந்தனாலினுஞ்சிறப்புச்செய்யு
மாதலாலீசன்சொன்னவருணலப்பட்டேனம்மா. (உஉ)

இவையிவைநிரம்பவெண்ணியிவனிற்குமளவிலாங்கோர்
கவையன்வந்தப்பாவின்னுமுண்டிலேபோலுங்கண்டே
னவையிலோய்கேட்கின்மாதுமுனியுநீயநந்துண்டப்பாற்
செவைபடவுமக்கிங்கேற்றகருமங்கள்செய்மினென்றே. (உங)

கூட்டிப்போயெவருங்கூட்டமாகவேகுழிமியுண்ணு
மூட்டரங்குள்வைத்தன்னமூதவிநெய்கருனையாண
மூட்டெனப்போட்டார்பின்னும்முப்பழம்வடைபாயாசந்
தீட்டினனெனநாட்கொண்டவாட்டமுந்திகைப்புந்தீர. (உச)

உண்டவன்கைகால்சுத்திபண்ணினனொருவனுங்குக்
கண்டுவந்தளித்தான்கந்தம்வெள்ளடைக்காய்பூவாதி
கொண்டுபோயொருவன்பூரிகொடுப்பவரிருக்குங்கூட்டத்
தண்டையில்விடுத்தானுண்டோரழைத்துமுன்னிருத்தியயார். (உரு)

இருவரிலொருவர்தம்மைப்பிரிந்தவருண்டோவென்று
பெருமவர்வினவக்கேளாவிதிலொருபிழைபாடில்லாக்
கருமமொன்றுள்ளதென்றுகவைகொள்வான்கருத்திலுன்னிப்
பொருமலோடலமந்துள்ளம்புன்னகைபுரிந்துசொல்வான். (உசு)

நினைவினல்வாக்காற்றேரநீண்டுறுகருமங்காண்பான்
வினையினல்வினவிற்றீரிவ்வுண்மையென்விளம்புமென்ன
வனையவர்புலப்படாமலவனெடுமொதைச்சார்ந்து
பினையிவன்வாய்மைகூறப்பேதையுநகைசெய்தப்பால். (உஎ)

வன்படுகாவல்யாப்புவையுமின்னும்பானுளைத்
தென்படுவிநயஞ்சொல்வேனென்றனளதுபோற்செய்தார்
நன்படுநாயனுணைகடப்பரோநன்றியோர்ந்து
பின்படுகருமங்கொள்ளப்பேணுகிற்பவர்களம்மா. (உஅ)

வந்தவரெல்லாமுண்டுவருபவர்க்களிப்போருண்டு
தொந்தரையகன்றபின்னர்தோகையுந்தனியளாகி
மந்தணமறிவாளாங்கோர்மடக்கொடிதன்னைக்கூவிப்
பந்தனமிருந்தான்றன்னைத்தருதியென்பாலிலென்றுள். (உகூ)

மாதுழைதாதிமாதைமருவுதல்கொள்ளநெஞ்சிற்
காதல்செய்யரசன்காவற்கலைமகனிவர்களன்றித்
தீதுறுபித்தும்பேயுஞ்செயுந்துயிலென்றுற்பின்னை
மேதினிதுயினீத்தென்னைநடுசிவிளையுமாலோ. (நூ0)

ஏகியேகொணர்ந்துவிட்டாளவளையுமிவணீத்தப்பாற்
போகவென்றுரைத்தாள்வேலைபொருத்துநெஞ்சுளேந்தாளென்ன
தாகமோவிவர்கள்பேசத்தலைப்பட்டார்நமக்கேனிந்த
மோகரிப்பென்றுங்கித்துயிலின்மேன்முயக்கமானுள். (நூக)

பொற்றொடிபோனபின்னர்புனிதங்கொள்கலைவலானே
டொற்றொருவருக்குந்தோன்றாதுபாயமாய்த்தனிப்பட்டாங்கு
மற்றொருமாடுபுக்குமறைவினிலிருத்திவாய்ந்த
நற்றவமானானோராதனமிருந்துளநாணற்று. (௩௨)

வாக்கினான்மணாளன்மேனாள்வழுத்தியவடையாளங்க
ணோக்கினளுச்சிதொட்டுப்பதம்வரையுண்மையாக
நீக்கமிலறிவிற்றேறிநெடுந்தவமிழைத்துநின்ற
வாக்கையானிவனேநம்முனமைச்சனென்றுயிர்ப்புநீங்க. (௩௩)

முன்புறவிவனையாண்டுங்கண்டிலமுகத்தைநோக்கி
யென்புகளுருகிநெஞ்சமிரங்கினதெண்ணில்வேந்த
னன்பிற்குரியனானவதியனிவனேயென்று
மின்புரண்மருங்குற்செவ்வாய்வேல்விழிவினவலுற்றாள். (௩௪)

வருபவர்தங்கட்செல்லாமாறிதிவளங்குமாக்க
ளிருவரிலொருவர்தம்மையிழந்தவருண்டோவென்றுங்
குறைசெய்தாலிரண்டிலொன்றைநேருரையோதாதென்னை
பெரிமைநீர்மறந்துக்கேட்டகாரணம்பேசுமென்றாள். (௩௫)

செந்திருவனையதீஞ்சொற்சேயிழைபுகலக்கேட்ட
மந்திரியிவளாலெல்லாமறியலாமிவடன்வாயான்
முந்தியபொருட்கொண்டப்பான்மொழிகுதன்முறைமையாவென்
றந்தரங்கத்துளெண்ணியிவைவெளிக்கறைவதானான். (௩௬)

அம்மவீதென்னேசொற்றாயடிமைநான்மனத்திற்குதின்
பொம்மல்கொண்டுரைத்ததன்றவிசடத்தின்போலிகொண்டு
செம்மனத்தவர்கடம்பாற்செப்பின்தென்றான்கால
மும்மையுமுணரவல்லான்பின்னுமிவைமொழியலுற்றான். (௩௭)

இசபாமிரண்டிலொன்றையிச்சைகொண்டதற்குச்சொன்ன
வசமுகமாகித்தானமாற்றுதன்மாற்றியாறாய்
வெகுமுகமாகச்சொற்றவேட்கையின்விளைவுக்கென்ன
தகவுளதெனவென்றுற்றவலதிலைசமைக்கவென்றான். (௩௮)

அங்கத்தின்பெருமைபோலுமறிவினும்பெருமைகொண்டா
னிங்கத்தன்வேதன்மாயோனிவனுளமெளிதிற்றேறிப்
பங்கத்தம்பகர்தற்காகவாயினுமினுமோர்பாலாய்
சங்கத்தவித்தையாற்கொண்டாய்குவமென்னநங்கை. (௩௯)

அன்னவைவிடக்கீவிரிருப்பதற்கழகுதந்த
தென்கர்பெயர்மற்றியாவையிங்குவந்தடைதற்குற்ற
தன்மையெனதவைபேறுஞ்சாற்றுவாய்விவரித்தென்றாள
புன்லைசெல்வவீசப்புரிந்திவைபுகல்வதானான். (௪௦)

தாண்டவமாடுமுக்கட்டற்பரனருளையன்றி
மீண்டொருபொருளுமில்லையென்பதையிதையத்தெண்ணி
மூண்டெழும்பசியாற்றுமனகர்தொறுமுட்டிவாங்கு
மாண்டியையூரும்பேரும்வினாவுதலடைவோவம்மா. (சுக)

எந்தவூர்பேர்நான்சொல்வேன்காசியிலிருந்திவ்வூர்க்கு
வந்தனனீசெயன்னதானத்தின்வரம்புகேட்டுச்
சொந்தமாய்ப்புகுந்திங்குண்டேன்சுகமெலாநீசெய்காவற்
பந்தனமென்னுஞ்செந்தீப்புசித்திடப்பதைப்புற்றேனால். (சுஉ.)

என்றவன்புகலக்கேளாவிவன்மனக்குறிப்பும்பேச்சு
மொன்றினும்பொருந்துறாமலுற்றனபுரிந்துநோக்கில்
வென்றிமன்னுழைநின்றுற்றுமந்திரவிரகற்கல்லா
லின்றுவேறெவருளத்துநினைவிற்குமியையாவம்மா. (சுங)

ஐந்துறுகரணமொன்றுபட்டுநல்லாறுபுக்கி
மைந்தறப்புலனைவென்றுவாசனையொடுக்கியுள்ள
ணைந்திடாத்தவநின்றுற்றுநியாயநீநண்ணிற்றேனும்
பந்தம்விட்டகலாதேக்கம்படைத்ததுன்சிந்தைபாவம். (சுச)

மெய்மனம்வாக்குமூன்றும்வேறுபட்டுள்ளந்தோராக்
கைதவம்போலும்வேடங்காட்டினகருமநோக்கிற்
செய்பொருளிழந்துநாடுந்தெருமரலெனவென்னுள்ள
மையுறலுற்றேனில்லையெனினுநிற்கங்கமாகா. (சுரு)

எந்நாட்டொட்டிவ்வேடமெடுத்துளீரெனுங்காலும்மை
மந்தணமுணர்வார்தங்கண்மரபுழீஇமகனைப்போலுஞ்
சுந்தரவதனமிங்குதுலங்கினவந்தோநீவீர்
தந்திரமாகவேதுக்குரைசெயுஞ்சாலமென்றாள். (சுசா)

நம்மனத்தடக்கிவேறுநவின்றனம்வாய்மைநாங்கொள்
பொம்மலின்வேடநாடும்பொருண்முதலெல்லாமோர்ந்து
கொம்மைவெம்முலையினளுங்குறிபுகல்பவர்போற்சொன்ன
ளம்மவிங்கிவடன்னுள்ளத்தற்வகோசரமென்விள்வேம். (சுஎ)

மாதிவணமதுவேந்தன்மனைவியென்பதற்கோசற்றும்
பேதகமில்லைக்காணும்பெட்பினாலெவருங்காணாச்
சூதுசெய்தவளுமிந்தத்தொழிற்றலைநின்றாளென்று
போதமுற்றவனுமந்தப்புலன்வெளிப்படுத்தானாகி. (சுஅ)

என்னைக்கொண்டெனக்குவேண்டுங்கவையுளதெனினுநேர்வே
றுன்னைக்கொண்டெனக்குவேண்டுங்கருமங்களொன்றுமில்லை
முன்னைக்கொண்டலதுபின்னைக்கொண்டுமற்றவையென்றாலும்
பொன்னைக்கொண்டமைந்தபாவாய்புகலுவாய்பொருட்கொண்டின்றே.

காட்டையுமலையுஞ்சுற்றிக்கழறுவதென்னைநெஞ்சின்
கோட்டமற்றுளதுசொற்றாலென்மனங்குறிக்கொண்டுள்ள
நாட்டமுமொருவாறொத்துக்கூடினுங்கூடுங்கா
யாட்டிறநல்லாதிட்டுக்காட்டுமோவம்மவென்றான். (௫௦)

உற்றதுபுகன்றதாலேயுயர்மரச்சினையினின்று
மற்றபூங்கனியுமீண்டுபொருந்தினவதனாலவர்
நற்றவன்சாபமின்றிநலமொருகுறைவுமின்றிப்
பெற்றனர்பெருமையென்றுபேசுமாலுலகமின்றும். (௫௧)

பொய்புகல்பவருமையம்பொருந்துகிற்பவருந்தங்கள்
செய்கையிற்பிழைபட்டெல்லாம்பிழைபடத்திரிவார்நாளு
மெய்புகல்பவர்களாயுள்விளைவுகொண்டறமேலேறித்
தெய்வமுங்கருணைசெய்யத்திருவொடுந்திகழ்வாரம்மா. (௫௨)

ஆதலாலுள்ளத்துள்ளவையமும்பிறவுநீத்து
மாதுநின்வாயான்முத்திவழுத்தினாலன்றிநானு
மோதுதன்முடியாவாமென்றுரைசெய்தான்றூயோன்வாய்மை
காதினுட்புகுத்தியுள்ளக்கருத்தினுந்தெளிவுகொண்டாள். (௫௩)

வன்மையுங்குணமும்பேச்சும்வடிவமுமதிப்புமற்றைத்
தன்மையுநோக்கினுங்களிருவருஞ்சரிதானென்று
நன்மைநாயகனுமேனாமக்குணைநயந்துசொன்ன
புன்மையிலாதபுத்திசிகாமணியிவனேபோலாம். (௫௪)

அரவணிபவனேயென்கணருள்சுரந்திவனையீண்டு
வரவிடுத்தனன்வேறெண்ணாய்வதுமினித்தருமமன்றிவ்
விரவொழிப்பதன்முனாமுமிவனொடுங்கலந்துபேசி
வருபொருண்முடித்துமேற்செய்மார்க்கமும்வலிப்பமென்னா. (௫௫)

நினைந்தவளையாநானுநிருபர்கோன்புதல்விநீண்ட
வனந்தனின்மலர்கொய்தற்குவனிதையர்குழாங்களோடுந்
தினந்தினம்புகுந்தமீள்வேமதிலொருதினத்தில்வெம்மை
மனந்தனின்மாறுமூர்க்கனிசிசானங்குவந்து. (௫௬)

எனையெடுத்தொருபூவாவிநீரினுளிருக்குஞ்செம்பொன்
மனைவயினுய்த்துத்தோயவருமவன்மதிப்பைநீக்கும்
வினையினேன்வருடமொன்றுவிரதநீத்தப்பான்மன்றல்
புனைகுவேனின்றேலாவிபோக்குவேனென்றேன்கேட்டான். (௫௭)

திகைப்பொடுமிருந்தான்சீதைசிறையிருந்ததுபோனானுந்
தகைப்பொடுமிருந்தேன்சொன்னவிரதநாடணக்குமேல்வைக்
குகைப்படுமலையான்மானின்மகட்கருள்கொடுத்தாற்போலும்
வகைப்படுமுலகிற்றீராவனப்புமெலிவுருந்த. (௫௮)

திருப்புவனேந்த்ரமென்னுந்திருநகர்புரக்கும்வேந்தன்
பொருப்பிருபுயத்தான்ரூலபுரந்தரன்புதல்வனென்பான்
கருப்பணித்துதித்தபின்னர்கைப்பணிநொடிப்பினீங்கா
விருப்பினின்ருற்றும்புத்திசிகாமணிவினைஞனேடும். (ருகூ)

வாசிமேற்கொண்டுசேணின்வழிபடர்ந்தழகுவாய்ந்த
தேசங்கள்பலவுநோக்கிச்செவ்வழிமுரலும்வண்டு
மூசுதேனினிதுமாந்துமொய்ம்மலர்ச்சோலைபுக்கு
வாசவனனையானன்னம்வாங்கமந்திரியையேவி. (சூ0)

உற்றுழியரக்கன்பாந்தளுருவுகொண்டுருத்துச்சீறிக்
கொற்றவனுழையிற்புக்குமளவையிற்குறித்தசெங்கை
வெற்றிவாண்முனையால்வீசவீழ்ந்தனன்மணியிரண்டு
மற்றவனெடுத்துச்சோரிமாற்றுவான்வாவிமன்னி. (சூக)

கற்படிபோலுஞ்செய்தபொற்படிக்கயத்தினுள்ளே
மற்படிபுயத்தான்சென்றங்கிரங்கலுமலிந்ததெண்ணீர்
பிற்படியிறங்கத்தானும்படியெலாமிறங்கிப்பின்னு
முற்படிமுழுதுந்தீரக்கீழ்ப்படித்தளத்தைமுன்னி. (சூஉ)

அங்கொருசுரங்கந்தோன்றவதின்வழிநடந்துநானுந்
தங்குபொன்மனைக்கட்புக்கென்றன்னெடுங்கலந்துபேசிச்
செங்கண்வாளரவமாண்டவுழிகண்டுள்ளையந்தீர்த்துப்
பங்கமிலெனைத்தேர்ந்தாங்குவதியுநாட்பலவுநீங்க. (சூங)

நாற்பெரும்படைகண்மன்னச்சதுரங்கப்பலகைநட்டு
மேற்படுமடிகண்டெடுத்துவிளைத்தயர்விளையாட்டெல்லாம்
பார்ப்புழியரசேநின்றன்மந்திரியென்பான்றன்னைக்
காற்பலங்கொண்டுவெல்வேமென்றலுங்கலங்கிவீழ்ந்தான். (சூச)

எங்கிநானெடுத்துக்கண்ணீர்துடைத்தவரியற்கையெல்லாம்
பாங்குகொண்டுணர்ந்தென்னுள்ளம்பரிவுகொண்டமைச்சைத்தேடிப்
பூங்கமழ்பொழில்வாய்சென்றெப்புடையினுந்துருவிக்காணு
வாங்கருந்துயரின்மூழ்கிவதிந்தனம்பலநாண்மன்னே. (சூரு)

மையமண்டபத்திலோர்நாள்வைகுழியிவ்வூராள்வோன்
வெய்யகான்வேட்டையாடிமேவிஞன்கண்டுதீரா
மையல்கொண்டுளன்ருனுங்கள்வாவியுளிறங்கியேகச்
செய்வகையிலனுய்வேதக்குலத்தொருதீயாடன்னை. (சூசு)

எவினனவளுமெம்மோடினிதிருந்தந்தமுண்டை
காவலன்றனக்குமன்னம்வின்னமாய்க்கலப்பித்தூட்டி
யாவியைநீக்கியென்னையலக்கழித்திங்குகூட்டி
மேவினுனுமூன்றுமதிவரைவிரதம்வைத்தே. (சூஎ)

மாண்டவனுயிரைமீண்டுவருவிக்கும்வலிமையாவும்
பூண்டமந்திரியைக்காணும்புலன்வெளியெவர்க்குந்தோன்றா
வேண்டுமாதவத்தினோடிங்குற்றனனென்றுமின்னா
ளாண்டொழியாமலெல்லாமுரைத்தனளழுதுகொண்டே. (சுஅ)

கேட்டமந்திரியுநெஞ்சங்கிறுகிறுத்தலமுற்றேங்கி
நாட்டநீர்சொரியச்சோர்ந்துநாவுலர்ந்தவடன்செய்பொற்
றாட்டுணைபரசித்தாயேதனதுயிர்நீத்தவேந்தன்
கூட்டினையென்செய்திங்குவந்தனைகூறுமென்றான். (சுகூ)

ஐயகேடயிலமிட்டோராங்கிடைப்பசும்பொன்னாலே
செய்தநீள்பெடகந்தன்னிற்சேமஞ்செய்துற்றேனென்று
தையலுறவலக்கேட்டான்றன்னுளந்தெளிவுசார்ந்தே
வுய்தல்கொண்டேற்றேநானுநீயுமிவ்வுலகுமென்றான். (எ0)

பையுளுற்றயங்கிநின்றபாவைதன்பதமேற்பின்னுங்
கைகுவித்திருகணீர்மெய்மழையெனக்கரைப்பநொந்து
வையகந்தன்னில்வேந்தன்மரபினைவளர்க்கவந்த
தெய்வமோவவன்முன்னாளிற்செய்தவப்பயனோவம்மா. (எக)

அம்மகேளென்றான்புத்திசிகாமணியரசைநீங்கி
வெம்மைகொள்பரிமேற்கொண்டுமிளிர்மணிமனைகண்முற்றும்
மைம்மலிந்திலங்குந்தங்கமாபுரிமன்னியன்னங்
கைம்மலிந்தேற்றக்கங்குனண்ணிசிக்கண்மீண்டுற்றேன். (எஉ)

இருப்புழியிறையைக்காணாதிருகணீரிறைப்பச்சூழ்ந்த
பொருப்புழிவனக்காவோடைபொழின்முதற்றருவிநெஞ்ச
நெருப்புழிச்சருகாய்நீறின்றிடாதலைந்துநாளுந்
திருப்புழியிரவிகீழ்பாற்றிக்குழியுதயஞ்செய்தான். (எங)

மலைவகிர்த்தனையபாந்தண்மடிந்துயண்மிதிலுற்ற
நிலையுணர்ந்திறைவன்வாளானேர்ந்ததென்றுணர்ந்துவேந்தன்
சிலைநுதன்மகளிர்கையிற்சிறிழ்ப்புண்டானென்னவுன்னி
யுலைவின்றமனமுநாணுமசவங்களோடுமீண்டே. (எச)

தங்கமாபுரியிலன்னந்தந்தவளிடத்திலம்மா
விங்குநான்வருதல்காறுமிவுளிகட்குணவுநல்கி
பங்கமிலாதுகாமென்னச்சொலிப்பசும்பொனீந்து
கங்குலும்பகலுமாகத்துருவியென்கால்களோய்ந்தே. (எரு)

ஊற்றமற்றினிமேற்றேடற்குறுதனவுயிர்போய்மாண்ட
மாற்றம்போலொருதேமாவின்மாநிழற்றுயிலும்வேலை
கூற்றுதைகழலானென்பாற்சித்துருக்கொண்டுசொன்ன
தோற்றமுற்றதர்புக்கங்கங்குறுபொருடுருவியாய்ந்தே. (எசு)

இதுமுடித்திட்டதோசிமறையவளிலமோர்ந்தந்நாள்
புதுநலங்கொள்ளப்பெற்றபுதல்வன்போற்புகழ்ந்துபேசி
மதிவிநயத்தினோடேயவள்கைமோதிரத்தைவாங்கிப்
பதியைநின்பாலிற்றேர்தற்கிவ்வுழிபடர்ந்தேனம்மா. (௭௭)

கொண்டநின்கற்புநீசெய்தவங்களுங்கொடியதோசி
முண்டையைமருட்டத்தந்தமோதிரமிதுபாரென்னக்
கண்டனள்கவலைதள்ளிக்களிப்பெனுங்கள்ளுண்டுள்ளம்
பண்டுயிரகலமாண்டபதிநலம்படைத்தாள்போலும். (௭௮)

வாங்கினாள்சென்னியேற்றிமலர்க்கண்ணிலொற்றிமெய்யிற்
றாங்கினாண்முலையிற்கூட்டித்தழுவினாடழைந்தாளின்பம்
பாங்கினுமுளத்தும்போர்ப்பப்பசர்மொழிபிறிதொன்றின்றி
மூங்கைபோனின்றாளாசைக்கணவன்றோண்முயங்கலொத்தே. (௭௯)

விம்மிநெட்டுயிர்த்துமெய்யின்மெலிவுபோய்ப்பணைத்தமொய்ம்பின்
கொம்மைவெம்முலைகள்சொர்னக்குடமெனவிளங்கியோங்கச்
செம்மலர்வதனம்வானத்தெழுஞ்செழுந்திங்களென்னத்
தம்மழகடங்காளாகிப்பிறிதொருதையலொத்தாள். (௮0)

நெறியெலாங்கண்ணாய்நின்னைக்காண்பதோர்நேயநெஞ்சிற்
குறியமைத்தாண்டிவேடங்கொண்டிவணுற்றேனிந்த
முறைபிறற்கரியாவண்ணமுழுவதுஞ்சிவனோன்பென்றிங்
கிறையவற்கோதியன்னான்பொருண்முற்றுஞ்சூறையிட்டேன். (௮௧)

அங்கவற்கவதியின்றோடாயினவவனுமிந்தக்
கங்குல்போய்க்கழிந்தானாளைக்கடிமணமுடிப்பானெண்ணி
யிங்குவந்துறுவானாமுமினிநொடிப்பளவும்வாளாத்
தங்குதல்பங்கமாமென்றுரைத்தனடவத்தின்றையல். (௮௨)

உற்றவாறமையநோக்கிக்கங்குல்போயொழியாமுன்ன
மற்றவர்மனத்துங்கண்ணுமுணர்வுறாமார்க்கமாகப்
பொற்றொடியோடுநாமும்போவதுகருமமென்னா
முற்றிலுநினைந்தான்பின்னுமிதனையுமொழிவதானான். (௮௩)

மன்னனைவீட்டியிந்தமாநகரெரிக்கணூட்டிப்
புன்மறையவனைவாட்டிப்பொருபடையடங்கமாட்டி
யன்னைநின்றனையுங்கூட்டியேகுதற்கமைந்தவீர
மென்வயிற்கிடக்கநானுமதிசெயற்கெண்ணுகில்லேன். (௮௪)

மாண்டமன்னவற்குமுந்தியாருயிர்வழங்கியப்பான்
மீண்டிவைபுரிதனன்றென்றுளந்தனில்விளைந்தவேட்கை
தூண்டுகெட்டொடர்புற்றேனுக்கம்முறைநீருஞ்சொன்னீ
ரீண்டினிதிருந்துவாளாவெண்ணுதல்பழுதாமென்றே. (௮௫)

சற்றவிஞ்ஞைகளின்மூத்தாண்மந்திரங்கருத்துட்கொண்டான்
சுற்றிலுமுள்ளுங்காக்குமாக்கள்கண்டியின்றாரென்னும்
பெற்றியினளவோமூன்றுபுவனமும்பிரமைகொண்டு
முற்றினுமயக்கமூண்டதிவர்க்கினித்தடையுமுண்டோ. (அசு)

இருவருமொத்துக்கூடியெழுந்தனர்துயிலான்மோகம்
மருவலையுலகென்றாலும்வருமிவர்வடிவங்காணற்
கருமையென்றுருவந்தோன்றாதமைக்குநல்விஞ்ஞையுற்றுத்
திருநகர்வீதிநீங்கிப்புரிசையைக்கடந்துசென்றார். (அஎ)

மங்கைதன்றன்பமென்னும்வல்லிருட்செறிவினோடு
கங்குலின்செருக்குமாறத்தங்குலக்கனியைக்காண்பான்
பொங்குபேராசைகொண்டுபுறப்பட்டுவந்தபோலு
மெங்கும்வெண்கலைகள்வீசியெழுந்தவான்றிங்களன்றே. (அஅ)

விதலையாற்சூழ்ந்ததிமைவிலங்கியும்விலங்காவண்ணந்
தளையிணைக்கூந்தலாளைத்தடுத்ததுபோலுநீண்ட
சுதைபடுமண்டப்பித்திமுழுவதுந்துன்னிமல்கும்
புதையிருள்கிழித்துச்சிந்துநிலாக்கதிர்பொலிந்ததெங்கும். (அகூ)

திருமகளிருந்துதீராப்பிறிதொருதிருவுமின்றி
மருவிஃதவ்வைகூடிமாநகரிருள்வாய்த்தூக்கம்
பொருவிடத்திருவுமிக்குபோந்தனளென்றுகாணம்
பெருமைகொண்டிவர்தல்போலுநிலாக்கதிர்பெய்யப்போனார். (கூ0)

கானகந்தன்னிலொத்துக்கால்கொடுநடக்கமாட்டா
மானனையாட்கோர்விஞ்ஞைவழங்கினானிமைக்குமுன்னம்
போனபார்நெறியின்றூரமினதெனப்புலப்படாமற்
றான்முனமிருந்ததூய்நீர்த்தடாகநீள்குடிலைசார்ந்தார். (கூக)

மறையவன்கொல்லக்கண்டுவருந்தியவருத்தமாறா
சிறையுநெஞ்சினனாய்ச்செல்லுநந்தங்கமர்ந்தின்றைக்கந்த
விறைவனைக்காணுங்காலமிதுவெனவருவான்போலுங்
கறைகிழித்துதயன்கீழ்ப்பாற்கடன்முகட்டுதயங்கண்டான், (கூஉ)

பூலோகாம்பைமீண்டேற்றபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-உக-க்குத் திருவிருத்தம் கருஉச.

---

# புவனேந்திரனுயிர்பெற்றபடலம்.

பாலமுதுங்கற்கண்டுங்கனியுஞ்சேர்த்துப்
படைத்தருசிபோலுமின்பம்படைப்பமேனு
ளாலடியிற்சனகாதிகுறைகடீர்த்தங்
கத்துவிதப்பொருளளித்தவரசையென்றன்
பாலிருந்தகன்மானுபவங்களோட்டும்
பரமதயாநிதிப்பொருளைப்பார்ப்போர்க்கெல்லாங்
கோலமடிக்கடிபுதிதாய்க்காட்டிநிற்குங்
குறையாதபெருந்திருவைக்கூடிவாழ்வாம். (௧)

வேறு.

கங்குலிற்சாம்பிக்கூம்புங்கடிக்கமலங்கடீர்ந்து
மங்கையால்வருந்திக்கேண்மைவன்மையால்வரவுகாண்டு
தங்களிற்களிப்புக்கொண்டுததும்பியதகையேபோலுஞ்
செங்கதிருதயநோக்கிச்சேயிதழ்மலர்ந்தவன்றே. (௨)

அன்னங்கணளினப்பள்ளிதுயிறணந்தருகுலாவப்
பொன்னளிமுழக்கமாருப்புரிவளைத்தமாவாவி
தன்னெழின்மகவுநீங்கச்சலனமுற்றிருந்துவாடு
மன்னைபின்கண்டின்பூறுமாறுபோற்றிரைகளார்ப்ப. (௩)

பண்டுதீர்ந்தயலிற்சென்றோர்மீண்டுதன்பாலிலெய்தக்
கண்டுளங்களித்துப்பேசுங்காட்சியைக்கடுப்பவாங்கே
யொண்டொடிமருங்குசூழ்கொண்டோதைமாருதுபோர்த்து
வண்டுகள்பாடக்கிள்ளைகுழறுவமலர்க்காவெங்கும். (௪)

வாவியைக்கண்டான்சோலைவளங்களைக்கண்டான்மேனுட்
காவலனேடுதங்கியிருந்துழிகண்டானெஞ்ச
மாவலிப்பெய்திச்சற்றேயயர்த்துளந்தெளிந்துபின்னும்
பூவையோடிறங்கிநீருட்புகுந்துபோய்ச்சுரங்கம்புக்கான். (௫)

புக்குதூய்மணிகளாலும்பொன்செருகையாலுங்கூட்டிச்
சிக்கிருள்சீக்குஞ்சோதிச்செழுங்கதிருதயம்போலு
மிக்கொளிபரப்பிநின்றமிளிர்மனைவளமைகண்ணுற்
றக்கவன்காணவுள்ளந்தைத்தாண்டபேப்பரின்றே. (௬)

இம்மனைவளமைநோக்கியிதிற்குடியிருந்துவாழு
மம்மனைக்கண்டவேந்தனம்மினுயிரம்பங்காகச்
செம்மனைபோலுநண்பிற்சிறந்தவரெனினுமந்தோ
தம்மனையுள்ளங்கொள்ளானென்பதுசாதமாலோ. (௭)

எவ்வுழிச்சேமஞ்செய்தாயிறைவனையணங்கேயென்ன
மௌவலங்குழலாள்கேட்டுப்பூட்டியமனைத்தாணீக்கிச்
செவ்விமன்னவனைச்சேர்த்தபேழையைத்திறந்துகாட்டக்
கௌவைகூரமைச்சன்கண்டான்கண்கணீர்மழைபோற்கால. (அ)

சீர்முகத்தெற்றிக்கண்ணீர்சிந்தமென்காங்கள்சேப்ப
பார்முகத்துற்றுப்பூழிபுதையமெய்பதைத்துளேங்கி
நேர்மொழிமறந்தானுள்ளநிலைதடுமாறிச்சோர
வேர்வைகொண்டுயிர்த்துவாய்விட்டழுதிவைவிளம்பலானான். (கூ)

வேறு.

ஆனையரியேற்றினையுண்டதுபோலுமாகுவுமோர்
பூனையையுண்டதுபோலும்புலக்கேடாணலக்கேடாய்
வானைவிழுங்கியகொடியமானஞ்சானினைக்கொல்ல
வேனையாவென்னினைந்திங்கிறந்தாயோநானறியேன். (க௦)

தாமரைநூலிற்பெரியதந்தியூற்கால்பிணிக்கச்
சேமத்துளார்ந்துயிர்போய்த்தீர்ந்தனவாவொக்குமிந்தக்
காமச்சழக்ககலாக்கைம்பெண்புரிந்தகொடுந்
தீமைக்குணீயிறந்தாயையாநஞ்சீர்சிறப்பே. (கக)

சிந்தித்தாள்பாக்கியத்தைத்திக்கொடியாடீநஞ்சாற்
பந்தித்தாணீயுயிரும்பாழ்பட்டாய்நானேங்கிப்
புந்திக்கிடர்கொடுத்துப்பூவையர்போலேயழுத
நிந்தைக்கிடர்விளைப்பார்நீணிலத்திற்காணேனே. (கஉ)

நின்றுதையென்றுதைநீணிலத்திற்றுனையொடுங்
கன்றுல்வினவெறிந்தோன்போன்றுவலிகண்டிருக்கக்
கொன்றுளொருகொடியகூன்கிழட்டுத்தோசிமுண்டை
வென்றுவிதற்கழுதிங்கேங்காவோவென்வீரம். (கங)

தாதைபுரிசெங்கோற்றனையுணர்ந்தால்வெங்கூற்றும்
வேதைபுரியாவுலகில்யார்புரியமேவுகிற்பார்
நீதைவிலகாதனுயிர்சேர்ந்திருந்தலோகமெங்கே
வோதையாவென்கவலைதீர்த்திங்குயிர்பெறவே. (கச)

என்னைப்பிரிந்திருக்கவிவ்வளவுமொவ்வாத
மன்னைப்பிரிந்துயிர்தான்வைத்தமதியிலியைப்
பின்னைக்குறித்துப்பெருநீருலகருமை
தன்னைக்கொடுக்குநலந்தானளிக்குந்தன்மையவோ. (கரு)

.நன்பொருவிக்கற்றகலையாவும்புறம்பொருவிப்
பொன்பொருவிக்கோர்ந்துதிருமேனிபிணம்பொருவி
நின்பொருவிக்கட்கலக்கநேர்ந்ததுகண்டிப்பெரிய
புன்பிறவிகாளொருவிப்போகாதிருப்பேனோ. (கசு)

வேறு.

இரவலராம்பறவைகணின்றிரவாமைவலுவினினின்றெவையுஞ்சோத்
தரவலரிலாதுதவுந்தமனியத்தூய்மணிகுலவுந்தருவேநாட்பின்
கரவிலர்கண்ணொளியாயிப்புவியினுக்கோர்களைகண்ணாய்க்காவல்பூண்ட
புரவலநின்னடிபரவினானேவற்புரிநாளும்பொருந்துமேயோ. (கஎ)

எண்ணாளுந்திறலரசர்நின்னேவல்கடவாநின்றிறைஞ்சியேத்த
விண்ணாளுமொருவனெனமின்னுமணிமுடிவேய்ந்துவிரிநீர்சூழ்ந்த
மண்ணாளும்பெரும்புகழைவாய்மடுத்திங்கேப்பமிட்ட மறையாளென்னு
பெண்ணாளும்பகைவனுந்தோள்வலிநோக்கநானழுதுபேதுற்றேனல். (கஅ)

அயிராவிவ்வுலகமிசையவதரித்தசீவர்கட்கோராக்கைநீக்கி
யுயிரானதனைக்கவர்வானீயுடனானுயிரெனுமோருண்மைகண்டுஞ்
செயிராகவுயிரெனுமென்றனைநீக்கியுடலானதிருவோய்சின்னைப்
பெயராவிண்ணுலகடைத்தகூற்றுவனுர்பழைமையினற்பேதுற்றூரோ.(கக)

பலபன்னியழுதானையழுதழுதுமுடியாமற்பார்த்துநின்ற
நிலமன்னர்குலமகளுநெடுங்காக்கொண்டமைத்தப்பாநீயேயிங்கு
புலனில்லார்போன்மயக்கிப்புலம்பினுற்புலர்வானபூமான்றூனு
நலமன்னவேண்டாவோவெனக்கரைந்தாணயந்தமைச்சன்விநயநாடி. (உ௦)

வாசநறுந்தயிலமிட்டுமணிப்பேழைதனிற்கிடத்திவைத்ததங்க
ணேசமிகும்புரவலனைநேரிழையுந்தானுமனநேசநீங்காப்
பாசமொடுதூக்கியவிர்பொற்றவிசின்மிசையிருத்திப்பண்டுமெய்யிற்
பூசுதயிலங்கழியப்புதுவாசங்கமழுநறும்புனல்கொண்டாட்டி. (உக)

திருக்காப்புநுதன்முதன்மற்றவையவங்கண்முழுவதிலுந்திகழச்சாத்திப்
பொருக்காப்பொன்கலையணிந்துபுதுமணிகண்டிகைமணிப்பூண்பூட்டிநீங்கா
மருக்காப்புமலர்புனைந்தாங்கொருபுறத்தின்மறைவுபட்வைத்துமாதை
யிருக்காப்புப்புறம்பகலாவெனப்பணித்துவினைபுரிவானிவைசெய்வானல். ()

மிக்குநறும்புனல்குடைந்துதவளமதிவெண்ணீறுமெய்யிற்பூசி
யக்குவடஞ்சிரங்கரங்கண்டமும்பூண்டுபுறக்கரணம்யாவுநீக்கிச்
சிக்குவாதனைபோக்கியகமுகமாயுட்கரணந்திருத்திமாண்டோன்
பக்கமுறுதெதிரினிற்பத்மாதனமேலமர்ந்துசெபம்பண்ணுவானாய். (உ௩)

வாக்குமனமெய்மூன்றும்வசமாகியொருநெறியின்மன்னிநிற்ப
தாக்குமலவலிகோசநிலைபிரிவுற்றதிரேகமாயைதள்ளிப்
போக்குவாவற்றிருந்தபூரணத்தைத்தன்னெதிரின்பொருளாய்முன்னிட்
டேக்கமுறுவாசியைப்பந்தகயாக்கிச்சுழிமுனைக்கண்ணேறநாட்டி. (உ௪)

தாரகமாம்பிரணவமூலந்திருத்திமூவிரண்டுதலமுந்தானாய்
நேர்பரவியசைவின்றிச்செபம்புரிந்தானொருச்சாமநேரமட்டும்
மாரணமன்னவனுடலினவயவங்கள்பயப்பயவேதுடிப்புவாய்ந்து
பூரணமாயுயிர்பிறந்துதுயின்றவர்போல்விழித்தெழுந்தான்பூரிப்போங்க. ()

சாற்றுமெழின்முசவைமுத்தூராமலிங்கச்சேதுபதிதன்னைக்கண்டாங்
கேற்றுவர்வெங்கலிகெடவன்பசிப்பிணிவிட்டகத்தடங்காவின்பங்கொண்
தோற்றமெனமேன்மேலுஞ்சொல்லரியபேருவகைதுளும்பச்செம்பொ [ட
ளுற்றியசித்திரச்சலசமலரொனவாண்முகமதிநின்றழகுகாட்ட. (உசு)

மலர்முகமுமலர்விழியுமலர்வாயுமலர்க்கரமுமலர்மென்காலும்
புலருதயக்கண்டதிருப்புண்டரிகமன்றலர்ந்தபுதுமையொப்பக்
குலமகனும்பண்டயகல்வடிவினுமெண்கோடிபங்குகோலம்பொங்க
நிலமிசையன்றெருபுதியமன்மதன்போலழகுகொண்டுநிறைந்திருந்தான். ()

பாரேயல்லதவிசும்புபாதலமேமுதலாகப்பார்த்துகோர்த்து
நேரேன்றிடுமுலகினெனடுநானாய்த்தொடுத்திதுநாணெறிக்கேடாகப்
பேரேபோய்மாண்டவரைப்பிழைத்துவரப்புரியும்விஞ்சைப்பெருமைபூண்ட
தாரேவிங்கவன்போலுமொருவரைநாந்தெரிந்துரைக்குமவதியம்மா. (உஅ)

கற்றமதிமகன்புரிந்தவிஞ்சையினுலுயிரடைந்தகாவலோனு
மற்றவனைக்கண்டடங்காமகிழ்ச்சிதனதுளம்புதைப்பமறுகித்துள்ளி
யுற்றுமெய்மேல்வீழ்ந்தகலமுறத்தழுவியுடல்குழையமுகத்தையொட்டிக்
கொற்றமிகுமுத்தமிட்டோயாதிருகண்மஞ்சனநீர்கொண்டங்காட்டி. (உகூ)

அப்பாவுன்றனைப்பிரிந்திங்கெப்போதுநினைப்பில்லாதளியற்றேனை
யிப்போதெப்படியறிந்திங்கெய்தினைநீநான்புரிந்ததவந்தானென்னே
செப்பாயென்றயாதமுகமெறுடுபலகாலுஞ்சிந்தைதேம்பிக்
கைப்போதாலடிக்கடிநன்முகருதைவந்தானந்தக்கடலுளாழ்ந்தான். (௩0)

ஆர்சொன்னார்வாவியினீர்கல்வதற்செவ்வுபாயமுறையறிந்தாயென்றன்
காரிகையுன்வரவுகண்டாளோவெங்குற்றான்காளையுமிங்கே
யாரடியம்மாவெளியேயரம்பைதனைக்கூவென்றுனவலுங்கேட்டு
மாரணமாமிடவேந்தன்வாமொழியென்றகத்துவகைமண்டநின்றே. (௩க)

அங்குவரலாமோவென்றமைச்சனைக்கூய்வினவுதல்கேட்டம்யாகீயு
மிங்குவருவதிற்றடையொன்றிலையென்றான்போய்ப்புகுந்தாங்கெதிரினின்ற
மங்கைதிருமுகங்கண்டான்மாதவவேடப்பொலிவின்வனப்புங்கண்டா
னங்கையினென்சோலமத்தோகான்றயினீத்தெழுவதின்முன்னுடிநின்றாய். ()

சொல்லென்றபலகாலுந்தருவியதின்பொருண்மனத்திற்றேன்றுனொகி
மல்லொன்றவரைப்புயத்தான்மம்மருழன்றுளம்வருந்திமாறநோக்கி
நில்லென்றகையமைத்துநீண்டிருகண்ணுலிருலைநிறைத்துமேனி
நில்லென்றவெயர்த்துமொழிகுழறவினம்பசுங்கிளிபோற்செப்புவாளால் . ()

சத்துருவென்றுரைத்தமொழிதனைக்கேளாதுளமுவந்துதாயென்றாய்நின்
மித்துருவாமறையவனைக்கூவியவனாற்றெரிவாய்விராகிசெய்
தித்திரையுநான்புனைந்தநீண்டுயர்மாதவக்கோலநெறியுமென்றான்
புத்தியினுலூகித்துப்புலப்படாதவைகருதிப்பொருமுமேல்லை. (௩ச)

கன்னம்விலகாதமுழுத்தோசிமுண்டையுமக்கினிதாய்க்கையாலிட்ட
வன்னநுகர்ந்தென்புரிந்தீர்புகன்மினெனக்கேட்டரசனயர்ச்சிநீங்கி
முன்னைநினைப்புளங்கொழுவநல்லதுறைத்தாயந்தமுதிதைசோற்றி
லென்னவினைசெய்தாளோதெரியேனானுண்டுமுடிந்தெழுதன்முன்னே. ()

குடல்புரட்டிவாய்குமட்டிக்கொடுந்தழலின்மழுக்காய்ச்சிக்கொழுத்தல்போ
னுடல்புரட்டித்தொண்டையைநாவுள்வரட்டியாருயிர்நின்றூசலாடப் [லெ
படபடப்புற்றறிவிழந்தேன்பின்னடந்தவகைதெரியேன்பாவியென்னைக்
குடிகெடுத்தாண்முண்டையவளெவ்வழியாள்கூவுமெனக்குமரிகேளா. (௩௬)

பார்புரக்குந்துரையேநீரிவ்வளவோபேரறிவுபடைத்திரென்று
வார்முலையிற்றரளமெனமதர்மழைக்கண்டுளிசொரியவாய்விட்டார்த்து
நேர்மொழியில்லாதகொடுநீலியும்மைப்பிணமாக்கியென்னைநிந்தித்
தாருமுளஞ்சகியாததுயர்பூட்டிவிரற்புனைந்தவாழியோடே. (௩௭)

முன்னடத்தியென்னைக்கூட்டிவிசைபதான்பால்விடுத்தாண்முடிகொள்வேந்
பின்னடத்தைதெரியாமற்காதல்கொண்டுவருமளவிற்பிரியமாகச் [தன்
சொன்னடத்தையால்விலக்கிவிரதமதிமூன்றுவரைதாய்தாயாற்றப்
பொன்னடத்திவரப்புரிவித்தங்குநமதான்றிருத்தாள்பூணிப்புற்றே. (௩௮)

மந்திரியைவரவுநினைந்தரவுபுனைந்தவன்பணிக்கண்வதியுமேல்வைச்
சுந்தரனுநினைத்தேடித்துலைநாடிமுகம்வாடித்துயரங்கூடி
யிந்துமுடித்தவனருளாலிருபிறப்பாடன்மனைக்கணிருள்வாயந்நா
டந்திரமெல்லாந்துருவிமோதிரமுங்கைசேர்த்துச்சார்ந்தானென்பால். (௩௯)

கலந்துமொழிபலபேசிவிஞ்சையினாற்புறஞ்சூழ்ந்தகாப்புநீத்துப்
புலர்ந்துதையன்வருமளவிற்றிருவாவியடைந்திங்குபுக்குநின்னை
யுலர்ந்தபொழுதினிற்பதனம்புரிபெடகந்தனைக்காட்டவுற்றுநோக்கி
யலந்தலைப்பட்டோயாமலழுதிருகண்புனல்சோரவப்பாற்றேறி. (௪௦)

புனலாட்டிக்கலன்பூட்டிப்புதுமலர்கண்முடிசூட்டிப்புழுகுகோட்டிப்
பினைநாட்டிப்புகழ்நீட்டிப்பெயர்காட்டிவுயிர்மீட்டும்பெரியவிஞ்சை
தனைநாட்டிச்செபம்புரியவெழுந்தனையென்றுயர்ந்தகற்பின்றரமேற்கொண்ட
மனையாட்டிபுகன்றவெல்லாங்கேட்டனன்பின்னேதுசொல்லவல்லானம்மா.

எதுசெய்வதெதுபுகல்வதென்பதறியான்மயக்கமெய்திநெஞ்சின்
வாதனையுற்றான்மனைவிவழுத்தியசொற்கேளாதவகையுமெண்ணிப்
பேதையர்போனாணமுற்றான்பேச்சயர்ந்தானிவர்புரிந்தபெருமைநோக்கி
யாதரித்தங்கவர்க்குரியமுகமனுரைபலகாற்கொண்டறையாநின்றான். (௪௨)

பொன்போலுமதியுடையீரும்போலுஞ்சிறந்தபுகழ்ப்பூண்வேய்ந்தென்ற
மன்பாலுங்குணத்தாலுமழகடைந்தாரொருவருண்டோவவனிமீதி
லென்போலுநன்மதிபோயெந்நாளுந்தீராதவசையேயெண்ணிப்
புன்பாலும்விலகாதார்புகல்பாலிலொருபாலும்புகற்குண்டோ. (௪௩)

முந்தெமதுகுலமுழுதுமூவாதின்றுலகமிசைமுதன்மையோங்க
வந்தவும்பெருந்தெய்வமாண்புடையிருமக்கினிநான்வாய்ந்தகைமா
றெந்தவிதமெப்பிறப்பிலெவ்விடத்திலெக்காலமினிதினுற்றி
நந்துதலிலாநன்றிகொளுந்தகைமையுறும்பேறுநண்ணுவேனுல். (சச)

இம்மோசஞ்செய்தாளையெரிவாயிட்டவளையென்பாலேவினுனை
யம்மாவெங்கூற்றினுக்கோராருவிருந்தாய்ச்செய்ததின்பின்னவனியோர்முன்
செம்மாதைமறுமன்றற்றெரியல்புனைகுவன்றவறிச்சிந்திப்பேனேற்
றம்மாதாவுக்கிடர்செய்வார்க்குறுநிரகமெனைச்சாருமாலோ. (சரு)

அறத்தாரும்புறத்தாரும்புரிவதற்கொவ்வாதவசையாற்றுப்பட்ட
திறத்தானைத்தானையொடுஞ்செங்குருதிவாயலகைகடெவிட்டவூட்டி
பிறத்தாலேகிளரிசைகொண்டணியேனேல்விந்தைமகளென்னைநீங்க
மறத்தாரிற்கீழ்ப்பட்டுச்சடையாகிக்கொடுநாகில்வாழுவேனுல். (சசா)

இற்பிறந்தாளைத்துயரின்றலைசெறித்தான்முடித்தலையையென்கையேவான்
முற்படக்கொன்றவனகாமிருந்தையுகவெங்கனலான்முழுதுவேய்ந்து
தற்புகழ்கொண்டெனதுபுயந்தனில்விந்தைவிளையாடச்சமைக்கேனென்னிற்
சொற்பிறழ்ந்துமன்னவைபொய்க்கரிக்குறுவார்புகுநாகஞ்சூழுவேனுல். (சஎ)

என்றிருகட்கடைசிவந்துபொரியொடுவெம்புகைதவழவெரியுஞ்சிந்த
மென்றுதடுதின்றிருகைபுடைத்தண்டமுடிகுலுங்கவிண்ணோர்பண்ணை
நின்றயலின்புறம்போதுங்கநீண்டுறுயாதிரங்கலங்கநெளித்துச்சேடன்
றன்றலைசம்பிதக்கொள்ளநகைத்துருமேறெனச்சினந்துசாற்றலோடும். ()

மந்திரியுமையாவம்மன்னவன்செய்கொடுந்தொழிலைமதித்தேயென்றன்
சிந்தைவருத்தினவென்றுன்மாவீரகேசரிநின்சிந்தைதானு
நொந்துவருந்துவதுவெளியிடச்சிறிதோவேறுரையென்னுவல்வேன்வீரர்
பிந்தியினிச்செயுங்கருமமுந்தியெடுத்துரைப்பதுவும்பிழையாமன்றே. (சக)

செப்பியபின்வஞ்சினமுந்தீராதமனத்துனியுந்திரும்வண்ண
மப்படியேபுரிகுதுமாலதுகாலந்தாட்காதிவ்வாங்கைநீங்கி
யொப்பரியபூவுலகைச்சேர்ந்துநமதசுவமதையுடனேகைக்கொண்
டிப்பெரியகாரியமேலெருதல்செய்வோமென்றுனிசைந்தான்மன்னன். (ருo)

ஆயபொழுதன்னமன்னுணீர்குடைந்துபூசைமுறையாற்றியன்னந்
தூய்மையதாயட்டிடவாங்கவர்கித்தக்கடன்முடித்துத்துய்த்தாரிட்ட
பாயசமுப்பழம்வடைதேன்பாற்குழம்புசோறுகறிபருப்புநெய்சேர்த்
தேயமனத்தாயாசந்தீர்துயில்வுற்றனர்சோலையெய்தினரால். (ருக)

வேறு.

மந்திரிவிரைந்துதங்கமாபுரிதன்னிலன்னந்
தந்தவண்மனையிற்புக்குத்தனியுபசாரஞ்சாற்றிக்
கந்தமங்கலைக்கைக்கொண்டுகண்ணிமைப்பதற்குமுன்னம்
வந்தனனிரதமொன்றுசெய்குவான்மனத்துளெண்ணி. (ருஉ)

கற்றதன்விஞ்சையாலுங்கைவலியாலும்புத்தி
யுற்றநுட்பத்தினாலுமும்பரின்விமானமேலாய்க்
குற்றமில்லாதவாசத்தருக்களின்குலங்கள்கூட்டி
மற்றுளமணியாற்புத்திசிகாமணிவகுத்தான்மன்னோ. (௫௩)

குத்துக்காற்சட்டமச்சுக்கொடுஞ்சிபொன்னுருளைகூட்டிச்
சித்திரம்புதுக்கிப்பச்சைசெழுந்துகிர்மணிப்பொன்னீல
நித்திலங்குயிற்றித்தாமநிரைநிரைமறுகுதூக்கிப்
பத்தியிட்டுயர்த்திச்செய்தான்பரிதிதேர்பழமைதோன்ற. (௫௪)

மண்ணமையாதுதட்டைமாதிரம்பொருத்துநின்ற
விண்ணமையாதுநீளம்வெற்பமையாதுதிண்ணங்
கண்ணமையாதுசோதிகவிஞராலுவமைசொல்ல
வெண்ணமையாதென்றாற்பின்னெதுகுறித்திபம்பச்சாலும். (௫௫)

அத்தடந்தேரைநோக்கியதிசயித்தண்ணலிந்தப்
புத்தியும்வினயப்பாடும்விஞ்சையும்புதிதாய்க்கற்ற
வுத்தமனினதுசெங்கையுளைவுருதிதனையாற்றுஞ்
சித்திரனினைக்கிற்றுன்புசேமத்தைத்தின்னுமன்றே. (௫௬)

அளவறுசெல்வந்துய்த்தோர்யாவரென்னினுமோர்காலம்
வெளிவரிலெளிமையாகிமெய்யுளைவதுநோக்காது
களவறுவினையின்மூள்வரென்பதுன்கண்ணதாமென்
றுளமெலிந்தன்புகூறியுருகினானுயிர்த்துநின்றான். (௫௭)

வலங்கொடுவணங்கிப்பூசைவான்முறையாற்றித்தேர்மேற்
பொலங்கொடியோடுதானுமேறினான்புலவரார்ப்பக்
கலங்கலிலாதபுத்திசிகாமணிகைக்கோல்வாங்கி
நலங்கிளரசுவம்பூட்டியோட்டினானெறியைநாடி. (௫௮)

பூண்டுறுகலினவேகப்புரவிகண்முனைந்துசெல்லத்
தூண்டினன்றார்க்கோனீட்டிச்சூழ்பெருங்கடலுந்தீவு
நீண்டமாதிரமும்பாருங்குலுங்கிடநிமிர்ந்துவானின்
றீண்டுபொற்கொடிகளாடச்சென்றதுதெய்வத்திண்டேர். (௫௯)

சிறுவரைநொருங்கவானஞ்செறிபணைமரங்களெல்லா
முறிபடமுழங்குமோதைமூரிநீருவரியார்ப்புக்
குறுகிடக்கோவையண்டங்சோப்புவிட்டலையப்பாரி
னெறிகிழிந்தாறுமாறுநெடுந்திரைகொழிப்பச்சென்ற. (௬0)

குன்றமும்புறவும்பாலைவனங்களுங்குறைத்துநீங்கி
யென்றுவெஞ்சுடர்புகாதவிருநெறியெல்லாந்தாவி
யன்றலர்ந்தொழுகுசெந்தேனணிமலர்ப்பொலிவுகாட்டு
மின்றலம்பணைசூழ்வேலிபூகநீண்மருதம்வந்தார். (௬௧)

கோட்டமில்லாதநல்லோர்குணங்குறித்தெந்நாளுங்
கேட்டவர்கண்டபோதங்கவர்க்கிவர்கேண்மைநீட்டிக்
கூட்டிமெய்தழைதல்போலுங்கோமகன்வரவேற்றன்பு
பூட்டிநன்மருதமென்னும்பூமகளுடல்பூரித்தாள். (௬௨)

பனிமலர்ச்சோலையெங்கும்பாளினுக்குருகிமந்தி
கனிகவர்ந்தூட்டுந்தோறுஞ்சிந்தியகமழ்பூந்தேறல்
புனிதமன்னியாறுறபொலிவித்தபுலம்பாய்ந்தோடி
நனிதவாகழ்ந்தூயநலந்தருநாமமாக்கும். (௬௩)

வீரனைக்காணுமாசைவேட்கையாற்பலகண்கூட்டிப்
பாரினினோக்குகின்றபான்மைபோற்கலாபந்தூக்கிக்
காரிகைக்கினமாயுள்ளகளிமயிலீட்டங்கோடி
நேர்செறியிடங்கடோறுநின்றகூத்தாடுமாலோ. (௬௪)

வாவியும்பூகவேலிவயல்களும்வண்டுமோருப்
பூவிருந்தழகுகாட்டுநாட்டினபொருள்கணோக்கித்
தேவியுமமைச்சந்தானுந்தேரொடுவிரைந்துசென்றோர்
காவறிந்ததிலேபுக்காங்கிருந்தனர்காலந்தாழ்த்தே. (௬௫)

புவனேந்திரனுயிர்பெற்றபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-௩௦-க்குத் திருவிருத்தம்-௧௫௮௬

---

# பூலோகரம்பையைத்தேடவிட்டபடலம்.

ஞானவெளியாகிச்சுருதிதீர்ந்த
சுயம்பாகிவயம்பெருகுசோதியாகிப்
பேதாதிபூதநிறைபுவனமாகிப்
பிறப்பிறப்புப்பிணிமூப்பின்பிரிவுமாகிக்
கோதானபலகன்மக்குழுவுமாகிக்
குறைகடந்துகுறையாதகுணக்குன்றாகித்
தாதாவாயெவைக்கலந்துதானேயாகித்
தனியானதன்னிலையிற்றனித்துவாழ்வாம். (௧)

வேறு.

ஈதெலாமறியாளுமித்தவத்தினுல்வருந்தியின்ற
மாதினையிழந்தவாடுமன்னவன்விரிஞ்சதேசன்
தூதரைவிளித்துநீவிர்தொல்லைவான்கடல்சூழிந்தப்
பூதலமுழுதுந்தேடிப்பூவையைக்கொணர்மினென்று. (௨)

நடத்தொழிற்பாவையன்னநங்கைதன்வனப்புமுற்றும்
படத்தினிற்கோட்டியொற்றர்பாற்றரவாங்கிவேந்த
னிடத்தினிற்செலவுபெற்றூங்கெழுந்தனர்பவனவேகந்
தொடுத்திடப்புவனியெல்லாஞ்சுற்றினர்துருவினாரால். (௩)

தீவுகளேழுஞ்சூழ்ந்ததிரைக்கடலேழுமற்றைப்
பூவுலகதனிலுள்ளபொருப்புகண்முழுதுந்தூய்தாங்
காவுகள்கழனியோடைகயஞ்சிறுகூபந்தொட்டு
மேவியவிடங்கணூடுநகர்முதன்மிடைந்துநாடி. (௪)

கோற்றொடிதனைக்காணாதுகொதித்துளம்வெதும்பிவாடிக்
காற்றினுங்கடியவேகர்கோடிமேற்சலந்ததூதர்
மாற்றொருவிநயமின்றிவாய்புலர்ந்தயர்ச்சியோடுங்
கூற்றின்வாயுயிர்போலந்தச்சோலையைக்குறுகினாரால். (௫)

வானளவாகிநீண்டுமாதிரத்தளவுஞ்சூழ்ந்து
கானளவாகிப்பூவுங்காய்களுங்கனியும்வாய்ந்து
தேனளவிகந்துநின்றசெழும்பொழிலூடுபுக்கார்
கோனளவாகிவந்ததூதுவர்குழாங்களம்மா.. (௬)

அப்பெருங்குழாங்கள்கண்டாங்கரசனுமிவர்கள்யாவ
ரிப்பெருஞ்சோலைவந்தீங்கெய்தினரேதிலார்செய்
தப்பிதக்கூட்டமோவென்றெண்ணினன்சங்கைதீரா
னெப்படிக்கானபோதுங்குதலியல்பாமென்றே. (௭)

பகர்ந்தசொற்கேளாமுன்னம்பாவையுங்கூர்ந்துநோக்கி
யகந்தெளிந்தையாவிந்தக்கூட்டமாற்றலர்களன்று
சகந்தனிலென்னைநாடித்தாதையாலேவவீங்கு
புகுந்தவர்போலுமென்றாடேருமடுத்துப்புக்கார். (௮)

புக்குளதூதர்தம்மிற்பொருபடைத்தலைவனான
வுக்கிரவீரனென்னுமுயர்மதியவனுமாங்கு
தக்கவரோடுமுற்றதையலின்வனப்புமுற்றுஞ்
சிக்கறநோக்கிநின்றுசிந்தையிற்றெளிவுகொள்வான். (௯)

ஆர்கொலாமிவர்களிந்தவடிவிற்படையொன்றின்றித்
தேரொடுந்தெரிவையோடுந்திரர்களிருவர்சேர்ந்த
காரணமிவளுந்தேவரூரினிற்கலந்துவாழும்
வார்முலையரம்பைமாதோவலதுநமரம்பைமாதோ. (௧0)

இங்குளவிருவர்தங்களெழினலமெண்ணுங்காலைச்
சங்கரன்மகனுங்குல்லைத்தாரவன்மகனுமொப்பத்
திங்களின்முகமுங்கஞ்சத்திருக்கையும்பவளவாயுங்
கொங்குயர்தோளுந்தாளுங்கொண்டனர்குறைவொன்றின்றி. (௧௧)

ஒருவனேவேந்தனுகுமொருவனேவமைச்சனுகு
மிருவரில்வேந்தற்கிந்தவிளமுலைமகளுங்காதல்
மருவினளிவர்க்குவேருேர்மாற்றலனுலேதுன்பம்
பொருவினபோலுஞ்சிந்தைபொருமியேபுலருகின்ருர். (கஉ)

என்பனவறிவாற்றேறியுக்கிரவீரனென்பான்
றன்பெருங்கூட்டநீங்கித்தனித்தவன்படத்திேேடும்
பின்பவரிடத்திற்புக்குப்பேதையும்படமுமொன்ருய்
நன்பெரும்பொருளேக்காட்டநாதிபன்மகளென்ருேர்ந்து. (கந)

மன்னவன்றன்னைத்தாழ்ந்துமாதையும்பணிந்தான்மன்ன
னெங்கிலத்துள்ளாய்நீயுமிப்பெருங்கூட்டஞ்சூழ
விங்கிலம்புகுந்தாய்வந்தகருமமென்னியம்புகென்ரு
னன்னவன்பின்னும்வேந்தனடியிணைபோற்றிச்சொல்வான். (கச)

மண்ணுலகதனிலெல்லாவளங்களுமலிந்துமல்கும்
விண்ணுலகதனையேய்க்கும்விரிஞ்சதேசத்தையாளு
மண்ணலெம்விரிஞ்சன்மேனுளாற்றுமாதவத்தாலீன்ற
பெண்ணிவளெனமோகாலபேதத்தாற்பிரியமன்னன். (கரு)

வாடினனழுதசோர்ந்துமலர்க்கணீர்மழைபோல்வாரத்
தேடுவான்செலவுதந்தேயெங்களைச்செலுத்தநாங்க
ளோடிகாடாகவந்தநாட்டொடுத்திதுநாட்பட்ட
பாடுகண்டெதநாளேனுமனந்தனும்பகரற்பாற்ருே. (கசு)

அண்டத்தைக்கடந்துந்தேடவனேகர்போயமைந்தார்நாங்கள்
பண்டுற்றதவத்தாலிந்தப்பாவையையையாவீங்கு
கண்டுற்ருேமென்றுநெஞ்சங்கவல்கொடுகண்ணீர்காலக்
கொண்டுற்றபடத்தைநீட்டக்கோமகன்குறித்துவாங்கி. (கஎ)

நோக்கினன்படமுமாதுநண்பெருமழகுமொன்ருய்
நீக்கமில்லாதுகாட்டுநீர்மையைநினைந்துளோகை
தேக்கினன்மாறிமாறித்தேவியைப்படத்தைப்பார்த்து
மூக்கணிவிரல்வைத்தோயாதிசயமுதிர்வுற்ருனல். (கஅ)

தன்பெரும்வனப்புமுற்றர்தவறிடாதமைத்துச்செய்த
பொன்பெரும்படத்திற்கோட்டமிலாஞ்சனம்புரிந்துநோக்கி
மின்புரண்மருங்குற்பேதைவியந்துதன்னெதிரினின்ற
வன்புறுதூதன்றன்மேலருள்சுரந்தறைவதானுள். (ககூ)

அதவவிரிஞ்சதேசமுழுவதஞ்சுகமோவென்றன்
ருதையுஞ்சுகமோபெற்றதாய்செவிலித்தாயாதி
மாதருஞ்சுகமோமென்பூவைகிளிபொன்னம்பாவை
நிதிலவோவென்ருன்கேட்டவனுளந்தெருமல்கொண்டே. (உ0)

அன்னைநீபிரிந்தகாலந்தேடியிங்கடைந்தநாங்கண்
மன்னவன்செயலுந்தாயர்மார்க்கமுநகர்நாட்டுள்ள
தன்மையுமறிதற்கெங்குசார்ந்தனம்பூவைகிள்ளை
பொன்மணிப்பாவைமீதுமறப்பிலைபோலுமந்தோ. (உக)

கெடுவரோநல்லோர்பொல்லோர்கெடநினைந்திட்டபோதும்
படுவரோகீழ்மைதுக்கம்படைப்பரோபடைத்தபோதும்
விடுவரோவிழுமமென்றவியப்புரையெல்லாமிந்தக்
கடுவிழியவள்பாற்கண்டேனென்றெனக்கவன்றுதூதன். (உஉ)

நகரினைநீங்கிப்பொல்லாநாகத்தாற்கோட்பட்டாயென்
றகமுழந்துற்றுநின்பேராயங்கள்புகலக்கேட்டு
மிகமெலிவடைந்தோமந்தவினைகடந்திவரைச்சேர்ந்த
தகவறிந்தாலோநாங்கடேடுதல்சமைையோமம்மா. (உங)

உருவிலாவொருவன்றன்னையழகனென்றுயர்த்திச்சொன்ன
பெருதமிழ்க்கவிஞரிந்தப்பெருமைசாலவனுக்கென்னே
பொருணயந்துரைக்கலாவார்பூவைநீபுரியாநின்ற
தருமமோவிவரைச்சார்ந்தாயாவருந்தவம்பெற்றோமால். (உச)

நற்றிருவனையாயெந்நாளினுநலமேயன்றி
மற்றினிக்குறைகளில்லவாமெனமகிழ்ந்துபேசிக்
கொற்றவற்போற்றியிந்தக்குமரியையையாநீயிங்
குற்றதுமுதலாயெல்லாம்விவரமாயுரைக்கவென்றான். (உரு)

புன்னகைபுரிந்துபுத்திசிகாமணியொடுதாம்போந்த
தன்மையுமனைமச்சனிங்கத்தையலைமணந்துவாழ்ந்த
நன்மையும்விசயதேசநாதிபன்கைமையாற்செய்
தின்மையும்பின்னுமுள்ளசெயலும்விண்டிதனையெல்லாம். (உசு)

கடங்கலுழ்யானையானுக்கறியவேகாலந்தாழா
மடங்கலொன்றெழுதியீயென்றுரைத்ததன்முதல்வன்வாய்மை
யடங்கலுமமையக்கோட்டியமைச்சனுங்களிக்கவாங்கிப்
படங்கொடுவந்ததூதன்பணிந்துபின்னிதனைச்சொல்வான். (உஎ)

ஐயமீருங்கண்மாட்சியாண்டுகெண்டறைதற்காவேம்
வெய்யகானீத்துக்காவின்விரைவினிற்புக்குமுன்னீர்
வையகம்புரக்குமெங்கண்மன்னையிவ்வழியில்வல்லை
யெய்துதற்கமைப்பேமென்னுவினிதுவந்திறைஞ்சிச்சென்றான். (உஅ)

சென்றவன்குழுவோடன்றேசேணதர்முழுதுநீங்கித்
தன்றிருநாட்டிற்புக்குமளவையிற்சாரக்கண்ட
மின்றிகழ்புரிசைவாயிற்காப்புடைவீரரோடி
மன்றலந்தொடையன்மார்பன்மலரடிவணங்கிச்சொல்வார். (உகூ)

எகியதூதர்கூட்டமேந்தனின்றவத்திற்ருேன்றுந்
தோகையைக்கண்டார்போலுந்துள்ளியகளிப்பாலுள்ள
மோகையங்கடல்கொண்டார்ப்பவுற்றனரிற்றென்ருேத
வாகைவேலவனுங்கேட்டான்கூட்டமும்வந்ததன்றே. (௫௦)

வந்துறுதூதர்கூட்டமழையெனமுழங்கியார்த்து
மந்தரப்புயத்துமன்னன்வைகுபேரவைக்கண்மன்னி
புந்தியின்மகிழ்ச்சியோடும்போற்றினுரவர்தங்கட்குட்
டந்திரூகச்சேனைத்தளாதிபனங்குசார்ந்து. (௫௧)

போற்றினுனுவகையுள்ளம்புதைதரப்போய்வந்தற்ற
மாற்றமொன்றுமையாஞ்சிமலர்க்கணீர்மழைபோல்வார
வாற்றருேற்றிலஞயின்படைம்புரிந்தவசஞகி
வேற்றவர்தெளிப்பத்தேறிவிளம்புவான்விழுமந்தோன்ற. (௫௨)

கடன்மலைகாடுமேடுகதிர்விளைபழனஞ்சோலை
யிடமுதற்பிறவுந்தேடியெய்த்துளம்வருந்தியாவி
விடுபவர்போலெல்லாமும்விசையநாடடைந்தேயாண்டோர்
நெடுமரப்பொதும்பர்புக்குநின்பெருந்தவத்தைக்கண்டோம். (௫௩)

கண்டதோர்காட்சிபோலுங்காரிகைகருமமுற்றும்
விண்டிடமுடியாவாகியுள்ளத்தைவிழுங்கனாணக்
கொண்டனனெதனைத்தேறிக்கூறுவேனமேசின்ற
ணண்டையிற்புலவர்மானக்கற்றபோறிவில்லேனே. (௫௪)

(வேறு)

காவினிற்பசுநறுங்கனிகளின்பிரசநீழ்கழனியின்கண்
மேவுபைங்கூழ்வளர்ந்தமார்பொன்னுலகினும்விளவுமல்சத்
தாவரித்தனமிருத்திலகுநல்வளனெலாந்தழையநாளும்
பூவினிற்றிருவிருந்தாசபூரித்தகாம்போசமன்ருே. (௫௫)

சிலவங்கசரினுக்கிறையவன்றெய்வவிந்திரனையன்ன
சாலவிந்திரன்முனம்புரியுமாதவமெலாந்தாணிபின்கண்
பாலனுயவதரித்துருவினிற்றிருமலர்ப்பசமிமாரன்
போலவந்தழகெலாங்குடிபுகுஞ்சிவனருட்பொலிவுமிக்கோன். (௫௬)

சுமந்திராகாணமைச்சியல்செயும்புலவரிற்றூய்மையுள்ளஞ்
சமந்திராசவையநண்மதிமகளிவனினுந்தன்மைநண்பா
னிமந்தராவினைகளுந்தவலானிரவலர்க்கெழில்போல்வார்
சிமந்தராசரியபன்னூல்பயின்றட்டமாசித்திசேர்ந்தார். (௫௭)

காரசலங்கதறவன்றேவுகைத்திகிரியாற்காரமடித்தோ
ராவினிற்றுயிலுமாலவனுமிங்கவர்களுமன்றியாவர்
தராதலத்திணைசொலச்சாருவார்நேர்பெருந்தாதைபாலிற்
பாரவரும்விடைகொடிவ்வுலகெலாமுறவளம்பார்க்கவந்தார். (௫௮)

காவுகாளுேடைதண்கழனிமால்வரைகடற்கரைமிகுத்த
தீவுதேயங்கள்போயிமையநீள்சாரலிற்றிகழ்தடங்கா
மேவிமந்திரியினற்போனசுந்தரமனம்விளையும்வீர
ளுேவில்வாளரவைவென்றுனதுனன்மகண்மணந்துலவுநாளில். (௩௯)

ஆதகாதவனெனும்விசையதேசத்தையாளரசனென்பா
ளுேதகாதகைமைபொல்லாதவட்கொண்டுநல்லுரைதாாத
பாதகாதிகள்புரிந்தரிவையைப்பழுதினிற்படர்தல்காணச்
சூதகாதந்தெரிந்தறிஞன்வந்தவ்வயிற்றன்னியன்றே. (௪0)

அரசனுக்குயிர்கொடுத்தவனைவெல்குதுமெனுமாண்மைதோன்றப்
பரசினர்மதுவிரிந்தொழுகுபாதவமுறும்பழுவமென்றே
யுரைசெய்தங்கவர்தருமோலைகையுதவிஞனுரைதாமு
னிருபனெஞ்சினின்மிகுந்துலவுமன்பாழியினீந்தல்கண்டான். (௪௧)

ஓலையுந்தூதர்வாசகமுநோாசவேயொத்துநோக்கி
மாலைசந்தனமணித்தூசிவர்க்குதவுசீர்பன்னர்மன்னன்
சாலையந்தணரிலங்கோயில்பூசனைமுதற்றழையவாற்றிக்
காலையிற்பயணமென்றுரைசெய்தானகரொலாங்களிதுளும்ப. (௪௨)

பூலோகரம்பையைத் தேடவிட்ட படலம்,

(முற்றிற்று.)

ஆகப்படலம்-௩௧-க்குத் திருவிருத்தம் (௧௬௩௧)



# எழூச்சிப்படலம்.

தத்துவத்தைத்தத்துவமாறைந்துமாறுந்
தான்கடந்துவெளியானதலத்திலார்ந்த
சுத்தமதையத்துவிதவிரிவைஞான
சொரூபசுகவிம்பமதைச்சுடரைக்குன்று
வத்துவைநற்பாக்கியத்தைவழக்குத்தீரா
வருள்சமயசாகரத்தைமௌனமான
சித்தியத்தையழியாதநிலையையுள்ள
நீங்காதநீக்கமதைநினைந்துநிற்பாம், (௧)

வேறு.

அன்றெழுந்திரவிகீழ்த்திசையில்வந்துறுதலுமரசர்கோமான்
நன்றுகாலையின்விதிக்கடன்முடித்துரியநற்றானநல்கித்
தன்றிருப்புதல்வியைக்காணுமாசையினுளந்தழையுமன்பா
லின்றுநம்படையெலாம்விசையதேசத்தின்மேலெழுகவென்றான். (௨)

சொற்றவாசகமுணர்ந்தணிநகர்ப்புறனெலாம்பறைதுவைப்ப
வுற்றவாசினிகளிற்கலினவெம்புரவிதேரும்பல்காலாள்
வெற்றிவெண்சங்குபல்லியமணிக்கவரிவெண்கவிகைபீலி
மற்றுமுள்ளனதிரண்டடற்றுகாந்தத்தினுமண்டியார்ப்ப. (௩)

வேறு.

நதிசரங்கிரிசரம்வனசரமெனநவிலுமூவகையான
கொதிகொளுங்கனற்றருவிழிமுறஞ்செவிக்கோடுகணிமிர்வானின்
மதிபிளந்துவெண்ணிலவுகொண்டெறிவனமதமழைசொரிகாலும்
புதியவாரணநிரைநிரைபுயலினும்பொருப்பினுநெறிபோத. (௪)

மல்லர்கேசயம்வானரமழவிடைவழிபயில்பெருவேகம்
புல்லவாய்ந்துநீள்புணரிவெண்டிரைகளின்பொலிந்தனபுலநீடு
நல்லமெய்சிறந்தரால்சுழிநாற்றமுநனிதரநயமான
செல்வவாம்பரிகணக்கிலடங்கினசேடனுஞ்சிரமாற. (௫)

அடியுயர்த்திவச்சிரத்திறலச்சிசைத்தம்பொறையுருண்மாட்டி
முடிதுலக்கிமற்றருசெலாநவமணிமுழுவதுமுறைவேய்ந்து
கொடிவிரித்துவிண்ணுலகினுமரம்பையர்குழுவினுங்கூத்தாட
நெடியசக்கரப்பொருப்பெனத்தேர்த்தொகைநெருங்கினநெறியெங்கும்

எய்யும்வில்லினர்கோலினர்வேலினரெரிசுடர்க்கதிர்நேமி
பெய்யுங்கையினர்பெருமழைதன்னினும்பெருகியசிறசொல்லர்
வையநுங்குநாள்பொங்குவான்கடலினுந்தொகைசொலவரம்பாகா
வெய்யகான்புலிவீரர்களெங்கணுமிடைந்தனர்தொடர்ந்தேக. (எ)

பானுவெங்கதிர்மறைத்திருள்பரப்பியங்கவிர்பனிமதிகோடி
தான்முளைத்ததுபோன்றுவெண்கவிகையுஞ்சாமரப்பெருங்காடும்
வானகத்தினுந்திசையினுமலிந்தனதுவசமுமருகார்ந்த
தானைமாக்கடன்மடுத்துவிண்ணுலவியமுகிலினுந்தழைத்தோங்க. (அ)

சங்குவிம்மினதூரியமார்த்தனதடாரிகண்முழங்கினமதமா
மங்குலாமெனப்பிளிறினவாசிகளொலித்தனமணித்தேர்க
ளெங்கணுந்தொனிவிளம்பினவயவரார்ப்பெழுந்தனதிரைவாரி
பொங்குமோசையைப்படுத்தனவிலத்தினும்விசும்பினும்புகழ்கூர. (கூ)

கருதுநாட்கடையுகந்திரண்டுடைத்தவான்கடலினுமிடநீடி
வருபதாகினித்தொகைசெலமகிபர்மந்திரித்தலைவரும்போத
பொருதுமால்களிறனையநல்விரிஞ்சனும்பொன்மணித்தேரேறி
மருதிடந்தவனெனத்திருமுடிமிசைமதிக்குடைநிலவூர. (க0)

புனிதவாணுதற்பூவையர்கவரிகால்புரட்டிடவிருபாலு
மினிதுவந்துநான்மறையவராசிகளியம்பிடத்தமிழ்வாணர்
நனிதுபாடவந்திகர்சனம்விலக்கிமேனயந்துகட்டியம்போட
வனிதமானமற்றவரெலாமுற்கொடுமன்னனின்மகிழ்ந்தேக. (கக)

வாசியாள்கரிதேர்கொடிசிவிகைமற்றுளவெலாம்வரைவில்லா
தூசியூடுசெல்லாவகைநெருங்கியார்த்துறுத்துமாநெறிபோதத்
தூசியாழ்கடல்சுவற்றிவான்சூரன்வெஞ்சுடரொளிநிரைவீட்டி
யாசையெங்கணுமிருட்பிழம்பாக்கினவமரருமஞர்கூர. (கஉ)

பவமணித்திடாதுலகியலறமெலாம்பரித்துமன்னவற்காக்கிச்
சிவமணித்தநல்விதயமும்வாய்மையுஞ்செய்கையுந்திறம்பாவாற்
றவமணித்தவனமைச்சரின்முதன்மையன்றனக்குநேரிணையில்லா
நவமணிப்பெயர்மதிவலானடத்திடநடந்தனநெறிநாடி. (கங)

யானையீட்டமோகுதிரையின்கூட்டமோயாளியொத்தனவீரர்
சேனைவெள்ளமோவாத்தியச்சும்மையோதேர்கொடிகுடையாதி
யேனையுள்ளனபெருக்கமோகணக்கினிற்சுருக்கமாயெடுத்தோதில்
வானைநீங்குருமீனினைக்கடலினுண்மணலினைவரையாவால் (கச)

மாடவீதிவிட்டணிநகர்ப்புரிசையும்வாயிலுங்கடந்தேகி
யூடதீர்ந்திருசிறகராற்பேடையைநீவிமெய்யுவப்பாக்கி
மாடணைத்தொளிர்நளினமேலனந்துயில்வளம்பணைகுளஞ்சூழ்ந்த
நாடகன்றுமற்றருவனம்பெருவரைநடந்ததர்நனிநீத்தே. (கரு)

கானுங்கான்வரையருவியுமோடையுங்கழனியுந்திருநாடுந்
தானுநால்வகைப்படைகளும்பெரும்படைத்தலைவருமுடனுக
வானுங்கீழுறமேலுறுசினைமலர்மதுகரங்குடைந்தூதுந்
தேனும்வேரியுநிரம்பியபொதும்பரைச்சேர்ந்தனன்சேராமுன். (கசு)

விண்ணெலாஞ்செழுங்கேதனமதிக்குடைவிரிந்துவெங்கதிரோட்ட
மண்ணெலாங்கரிதேர்பரியாள்விபினத்திறுமலிவாக
வெண்ணெலாங்கடந்துற்றவிச்சேனையையிருவருமெழில்வாய்ந்த
பெண்ணெலாந்தொழுமரசியுங்கண்டனர்பிரியமுற்றெதிரெய்தி. (கஎ)

அடியிறைஞ்சினர்விரிஞ்சனுந்தேரைவிட்டவனியின்மீதாகிக்
கொடியைமார்புறத்தழுவினன்கட்புலன்கொண்டுமஞ்சனமாட்டி
நெடியதுன்பினுக்கிரங்கினன்பரிவினன்மருகனைநோக்கி
வடிவுணர்ந்தனனதுமறந்துள்ளமுமடங்கொணுமகிழ்வானன். (கஅ)

வேறு.

மருகன்வனப்புமகள்வனப்புமாறுபாடுசிறிதின்றிப்
பொருவுந்தாத்தைநேர்நோக்கிப்பூரித்திருகண்புனல்வெள்ளம்
பெருகமிதப்பொத்ததினீந்தும்பெருந்தேராசன்பிரியாம
லருகினிற்கும்புத்திசிகாமணிக்குமுகமனறைந்தனனால். (௧௯)

மூவருடனுந்தானகலாதெழுந்துமுத்தின்குடைநிழற்றக்
காவலாளன்மதுமலர்ப்பூங்காவிலணுகியோர்புறத்தின்
மேவியிருப்பவிரிஞ்சநகர்வேந்தனமைச்சன்நவமணியு
மாவன்மிகுந்தங்குறுபடையுமிவரைவணங்கியருகடைந்த. (௨௦)

அரவாவிடையூறடைந்ததுவுமாசனதனைத்தடிந்துதன்னை
மருவாமணம்பெற்றிருந்ததுவுமறையோர்குலத்தின்மணமிழந்து
பெருவாரணவஞ்சகிவினையாற்பிழையுற்றதுவும்பினுநடந்த
கருமாகருமங்களும்புகல்வுற்றரம்பையுள்ளங்கரைந்தனளால். (௨௧)

கேட்டதந்தைதனதுளமுங்கிலேசித்தெரிவெந்தீயினிடை
நீட்டுமெழுகொத்துருகியிந்தகிபந்தீர்ந்திடநம்வலியெல்லாங்
கூட்டிப்பகைவன்றனையுமறைக்கொடியாடனையுங்குலமடங்க
வீட்டிநகரைத்தீமடுத்தபோதும்விலங்காமிகையன்றோ. (௨௨)

வானம்புவிபாதலமூன்றின்மற்றவுலகிலெனைத்தெரிந்த
கோனென்பவரும்முனிவருந்தேவர்குழுவும்பிறர்குழுவுந்
தானிங்கிதுசெய்திடக்கருதாரந்தோவிந்தத்தரணிமிசை
யீனம்பொருவும்விசையதரன்புரிந்தானந்தமிசைநன்றே. (௨௩)

குலத்திற்பிறந்தார்கனவின்கண்மனத்திற்குறியாக்கொடுஞ்செய்கை
பலத்திற்சிறியவிசையதரன்படைத்தானென்றாற்பரவைசுற்று
நிலத்திற்சிறந்தபுகழாளர்க்கெதிரோர்மாற்றநேர்நின்றே
வலத்திற்புகலநமக்கினிமேலெந்நாளும்வாயுண்டோ. (௨௪)

சொல்லாலினியென்பயனுளதிங்கவனைச்சேனஞ்சூழ்களத்திற்
செல்லார்கணத்தவர்முனிவோர்திகழ்மேதினியோர்முதலாய
பல்லோர்கண்முன்னெனதுபெரும்பாழித்தடந்தோள்வலிக்கமைந்த
வில்லால்வெல்லாதினிச்சோறுமுகர்ந்துவாழ்தல்விழுமியதோ. (௨௫)

என்றுபுகன்றுவிரிஞ்சைநகர்க்கிறைவன்றனதுமருமகனை
நன்றுபுகன்றிவ்வுலகமிசைநின்னைப்பெறவுநற்றந்தை
சென்றுபுரிந்தமாதவத்தின்செயலுஞ்சிருந்திகழநமக்
கன்றுபுகழ்வோர்பலராலும்வினவிக்கேட்டேனதுமுதலாய். (௨௬)

நின்னையுனக்குமிகுநேயநிறைத்தபுத்திசிகாமணியாந்
தன்னைக்காணப்பெருகுமவாவுடையேனுள்ளத்தனிக்கவலை
பின்னைக்காணுதொழிக்கமகட்கினியவாளுய்ப்பெறக்கிடைத்தே[ன்றோ
னென்னையெனக்கிக்கினிக்கிடையாப்பொருண்மற்றெவையுமெளித

மகவொன்றின்றிநெடுங்காலமதிவேணியனைமனத்தடக்கித்
தகவுதருநற்றருமமெல்லாஞ்சாதித்திந்தத்தாரணியி
னகமாமுலைமென்கொடியிவளைநானுமுன்னம்பெறக்கிடைத்து
மிகவுமருமையாய்வளர்த்தேனதுவீண்போகாவிழுப்படைந்தேன். ()

எனதுதிருவும்பெறும்பேறுமெவர்க்குந்தோலாப்புயவலியுங்
கனதையுறுமற்றுள்ளனவுமிவளாற்பெறமுன்கருதியவென்
மனதின்வணமேசிவனருளால்வாய்ப்பக்கிடைத்தேனெனையுமென்றன்
வனிதைதனையுமுவந்தரசிங்கினேகைக்கொண்டறம்வளர்ப்பாய். ()

இன்னபுகன்றமாதுலனையிறைஞ்சிப்புவனேந்திரனையா
வென்னதவமோநின்னருளுமகடன்னலமுமினிதடைந்து
மன்னர்க்கதிகவாழ்வுற்றேன்முகமனுரைத்தன்மரபாமோ
வென்னப்புகன்றுபலபேசியிருந்தாரிரவியேகினனால். (௩௦)

வேறு

அந்திமாலைபுகுந்தபோதிருளண்டமுற்றும்விழுங்கின
விந்தெழுந்தனவாவியோடையிலேடவிழ்ந்தொளிர்தாமரை
கொந்தவிந்துகுவிந்தவண்குமுதங்கள்வாய்விரியப்பளி
தந்தபைம்பொழிலெங்கணுங்குராருனடைத்தனபுட்குலம். (௩௧)

மாவினிற்சிலசந்தினிற்சிலமங்குலூடுசிவர்ந்தெழா
நாவலிற்சிலகோடரக்குழுகரடமத்தகநாகமோ
டோவலிற்பொலியொட்டகம்பலகட்டிவொண்டுகிலொண்படாம்
மேவுபொன்மணிமாடமாநகர்மேலுநீடவிரித்தனர். (௩௨)

படம்விரித்தனர்தீபமேற்றினர்பன்மலர்க்குலமென்றளி
ரிடம்விரித்தனரிறைவரும்பலவீரரும்பணியேவல்செய்
படைகளுங்களியானையும்பரிவெள்ளமும்படுதிரைமிகுங்
கடலடங்கினவெனவுறங்கினகங்குறீர்வளையின்கணே. (௩௩)

எழுச்சிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩௨-க்குத் திருவிருத்தம்-௧௬௬௪.

---

௨

# வெங்கிட்டம்மாள்காவற்படலம்.

கண்ணளித்தவேடனுக்குத்தங்கணீக்காக்
    கருணையளித்தினியதமிழ்க்கவிகொண்டன்பாய்ப்
பண்ணளித்தமூவர்தமக்கழியாப்பேறு
    பரிந்தளித்துவந்திதந்தபழம்பிட்டுக்கு
மண்ணளித்துவழுதிபிரம்படிக்கிரண்டு
    மாவடியையவன்முடிக்கேவைத்துப்பின்னு
மெண்ணளித்ததிருவாலவாயுண்மேவு
    மெம்மிறையைமும்முறையுமிறைஞ்சிவாழ்வாம். (௧)

வேறு.

இங்ஙவர்துயின்றனரிதற்குமுன்செறி
கங்குல்போய்க்கதிரவன்கடலிற்றோன்றலு
மங்கைசொலவதியன்றொழியமன்னவன்
பொங்கியமணஞ்செயப்பொருமும்வேட்கையால். (௨)

பதிசவணப்பதியாகப்பண்ணிநன்
னதிருடைந்தொளிருநீறணிந்துநான்மறை
விதிமுறைக்கடன்கழித்திரவிவெள்குறப்
புதுமணக்கோலஞ்செய்கலன்கள்பூட்டியே. (௩)

அவனிபர்சூழ்வரவமைச்சர்போற்றிடக்
கவனவெம்பரித்துறையாளர்காப்புறப்
புவனமும்விசும்புநின்றதிரப்பொள்ளென
வுவமையிலியம்பலவொலிப்பவெங்கணும். (௪)

கடுத்ததும்பியவிழிக்களியனங்கனின்
றெடுத்தெறிகவரிக்காடெழுந்துதுள்வரத்
தொடுத்துவின்கேதனங்குலவச்சூழ்மதி
யடுத்தவெண்குடைநிலாப்பரப்பியார்ந்தெழ. (௫)

வேதியாசிகள்விளம்பவெண்ணகை
மாதர்பல்லாண்டிசைவழங்கவந்தியர்
மோதசந்தடியினைவிலக்கிமுன்செலச்
சீதமென்பனிமலர்ச்சாந்துசிந்தவே. (௬)

சுடர்மணிவிளக்கிருகரக்கடுக்கியே
மடவியர்மிடைந்திருமருங்குஞ்சூழ்வரக்
குடமுலையார்களாஞ்சனக்கைகோத்தெடுத்
தடன்வரவிசையமன்னவனுமொல்லையில். (௭)

பத்தியிற்பவளக்காணிறுவிப்பாசொளி
யுத்திரங்கொடுங்கைநற்பொதிகையுய்த்துநற்
சித்திரப்பொற்றகடடுக்கிச்சிர்வளை
முத்தினங்குயிற்றியாகாயமுட்டவே. (அ)

பொழிநிலாக்கதிர்ச்சுடரொழுந்துபூமியில்
வழிவதுபோலெழில்வயங்கவுச்சிமே
லழகுசெய்சிகரம்வைத்தமைத்துமாநில
முழுவதுந்துதிகொண்மண்டபத்தின்முற்றியே. (கூ)

மடங்கலாசனத்திடையிருந்துமன்றல்செய்
மடந்தையைத்தருகெனவணங்கிநால்வர்க
ணடந்தனர்மடந்தனினண்ணிவேலைசெய்
துடந்தையாயுறைந்தவர்துயிலுணர்ந்தனர். (க0)

காலையிற்கன்னிசொல்வருதிகைக்கொளா
வேலைசெய்வினைஞருமெழுந்துமெல்லியல்
பால்வரக்கண்டிலர்பதைப்புறீக்கொளச்
சாலையும்புறனும்போய்த்தடவிப்பார்த்தனர். (கக)

பார்த்தனரெங்கணும்பார்த்துக்கால்கரம்
வேர்த்தனர்திகைத்தனர்மெலிந்துவெவ்வேறு
வார்த்தைகள்சொலவும்வாய்வராண்டியாவருங்
கூர்த்தவெந்துயர்தலைக்கொண்டுவிம்மினர். (கஉ)

நைவினைகொண்டவர்நாடியெங்கணுஞ்
செய்வினையாதொன்றுந்தெரியகிற்றிலா
ருய்வினையில்லையென்றுணர்ந்தங்கோடினர்
நெய்விடுதழற்படவெரும்புநீர்மையார். (கங)

செல்வழியரசனுற்செலுத்துதூதரு
நில்லுநினில்லுநினீவிர்வ்வழி
யல்லலும்பொருமலுமாகிவந்தவா
சொல்லுமினென்றவர்க்கிவர்கள்சொல்லுவார். (கச)

இருள்கிழித்திரவிவந்தெழுதனோக்கியே
வரிவையைவழக்கம்போலடைந்துகண்டிலோம்
வெருவியேதிசைதொறுமேவியெங்கணுந்
தருவினேமிதைச்சொலத்துன்னினேமென்றார். (கரு)

வந்ததூதுவரவைகேட்டமாத்திரஞ்
சிந்தைநொந்தயர்ந்தனர்திகைத்துநீவிரே
யிந்தநற்சோபனமியம்புவீரெனப்
பிந்தினாரவர்கள்பேதலித்தங்கேகியே. (கசு)

சென்றவர்பேரவையிருந்தசெம்மலின்
பொன்றருகழலிணைபோற்றிவாய்புதைத்
தொன்றுரையெனமுடிதுளக்கியோதெனக்
கன்றியமனத்தவர்கழறுவாரரோ. (கஎ)

தங்கள்போழகினுக்கியைந்தையரு
ளெங்களுக்கிருவரிலொருவரைப்பிரிந்
திக்குவந்துரிற்றெரிந்திசைக்கச்சொல்லினு
ளங்கதுபோனடந்தொழுகுநாளரோ. (கஅ)

ஒருவன்வந்தானயற்புலத்துளான்கொலோ
திருநகரான்கொலோதெரியகிற்றில
முருவமுங்கருமமுமுணரினுன்மறைப்
பொருண்முடிப்பொருணிகாழகின்பொற்பினுன். (ககூ)

அங்கவற்றெரிந்துமாதினுக்கியாங்கள்போய்ச்
சொன்னவப்பொழுதினிற்குட்சிதேர்கிலோங்
கொன்னவிர்சிறையிடைக்கூட்டுமென்றன
னெச்சிலமும்பகலிழந்துகின்றதே. (உ0)

வெங்கொடுங்காலனும்வெருவமீப்படர்
கங்குலும்வாடையுமழையுங்கைமிக
வெங்களாற்புரிதொழிலிழுக்கியேவரு
மங்கிருந்தோம்விழிக்குருடாமென. (உக)

அப்புறநடந்தவாறறிகிலோங்கதி
ருப்புநீர்க்கடல்வாத்துயிலுணர்ந்துபோய்த்
தப்பிசம்மடந்தையைத்துருவிக்கண்டில
மெப்பெருந்திசைகளும்வரையுமெங்குமே. (உஉ)

வேறு

என்றிவர்சொலச்சொலவெழுந்தவெகுளித்தீத்
தன்றிருவிழிக்கடைபாந்துதிசைதாவக்
கொன்றைமுடியீசனின்மலர்ச்செனிகுலுக்கா
மென்றதடுதின்றுகைபுடைத்துடல்விதிர்த்தான். (உங)

நன்றரசன்றவலிகன்றெனதுசெய்கை
நன்றெனவடிக்கடிநகைத்துடல்பனிப்பக்
குன்றமனையத்திசைகுலுங்கவிணடுங்க
நின்றவர்களோச்சினமுருக்கியுரைநேர்வான். (உச

சித்தர்மருளமுனிவர்தேவர்கடிகைத்தா
ரித்தனையுளார்நிறையனந்தெனதுவாய்மை
பத்திநெறிநின்றுபணிசெய்துடல்பதைத்தா
ரித்தகைமையார்புரிவர்முற்றச்சமேயோ. (உரு)

மூவர்முனிவோரமரரியாருமுனியாமுன்
காவனுழைகின்றவரலாதொருவர்கண்டீர்
தேவியைமனத்துணிவுகொண்டொருவர்நீண்டிப்
போவதுகொலோபகர்திர்பொய்ப்பயம்விடுத்தே. (உசு)

என்றவனுரைக்கவெருஞ்சியவர்மீள
பொன்றுபொழுதிற்படுபெருந்துயர்பொருந்தி
துன்றியவிழித்துணைகளிற்றுளிதுளிப்ப
நன்றுளம்வருந்தியிவைநாப்புலர்விள்வார். (உஎ)

ஐயநினதாணையொருவர்க்கயர்வதாமோ
மெய்யுரையலாதுரைவிளம்பியறியோமாற்
றையலையழைத்தமறையாடநயனென்றிங்
கெய்துபொழுதிற்சிலர்களையமொடிசைத்தார். (உஅ)

அன்னதையுரைக்கமனதஞ்சினதலாமற்
பின்னைவினைகண்டவைபிழைக்கிலமெனுஞ்சொன்
மன்னவர்கண்மன்னவன்மதித்தெதிரினின்றோர்
தன்னைவிரைவாயவடனைத்தருதிரென்றான். (உகூ)

சொற்றமொழிகேட்டடிபணிந்தெழுதுருக்கர்
நற்றெருவகன்றுமனையிற்கடிதுநண்ணிக்
கொற்றவனழைத்தபணியென்றுரைகொடுத்தே
மற்றவள்பிடர்த்தலையலைத்துவெளிவந்தார். (௩௦)

மந்தணமுடித்தமறையாளையவர்வல்லேக்
குந்தநடைகொண்டுதலைகுப்புறவலைத்தே
யந்தநகரத்திலுளயாவரும்வெறுப்ப
வந்தரசன்வைகுமணிமண்டபம்விடுத்தார். (௩க)

வந்தவளும்வல்லைநெடுமன்னவன்மலர்த்தாண்
முந்திருகரங்கொடுவணங்கிமொழியாமுன்
சுந்தரமுடித்தலைதுளக்கிநகைதோன்ற
வெந்தழலெனச்சினம்விழித்துரைசெய்வானல். (௩உ)

வேதியர்கடங்கள்குலமீதினிலுதித்த
பாதகியுனக்குரியபாலகனையிங்க
ணீதவறிடாதழைமினென்றுரைநிகழ்த்தப்
பாதமலரைத்தொழுதுபாவையிவைசொல்வாள். (௩௩)

மாசிறவமோடுலகின்மன்னும்வளமோங்குங்
காசிமுதலாயபலதேசநெறிகண்டே
யீசனையலாதிவனெனப்பெருமைகூறப்
பூசுரர்களோடிரவில்வந்துமனைபுக்கான். (௩௪)

என்றனிருதாண்மலரிறைஞ்சிமருளெய்த
வொன்றுபலகோடியுபசாரமொழியோதி
நன்றமுதருந்தியிவனுன்வருவனென்றுப்
பொன்றிகழுமாதுதவரோற்குமுழைபுக்கான், (௩௫)

போனவனைவல்லிருள்புலர்ந்திதுவரைக்கு
நாளும்வரவெண்ணிநெறிநண்ணியெதிர்நோக்கா
வானவனையுந்தெரிதலின்றியயர்வுற்றேன்
மானவவெனப்புகலும்வல்லியுரைகேளா. (௩௬)

வேறு.

பற்கடித்திருகண்செந்தீப்பரப்பிவெம்பாந்தள்போலுஞ்
சொற்கொடுமுனிந்துசிறித்துட்டிநீபுகன்றவார்த்தை
முற்கொடுவினைந்தோகேட்குமுறைமையின்விநயங்கண்டோ
வற்புதமாகச்சொற்றாய்நின்னுரையழகிற்றம்மா. (௩௭)

கொல்லர்தந்தெருவிலூசிகொண்டுவிற்றிடுதற்கெண்ணும்
வல்லமாக்களினின்றீண்டுவெம்பியென்னுழையிற்சொன்ன
சொல்லைவிட்டுளத்திலுள்ளகுதைவிட்டுளவாக்கொண்டின்
றெல்லவர்கட்குந்தோன்றவெளிமைநீத்தியம்புகிற்பாய். (௩௮)

மெய்ம்மறைக்குலத்தில்வந்தும்வேதியர்விழுப்பநீங்கிச்
செய்தொழிலிழுக்கிநின்றதிருவிலிதீமையாற்றும்
பொய்ம்மையையகற்றியென்பாலுள்ளவைபுகன்றாயாகி
லெய்துவையாவியின்றேலிழக்குவைசரதமீதால். (௩௯)

எனவுருத்தசனியஞ்சவியம்பியவேந்தன்பாதந்
தனில்விழுந்திறைஞ்சிநாயேன்சாமிகாரியத்திற்றேடங்
கனவிலுந்தணிந்துசெய்யக்கடவனேநின்மேலாணை
மனமுறவறியேனுள்ளவாறிதுவழுத்தக்கேண்மோ. (௪0)

என்மகனொருவன்காசிக்கேகினன்மேனாளென்ற
தன்மைநின்சமுகந்தன்னிற்சாற்றியதறிவாயந்த
நன்மகன்வரவாளிண்டநெறிதொறுநாடாநின்ற
புன்மையேன்மெய்யாய்வந்தோன்றன்னையென்புதல்வனென்றே. (௪௧)

உள்ளவெல்லாஞ்சொன்னனெனக்குநாளுற்றதாலே
பிள்ளையென்றவந்தேனன்னான்பேச்சினும்வடிவினானுங்
கள்ளமென்பதுதோன்றாதுகாட்டினனடந்தவெல்லா
நள்ளிருள்வரையுஞ்சொன்னேன்கேட்டுமேனயந்துகொண்டோன். ()

மங்கையைக்கடத்தியிங்குகொணர்ந்தநாண்மாண்டமன்னன்
செங்கையினாழியென்பாற்சேமித்துவந்தேனந்தோ
வங்கதுதனையுங்கேளாக்கேட்டுக்கையடக்கஞ்செய்தே
பங்கமிலாமன்மிக்கசாலங்கள்பலவும்பேசி. (௪௩)

மடந்தனிலுண்டுமீண்டுவருவனென்றெழுந்தானெந்த
விடந்தனிலேகினனேவறிகிலேனிருள்போய்த்தீர்ந்தும்
விடிந்ததுமுதலாய்த்தேடித்தேடிநான்வீதிதோறு
நடந்துகாலலுத்தேனுண்மையென்றனணகைத்துவேந்தன். (சச)

பாதகிகொடியசூதுபண்ணியென்றன்பேர்சொல்லி
மாதினைக்கொணர்ந்தாய்பெற்றமைந்தனுக்காக்கிவிட்டாய்
தீதிலாவுரியசாலஞ்செப்பினயிதுபோல்யாவர்
பூதலந்தனிலேசெய்யப்போதுவார்பாவம்பாவம். (சரு)

வாவியிற்புக்குமுன்னேர்மன்னனைவதைசெய்தந்தப்
பூவையைக்கொணர்ந்தநீயப்படியின்றுபுரிதனீக்கிப்
பாவையைமட்டும்பாலற்சாக்கினபரிவுநோக்கி
லோவில்புண்ணியமுன்செய்தற்கெவனெனவுவக்கின்றேனல். (சசு)

வேறு.

வேதியாகருணீபிறந்துநோனுதறம்விலக்கிப்
பாதகத்தினுக்குறையுள்போன்றிருந்தவெம்பதகி
தீதினுக்கெரிசூளையிற்கொடுத்துடல்சிதைத்த
போதினுஞ்சினமடங்குமோவொடுங்குமோபொருமல். (சஎ)

அங்குநின்றபோர்மறவரையரசனும்விளித்தே
யிங்கிவட்கொடுபோய்முனைவாளிஞலெரிந்து
செங்கனற்படுசூளையிலிடுமெனத்திறலோர்
பொங்கியார்த்துப்புன்முயன்மிசைநாயெனப்போர்த்தார். (சஅ)

அன்னகாலையிலமைச்சர்நான்கவரினிற்சிறந்த
தன்மைமிக்குளதருமனென்றொருபெருந்தகையோ
னென்னபாவமென்றிரங்கியாங்கெதிர்நின்றுவிலக்கி
மன்னனைப்பணிந்தின்னனநீதியின்வகுப்பான். (சகூ)

மாதர்தங்களைமுனிந்துரைவழங்கினுமாருப்
பாதகந்தருமென்பதையறிந்தநீபாரில்
வேதமங்கையைவெங்கொலைசெய்திடவிரும்பி
யோதினயாசியற்கையினீதமோவுரையாய். (ரு0)

தேவைநான்மறையந்தணர்தங்களைச்சிசுவைப்
பாவைமார்களையெளியரைப்பசுக்களைப்பதைக்க
நோவுசெய்யினுநவல்கொலைபுரியினும்புரிதற்
கேவல்காண்கினுமெண்ணினுநரகமெய்துவரால். (ருக)

இவள்வயிற்சினங்கொண்டுநீயிசைத்தகாரியங்க
ளவளவுஞ்சரிபிழையெனச்சொல்லுதற்காகேந்
தவளவாணகைமடந்தையர்தங்களிற்பொல்லாக்
கவளயானைவஞ்சகத்தினும்வஞ்சகங்கதித்தாள். (ருஉ)

ஏதுசெய்யினுஞ்செய்குவளாயினுமிதிலோர்
சூதுகொண்டிவள்செய்ததாய்த்தோற்றலைதோன்று
லேதினுலெனிற்கள்ளமுள்ளெண்ணினுலெவர்க்கும்
போதலர்க்ககன்முகத்தினிற்காட்டுமெப்பொருளே. (ருங)

அகத்திலுள்ளவையயற்பொருளாடிகாட்டுதல்போன்
முகத்தினிற்றெளிவித்துழுமுறைமைசற்றிலதாற்
சகத்துநாதவிங்கிதனைநாமெண்ணினுற்றரைமேன்
மிகத்தவாதவற்புதச்செயல்விளைத்தனமேன்மேல். (ருச)

அரசபாதிகொண்டரசர்வந்தடிதொழமகற்கு
விரைசெய்தார்முடிமிலைச்சுதற்கெண்ணும்வேட்கையினுள்
பரசுமிப்பெரும்பாதகம்பண்ணுவாளெனநா
னுரைசெயற்குளமொருப்படேன்விநயமொன்றுளவால். (ருரு)

மங்கையோடுறவாகியமன்னனுக்குயிர்போற்
றங்குநண்பனொருவனுண்டவனிவன்றன்னைப்
பங்கமுற்றிடப்பிரிந்துபின்றேடுறும்பரிவா
லிங்கிவட்குறுமகனெனப்புலன்வெளியேற்றி. (ருசு)

கோதைமாடனைந்திரவினிலிருவருங்குறித்த
பாதைகூடினர்நாளையேயிதுவெளிப்படுமென்
றூதரித்தெனதறிவினிற்றோற்றினதையா
வீதறிந்துபின்கொலைவிட்புரிதியென்றிசைத்தான். (ருஎ)

தனதுமந்திரிசொல்லியதன்மையுந்தையன்
மனதுநோந்துகண்வார்ந்துரைசெய்வதுமதித்தே
யினமிதைத்தெரிவோமெனவெங்கணுந்தூதர்
தனைவிடுத்திவடனைச்சிறைதகைந்துவீற்றிருந்தான். (ருஅ)

(வேறு)

வினைவொன்றுசெய்கையொன்றுய்ந்கழ்ந்திடத்தளர்ந்துவாடி
மனையென்றமக்களென்றமற்றுளபொருள்களென்றுந்
தனையென்றுந்தோன்றுஞ்சிச்சாம்பினுன்பாரிலந்தோ
முனையொன்றுதவமிலார்க்குப்பினையொன்றமுடியுமாலோ. (ருகூ)

(வேறு)

யாதுபிரிந்தமையெண்ணிமாறுதபேருயிர்ப்புமலியகிங்கா [ளை
வேதைமிகுந்திறையளவும்விழிமுகிழாதனமருந்தாவேறென்றெண்
தாதுலகிற்கருமமிழந்தணிவிசையதானிருப்பவங்கமோடும் [ம்.
போதலர்பூப்பொழிலினிடைதுயின்றளமற்றவர்செய்கைபுகலுகிற்பா

வெக்கிட்டம்மாள்காவர்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩௩-க்குத் திருவிருத்தம்-௧௭௨௪.

---

# சமர்த்தன்றூதுப்படலம்.

உலகமெலாந்தன்னுளத்திலடக்கிச்சுத்த
　　வொளியானவெறுவெளியையுணர்ந்துரித்தங்
கலகமிலாதிருந்துசுகம்பெற்றவன்பர்
　　கண்மணியையானந்தக்கடலைமெய்யின்
றிலகமெனவிளங்கியபொன்மலையைவானத்
　　தெள்ளமுதைக்கற்கண்டைத்தேனைப்பாலை
யிலகியதென்மணிமாடக்கூடன்மேவு
　　மெம்மிறையையெப்போதுமேத்திவாழ்வாம். (க)

வேறு.

இவன்வருந்தியிக்கிருந்துழிக்காவினிலிருந்த
புவனவிந்திரன்றுயிலுணர்ந்தருங்கடன்புரிந்து
கவனமற்றிடாதுருப்பமுற்றுளத்தினைக்கரைப்பத்
தவனமுற்றுவன்மாமனோடாய்ந்திவைசமைப்பான். (உ)

என்னையின்னுயிர்போக்கிநம்மெழின்மிகுமரம்பை
தன்னைமுன்கவர்ந்தேகியதரியலன்றனது
சென்னியைத்துணித்தவனகர்தீயெழச்சினவிச்
சொன்னவஞ்சினமுடிக்குதற்கின்றுநான்றுணிந்தேன். (௩)

வில்வலங்கொடுதாங்கிநான்வெஞ்சரமோட்டி
மல்வலங்கொடுமாற்றலர்க்காகியார்வரினுஞ்
சொல்வலங்கொடுதுகள்படுத்தமர்கடிதிக்கப்
பல்வலங்கொடுபோரெலாம்புகழ்படைக்குவனால். (௪)

நின்கருத்தினையுணரவுநின்குலவமைச்சன்
றன்கருத்தினையறியவுஞ்சாலந்தாழ்த்திருந்த
தென்கருத்தெனவியம்பியமருகனுக்கேற்ப
நன்கருத்தனும்விரிஞ்சதேசத்திறைநவில்வான். (௫)

நின்பெருந்தரமோவிவனின்முனிவுக்கார்
முன்புகுந்தமராற்றுவார்முப்புவனத்து
மன்புகந்துறுமேவல்செய்தருள்பெறக்கருதிப்
பின்புகுந்துகாத்திருப்பவர்தொகைசொலப்பெறுமோ. (௬)

பார்விசும்புபாதலமுதற்றம்வலிபடைத்த
வீரரென்னினுங்கருவியுங்காலமும்வினையு
நேர்தெரிந்தவர்வலியையுந்துணையையுநினைந்து
போரியற்றுதனெறியெனத்தனுமறைபுகன்ற. (௭)

எதிரிங்குளராயினுநல்வழிதிருந்துமாறெண்ணித்
தூதுவிட்டவர்மனக்கருத்தென்னெனத்துருவித்
தீதுபின்னவர்க்காகஞ்சேவகஞ்செலுத்தி
மோதிவெல்லுதனீதியின்முறையெனமொழிந்தான். (அ)

விரிஞ்சனிவ்வுரைவகுத்தலுநன்றெனவியந்து
தருஞ்சிறப்பெலாந்தனையொழிந்திலையெனுந்தகைசால்
வருந்தாத்தனான்றமைந்தறிந்துரைசெயும்வலியான்
பொருஞ்சமர்க்குயர்திண்மைசால்நவமணிபுகல்வான். (கூ)

வன்மைசெய்திடர்விளைத்திடுமாற்றலரெனினு
நன்மையாற்றுதலொறுத்தலென்றருமறைநவின்ற
தன்மைநல்லறந்துறந்துநாம்வஞ்சினந்தழுவிப்
புன்மையாற்றினாலென்சொலாதிப்பெரும்புவனம். (க0)

பண்டுவஞ்சனைபுரிந்துதன்பாரியைக்கரவாய்க்
கொண்டுவன்சிறையிட்டவாளரக்கன்மேற்குற்றங்
கண்டுதன்பெருங்கருணையென்பவைவெளிகாண
விண்டுவாவெனவிண்டுமுன்றூதுவிட்டனனால். (கக)

மங்கைகூந்தெருட்டீர்த்துமுன்மன்பெருஞ்சபையி
லங்கையாற்றுகிலுரிந்திடக்கண்டுமஞ்சினர்போற்
றங்களாற்றலுமேற்றமுந்தள்ளிமுன்னைவர்
பொங்குகானகம்புகுந்ததுபுகழ்குறித்தன்றே. (கஉ)

மன்னநின்பெருமாதுலனுரைமருதவன்பாற்
சொன்னநம்பெருந்தூதனையிவ்வழிதூண்டி
யின்னதென்றறிந்ததற்குளவிநயக்கொண்டியற்றல்
நன்மையென்றனன்புவனவிந்திரனதநயவா. (கஙு)

வேறு.

தன்னிருகண்மணியானபுத்திரிகாமணிவதனந்தன்னைநோக்கி
நின்னிருகண்ணுறுமகருமகிழ்த்துகெனக்கூறியதன்னிருபன்பாதம்
பின்னிருபொற்கரம்பாவிப்பிறங்குமணிமுடிவேய்ந்தபெருமநீயுஞ்
சொன்னபடிபுரியுமெனையெதிர்நோக்கிவினவுதலுந்தூய்மைத்தாமோ.

சிற்றறிவிக்குடையேனென்பதுதெரிந்துமெனைக்கேட்கச்சிந்தைசெய்த
கொற்றவநின்றிருவுளத்துக்கேற்கினுமேற்காதெனினுமுணர்ந்துகோ
நற்றவருமொருகாலமாரசாயகம்பொருவநலம்போய்த்தீமை [டி
யுற்றிடுமெனினுமுணர்ந்துளபொழுதனீங்கியினுண்மைகாண்பார்

தடவரையைவாங்கியதிலடுமறியைக்றவியிந்தத்தரையைத்தாங்கும்
படவரவைத்தாம்பாக்கிப்பண்டுதேவாசுரர்கள்படர்ந்துதண்பாற்
கடல்கடையத்தன்வருத்தங்கருதாதுகடைந்தவர்க்குக்களிப்புநல்குந்
தொடாமுதங்கொடுத்தனபின்னுமுநலந்தோய்ந்திடக்கருதினுஞ்சூழ்ச்சி
[யாலோ.

வெந்தழலின்பொறிசிதறிக்கடும்பாந்தளிந் துவின்மேல்வெகுண்டுகெவ்வ
வந்ததுகண்டொழியாதுவருந்தா துகலைகுறைந் தமழுங்கிடாது
முந்தியதன்னிலமையினுமும்மடங்குகதிர்நிலவுமுழுதுங்கூட்டிச் [றே.
சிந்தியதன்றேகுணமும்செய்கையுமற்றெவர்க்கும்வெளிதெரியவன்

வெம்மாசுபழிபாவங்கருதா துவிசையதரன்விரும்பிச்செய்த
விம்மோசந்தனக்கவனையெவ்வளவுபுரிந்தாலும்பவமேயில்லை
யம்மாநின்கருணைகுறித்தகந்தெளிந்துநன்மாமனமைச்சன்சொன்ன
செம்மாண்பலாதவைகள்செயற்கருதலேனக்குமதுசிந்தையாமால். ()

தாதேவியெதிரிவலிதிருவியதின்மேற்சமரந்தொடர்ந்துசெய்தன்
மாதேவர்முதலான மற்றவர்க்குந்தனுர்வேதமரபாமன்றே
சீதேவிகாதலன்போற்றிகிரிகொடுதாணியெலாஞ்செக்கோலேந்தும்
பூதேவவெனப்பணிந்ததன தமைச்சனொடுமிருவர்புகன்றவெல்லாம். ()

தீதகற்றிச்சிறந்ததிருவுளக்குறிப்பானடுகினைந்துதேர்வல்லோனு
மாதலினைமுகநோக்கிமாற்றலர்பாலேகியிங்குவாவேதக்க
தாதினுக்காருரியவரொன்றுய்தலுந்தன்சூழ்படைக்குட்டோலாவெற்றிச்
சாதகத்திண்டோண்மார்பன்சமர்த்தனெனும்பெயருடையோன்றன்
[னைக்கூவி.

வேறு.

அரவுயர்த்தவன்பாற்புகுந்தன்றுபஞ்சவர்க்கு
விரவுதூதுசொனேமியோனவனினும்விநயம்
பரவுசிந்தையான்பவனவேகத்தினும்படர்வா
னுரவிவன்றாமநுமனங்கதனிகர்த்துள்ளோன். (உ0)

அமர்தலைக்கணின்றமாருமடுவதற்கரிய
சமர்த்தனிக்கிவன்றன்னையேவுதியெனத்தரைமே
னிமிர்த்தகீர்த்தியானுரைசெயமருகனுநேர்ந்தான்
றமர்தாத்திறன்றனையழைத்தின்னவைசமைப்பான். (உக)

இன்றுநீவிரைந்தேகிமாற்றலனுழையிங்கு
நின்றநம்பெருவலியெலாமுற்படநிகழ்த்தி
யன்றவன்வலியாவுநின்னறிவினலறிந்து
பின்றிடாதுநின்றுரையினுக்குரையெதிர்பேசி. (உஉ)

கவனமான்றடந்தேர்சரிகாற்பலங்கலிப்புற்
றவனியெங்கணும்போர்ச்செழுந்தமர்ப்பறையதிர்ப்பப்
புவனவிந்திரன்றனதுமாதுலனொடும்போர்க்குத்
தவனமாகிவந்துற்றறனென்பதுஞ்சாற்றி. (உங)

வாவிபுக்குமுன்கைமையாலாசைவஞ்சித்த
பாவியப்பழிக்குன்னையிப்பாரெலாமறிய
வேவினுக்கிறையிடுவதோர்வஞ்சினமென்னு
மேவுகூற்றொடும்புகுந்தனனென்பதும்விளம்பி. (உச)

அரசுமாயுளுமாக்கமுங்கேளிருமகலாப்
பாசிவாழ்வுறும்படியுளத்துள்ளிலப்படியே
யுசைசெய்வானவனேவலின்புறக்கடையுற்று
வரிசையின்பணியாற்றிறுலெலன்பதும்வழுத்தி. (௨௫)

வருதிர்விரைந்தேகெனப்பணித்தலுமன்னன்
பொருமலர்க்கழன்முடியுறவீழ்ந்துசைபோற்றிப்
பருமயானைமேற்பாயும்வெஞ்சியம்வான்படர்ந்த
பெருமைபோல்விசைத்தேகினன்சமர்த்தனும்பெரியோன். (௨௬)

இப்படைக்குணியலதுமாற்றலர்கன்பாலெய்திச்
செப்புவார்களின்றென்பதோர்முறைமையுந்திருவு
மொப்பவாய்ந்தனமெனுங்களிப்புளத்திலுள்ளுறுத்த
தப்பிலாதசற்சமத்தனுநடையினிற்சலியா. (௨௭)

வேகவாயுவினுதியைக்கதிகளும்விலங்கப்
போகுமண்ணெறிப்பூழியால்விண்ணெறிபுதைய
மாகமெங்கணுந்தன்பெரும்புயவலிமண்ட
நாகமஞ்சவெஞ்சினக்கொடுசீறியேநடந்தான். (௨௮)

இலங்கைமாநகர்க்கேகியதூதனேவிவனென்
றலங்கன்மாமுடியும்பருப்பிறருசின்றயிர்ப்ப
விலங்குநீண்முடிவிலங்கலூர்வனநெடுவிருக்கந்
தலைகண்மேல்விழப்புடைகுலைந்தெழுகடல்சலிப்ப. (௨௯)

சென்றுதெண்டிரைக்கடலெனச்செறிந்தபோகழி
துன்றுபொன்மதில்வாயிலைத்துறந்துபோய்த்தூதன்
குன்றவான்மழைமுழசொலிபுறமெலாங்குமுறப்
பொன்றிரண்டொளிபொருவுகோமனைக்கடைபுக்கான். (௩௦)

குமைமாருதம்போன்றநாற்படைக்கடற்றுணைவர்
வீரவாட்கையர்மிக்கிருபுடையினுநிடையப்
பாரின்மன்னரெப்பகசமும்பதம்பணிந்திறைஞ்சக்
கார்பகக்குழன்மடவியர்கவரிகால்புரட்ட. (௩௧)

வட்டவாண்மதிநிலவினைமுழுவதும்வாங்கிப்
பட்டிசைத்திலமெனப்பெயர்பாரினிற்பார்த்தோ
ரிட்டமைத்திடச்சித்திரம்புனைந்தெழுசுடர்கள்
விட்டெரிந்தபொன்மணிக்குடைமுடிமிசைவிளங்க. (௩௨)

காணயாழிசைநாரதரிசையினுங்கனிவாய்
மானவேல்விழிமடந்தையர்செவிப்புலன்வழங்க
வானநீண்மரப்பொதும்பரில்வாவுபொன்மயில்போ
லுனமென்குழலுரியர்சதிமுறைநடிப்ப. (௩௩)

அமரர்சேனையினதிபதியாகியவயில்வேற்
குமரவேளினுங்குறைபடாக்கவினலங்கொண்ட
சமரகேசரிதனக்கிடர்தருபகையென்னுந்
திமிரபானுவென்றடிக்கடிகட்டியஞ்செப்ப. (௩௪)

அக்கயன்னதிகாயன்மற்றவனுக்குமுன்னோ
னெக்குமென்றுசுற்றுவரிசூழுலகெலாமுரைக்கத்
தக்கபேருபெற்றடங்கொணாவில்வலிசார்ந்த
மக்கண்மூவருமருங்கினிற்புலியெனவயங்க. (௩௫)

மலையிற்றோற்றியம்மலையுளசிறகரின்வயங்கு
நிலையிற்றோள்வலையங்கள்சூழ்ந்தழகுறநிமிர்ந்த
தலையிற்றார்புனைந்திலங்கியபொன்முடித்தபனன்
விலையிற்றோங்குசெக்கதிரினுஞ்சிறுவெயில்விரிப்ப. (௨௬)

எண்டலங்களினிருள்கவர்ந்தெழுந்தவாணிரவி
மண்டலங்களிற்குண்டலமணிக்குழைவயங்கக்
கண்டமிட்டபொற்கண்டிகைக்கவின்மணிப்பதக்கம்
விண்டதாய்வடங்கிடந்தணிவெண்ணிலாவெறிப்ப. (௩௭)

சூலபாணியனேமியன்சுடர்முனைக்குலிசன்
காலனாதியர்காணவுங்கேட்கவுங்கலங்கு
மாலகாலமொத்தரிமணித்தவிசின்மீதமர்ந்த
ஞாலமன்னவனிருந்தபேரவையிடைநண்ணி. (௩௮)

நோக்கினானிவனிலையினைநோக்கவுமெடுத்து
வாக்கினாலுரைசெய்யவுங்கேட்கவுமனத்து
ளாக்குவாரெவர்சமர்புரிந்தாக்கையுமுயிரும்
போக்கிவெல்வவோதேவரான்மனிதராற்புவிமேல். (௨௯)

இலங்கைநாதனைச்சூரனையிரணியன்றன்னை
வலங்கொள்வாலியைமதுகயிடவர்களைமவிந்த
குலங்கொள்வீரரைக்கேட்டதேயன்றிநேர்குறித்து
நிலங்கண்மீதிவனொழிந்தமற்றெவர்களைநேர்ந்தேம். (௪௦)

அரசர்கட்கடாதனவெலாந்தனதுபூணாகப்
பரசமெய்புனைந்திருந்தவிப்பதகனோடமரம்
பொருவினனமதிறைவற்குமருகற்கும்புரமுன்
னெரிசெயதானருளின்றெனில்வெல்லுமாறெவனோ. (௪௧)

செல்வமிக்குவில்வலிபொருத்தழகினிற்சிறந்த
தொல்லைமிக்குளசூரருந்தொலைநல்லறங்க
ளில்லையாமெனின்முழுவதுந்தோற்றுயிரிழந்தே
சொல்லுநீரகாழ்வரென்பதுமறைத்துணிபால். (௪௨)

வஞ்சமென்பனயாவுமிங்கொருவடிவாகி
யஞ்சனித்துவெம்பவஞ்சுமந்தாசியலிருந்தான்
வெஞ்சினந்தருமிவனைநம்வேந்தர்களமரிற்
றுஞ்சல்காண் பதுபெரிதலத்தும்பைசூடுவரால். (சங)

என்றுபற்பலவெண்ணியக்கவனெதிரெய்தித்
தன்றுதாமரைச்சரண்டொழுதஞ்சலிசொல்லா
நின்றதூதனைநிருபனுநேர்படநோக்கி
யின்றுயாவனீவாவெவன்சொல்லெனவிசைத்தான். (சரு)

விரிஞ்சமாநகர்புரந்தருள்விரிஞ்சர்கோன்படைக்குட்
பெருஞ்சமர்த்தனென்பெயருனைக்கண்டிவைபேசிப்
பொருஞ்சமர்க்குளம்பொருந்துமேலறிந்துவாபோவென்
றருஞ்சிறப்புளபுவனவிந்திரன்சொலவடைந்தேன். (சசு)

தூதுவந்தவென்சொற்பொருளுண்மையைத்தருவி
நீதியென்றகொண்டநெறிநீநடந்திடிலோர்
தீதடைந்திடாதாக்கமுங்கல்வியுந்திறனும்
பூதலத்தினீண்டாயுளும்புகழ்ச்சியும்பொலிவாய். (சஎ)

அன்றெனிற்பெருஞ்செல்வமுங்கல்வியுமாசும்.
பொன்றுமென்பதுசாதமென்றெதிரினிற்புகன்றே
யின்றுவாவெனவேவினனவைசொலற்கிங்கு
தன்றினேனெனத்தோன்றலுங்கேட்டுளந்துடியா. (சஅ)

புவனவிந்திரனென்பவன்யாவனிப்புவிமே
லவனுநீன்முடிவிரிஞ்சனுமொன்றுசேர்ந்தடங்காக்
கவனவெம்படையோடெனைச்சமர்பொரக்கருதுந்
தவனமென்கொலிங்குரைசெய்வாய்விரைந்தெனச்சாற்ற. (சக)

கேட்டதூதுவன்முறுவலித்தையகேள்கினர்நீர்
நாட்டினெம்முடைநாயகன்பயந்தனநாரி
சூட்டுதொக்கலான்றெரல்புவனேந்திரத்தோன்றல்
பூட்டுவிற்குமுன்புரஞ்சுபொஞ்சுடர்போல்வான். (ருo)

கன்னல்கார்வளைத்துலவுகாம்போசமாநாட்டின்
மன்னர்மன்னவன்மகிதலப்புரந்தான்மகனென்
றெந்நிலங்களும்புகழ்புவனேந்திரனென்பான்
மன்னுங்கல்வியிலழகினில்வலியினின்மலிந்தோன். (ருக)

மல்லினுற்புரிகளைதயினுல்வாளினுன்மழுவால்
வில்லினுல்வெலற்கெண்ணுதன்றிகையெனவிலக்கிக்
கல்லினுற்பெருந்தோளினுன்றனதொருகனிவாய்ச்
சொல்லினுற்புவியேழையுந்தகள்படத்துவைப்பான். (ருஉ)

பாரிலட்டமாசித்திகள்பழுதறப்பயின்ற
வீரன்வீரரும்வெலப்படாவிரகுடைவீரஞ்
சாருங்கீர்த்தியான்றடங்கணார்க்குயர்மதன்றபனன்
நேரிணைந்தபூணிரைவரைத்தோளுடைநிருபன். (௫௩)

வினைதடுத்துமேல்விதியையுமதியினால்வெல்லு
முனைதிரட்டிமூவாநெறிநாடொறுமுயல்வா
னனைதனக்குமேலன்புதந்தமைச்சியலமைந்தான்
றனையுடற்குயிராமெனவுறவுகொடகையான். (௫௪)

நீதியும்பெருங்கருணையுங்குணங்களுநிறைந்த
மாதவங்களும்வாய்ந்தொருவடிவுகொண்டனைய
சோதிவேலினான்றன்மைசேர்தூய்மையைத்தொகுத்துப்
பூதலப்புயங்காதிபனோதவும்போமோ. (௫௫)

அனையதன்மையனறிவினுமனத்தினுமகலா
வினைசெய்மந்திரிதன்னொடும்விருப்பமுற்றுயர்ந்த
கனைகழற்கதிர்வேலினான்காவலரிறைஞ்சப்
புனையுநீண்முடித்தாதைபால்விடைதரப்போற்றி. (௫௬)

தங்கண்மாநகர்துறந்துசாகரம்புடைதழுவு
மங்கண்மாநிலமுழுவதும்புகுந்துசீராய்ந்து
பொங்கர்சூழ்புனல்வாவியிற்புக்குமந்திரியைத்
திங்கடோன்றுங்காலமுதளிப்பாயெனச்செலுத்தி. (௫௭)

இருந்தகாலையிலிரும்புனல்வாவியுளிருந்தோர்
கருந்தினாகம்வந்துறுதலும்வாளினாற்கடிந்து
முருந்துமுத்தவெண்முறுவலாண்முளரியம்விழிகட்
கருந்துநல்விருந்தாகினானடைந்துவாழமைதி. (௫௮)

முறைபிறழ்ந்துநீமோசமாய்விதந்துவான்முன்னா
ளிறைவனுக்கிடர்விளைத்தவன்பாலினிதிருந்த
பிறைநுதற்றிருமடந்தையைப்பிழைபடப்பிரித்த
குறைவுநீக்கிப்பின்மந்திரியவடனைக்கூட்டி. (௫௯)

மன்னனுக்குயிரோடவடன்னையும்வழங்கி
யுன்னைவெல்லுமாறுன்னிநங்கோமகற்கோலை
தன்னைமுன்விடுத்தவனையுங்கூட்டிவெஞ்சமருக்
கின்னமாநகரெயில்வளைத்திருந்தனரின்றே. (௬௦)

வஞ்சகம்புரிந்தாருயிர்வாட்டித்தன்மனையாங்
கஞ்சநாண்மலர்த்திருநிகர்கன்னியைக்கவர்ந்தாய்
கொஞ்சமும்பவமென்பதுகுறிக்கொளாவுன்னைத்
துஞ்சல்கண்டுநின்றொன்னகர்தீயினாற்சுட்டு. (௬௧)

வெற்றிகொள்வதற்கெண்ணினனவைசெயமிக்கா
னுற்றவர்க்குயிரொன்னினுமுதவுவானுனது
குற்றமுங்குறியானவன்சரண்புகிற்குறையா
மற்றுநின்னுயிரளித்தரசளிக்குவன்மாறன். (௬௨)

அரவுயர்த்தவன்கிசகனரக்கர்கோன்வாலி
பரவுமிந்திரனாதியோரொத்தனைபழையோர்
விரகதாபவெந்தீயினால்வேதனைமிகுந்து
நாகமேறியெந்நாளினுந்தீமைநண்ணினரால். (௬௩)

தேவைசிந்தனைசெய்திளஞ்சிசுக்களைக்குருவை
யாவையந்தணர்தங்களையாருயிரழித்த
பாவகாரிகளென்னினுமுய்வரிப்பார்மேற்
பூவைமார்நலங்கெடுத்தவர்க்கதுமறைபுகலா. (௬௪)

உடலைவிட்டுயிரொழிந்தவர்தம்மினுமுலகின்
நடலைகொண்டுளநங்கையர்நலத்தினைநயந்திங்
கிடரினாழ்ந்துதீநரகிடைமூழ்கினரெரிநீர்
கடலினுண்மணலெண்ணிக்கொண்டற்றனகாண்டி. (௬௫)

வலம்பிழைத்திடாமறைவழிமன்றல்செய்மனையாள்
குலம்பிழைத்திடாதிருக்கவும்வேறொருகுலத்தோ
ரிலம்பிழைத்திடநினைப்பரேலிம்மைபோய்மறுமை
நலம்பிழைத்துநீங்காததீநரகினைகுவரால். (௬௬)

முச்சகந்தனிலெதிர்த்தவர்முடித்தலைதுணித்துச்
செச்சைவேந்திடுமன்னவராண்மையிற்றிறம்பி
யிச்சையாற்பிறனில்விழைந்தொழுகுவார்க்குலங்
கொச்சைவாய்ப்பழிகூறுதலொழிந்தென்னகூறும். (௬௭

கல்விமாய்ந்துறுநவிநலங்குன்றிடுங்கதித்த
செல்வந்தேய்ந்திடுஞ்சிறியர்வாய்ப்புன்பழிசேர்க்கு
மல்லன்மேற்றருமாயுளைப்பொன்றிவித்தப்பாற்
சொல்லும்வன்னரகாழ்த்திடுங்காமவெந்தோணி. (௬௮

ஈதெலாமறியாதநீயில்லையென்பின்னே
போதுவாயெனினின்முடியவன்பதம்பொருத்தித்
தீதுதீர்த்தனக்காவனவரிசையுஞ்செய்து
யாதுகாக்குவனுண்மைதப்பாதெனப்பகர்ந்தான். (௬௯

வந்ததுதவன்வழங்குசொற்செவியிடைவடவை
வெந்தழற்பிழம்பாமெனவெகுளியுநகையுஞ்
சிந்தயாவருந்திடுக்கிடத்தேவருந்திசைப்ப
வந்தரத்திடிமுழக்கம்போல்வாய்திறந்தறைவான். (௭௦

என்னடாவொருதூதுவந்தெனக்குமுன்றுணிவாய்ப்
பன்னலாமொழிபகர்ந்தனையுன்னையிப்பார்மேற்
சொன்னவாய்கிழித்துயிருண்பன்சொன்னநின்சொல்லா
னன்மைமிக்குளசோபனமொன்றுளநயந்தேன். (எக)

மாதுபுக்குளமாதிரந்தேடியென்மனது
வேதையுற்றனனவையொழிந்தார்வமேல்விளையக்
கோதைவந்தனளென்பதோர்நல்லுரைகுறித்தா
யாதலாலுனக்காருயிரளித்தனனம்மா. (எஉ)

வருந்துவன்பிணியாளர்க்குமாமலைமுடிமே
விருந்தநன்மருந்தின்புறவலுவிலெய்துதல்போற்
பொருந்துமங்கலம்புகன்றநின்னுள்ளம்பூரிக்க
தருந்தனம்முதல்வேண்டுவகோடிநான்றருவேன். (எங)

போரில்வென்றவர்புரந்துளபுனற்றிருநாட்டை
நேரினீபெறத்தார்முடிசூட்டியேநிருபர்
பாரிலேத்தவுஞ்செய்குவனென்றுரைபணித்தே
வீரன்பின்னுமங்கவனொடுசின்மொழிவிளைத்தான். (எச)

எந்தநாடிவன்விரிஞ்சன்மாமகடனக்கிவனுஞ்
சொந்தமாதுலன்சுதன்கொலோநன்றுநீசொற்ற
யந்தமாதினைக்கொணர்ந்துநானெதுபலனடைந்தே
னிந்தவெட்கமுஞ்சொலத்தகாமௌனமுற்றிருந்தேன். (எரு)

அரம்பையென்பவளத்தைமாமகளவளிவற்கு
விரும்புமன்றல்செய்துடலுயிர்போனலம்விளைந்தார்
பெரும்புவிக்குணன்பேதஞ்செய்திவர்களைப்பிரித்தேன்
சிரம்புகுற்றநீயாய்ந்திதுசொல்லவுநேர்ந்தாய். (எசு)

வேசையென்பதோர்செயறெரியேன்மனம்விளைவுற்
ருசைநீடினேனென்னைப்போலிடையில்வந்தவடன்
பாசமெய்தினன்வெகுளியுநாணமும்படைத்துப்
பூசனேர்வதென்புவியிலில்லாததோர்புதுமை. (எஎ)

அந்தமந்திரிசெய்தசூதறிகிலாதந்தோ
பந்தநான்மறைப்பாவைமேற்பழிவிளைத்தொருநான்
முந்துவாண்முனைக்கிரைகொடுத்தருங்கனன்முடிக்கச்
சிந்தைசெய்தவிப்புன்மதியெங்ஙனந்தீர்வேன். (எஅ)

வசையகற்றிமுன்பிரிந்ததோர்மாதினைமருவத்
திசையத்தூதுவிட்டாரெனவெண்ணுநானவர்மே
னசைவிலக்கியெப்படிப்பெருஞ்சமர்முனைநடத்திப்
பிசைதல்காண்குவதென்பதோர்பீழையும்பெருத்தேன். (எக)

எலியெதிர்த்துவன்சமரினுக்கேற்படிற்பூசை
வலியிழந்துபின்வாங்குமோமானினம்வளைந்து
புலியைவெல்லுமோபுயங்கமுங்கலுழன்வாய்ப்புகுந்து
மெலிவதாகுமோசீயத்தைவேழமோவெருட்டும். (அ0)

முன்னைக்கொல்வதாய்மூண்டபோரடையலர்முடிய
மின்னைக்கொல்வதோர்வேலினாற்கொன்றிவீற்றிருந்தே
னென்னைக்கொல்வதற்கெளிதலவிவரொடுஞ்சேனை
தன்னைக்கொல்வதென்றானையிற்சிறியாற்சமைப்பேன். (அக)

என்னையென்றிருப்புதல்வரையெனதுகைவில்காச்
சொன்னவாகினித்தொகுதியைத்தொகுதியின்றலைமை
மன்னர்தங்களைக்கினைந்திடினுடொறுமருவார்
கன்னியர்க்குளகருப்பமுங்கலங்குமால்காண்டி. (அஉ)

தேவரோடினர்தானவரடங்கினர்சித்த
ரேவருநயதேவவின்புறக்கடையிருந்தார்
மூவரும்முயலாமுனமெதிர்கின்றுமுடிப்பார்
பூவருஞ்சிறுநொய்யரோவெனைவென்றுபோவார். (அங)

ஓதகங்கொளநாளையேசெறுவினிலுதிரஞ்
சேதகங்கொளச்சிலையொலிசெவித்தலஞ்செறித்துப்
போதகங்கள்காற்பலம்பரிதேர்த்தொகைபொன்றச்
சாதகங்களுண்டுவப்புறத்துணங்கையுஞ்சமைப்பேன். (அச)

வென்றரூற்றல்கொண்டாரமர்விளக்குமோர்வீர
மின்றுசொல்வதிற்பயனென்னைநிற்கவென்பாலி
னன்றுசொல்லியதூதுவநவில்பொருணயந்தாங்
கொன்றுநீசொலற்குன்றுழைவேண்டினேனுறுதி. (அரு)

கடந்துபோனதோர்காரிகையெமதுகைவசயாய்ப்
படர்ந்ததாமெனநேரிகிற்சோபனம்பகர
நடந்ததூதுவநாடொறுங்கோடிநானலமே
தொடர்ந்துசெய்யினுஞ்செய்தவுதவியைத்தொடரா. (அசு)

என்னைவேண்டிநீமீண்டுபோயிண்டுனையேவு
மன்னைவேண்டுவதொன்றளமாதைநம்வயினின்
முன்னைவேண்டியீந்தப்புறந்தன்குறைமொழிதல்
பின்னைவேண்டுவையென்பதேயவைசொலப்பெறுவாய். (அஎ)

நெய்யினாற்பெருநெருப்பினையவித்திடகினைவு
செய்யும்புன்றொழிலாளர்போற்செறுச்செயக்கருதும்
வெய்யர்தங்களுக்கறியநான்விளம்பியவனைத்தும்
பொய்யிலாதுநீபுகலுதிபோவெனப்புகன்றான். (அஅ)

சொற்றவாசகங்கேட்டலுந்தூதுவனகைத்துக்
கொற்றவாவுனதாண்மையும்விநயமுங்குறிப்பு
முற்றுணர்ந்தநானெமதுமன்சமுகமுன்னிலையிற்
சொற்றிடாதபோதென்பெயர்சமர்த்தனேசொல்லாய். (அக)

மந்தரந்திகழ்புவனவிந்திரன்றனைவானி
னிந்திரன்முதல்யாவரும்வெல்வதற்கிறையுஞ்
சிந்தைசெய்திடாரறிவிலாத்திருவிலிமான்
றந்தபித்தமேலிட்டிவைசொற்றனைதகவோ. (கய)

இங்குநின்பெருந்திருவெனும்யானையெம்மிறைவன்
செங்கைவாய்ந்தவிற்குதையுதைத்தெழுந்தவெந்தீவாய்ப்
புங்கமாகியசிங்கமும்புசித்திடப்பொன்றிப்
பங்கமாகுவதுணர்ந்திடாதேழைமைபகர்ந்தாய். (கக)

வாய்மதர்த்துநீவழங்கியவுரைகளான்மன்னு
நோய்மிகுத்துநற்றூய்மையும்வாய்மையுநோக்காத்
தீயுகுத்துநற்றிருவெலாந்தீர்ந்துவெங்கானப்
பேயினுக்குறவாக்கிவன்னரகினைப்பெருக்கும். (கஉ)

சென்றுமேல்வருகருமங்கள்சிந்தியாவுன்பா
னின்றுநானினியென்கொடுநிகழ்த்தினுநெறியீ
தென்றுகொள்கிலாயிறுதிவந்தெய்தினுலவர்க்கு
நன்றுந்தீயதாய்த்தீயதுநல்லதாய்நணுகும். (கங)

ஆனதாலுனதாயுளுஞ்செல்வமுமாசும்
போனதாலினிப்பொருந்துமென்றுள்கலும்போமோ
யீனமேபடத்துணிந்தநீயிருவெனத்தூதன்
கோனகர்ப்புறங்கடந்திடக்குறித்தனன்கொடியோன். (கச)

வம்புசொன்னதோர்வாய்கிழித்திவனுடல்வாட்டிச்
செம்புனீர்கொடுதின்னுமினென்றுகண்சிவந்து
தம்பெரும்படைத்தலைவரையேவலுஞ்சமர்த்த
னும்பரோங்கினனிவர்முடிகீழ்ப்படவுதைத்தே. (கரு)

வந்துபற்றியவீரரைமண்ணின்மேற்றலைகள்
சிந்தமோதியங்கவருடல்பொடிபடத்தேய்த்து
நந்துமிந்நகர்நாளையேநல்லவரெல்லாம்
முந்துவீர்புறநகர்க்கெனமொழிந்துபோயினனல். (கசு)

சமர்த்தன்றூதுப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩௪-க்குத் திருவிருத்தம். கஅஉ௦.

---

# புவனேந்திரன்கேள்விப்படலம்.

மாதுபாதியனிதிசேர்திருவாலவாயுளமர்ந்தரு
ளாதியானபராபரன்மறையாவுநேடுமெனுதியாஞ்
சோதிவானவர்நாதனுகியசுந்தரன்விடகந்தான்
பாதமேமறவாதுநின்றிசைபாடுதும்பதமேவவே. (க)

வேறு

போனதூதுவன்றன்பெரும்படைக்கடல்புக்கு
மானவேல்வயமன்னவர்மலர்க்கழல்வணங்கி
யீனமானவனிடம்புகுந்திசைத்ததுமிவனுக்
கானவன்சொனகருமமும்படிப்படியறைந்தான். (உ)

கேட்டமன்னவன்மாதுலனெடுமொழிகளத்தி
நாட்டந்தீயுகநகைத்தவனுடலைநாளின்றே
வாட்டலெக்கிறைகொடுத்துமாநகர்சனன்மடுத்து
நீட்டுவேன்புகழ்நின்றமூவுலகினுநிறைய. (ங)

காலம்பார்ப்பதுமேல்வருகருமங்கள்கருதிச்
சீலம்பார்ப்பதுந்தியவருழையதுநீதா
மூலம்பார்க்குநின்முன்னமேயுலகினைமுறக்கு
மாலகாலமுமறன்வலிக்கடங்கினதன்றோ. (ச)

சயவரென்பவர்தங்களுக்காவனகருதி
நயமுறைக்கினுநியாயமென்றுறுபொருணுடிப்
பயன்பயப்பரோபாலையிற்பயிர்வளம்படரச்
செய்முயற்சியின்மதியுளார்க்கெதுபலன்சேரும். (ரு)

நாமுந்தாழ்த்தினிசிற்பதுநன்றலநமது
சேமவன்படையாவையுமுனைபடத்திரட்டித்
தூமவெஞ்சரந்தூப்பதேதுணிவெனச்சொன்னு
னுமெனத்திருமாமனுமிசைந்தனனம்மா. (சு)

வேறு

மருமகன்சொற்படிவாவுவாசியும்
பருமதயானையும்படைக்கைவீரரும்
பொருமணித்தேர்களும்புணரியாமென
விருமருங்கினுமிடைந்தேகவேகினர். (எ)

வானெலாங்கொடிகுடைமறைத்துநீண்டயர்,
கானெலாநெறிபடக்கலந்தவாகினி
மீனெலாந்தருநதிவெள்ளம்போற்செலத்
தேனெலாந்தருமலர்த்தாரர்சென்றனர். (அ)

சென்றவர்சேணதர்நீங்கிச்சேண்மூடி
மின்றிகழ்புரிசைசூழ்விசையமாநக
ரன்றடைந்தொருபுறம்பாடியாற்றியே
வன்றிறற்றுணையோடமர்ந்துவைகினார். (௯)

அரம்பையையாயமோடமைத்துக்காவலாய்த்
தரம்பெறுசிலவரைச்சமைத்துமற்றுள
பெரும்படைதம்மொடுதாமும்போர்ந்தொரு
வரம்புகொண்டிருந்தனர்மன்னர்மன்னரே. (௧௦)

விசையமாநகருறைவேந்தன்செய்வினை
வசையினுக்கஞ்சிமெய்யொழிமழுங்கியே
திசைபிரிந்தொதுங்குவான்போன்றுசெங்கதிர்
குசைபரித்தேரொடுங்கடல்குழித்தனன். (௧௧)

இரவிபோய்மாலைவந்தெய்தவெங்கணும்
பரவினவிருடிசைபரந்தவெண்மதி
விரவியநிலாக்கதிர்வெள்ளம்வானுறை
சுரபியன்பான்மடிசொரிந்ததொத்ததே. (௧௨)

மன்றலம்மதுமலர்வாசந்தூற்றுறு
தென்றலுநிலாக்கதிர்த்தெளிவுநோக்கிய
குன்றுறழ்புயத்தினான்றுயில்வுகொள்கிலா
தன்றுதூதேகிவந்தவனைக்கூவியே. (௧௩)

இருவெனப்பணித்தனனிருந்துளான்றனைத்
திருமுகநோக்கியேதெரிந்தமட்டிலு
மருவலன்வீரமும்படையின்வன்மையு
முரையெனப்புவனவிந்திரனங்கோதலும். (௧௪)

பொருக்கெனவெழுந்துநின்றிறைவன்பொன்னடி
திருக்கையால்வணங்கிவாய்புதைத்துச்சிந்தையு
ளுருக்கமுமச்சமுமுவப்புமுற்றவு
மருத்தியாலின்னணமறைதன்மேயினான். (௧௫)

புரிசையின்பெருமையும்புறத்துச்சுற்றிய
வரிசைகொள்ளகழியின்வனப்புமாட்சியு
முரைசெய்வதென்கொலோநானுமுற்றெதி
ரரசர்காணீவிர்கண்ணமையநோக்கினீர். (௧௬)

வாயில்கணான்கினுங்காத்துவைகுவோ
ராயிரங்கோடியென்றளவுசொல்லினார்
பாய்திரைக்கடன்மணற்பரப்பையெண்ணினுந்
தேய்கிலார்நெருப்பினுஞ்சிவந்தசிந்தையார். (௧௭)

சோமனைப்புரிசையுமகழின்கொள்கையு
மாமனைப்பெருக்கமுங்காத்துவைகுவோர்
நீமனச்செய்கையும்பிறவுஞ்செப்பினு
லேமனைச்சிறியனென்றெவருமெள்ளுவார். (கஅ)

ஆயிரமாயிரங்கோடியானைதே
ராயிரமாயிரங்கோடியாடன்மா
வாயிரமாயிரக்கோடியாட்படை
யாயிரமாயிரங்கோடியாகுமால். (கசூ)

மக்களின்முன்பிறந்தவன்றன்வல்லபந்
திக்கெலாநிரம்பினதேவருரினும்
புக்கினநமெகன்புகழும் வீரமுந்
தக்கதோரிளையவன்சமர்த்தையென்சொல்வேன். (உ0)

கருமமுங்கருமத்தின்விளைவுங்கண்டுமேல்
வருபொருளுணர்ந்துசொன்மதியின்மிக்கநற்
றருமனென்றொருபெருந்தலைமைமந்திரி
யருமையான்பினுமுளவமைச்சர்தங்களில். (உக)

துச்சனனென்றுளான்சுடுநெருப்பினு
நச்சினுங்கொடியவனுரியர்க்குளே
மிச்சமென்றுயர்புகழ்விளைந்தகற்பினுட்
கச்சமுந்துன்பமுங்கொள்ளவாற்றினன். (உஉ)

தந்திரனவையனென்றிருவர்தக்கநன்
மந்திரத்துள்ளவர்வலியும்வன்மையுஞ்
சுந்தரத்தோளினீர்சொல்வதென்னவர்
வந்தமர்நாளையேமலைதல்காண்பிரால். (உங)

வேறு.

வீரசிகாமணிசேனாதன்சுந்தன்விந்தனதிகோபன்வலன்வினதன்மத்தல், பாரின்மிகுபடைத்தலைவரெண்மரண்டபகிரண்டமுழுவதும்பம்பரம்போற்சுற்றிச், சாரிகொடுசமர்புரியவல்லாரிந்தத்தாரணியாள்மன்னரெல்லாந்தன்னைத்தாழப், போர்கடந்துதம்பைமுடிபுனைந்தவெற்றிபொருவிசையதரன்பெருமைபுகலப்போமோ. (உச)

வேறு.

அழகமைந்தபெருந்தவஞ்செய்தாசுரிமைநெடுங்காலமாற்றித்தீர்ந்த
விழவரசர்தமிலொருவரிவன்போலும்புயவலிமையெய்திற்றண்டோ
பழவினையாலுமதுகொடும்பகையடைந்தானன்றெனில்வெம்பாந்தள்சூடும்
மழவிடையானென்னினும்போர்கடந்துதும்பைமுடித்திடவுமார்க்கமுண்
[டோ.

புவனேந்திரன் கேள்விப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-நு௫-க்குத் திருவிருத்தம்-அசூ௫.

# புவனேந்திரன் படையெழுச்சிப்படலம்.

கருங்குவளை தாமரையிற்பூத்ததென்னக்
கவின்முகத்திலுலவியசீர்க்கண்ணார் தங்கண்
மருங்குவளையெழில்காட்டுமுயர்ந்தமாட
மணிக்கொடிகணிறைவிளங்குமதுரைதன்னி
லொருங்குவளைவீதிதொறுநடந்துவிற்ற
வொருநாதனிருபாதமுளமேற்றார்க்குத்
தருங்குவளைதனமுதலார்ச்சிதமுந்தந்து
சாம்பொழுதுஞ்சுவர்க்கபதந்தருந்தப்பாதே. (க)

வேறு.

என்றுபுகன்றடிபாவியினிதிருந்தானவ்வேலையிரவிகீழைக் [ன்னி
குன்றினினின்றெழுபரித்தேரொடுவிசும்பினிடைகுதித்தான்கொடுமையு
யன்றுபெருங்கொலைபுரிந்தபாதகனையின்றுசமராடித்தம்பால்
வென்றிபெறுவாரெனுமோராருத்தியுந்தக்காண்பதற்குமேவுவான்போல். ()

வல்லிருளுமல்லியுந்தன்வாயடங்கிப்புறஞ்சாயமதுகசாலம்
புல்லியருந்தேனுகர்தாமரைமலருந்துயில்பவர்கண்மலரும்பூப்பக்
கல்லுதையங்களித்திளஞ்செங்கதிரோட்டிப்புலரிவருங்குறிமுன்காட்டி
யெல்லவன்வந்துதித்தலுங்கண்டெல்லவருங்கடனாற்றற்கெழுந்தான்றே. ()

ஆகமத்தினெறிப்படிசின்றருங்கடன்கண்முறைதவறாதாற்றித்தங்கள்
சேகரவாகினியோடுந்திருப்புவனேந்திரத்திறைவன்சிந்தைக்கேற்ற
பாகமுதுண்டடைக்காயும்பகிர்ந்தருந்திச்சந்தனமென்பனிநீர்கூட்டி
மோகமுறப்பூசியுடுத்தணிந்தனர்மூவாதபணிச்சுடர்கண்மூச. (ச)

போர்ப்பணைகள்கிடந்துபுறந்துவைத்திடப்பல்லியமார்ப்பப்புதியசெம்பொற்
றேர்க்குலமும்பரித்தொகையுஞ்சிந்துரமத்தகக்களிற்றின்றிரளும்வானின்
கார்ப்பருவமழையெனநின்றதிர்ச்சிதரக்கவண்டிகிரிகதிர்வேல்சூல [ற.
மேர்ப்பனபற்படைக்கலங்கொண்டரியினம்போல்வயவர்குழாமெங்குஞ்சுற்

முத்தணிபொற்கவிகைநிழன்முடிகவிப்பக்கேதனவான்முகடுதோய்வுற்
றெத்தலமுமிருள்விரிப்பமுடிமன்னரணிவெயில்விட்டெரியச்செங்கைச்
சித்திரவிற்படைத்தலைவர்புடைநெருங்கியார்த்திடமுத்தேவரோடு
சித்தர்முனிவரமரர்சிரம்பொதிரச்சம்பரவிச்சிந்தைதேம்ப. (சு)

மாமணிப்பொன்முடிவேய்ந்துகவசமணிந்திடையினிற்குற்றுடைவாண்
மாட்டிச், சேமவரிச்சிலைவாங்கித்தூணியும்வெந்நிடைதாங்கிச்சேணுலா
வுஞ், சோமனுதையம்போலுந்தூய்முகமண்டலநிலகத்துரகத்தேர்மேற்
காமனுங்கந்தனுநாணப்புவனேந்த்ரன்சமர்பொருதக்கருதிநின்முன். (எ)

காமனின்றதெனநின்றதிருப்புவனேந்திரன்பணிக்குங்கருமநோக்கி
மாமனின்றானவன்பணிக்கண்ணவமணிநின்றானவன்றன்வருதிதாங்கித்
தீமனவெம்படைத்தலைவர்நின்றாத்தலைவருமைசிரமேற்கொண்டாங்
கேமன்வரினும்விடுவதிலையெனும்வெஞ்சினப்படைகளெங்குநின்ற. (அ)

நின்றவடதிசைக்கடுப்பக்கீழ்த்திசையிற்றளாதிபனைநிறுத்திமற்றைத்
தென்றிசையின்மாதுலனுமேற்றிசையினவமணியுஞ்சேரச்செய்து
வன்றிறல்கொள்புத்திசிகாமணியோடுசமர்த்தனுந்தன்மருங்குகாப்ப
வென்றிகுறித்திகல்விசையதரன்போர்க்குவருமார்க்கம்விளைமினென்றான்.()

தோட்டம்வயற்சோலைதிடல்சூழ்பலன்கண்முழுவதுங்கைச்சூறையாடிக்
காட்டிடையுள்ளதம்வீட்டிக்கறவையான்றருவைசடாக்கவர்ந்துபக்க
நாட்டையடங்கலுங்கெடுத்துக்குடிகளையங்கவர்பொருளைநாசமாக்கிக் [ன்.
கோட்டையுங்கொத்தளமுமிடித்திருந்தையுகங்கரையெரிகொழுத்துமென்று

எழுகடலுநான்காகியெழுந்துபுறம்வளைந்ததெனவியங்களார்ப்பக் [லாம்
குழுமியவெம்பெருஞ்சேனைகோனுரைத்தமொழிப்படியேகுறித்தவெல்
பழுதுபடத்தூற்றியெறிகுறையிட்டுப்படர்ந்துதிரிபரிசுநோக்கி
யழுதிருகண்புனல்சோரவிசையதரன்பாற்றூதரறைவதானார். (கக)

வாயினுஞ்சிரழகமைந்தமதிட்புறத்தும்போரசழிமாட்டுநாட்டுங்
காயெரியுங்கடுவிடமுங்கொடுங்கூற்றுநடுங்கநெடுங்கடல்போலொன்னார்
தாயினரங்கதிற்கீழ்பாற்றளாதிபன்றென்றிசைமாமன்சார்ந்தார்மேல்பா
லேயநவமணிநின்றான்புவனேந்திரன்வடபானின்றேவமன்னே. (கஉ)

கரும்புகடிந்திளங்கதலிக்கனிசிதறிவருக்கைநறுங்கனியுஞ்சிந்திக்
குரும்பைதகர்த்தருங்கமுகின்குலைசாய்த்துமாங்கனியைக்கொள்ளையாடிச்
சுரும்பினஞ்சூழ்மதுவனங்கடேட்படுத்திக்கதிர்ப்பழனஞ்சூறையிட்டு
விரும்பினமட்டுங்காட்டும்நாட்டுமவாதிக்கிரமம்விளைவித்தாரால். (கங)

மான்வாங்குமீன்விழியார்மானமெலாம்வெளிவாங்கவனைந்ததூசு
தான்வாங்கிச்சிறைதகைந்தார்தடுத்தவரையுயிர்வாங்கித்தனமுங்கோடா
வூன்வாங்குகளேபரமொத்துயிர்வாங்காதவருநிலையுற்றார்மற்றென்
றேன்வாங்குஞ்சிறையளிசூழ்ந்திசைமாலுந்தார்மார்பாசெப்பவென்றார். ()

ஒற்றர்வடவானலம்போலுரைத்தமொழிசெவித்துளைசென்றுருவலோ
டும்,கொற்றமிகுவரைப்புயத்தான்கொழுங்கடைக்கண்சிவப்பேறக்கோவை
யண்ட, மிற்றதெனநகைத்திருகைபுடைத்தரியேறெனவெகுண்டாங்கிமை
யோரஞ்சச், சுற்றிமருங்கவையிருந்தோர்தமைநோக்கிமழையிடிபோற்றெ
ளித்துச்சொல்வான். (கரு)

சேலிருந்தவரிநெடுங்கட்டிருவனையாடனைக்குடிமைத்தேவியாக்க
மாலிருந்தவெனைவஞ்சித்திரவினிற்புனகாவாசவெளவிச்சென்ற
பாலிருந்தமுடைமாறுவாய்ச்சிறியபாலனுமேபோர்புரியுமன்னி
மேலிருந்தபடையொடும்வந்தமர்க்குநாட்புறமிடைந்தவிந்தைநன்றால்.(கசு)

வெறிகோடிகிடைதிரண்டுவெஞ்சமருக்கேற்படினும்வீரமாய்ந்து
பொறிதேய்ந்தமுடப்புலியும்போர்க்கொதுங்கிப்பயப்படுமோபுவிமேலிந்தச்
சிறியவரோசெருவெல்வார்பகழியொன்றாலவர்தலையைச்சிதறியென்கைக்
குறிபிழையாதுடனுற்றபடைமுழுதுங்கூற்றமுண்ணக்கொடுப்பேனின்றே.

ஒருமகனுக்கறம்புரியாக்கருமவினைப்பயனுளதென்றுள்ளமாழ்கி
மருமலர்ப்பூங்குழலாளைப்பெறக்கிடைத்தவிரிஞ்சைநகர்மன்னர்க்கிந்தப்
பெருநிலயேன்மருமகனாகியபலர்க்குள்ளிச்சிறியபிள்ளைமேலென்
னருமைவிலகாமலென்னைப்பகைத்தமருக்கெதிர்த்தவிதமழகிற்றம்மா.(௧௮)

தேவர்முனிவரரியக்கர்சித்தர்முதலோர்பரவுந்தேவதேவர்
மூவர்களுமென்வலிக்குமுன்னிற்காரவைநிற்கமுதுபார்தன்னி
லேவரெனைப்பணியாதாரிவ்வுலகிலறியார்போலெளிமைவாய்ந்த
மேவலர்சற்றச்சமின்றியென்னோடுவந்தமராடல்விரும்பலென்னே. (௧௯)

என்றுசினந்தெரியொடுவெம்புகைதவழநெட்டுயிர்த்தவ்விறைவன்செம்பொ
ற், குன்றுபுரைமணிநெடுந்தேர்கொணர்கவென்றான்றுற்சனனுங்கோமான்
பாத, நின்திருகையாற்பரவியவர்மீதுநீபொரவுநெறியோநாயேன், சென்று
பகைதொலைத்துனக்கம்மாதினையுங்கொணர்ந்துமன்றல்செய்வனின்றே. ()

படையின்றித்தனிப்புகுந்துபரவைபெனப்புறஞ்சூழ்ந்தப்படையைக்கொன்
றே, யிடையொன்றுமில்லாளைத்தடையன்றியுனக்குமன்றலிசைப்பேனேக
விடையின்றுதருகவென்றவிரகறிதுற்சனன்றன்னைவிலக்கியங்க
ணிடைநின்றநவையனுமன்னவன்மலர்த்தாண்முடிசூடியிசைப்பதானான். ()

வில்வேந்தேதுற்சனனுல்விளம்பியசொன்னலமெனினும்வீரரானோ
ரெல்லோரும்பின்னின்றுவேறினிமேலெதுகருமமியைந்துசெய்ய
வல்லோங்களுடன்சென்றுமறுவலரைப்போர்க்களத்தின்மடியநூறிப்
பொல்லாளாய்ப்புறம்போனநல்லாளையில்லாளாய்ப்பொருத்துவோமால். ()

எகவிடையருளெனக்கையிறைஞ்சியபுன்னவையனும்பின்னேகமுன்னால்
வாகுபெறநின்திருதாண்மலர்தொழுதுதந்திரனுமன்னவின்னோர்
சேகரமாய்ச்சென்றாலுந்தனித்தனியேசென்றாலுந்தெவ்வர்தங்கள்
வேகவலியடக்கிவெற்றிபடைப்பர்கொலோநமனாலும்வீயாரம்மா. (௨௩)

அதுநினைந்துதெவ்வர்வலிக்கடங்குவதும்முடிபுனைந்தவரசர்க்கென்றும்
புதுவசைதந்துலவாநின்றிடுமதனாலெதுவரினும்போரேசெய்ய
மதிநினைந்தேனதன்மேலுமன்னாநின்மனச்செயலும்வலியுமெண்ணித்
துதிதருநற்கருமநெறிதுணிந்தியற்றத்தகுவையெனத்தொழுதுசொன்னான்.

தந்திரனோடமைச்சரொருமூவர்சொன்னமார்க்கமும்பின்றாணிவேந்தன்
சிந்தைபொருமனச்செயலுஞ்சேரலர்கள்வலிச்செயலுந்தெளிந்துளாய்ந்து
மந்தணங்கொள்ளறிஞர்களிற்பெருங்கருணைமாறுதமதியான்மிக்க
சுந்தரஞ்சேர்தருமனெனுமந்திரியுமிறைவனடிதொழுதுசொல்வான். (௨௫)

புவனேந்திரன் படையெழுச்சிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩௯-க்குத்-திருவிருத்தம்-௧௮௭௦.

# தருமன் நீதியுரைத்தபடலம்.

கூசுபுன்னெறிகொண்டுநாளெலாம்
பாசமூழ்கியபாவமேகெட
மாசிலாததென்மதுரைமேவிய
வீசனெந்தைதாளிறைஞ்சியேத்துவாம். (க)

வேறு

நின்பெருங்குடைநிழனெடிதுநாளிருந்
தின்பொருவாதவாழ்வெய்திவாழ்ந்துளேம்
பின்பதற்காவனபேணிப்போற்றிடா
தென்புகல்கொண்டுவேறிசைக்கவெண்ணுவேம். (உ)

அருந்தவநாளெலாமாற்றிப்பெற்றதோர்
பெருந்திருவரசினைப்பெருமநீயொரு
கருந்தடங்கண்ணினாள்காதல்கொண்டுளம்
வருந்தியேதீர்தலுமாண்பதாகுமோ. (ங)

தெய்வமுந்தெய்வத்தின்செயலுஞ்செய்கையும்
வையமும்வையத்தின்மனுசர்மாட்சியு
முய்வினைக்கருமமுமுற்றுநோக்குறி
னையகோவரசரையன்றியில்லையால். (ச)

முன்னுளமன்னவர்முறையுமுந்திய
தன்மையுமுணர்ந்தநீதவறிவேறொரு
புன்மைகொண்டிடர்க்கடல்பொருந்தினையெனி
னன்மையென்றுள்ளவர்நவிறல்கூடுமோ. (ரு)

எவ்வுலகத்தினுமிறைவர்யாரினும்
வெவ்வலிநின்வயின்விழுமிதாயினுஞ்
செவ்வியபுவனவிந்திரன்றன்செய்கையு
மொவ்வலினாக்கமுமுரைப்பன்கேட்டியால். (சு)

ஆதவன்குலக்கொழுந்தாயவாண்டகை
நீதியுங்கருணையுந்தலைநிரப்பினா
னேதிலர்பணிந்துநின்றேவல்கேட்பவே
பூதலமுழுவதும்புரக்குநேரியான். (எ)

புரந்தரன்பரிதவம்புகழ்ந்துகண்ணுதல்
வரந்தரப்பிறந்தவன்வடிவிற்காமனைக்
கரந்தசித்திரத்தினுங்கவின்கொள்காட்சியான்
சரந்தருவில்வரைதாங்குதோளினான். (அ)

புவனவிந்திரனெனப்புவியெலாம்புகழ்
நவம்விளங்கியதிருநாயகன்றனக்
குவமையெவ்வுலகினுமுரைக்கநேருமோ
தவமெலாந்தனைவிலகாதுதாங்கினான். (௯)

அனையவன்றன்னினுமழகுமாண்மையும்
விநயமுஞ்சூட்சியும்வினவுகேள்வியுந்
தனையொவாவீரமுந்தவமுஞ்சார்ந்துளா
னினையுமந்திரியவன்குறிப்பினின்றனன். (௧௦)

காற்றையுமனத்தையுங்கதிக்குமேலெனச்
சாற்றுவாரப்பெயர்சார்ந்துபொன்னிறந்
தோற்றிடச்சுழிநடைச்சுத்தமுற்றிய
மாற்றரும்புரவிகளிரண்டுவாய்ந்துளார். (௧௧)

தசமுகன்விமானமுஞ்சார்ந்தசூரன்கை
யிசைபொருமிந்திரஞாலத்தேரும்வன்
றுசநிறைசூரியன்றேருந்தோற்கவே
வசையிலாதவர்செயும்வயிரத்தேர்கொண்டார். (௧௨)

இந்திரவில்லினுமிராமனேந்திய
சுந்தரவில்லினுஞ்சுகிர்தம்வாய்ந்துள
மந்திரவில்லிரண்டவர்க்குவாகுறத்
தந்தனன்பிருகுமெய்த்தவத்தின்மேலுளான். (௧௩)

நீரினுந்துயிலுவார்நெருப்பினுங்குடி
சாருவார்சாகரம்புடைதயங்கிய
பாரினும்விசும்பினும்பாதலத்தினு
மாரினுமவர்தொழிலாற்றவாற்றுவார். (௧௪)

மற்றதுகிடக்கமுன்மன்னைக்கொன்றுநீ
பெற்றதோர்கோதையைப்பின்னுந்தம்பெருங்
கொற்றவன்பெறவுயிர்கொடுத்துவெஞ்சமர்க்
குற்றபோதவர்வலியுரைக்கநேருமோ. (௧௫)

ஈங்கவர்நிலையிவையென்னில்யாவராற்
றீங்குசெய்தின்னுயிர்சிதைக்கவல்லரிப்
பாங்கறியாதுசொற்பகர்தனீதியோ
தேங்கமழ்நறுமலர்த்தெரியன்மார்பினாய். (௧௬)

சாதியிற்கொடியருஞ்செயத்தகாதவெம்
பாதகநாஞ்செயப்பார்த்துநின்வயிற்
றூதனுப்பியதவர்தூயரொன்பதை
மேதினிக்கறியச்செய்விநயமல்லவோ. (௧௭)

அன்னவரொடுசமாடவெண்ணுதன்
மன்னவநமக்கழகல்லமன்னவர்
சொன்னவைபுரிவதேதுணிவுஞ்சூட்சியு
மின்னமுமுண்டுகேளெனவியம்புவான். (௧அ)

வாலியுந்தம்பிதன்மனைவிமேன்மனங்
கோலினதாலமுதுதித்தகோதைதன்
ரூலிபோய்வருந்துறத்தானுந்தென்றிசைக்
காலன்வாய்ப்பட்டுயிர்கழிந்துற்றனரோ. (௧௯)

பாந்தளந்துவசனும்பாண்டுமைந்தர்த
மேந்திழைமேன்மனதிச்சைவைத்தலாற்
சேர்ந்தனபெரும்புகழனைத்துஞ்சிந்தியே
மாந்தினனுளெலாம்வசைநின்றோங்கவே. (௨0)

மண்ணகத்தவர்செயனிற்சமாட்சிகொள்
விண்ணகத்தமரர்கோன்வேட்கைகொண்டொரு
பெண்ணகத்தரும்பிழைபெற்றுராயிரங்
கண்ணகத்தடைந்தனன்கவலைநீங்கிலான். (௨௧)

கற்புறுமகளிரைக்கண்ணிற்காண்பதுஞ்
சொற்பிழைபுகல்வதுந்துயரஞ்செய்வது
மற்பமோவிதுமுனமாற்றித்தீர்ந்தவர்
கற்பமேலாயினுங்கணக்கிற்சார்வரோ. (௨௨)

பிறர்மனைக்கட்செவிசெவிடுபெற்றவர்
திறன்மனைக்கட்சனுக்குருடுசேர்ந்துபின்
புறம்விளைகூற்றிலுமூங்கைபோன்றுளார்க்
கறநெறிவேறினியறையவேண்டுமோ. (௨௩)

திங்களுநிறைவருமொப்பர்திங்களுந்
தங்கியமாசிறுத்தகைசல்குன்றிடா
திங்கவரெட்டினையென்றுமாசெனி
லங்கருந்திருப்பதற்கவாவுறாரோ. (௨௪)

நல்லதுசெய்யினல்லதுமற்றின்றியே
பொல்லதுபுரிவதில்லாமற்பொல்லதைச்
சொல்வதற்குன்னினுமவற்குச்சொல்லொணுப்
பல்பெரும்பாவமுற்றலர்பலுக்குமோ. (௨௫)

தருமன் நீதியுரைத்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩0௭-க்குத் திருவிருத்தம்-௧அ௧௫.

---

# தருமன் தசமுகன் கதையுரைத்த படலம்.

அரியுமயனுமறியாவமலன்
விரியும்புவியாய்ப்புவியும்வினவித்
தெரியும்பொருளாய்த்திருவாமதுரைப்
புரியுமுடையானவனென்புலமே. (க)

வேறு.

எய்துமூவுலகினுக்கிறைவனுகியே
வெய்யவாணிருதரில்விறலின்மிக்குளான்
செய்கையும்வீரமுஞ்சிறைதந்துமாண்டமை
யையகேளுனறிந்தளவுஞ்சொல்வனல். (உ)

வேறு.

உன்னிலுங்கதிப்பெத்தனைகோடியென்றுரைப்பே
னெங்கிலங்களுந்தனதிருதாண்மலரிறைஞ்ச
முன்னிலங்கையிற்பொன்மணிமுடிபுனைந்திருந்தோன்
மின்னிலங்கும்வாட்டசமுகனரக்கரில்விறலோன். (ங)

ஈசன்வாழ்திருக்கைலையையிடந்துமுக்கடஞ்சா
லாசைவெங்கரிமருப்பொசித்தமரரைவாட்டித்
தேசுகற்பகஞ்சுரபிசிந்தாமணிசேர
வாசவன்றிருக்கவர்ந்தவன்றனைச்சிறைவைத்தான். (ச)

சண்டனின்றுகட்டியமிடத்தாமரைக்கிழவன்
கண்டுகோள்கரணந்திதிநாட்சொலக்கடலோன்
றெண்டிரைப்புனல்சிதறிடக்குப்பைசேரமன்
மண்டுவெந்துவந்தடிக்கடிதுடைத்தவண்மருக. (ரு)

இரவிசந்திரனென்பவரிவனகர்க்கெதிரே
வரவுதீர்ந்திருமருங்கினுநாடொறும்வாவ
வரின்மங்கையரியக்கியரரம்பையர்முதலோர்
பரவியேவல்செய்தாருயிரோடுளம்பதைப்ப. (சு)

இயக்கர்விஞ்சையரிமையவர்நாரதர்கருடர்
மயக்கமுற்றிடமாயறைவேள்விகண்மறவா
வியக்குமாதவர்வேதியர்முனிவரர்மெலிய
வியக்கமற்றுமற்றியாவருமுறுபதமிழப்ப. (எ)

அரக்கர்மாப்படையாயிரம்வெள்ளமோடவ்வா
றிரக்கமற்றுளமூலமாத்தானையுமியைய
புரக்கும்வஞ்சகர்கரன்புரிதொழிற்கஞ்சி
வரக்கணீருகுத்தயனுழைவானவர்வழுத்த. (அ)

கேட்டதாமரைக்கிழவனுங்கிளத்தியவிமையோர்
கூட்டமோடுபாற்றிரைக்கடல்குறுகிமென்னறுந்தேன்
னேட்டவிழ்ந்தபைந்துழாய்முடிப்பரமனைத்தொழுது
நீட்டும்வேற்படைச்சிசார்சுடுதொழினிகழ்த்த. (௯)

அந்தவானவர்க்கருள்புரிந்தணிதுழாய்ப்பரமன்
முந்துவானரமாகிநீர்முழுவதுமொருங்கே
சிந்துசூழ்புவிசென்மின்கணுங்களின்றிறத்து
வந்துநாமுமையயோத்தியிற்றசரதன்மகவாய். (க0)

அரக்கர்வேரறுத்துங்களுக்கருள்துமென்றமல
னிரக்கமுற்றுரைசொற்றிடவிமையவரிறைஞ்சித்
தாக்குநேர்வலிசமைந்துவானரங்களாய்த்தரைமேன்
மாக்கனற்படுமலையினும்வனத்தினும்வதிந்தார். (கக)

ஆயகாலையயோத்திமாநகரினுக்கரசன்
றூயசிந்தையன்றசரதன்சுதர்களின்மையினன்
மேயதன்குருவதிட்டன்பால்விளம்பலுமவனுஞ்
சேயவானவர்சூழ்தெரிந்தின்னவைதெரித்தான். (கஉ)

வேறு

தன்னுடைமைமறப்பத்தளர்வடைந்தரோமபதன்றடங்கட்செவ்வாய்
மின்னனைக்கொடிகலைக்கோட்டுநன்முனியைவருத்தியுளமெலிவுதீர்ந்தா
னந்நாளுமவனாட்டினிடையிருந்தானியுமழைத்தரியவேள்வி
யிந்நாளிற்புரியின்மகவெய்துமென்றானிறைவனுமப்படியேசெய்தான். (கங)

கலைக்கோட்டுமுனிமகத்தாற்காகுத்தன்முதலாயகாளைவீரர்
நிலைக்கோட்டமில்லாதுநெடிதுபிறந்துலகமிசைநெறிநிண்டன்ன
சிலைக்கோட்டமறப்பயின்றுகரிபரிதேர்கலைபயின்றுதிரியுநாளில்
மலைக்கோட்டினிடைவாழுமாதிருதிதாடகைதோள்வலியான்மாழ்கி. (கச)

வேறு

மாதவக்கோசிகன்வரவுகாண்டலும்
பாதமேற்றசரதன்பாசியெய்துதற்
கேதுளதவமிருந்தேனென்றோதினன்
கோதிலாதவனிவன்றனக்குக்கூறுவான். (கரு)

நாளெலாநலித்தனனுஞ்செய்நல்லற
வேள்வியைத்தாடகையாக்கிவெம்மையா
டோள்வலித்தோன்றனின்சுதர்கடங்களி
லான்வலியிராமற்கொண்டுதற்கெண்ணினேன். (கசு)

தருகவென்றுரைத்தலுந்தசரதப்பெருங்
குரிசிலும்வருந்தித்தன்குருவதிட்டன்சொல்
லுரிமையாற்கருதிறத்தொருதன்கொண்டனோர்
திருமகனோடிளையவனுஞ்சேரவே. (கஎ)

மாமுனிபின்செலவழுத்தினான்றிருத்
தாமரைக்கண்ணனுந்தம்பியும்நெடு
நாமவிற்றாங்கினார்நாடகன்றுவெந்
தீமலிகான்சுரமெளிதிற்றீரவே. (௧௮)

கோலமாமுனிவனுங்கூறும்விஞ்சையாற்
பாலைநீத்தருவனம்பலவுந்தள்ளியே
நீலமால்வரைமுடிநெற்றிமுற்றினார்
காலனையனையதாடகையுங்கண்டனள். (௧௯)

கோசிகமுனியுடற்கோதுதள்ளியே
தேசுறுவள்ளலைச்சிந்தைநோய்கெட
வாசையின்கொழுநனையமைத்துப்பின்னொரு
மாசிளையவனுயிர்வெளவுவேனெனா. (௨௦)

குன்றமுந்திசைகளுங்குலுங்கப்பார்நெறிந்
தன்றுகம்பிதங்கொளவாவிற்சீறியே
துன்றினாள்கொண்டலுந்தூயவன்சர
மொன்றுகொண்டவளுயிரோட்டினானரோ. (௨௧)

மக்களிற்சுவாகும்வல்லரக்கர்தானையும்
புக்குயிரழியமாரீசன்போயொரு
திக்கினின்யறைந்தனன்செய்யவேள்வியைத்
தக்கவன்முடித்துப்பின்னிவர்க்குச்சாற்றுவான். (௨௨)

ஆளுடைச்சனகனாலாற்றுநற்றிரு
வேள்வியுங்காண்குதும்வீரவென்றுபின்
நீள்குஞ்சரங்களும்வில்லுநேர்ந்தனன்
றாள்பணிந்தவனுடனிவருஞ்சார்ந்தனர். (௨௩)

மிதிலையினெயிற்புறமேவவாங்கெழு
கதிரொனக்கல்லுருக்கழிந்துவானுலா
மதியெனவொருதிருமகளுமுன்வர
விதியெலாமுனிசொலவியந்தவீரனும். (௨௪)

அகலிகைதன்னைக்கோதமனுக்காக்கியே
மகன்சதாநந்தனோடெழுந்துவல்லையின்
மிகவலிச்சனகன்பேரவைக்கண்மேவியே
யிகல்படாத்தவன்விருந்தியைந்துபின்னரோ. (௨௫)

சீதைதன்னிலைமையும்வில்லின்செய்கையுங்
கோதமன்காதலன்கூறக்கோசிகன்
சீதரன்றிருமுகநோக்கச்சீதரன்
வேதனைதீர்ந்தவர்வியக்கவொல்லையில். (௨௬)

கார்முகமிறுத்தனன்கண்டுதாதையைச்
சீர்பெறச்சனகனும்வருத்திச்சிதையைத்
தார்பெறக்காகுத்தன்றனக்குச்செய்துபின்
னூர்விடுத்தயோத்தியைநாடியுற்றனர். (உஎ)

பாதையிற்றடுத்தளபரசிராமன்கை
மேதகுவில்லினேடவன்றன்வீரமுந்
தீதறவாங்கிமேற்செல்லும்வேலையிற்
ருதையும்பரதனைத்தாயின்றாதைபால். (உஅ)

சென்றிடப்பணித்துப்பின்சேனைசூழ்வா
வன்றுவந்தயோத்தியிலடைந்தபிற்றைநா
டன்றிருக்குமானுக்குரியதன்னா
சொன்றிடப்புனைவதற்குளத்திலுன்னியே. (உகூ)

வேறு

புரவலன்வசிட்டனாதிப்புனிதவேதியராயுள்ள
குரவரைவினவிவேந்தர்குழுக்களுக்கோலைபோக்கி
முரசறைவித்தானூமுதன்மகன்முதன்மையான
வரசினுக்கணியனுமென்றமாருமார்வந்துள்ள. (௩௰)

வானுக்கும்புவிக்குமேனையுலகுக்குமனந்தான்பொல்லாக்
கூனிக்குமனமில்லாதபோதவர்கோட்பக்கென்னுங்
கோனுக்குந்தலைவியாற்றீவினைசெய்தாள்வரங்கொண்டப்பான்
மீனுக்குமிடர்செய்கண்ணாளிராமனைவிளித்துச்சொல்வாள். (௩க)

சாதமன்னளித்தவிந்தத்தாரணிமுழுதுமெங்கள்
பரதனேயாளநீபோய்ப்பார்வனம்பதினாலாண்டு
விரதமாதவமேசெய்யவேந்தர்கோன்பணியீதென்று
ளிருதயாலயம்பூரித்தேயெழின்முகமிலங்கச்சொல்வான். (௩உ)

தந்தைசொல்பணியன்றாயினும்பணிதலைக்கொண்டாற்ற
வுய்ந்தனனெனைப்போலியாரென்றுவகையோடிறைஞ்சிப்பெற்ற
சுந்தரப்புயத்தான்பாதந்தொழுதனன்றிசையைநோக்கி
வந்துதன்றாயைப்போற்றிச்சுமித்திரைமனையிற்புக்கு. (௩௩.)

பொன்னடிவணங்கிச்சூழ்ந்துபொருமுகின்றோர்கட்கெல்லா
நன்னயநவின்றுதம்பிதன்னொடுநெளினக்கோயின்
மன்னியசனகியோடுந்தவத்துருவரித்துவானின்
மின்னிகரெயினீத்தொல்லைவெய்யதீக்கானமேவி. (௩௪)

ஆற்றுநீர்கடந்துநாவாய்கடவியகுகனுக்கன்பு
வேற்றுமையின்றிக்காட்டிவிபுதருக்காக்கங்கூறிப்
போற்றியமுனிவர்க்கெல்லாமெதிருரைவணக்கம்போக்கித்
தோற்றுசெங்கதிர்சுலாயசித்திரகூடந்தன்னி. (௩௫)

மங்கையர்கழுத்துக்கெல்லாமங்கலமானதுய்ய
பங்கையத்தவளுக்கந்தப்பனிவரையிடங்கடோறுந்
தங்கியவளங்களெல்லாந்தனித்தனிவகுத்துக்காட்டி
யங்குறைநாளிற்றம்பிபாதனுக்காசன்கையால். (ருசு)

தீட்டியமுடங்கல்போலும்வரக்கண்டுதிருவோனெல்லை
நாட்டிடைநடந்தயோத்திநண்ணிஞனிறைவற்கேதங்
கேட்டனனழுதுசோர்ந்தான்கிளர்ந்தெழுசேனைசூழக்
காட்டிடைபுகுந்துவேடற்கண்டுமுன்னவனைக்கண்டான். (ருஎ)

காண்டலுமுவகைதூங்கக்கரைந்தகண்ணருவிகால
வாண்டகைதழுவித்தந்தைவலியென்கொலறைதியென்ன
மூண்டெழுதுயராலுற்றபாதனுமொழிதள்ளாட
நீண்டநன்மனத்தான்கேதநிகழ்த்தியாகுலித்துநின்றான். (ருஅ)

தம்பியைநோக்கித்தந்தைக்குற்றதுதன்னைநோக்கி
வெம்பியமனத்தான்கண்ணீர்விரிந்துமெய்பாவச்சூழ்ந்தாங்
கும்பரோடிம்பர்காறுமுருகநின்றாற்றியோயா
நம்பியைவசிட்டன்றேற்றத்தெளிந்தனனமரோடப்பால். (ருக)

பாங்குறைநதியின்கட்போய்விதிமுறைப்படியேதந்தைக்
காங்குசெய்கடன்களியாவும்வசிட்டனூலாற்றவாற்றி
யேங்கியபாதற்கையன்பாதுகையீந்துபானாத்
தாங்கவென்றனுப்பிமாதுந்தம்பியுந்தொடரத்தானும். (சo)

தண்டகாரணியஞ்சென்றார்தவத்துறைமுனிவோரெல்லாங்
கண்டனர்தாயைக்கண்டான்கன்றெனக்கனிவுகூர்ந்து
விண்டனர்நிருதர்செய்யும்வினையெலாம்விரித்துமேலை
யண்டசத்துயிலின்சோதிபயமொழித்தபயநல்கி. (சக)

மோனகர்பாலர்கில்லர்முண்டகர்கபிலர்மச்ச
ரேனையமுனிவராசிர்வதிக்கவின்னருளுமேற்றுக்
கானகமிருந்தார்வெய்யவிராதனைக்கடிந்துஞான
மானவன்சரபங்கன்றன்மாசுறுபிறப்புமாற்றி. (சஉ)

இகத்தவாவிகந்துநான்குசுருதிதேர்ந்திறிலாத
மகத்தவாதவருக்கெல்லாம்வண்டமிழ்வகுக்குஞான
வகத்தன்வான்வரையைத்தாழ்த்தவகத்தியன்றனைக்கண்டம்பும்
மிகத்தவாவுயர்ந்தவில்லும்வேண்டியவாமும்பெற்றே. (சரு)

வருமுழிதனிற்சடாயுமன்னனைத்தந்தையாக
வுரிமைகொண்டவிரும்பஞ்சவடிக்கரையொளிருஞாங்கர்
பரவுதம்பிகையாற்செய்தபன்னகசாலையெய்தி
யரிவையோடிறைவனீங்காதமர்ந்தினிதுறையுமேல்லை. (சச)

மாயவளரக்கர்க்கெல்லாம்வாழ்வும்வாணுளுநீக்கும்
நோயவள்வனத்திலுற்றநோன்புடைமுனிவோர்க்கெல்லாந்
தீயவள்கொடியசூர்ப்பநகியெனுந்திருநீங்குற்ற
பேயவளிராமற்கண்டுபெருமயலுறநின்றே. (சரு)

அங்கசப்பாவிக்காற்ருதகங்கசப்பாகிநோக்கேதன்
பங்கில்வைத்தருள்செய்கென்றபதக்கையிளையான்பற்றிக்
கொங்கையுங்குழையுமூக்குங்குறைத்துநீகுறித்தோர்க்கெல்லா
மிங்கிதைக்காட்டென்றோட்டியிருந்தனரவளுமப்பால். (சசு)

வேறு.

தாங்கலருந்துயருழந்துபெருங்குரலிட்டிருகாமுந்தலைமேற்ருங்கி
வீங்கியதோட்கரனடிமேல்வீழ்ந்தழுதுபுலம்புதலுவெகுளிமிக்கா
ணுங்கிருவர்தமைவிடுத்துமடிந்ததற்பின்றனையொடுமநுசர்மாள
வோங்குசமரம்புரிந்துகாகுத்தன்பகழியொன்ருலுயிர்விண்ணுற்றுன். (சஎ)

வானடுக்கத்திரண்டெழுந்தகாணுதியவர்மடிந்தவன்மைநோக்கிக்
கானடுங்கவிருகாத்தால்வயிறலைத்துவிழியருவிகாலக்கோல
மேனடுங்கவிரிதலையோடலையெறியுமிலங்கைநகர்மேவித்தங்கள் [வான்.
கோனடுக்கக்கூறுதலுங்கேட்டுவடவானலம்போற்கொதித்துச்சொல் (சஅ)

சிந்துதிரைக்கடலுலகிற்சேணுலகிற்பாதலத்திற்றிகழாநின்றோர்
தந்தமதுதொழிற்றலைவிட்டெமதுகடைத்தலையேவற்ருங்கிவாழ்ந்தா
ரிந்தவிதமாறுலகத்தெவர்செயலங்கவர்க்குஞ்ஞலிடையூறென்னைச்
சிந்தையுறநெருமாநீர்ந்துள்ளபடிநடந்தவகைசெப்புகென்றுன். (சகூ)

கையேந்தும்வரிசிலையார்காமனுங்காலுருவேந்தக்கனத்தயேரு
மெய்யேந்துமணிப்புயத்தார்நிருதர்குலம்வேறுக்கவிருதுகட்டி
மையேந்தவனமுறைந்தார்தயரதன்றன்மக்களவர்மரபுக்சேற்ற
செய்யேந்துகருக்குழற்கைகேசிசொன்னசரதமொழிநெறியினின்ருர். (ருo)

தங்களிலேயிளையான்மற்றெவர்க்குமிளையான்கொடியசளக்கனென்னைக்
கொங்கைகளுங்கொடிமூக்குங்குழையுமறிந்தானெனவேகூறலோடும்
வெங்கணாவெனப்புழுங்கிவெகுளியினுன்மூவலகும்வெவநோக்கி
யங்குகாணுர்க்கிதைச்சென்றறைந்தாயோவிலையோசொல்லடிநீயென்றுன்.

சென்றுரைத்தேனுற்கடல்போற்சேனையுடன்கானெழுந்துசென்றகாலைக்
குன்றுரைக்குமணிநெடுந்தோட்குமார்கள்ராயனெனுக்கருணைக்கொண்ட
லொன்றுரைக்குமுனங்கூற்றுக்கிரைகொடுத்தான்கைப்பகழியொன்ருற்க
ண்டு, வென்றிமுனிவரார்புகலவிண்ணவராவலக்கொட்டிமேன்மேலார்ப்ப.

காணிறக்கமுனிவாருக்களிப்பேறவிண்ணவருங்கலகஞ்செய்ய
நாணிறக்கமில்லாயனவைபுரியநீபுரிந்தநவைதானென்னை
யூணிறக்கமில்லாதாயுவையென்றுனுஞ்சவளுங்கோகோமுன்ன [ள்.
யணிறக்கமுறத்தடந்தோள்வலையிடந்தோய்கேளெனநின்றழுதுசொல்வா

சென்னிமிசையிருந்தவளுந்திருமார்பிலிருந்தவளுந்திகழுமென்னு
மன்னியிருந்தவளும்விண்ணில்வதிந்தவளுங்கழற்றுகளின்மாட்சியொவ்வா
வன்னவளைநினக்கெனவேயானெடுக்கச்செலும்வேலையவளைக்காக்குஞ்
சின்னவன்செய்செயலென்றுடீர்ந்ததுகோபங்காமஞ்செரிந்தவன்றே. (௩௪)

தம்மானந்தனைமறந்துதங்கையுறும்வலிமறந்துதவமேற்கொண்ட
வம்மானையடைந்துபுகழ்ந்தனுசரித்தானறுத்துமுடனுனன்பொற்றேள்
விம்மாநின்றெழுமுவகையொடுமெழுந்தார்மாரீசன்விரைந்துமுன்போ
யெம்மானுந்தனைத்தொடரப்பொன்மானய்ச்சனகிவிழிக்கெதிரேநின்றன்.

பொன்மானின்வடிவறிந்துபுவிமானும்பூமான்பாற்புகன்றுடம்பி
கன்மானும்வலியரக்கர்கருதியவஞ்சகமென்றுன்கருத்திற்கொள்ளா
மின்மானும்மணிமலர்க்கைவிற்குனித்துச்சரந்திருத்திவிரையலுற்றுன்
பின்மானம்விடுத்திலங்கைப்பெருமானுமொழித்திருந்தான்பிழைசெயற்
[கே.

சாற்றுடும்வெயிலோடுங்காணுடுமானேடக்காலோய்ந்தையன்
கூற்றுவிகொளக்கொடுப்பேனெனக்குறிக்குமவ்வேலைகுதித்துவிண்ணின்
மேற்றுவச்சரந்தொடுத்தான்வீழ்பொழுதின்மாரீசன்விளம்புமோதைக்
காற்றுதுசனகிதுடித்தேவமறுத்திளையோனுமறியச்சென்றான். (௩௭)

சென்றிடக்கண்டிரக்கமில்லாத்திருவிலியும்பொருவரியதேகமாற்றித்
துன்றுசடைமுடிவிரியக்கமண்டலமுமரவுரியுந்துலங்கக்கீழார்ந்
தொன்றுதிருக்கோவணமும்வெண்ணீறுமுந்நூலுமொளிரப்பாசம் [ட்டி.
வென்றவர்போனவைதிரைமூப்படைந்தொருமெய்ஞ்ஞானியெனவேடங்கா

அங்குவரக்கண்டலுங்கண்ணீர்மாற்றியெதிரேகியடிகணீவி
ரெங்குறைவோரிங்குவருகாரணமென்கூறுமெனவிவளுக்கொல்லா
தங்கவனுந்தேவர்முனிவரர்க்கரியபொன்னிலங்கையதிலெந்நாளுந்
தங்கியிருப்போமுலகோடெவ்வுலகுநமைத்தேறத்தவங்கள்செய்யும். (௩௯)

வேறு.

இருந்தநீவிர்யார்மகள்பெயரேதிவணிருந்து
வருந்துகின்றதென்சொலுமெனவடிகணின்மாட்டுப்
பொருந்தினர்க்கலாதகங்கொளாச்சனகனர்புதல்வி
திருந்துகாகுத்தன்றேவிநானென்பெயர்சீதை. (௬0)

கேட்டவஞ்சகனடாதபுன்மொழிபலகிளத்தி
நாட்டமோடுமெவ்வுலகமுமெரியுகநடுக்கி
வாட்டமுற்றிடச்சாலையைமண்ணொடும்வாங்கி
யோட்டமுற்றபொற்றேரில்வைத்தெழுந்தனனெல்லை. (௬௧)

எழுதனேக்கியேபூசைவாயெலியெனவேங்கிப்
பழுதிலாதகற்புடையவள்பற்பலபன்னி
யழுதவோசைகேட்டடாதடாவெனச்சினந்தார்த்து
வழுவிலாதங்கழுகிறையரக்கனைமறித்தே. (௬உ)

ஏறுதேரினைப்பாகனையிவுளியைச்சிலையைக்
கூறுசெய்தோளிர்குழைகளுமகுடமுங்குலைத்து
வேறுவேறுறக்கவசமுந்துவசமும்வீழ்த்திச்
சீறிநின்றமருடற்றினான்சனகியுந்தெளிய. (௬௩)

ஆயகாலையிலாக்கனுமெருவைகட்காச
னேயமுக்கணன்வாளினாற்சிறையினையொழித்துப்
போயினானகர்புகுந்தொருபொதும்பரிற்புவியின்
றாயினாடனைச்சிறையினிலிருத்தினன்றனியே. (௬௪)

பொற்பினாள்சிறைபுக்கபின்மானின்பின்போன
வற்பினான்றனைநேடியவிளவலுமடைந்து
கற்பினாண்மனக்கவலையுந்தடுத்ததுங்கனன்று
சொற்பினாற்சொன்னதுனியும்பின்வந்ததுஞ்சொன்னான். (௬௫)

கேட்டபோதிளையோனொடுமறுமொழிகிளத்தாக்
கோட்டமுற்றனன்றுடித்தழன்மெழுகெனக்குலைந்தான்
காட்டினாடெரிகாலெனக்காலினாற்கடுகி
யோட்டமீக்கொடுபன்னசாலைவந்துற்றான். (௬௬)

உற்றுநோக்கினன்றேவியைக்காண்கிலனுயிராங்
கற்றதாமெனநெடிதுழன்றலம்வந்துகலநீர்
சுற்றுதெண்டிரைச்சுழிமிசைச்சுழல்வபோற்சுழலாக்
கொற்றவன்றிருக்குமரனுங்கொதித்துளங்குலைந்தான். (௬௭)

குலைந்தநம்பியோடிளவலுங்குலைந்துதன்னுயிராங்
கலந்ததாயினுந்தமையனைத்தேற்றியேயண்ணா
வுலந்துநிற்பதென்னெடுத்தவர்தங்களையுடன்போர்
மலைந்துதேவியைமீட்குதனலமெனவழுத்த. (௬௮)

சென்றுதென்றிசையோடினார்தேர்ச்சுவடறிந்தா
ரன்றுவெஞ்சமரங்கொடுத்தரக்கன்வாளெறியக்
குன்றுபோற்சிறையிழந்திவர்வருநெறிகுறியாக்
கன்றிவீழ்ந்துயிர்ப்படங்கியதாதையைக்கண்டார். (௬௯)

கண்டபோதவர்கண்கணீர்கரைந்துமெய்கரையக்
கொண்டல்வண்ணனுங்கைகுலைத்தாருயிர்கூற்றாங்
குண்டதாமெனவுயிர்ப்பவிந்தொடுங்கினான்விழியா
வண்டரோடுநின்றெண்டிசாமுகங்களுமயர. (௭௦)

தம்பிதேற்றிடத்தெளிந்தனன்றாதையுந்தெளிந்தே
நம்பிமார்க்குளவாறெலாங்கேட்டுடனவிவாய்க்
கொம்பனாடனக்குரியதன்கொள்கையுங்கூறா
வும்பரேறினன்புகழ்த்தலையேறியவுரவோர். (௭௧)

தாதையைக்காத்தேந்தியேதடநதிக்கரைபோ
யோதுநீர்க்கடனுளுற்றிவாளுேங்கெரிமூட்டி
வேதையுற்றவர்மீளவும்விரைந்துவெங்கானின்
பாதைகூடினர்சீதையைத்தேடினர்பரிவால். (எஉ)

ஆர்ந்ததிண்டிறல்வீரருமயர்ச்சியொன்றின்றிக்
கூர்ந்துகானினுமலையினுந்தடத்தினுங்குறுகாத்
தேர்ந்துதேர்ந்தொருவழியினுஞ்சீதையைத்தேருச்
சோர்ந்துநின்றவரல்லினூடொருவனந்துன்னி. (எ௩)

பகலெலாநடந்திழைத்தகால்வருத்தமும்பசியு
மிகவருத்திடச்சனகிதன்பிரிவெனும்வெந்தீ
யகமிறுத்திடவிளவலைநோக்கியேயையா
தகையசற்றுநீர்தருகவென்றேதலுஞ்சலியான். (எச)

புக்குமாவனமெங்கணுந்துருவினன்போனுன்
பக்கநோக்கியோர்பாதகியயோமுகிபரிவாற்
கைக்குளேயிளவலைக்கவர்ந்தேகலுஞ்சனன்றே
மிக்குநாசிகாதணிமுலைகொய்தவன்மீண்டான். (எரு)

மீளும்வேலையில்வீரனுமிளவலைத்தேடிக்
கோள்புரிந்துளகொடியாால்வஞ்சனைகுறிக்க
மூளும்வெஞ்சமடர்ந்தவோவெனப்பலமொழியா
வாளியேறனையாயெனக்கூவியாங்கடைந்தான். (எசு)

அடைந்தகாலையிலிளவலுமடிபணிந்தாங்கு
நடந்தவாறெலாம்புகறலுங்கேட்டிருநயன
மிடைந்தநீரொடுதழுவியேவிடியல்காண்பளவு
முடங்கையாயிருந்தப்புறங்கானகமுற்றூர். (எஎ)

கவந்தனென்பவன்றனையுங்கண்டாருயிர்கவர்ந்தே
சிவந்தவாயினுர்சவரிசொல்வழியையுந்தெருளா
வுவந்துசெல்லுழியோங்குபம்பாநதியுற்றுப்
பவந்தராதுயர்மதங்கமால்வரைப்புறம்படர்ந்தார். (எஅ)

தனுவினுர்வருதனிமைகண்டரிக்குலத்தலைவ
னனுமனைவிடுத்தறிந்துவாவெனச்சொலவவனும்
மனுவின்நாயகன்மலர்க்கழல்வணங்கியங்கவர்க
ளினிமையுற்றிடப்பேசிமீண்டிரவிகாதலன்பால். (எகு)

ஓதமாருதிசூரியன்கான்முளையுணர்ந்தே
யேதைதீர்ந்தெதிர்கொண்டுநல்லிசனைமேவி
பாததாமரைபணிந்தாணபாகினன்பரிவாற்
சீதைநாயகனபயந்தந்தவருளைச்சேர்ந்தான். (அ௦)

குரக்குவானரத்தலைவனார்குறித்தகானூடே
தரக்கனார்மராமரந்தனைத்தனித்துளையாடிப்
புரக்குமன்பினாற்றுந்துமியென்பையும்பொடியாய்க்
காக்கவெற்றினார்கைவலிகால்வலிகண்டார். (௮௧)

தங்கண்மீதுமுன்னரக்கனாற்றயங்கியதையல்
செங்கையாலெறிகலன்களையவர்க்குளந்தெளிய
வந்துகாட்டலுநோக்கித்தன்னுயிர்குழைந்தமலன்
றங்கணீருகுத்தானடிதொழுதுசாற்றுவரால். (௮௨)

வாலிதன்னுயிர்வாளியால்வாங்கியென்னரசிங்
கேலவேதரவென்றலுமம்முறையயந்தான்
நீலமேனியன்சொற்கொடுநேர்வரக்கூவி
பாலின்மேனியரிருவருமல்லமர்பயின்றார். (௮௩)

அய்யனுமறைந்தொருசிறுவாளிகொண்டவன்மே
லெய்தகாலையில்வாலியுமேசிப்பின்னிவனைத்
தெய்வமென்றுகண்டவன்பதம்வேண்டியேதீர்ந்தான்
றையறன்னையுவானரர்தேடுறச்சமைந்தார். (௮௪)

மிக்குமாதவன்காதலன்றனித்தனிவிளித்துத்
தக்கநீர்விரைந்தரியபல்லுலகெலாந்தாழாப்
புக்குநேடிமீண்டெய்தவென்றவதியும்புகன்றே
யக்கணஞ்செலவேவினானாணையுமறைந்தே. (௮௫)

ஏவினானதிற்றென்றிசைக்கிசைந்தமாருதியு
மேவுவானரவெள்ளமோரிரண்டுடன்வீரற்
காவியன்னவங்கதனொடுசாம்பனுமடையக்
காவெலாங்கடந்தொருபிலம்புகுந்தனர்கலங்கி. (௮௬)

அங்குமாதவமாற்றிமெய்யொடுங்குமோரணங்கைத்
தங்கடாயெனக்கருதியதலைவர்பாற்றையல்
சங்கையாவுமுற்புகன்றுபின்வாங்கொடுசார்ந்தா
ளிங்குநின்றவாதிசயித்தப்புறமேக. (௮௭)

திருவலுற்றவர்மயேந்திரவரையினைச்சூழ்ந்தே
யெருவைமன்னனைக்கண்டனரரக்கனென்றிசயம்
வெருவலுற்றனரிராமமந்திரம்பலவிளம்ப
வருவமுற்றனன்சனகிசெல்வழியையுமுரைத்தான். (௮௮)

கடலைநீந்துவதெவனெனயோசனைகருத
நடலைவென்றெழுசாம்பனுமூப்பினானவிந்தேன்
விடலையங்கதனங்கதன்பெருமையுமேவா
ரடலையும்புயத்தனுமனேகடக்குமென்றறைந்தான். (௮௯)

அறைந்தகாலையின் மயேந்திரத்துச்சிமேலனுமன்
நிறைந்தவானவர்பூமழைசொரிந்திடநிமிர்ந்தே
குறைந்திலாதெழுந்தான்விசைதாதைமுற்கூட
மறைந்துவைகுமைநாகர்க்குச்சிலவுரைவழங்கி. (௬0)

சலதிமேல்வருமனுமனங்காரதாரகையின்
புலவுவன்குடர்பிடுங்கியக்கவளுயிர்போக்கிக்
குலவுமின்னெயில்வெயில்விரிகோநகர்க்கொருபா
லிலகுவானுயர்பவளமால்வரையினையெய்தி. (௬௧)

இருந்தமாருதியெதிர்ந்துளவிலங்கணியுயிர்கூற்
றருந்தவீட்டிவெவ்வரக்கர்கண்புலப்படாதருவங்
காந்துநுண்ணியகொதுகினுஞ்சிறியவாய்க்காலால்
விரிந்தநீண்மணிமாளிகையிடந்தொறூஉம்மேவி. (௬௨)

துருவினன்கரிபரிநிரைசுடர்மணித்தடந்தேர்
மருவுசாலைபூஞ்சோலையுய்யானனம்வாவி
பரவுகூலம்வன்பிலம்புளினத்திரள்படுகர்
தரவுயர்த்தபொற்கோபுரமாலையஞ்சதுக்கம். (௬௩)

ஒருபதாகியதலையினனோடுசேர்ந்துறங்கு
மரிவைதன்னையுஞ்சனகியென்றயிர்த்தவள்கொடுவாய்
வெருவல்கண்டுளந்தெளிந்துபின்விலங்கியேகருணன்
பொருவுமாளிகைசார்ந்துவீடணன்மனைபுக்கான். (௬௪)

நோக்கினனிவனிந்நகர்நோக்குதற்குரிய
பாக்கியம்பெருவானெனவப்புறம்படர்ந்தா
னூக்கவிந்திரனிருஞ்சிறையுறைந்தவாயிலிற்சென்
றூக்கையிற்பெரியோனதிகாயன்வீடடைந்தான். (௬௫)

கரியநாழிகைபாதியிற்காலனும்வெருவி
யிரியுமாயவல்லரக்கர்வாழெழின்மனைப்புறஞ்சூழ்
தெருவெணாயிரத்தாயிரகோடிமேற்றேடி
யொருவனேதிரிந்தணங்கினைக்காண்கிலாதுளைந்தான். (௬௬)

எழுநூறுகாவதமகன்றிலங்கியவிலங்கைப்
பாழிமாநகர்முழுவதுந்தனித்தனிபடர்வுற்
றூழிநாயகன்றூதனுந்தேடினனறியா
தாழித்தீமுருங்கிழுதெனவுள்ளநெக்குருகி. (௬௭)

அப்புறங்கடந்தான்செறிந்தோங்கிவானளவுஞ்
செப்புதற்கரிதாய்வளந்திகழ்பொழிறெரிந்தான்
வெப்பொறுத்தவன்மேவியத்தலத்திடைவிருக்கக்
கொப்பிடத்திருந்தான்பெருங்கூட்டமுங்குறித்தான். (௬௮)

தலையிற்கண்ணினர்கண்ணினிற்றலையினர்தாழ்ந்த
முலையில்வாயினர்வாயினின்முலையினர்முழுது
மலகையன்னவெவ்வரக்கியர்குழுவிடையமிழ்தின்
னிலையின்வந்தவளிருப்பதுகண்டுளநெகிழ்ந்தான். (௯௯)

மண்புரண்டுசிக்கேறியவோதியுமழையாற்
றண்புரண்டுசேறாடியமேனியுந்தழன்மே
லெண்புரண்டபூங்கொடியெனக்கருகியவிடையுங்
கண்புரண்டுநீரொழுகியவதனமுங்கண்டான். (௧00)

கானின்வாயெரியுழுவையிற்கோட்படக்கரைந்தே
மானினுயிர்படுவதுமரக்கியர்வளைத்துத்
தேனனாட்கிடர்விளைப்பதுந்திரிசடைதேற்ற
ஊனிலாவுயிர்த்திருந்தகற்புடைமையுமுணர்ந்தான். (௧0௧)

அன்னகாலையெண்ணாயிரகோடிவாளரக்கர்
கன்னிமாரொடுதசமுகன்வந்ததுங்கன்னிக்
கன்னமன்னவடனைப்பணிந்திரந்ததுமவளாற்
சொன்னசொற்களுங்கண்டுளந்துடித்தனன்றூதன். (௧0௨)

அரக்கனேகலுமரக்கியர்காவலுமயரத்
தரைக்குநாயகன்றேவிதன்னுயிரினைத்தானே
யொருக்கவெண்ணியாங்கெழுதலும்விருக்கமேலுற்ற
குரக்குமாணிகைகுவித்திதுகூறினான்குறுக்கே. (௧0௩)

கேட்டறிந்தனளனுமனாற்சொலச்சொலக்கிளர்ந்த
வாட்டநீங்கினண்மணிவிரன்மோதிரம்வாங்கிச்
சூட்டினளவடெய்வசூடாமணியவன்பா
லீட்டியேகெனவிடுத்தனடவனையுநிகழ்த்தி. (௧0௪)

எழுந்தமாருதியிரும்பொழில்காவல்செய்திருந்தோ
ரழிந்துசிந்தநின்றூர்த்தமாடலையறிந்தோர்
மொழிந்தபோதுகிங்கரர்படைமுழுவதுமூண்டு
கழிந்தகாலையிற்பஞ்சசேனாதிபர்கடுகி. (௧0௫)

மண்டுபோர்செயவாங்கவர்சிரங்களைவாலாற்
கொண்டுசுற்றிநுண்பொடிபடத்தரையிடைக்குமைத்தான்
கண்டசம்புமாலியுஞ்சமர்புரிந்துயிர்கழிந்தான்
விண்டகாலையக்கயன்பொருத்தாருயிர்விண்டான். (௧0௬)

இலங்கைமாநகர்கடற்சுழியெய்துறுசலம்போற்
கலங்குகாலையிந்திரசெயித்தறிந்துளங்கனன்றே
பொலங்கொடேர்பரியானைகொண்டருஞ்சமர்பொருத்தா
னிலங்குமாருதியவையெலாந்துகள்படவெற்றி. (௧0௭)

தோழித்துவெஞ்சிலைமுறித்தவனுளந்திகைப்பப்
போரழித்தலும்புரந்தரன்புறந்தரப்பொருதி
யூரழித்தவனுறுத்துமாருதியுரமுளைய
வீரழிப்பனென்றயன் படைவிட்டவன்கட்டி. (௧0அ)

தாதைபால்விடுத்தானவன்யாரைநீசாற்றென்
ருேதமாருதிநினைத்தொலைத்துன்குடிகெடுக்குஞ்
சீதைகாதலன்றூதனுமானெனச்செப்ப
போதநீங்கியதசமுகன்வெகுளிமேற்பொங்கி. (௧0௯)

கட்டைநீக்கிவான்முழுவதுந்துணிகளுங்கயிறுந்
தொட்டிறுக்கிமேலிழுதுடனெண்ணெயுஞ்சொரிந்தாங்
கிட்டதீவிசும்பெழுந்துமாநகரெலாமெரியச்
சுட்டவானரமீண்டுதன்றுணைவர்பாற்சொல்லி. (௧௧0)

சாம்பனங்கதன்வானரத்தானையுஞ்சார
வேம்பலோடுபோய்மதுவனங்கொள்ளையிட்டவர்தஞ்
சோம்பறீர்ந்தனர்ததிமுகனெதிர்த்துளங்குளங்கித்
தேம்பல்கொண்டுமுனேகிடவெழுந்துபின்சென்ருர். (௧௧௧)

சென்றகூட்டத்தைமாருதிவிலங்கிமுன்சென்றே
யென்றுமாமகனேடிருந்திவர்வரும்வழிமேற்
றுன்றுகண்செலத்தனதுளமுலைந்துயிர்சோரும்
வென்றிநாயகன்பாதமேல்வீழ்ந்துகைதொழுதான். (௧௧௨)

தொழுதமாருதிதோகைதன்னிலைமையுஞ்சொல்லி
வழுவிலாதசூடாமணிதன்னையும்வழங்க
வெழுதுமேனியானனுமனையுவந்துபின்னெழுந்தே
பழுதில்வானரமெழுபதுவெள்ளமும்பரவ. (௧௧௩)

சுக்கிரீவனங்தன்சதாகதிதருதோன்றன்
மிக்குசாம்புவன்சதவலிகேசரிவினதன்
தக்கமாநளனுதியபெரும்படைத்தலைவ
ரொக்கதம்பியோடமலனுங்கடற்கரையுற்ருன். (௧௧௪)

அங்குவைகினனுமனுலழிவுண்டவிலங்கை
பொங்குதீப்புகைசாடமெய்புழுங்கியவரக்கன்
றங்கண்மந்திரத்தாரிளையாரொடுந்தனித்துத்
துங்கயோசனையெண்ணுங்கால்வீடணன்றுணிவாய். (௧௧௫)

வேறு.

நீதியொன்றுநிகழ்த்தினன்
மாதுகொண்டமனத்தினன்
போதியென்றுபுறத்தொரு
சூதுகொண்டுதுறத்தினன். (௧௧௬)

அன்னகாலையமைச்சரோ
டுன்னிவீடணனெல்லையிற்
பின்னுதெண்டிரைபிற்பட
மன்னவர்துவணங்கினான். (௧௧௭)

வீரமேவியவெஞ்சிலைப்
பாரமேவியபண்ணவன்
சாரனேருரைசாற்றிமே
லாரவாரமறிந்தனன். (௧௧௮)

வாழியேந்தியவன்மக
னேழுநாட்டவமெய்தினா
னாழிவேந்தனறிந்துபின்
னூழவந்தபயந்தர. (௧௧௯)

வெள்ளநீர்க்கடன்மீதிலே
துன்னுவானரர்தோள்களாற்
கொள்ளைமால்வரைகொண்டுபோய்த்
தன்னொணாதுதடுத்தனர். (௧௨௰)

வென்றிவானரவீரரா
லன்றுசெய்யணையின்றலை
சென்றுசாரணர்சேரவே
யொன்றுவாய்மையுணர்த்தினான். (௧௨௧)

என்னநின்றவிலங்கையி
லுன்னுமால்வரையொன்றின்மேல்
வெள்ளவானரமேவவே
வள்ளல்சென்றுவதிந்தனன். (௧௨௨)

அன்னகாலையரக்கனும்
மின்னுகோபுரமேவியே
சொன்னசாரணருந்தொகுத்
தின்னவின்னவியப்பவே. (௧௨௩)

அங்குதோமைதிக்கணே
யிங்குமாருதியின்சொலாற்
செங்கைவில்லிதெரிந்தனன்
றுங்கவான்மணியின்சுதன். (௧௨௪)

பின்மணிக்குலமேவிய
பன்னுமௌலிபதிப்புரு
மன்னவர்துவணங்கினான்
சொன்னமாப்புகழ்துன்னவே. (௧௨௫)

மானமிக்குவரம்பிலா
வீனமிக்கவனுக்கிவை
நீங்கழ்த்தெனநேர்ந்துதன்
ஞானவீரர்தமக்குளே. (க௳௬)

வீரமிக்குவிளங்கிய
சூரவாலிசுதன்றனை
சாரவென்றுசமைத்தன
னூர்வமுந்துளவன்னவன். (க௳எ)

வேறு.

அனுமனையன்றிநீயென்னுண்டகையருளைப்பெற்ற
வெனைநிகர்ப்பவர்கள்யாவரெனவுவந்தெழுந்தவீரன்
புனைமணிவாயினீங்கிப்பொன்னகர்வீதிதள்ளிக்
கனைகழலரக்கற்கண்டானவனுமீண்டிவனைக்காணு. (க௳அ)

நின்றுளகுரங்கேநீயார்நேர்ந்ததென்னிருதருன்னைக்
கொன்றுயிருருந்தாமுன்னங்கூறுகவென்றுகூறும்
வன்றிறலவனைநோக்கிநின்னைமுன்வாலாற்கட்டிக்
கன்றிமெய்யுளையவெங்கான்கடன்மலைபலவுஞ்சூழ்ந்த. (க௳௯)

நாற்றிசைப்புறமுந்தாவித்திரிந்தனன்நாகர்வேண்டப்
பாற்கடலமுதந்தந்தான்பாலனானுன்னைக்கண்டு
வேற்கடனயனமின்னைவிடுதலன்றெதிர்ந்தபோரின்
மேற்கடற்பகழியாலேபடுதலென்பதும்விளம்பி. (க௮௦)

எய்துவாயென்னவந்தேனென்றலுமிலங்கைவேந்தன்
கைபுடைத்துருமினக்குக்கண்ணெரிகதுவநோக்கி
பையநின்றுதையேற்குபக்கமுற்றமையானீயு
முய்திறங்கண்டாய்மீண்டுபோர்த்திறமுணர்த்தென்றேட்ட. (க௮க)

வேறு.

தானவின்றதும்பினேதனக்கிராவணன்
மேனவின்றதுஞ்சொலவீரன்போர்க்கினி
யானவைபுரிமினென்றருளவானரத்
தானைகளார்த்தனசெவியிற்சார்தலும். (க௮உ)

இருந்தபொன்னிலங்கையிலெழுந்தமாப்படை
விரிந்தவான்கடலெனவிண்ணுமண்ணுமே
னெரிந்தனநிமிர்ந்தெழுபூழிநீடலாற்
சரிந்தனபானுவின்கிரணந்தாழவே. (க௮௩)

தேர்மிடைந்தனகொடிமிடைந்துசேனுறு
கார்மிடைந்தனதடிகான்றுவில்லுமிழ்
தார்மிடைந்தனபுயமிடைந்துதள்ளுறுப்
போர்மிடைந்தார்முடிமிடைந்துபொங்கினர். (க௮௪)

சங்கொலிகடலெனத்தழங்கவாசிகண்
மங்குலினெழுமடங்கதிரவாரணம்
பொங்கியவுருமெனப்பொலியச்சிறிய
வெங்கண்வாளரவெனவரக்கர்விம்மவே. (கஙரு)

தானைகளுற்புறந்தழுவத்தோன்றினன்
மானமிலரக்கனுமலிந்திரண்டிரு
பானிறைவீரரும்பகைத்தவெஞ்சமம்
மேனிரைகோத்துடன்விளைவித்தாரரோ. (கஙசு)

கொடியறத்தேரறகொடியவீரர்கண்
முடியறக்கரிபரிமுழுதுமெய்யறப்
பொடிபடுபொழுதினிற்பொங்கிமாருதி
கொடியராவணன்புயந்தன்னிற்குத்தினன். (கஙஎ)

வளையெயிற்றரக்கனுமாறிமோதியாங்
கிளையவன்மேலும்வேலெடுத்தங்கோச்சின
னுளைவுறவனுமன்கையேந்தியோடுமவ்
வளவையின்மனுகுலத்தரசன்கண்டனன். (கஙஅ)

கைப்படுகார்முகங்குழைத்துக்காய்கணை
நெய்ப்படுதழலெனநிமிரவீசியே
யெய்ப்படுத்துருசிசரர்நின்றேங்கவே
பொய்ப்படுத்தவர்க்குமன்றவசம்போக்கினன். (கஙகூ)

இடிபடுசரங்களாலெதிர்ந்துளோரெலாம்
பொடிபடப்பாய்சரிபுரளப்பூட்கையின்
முடிபடத்தேர்க்கொடிமுறியவுரிவி
லொடிபடத்தசமுகனுலைந்துசாம்பினன். (கசo)

தோணியுடைந்துவில்லொடிந்துசெய்தவெம்
போரிழந்தவசமாய்ப்பொருமினன்றனைக்
கார்நிறவண்ணனுங்கண்ணிற்கண்டனன்
ஞர்முடியவற்கிவைசாற்றமேயினன். (கசக)

எற்றனபடையெலாமிழந்துநின்வலி
தோற்றனைநாளைவாவென்னச்சொல்லினன்
ருற்றினபூகமேற்ருவிமீன்கண
மாற்றுநீருகளுமையோத்திருடனே. (கசஉ)

வாளிழந்தரியசொல்லிழந்தவன்பெருந்
தோளிழந்தகலமுமிழந்துதுக்கமாய்க்
கோன்கொணர்ந்தருசிறைகூட்டுக்கொற்றவ
னொளிழந்தணிநகரிலங்கையண்மினன். (கசங)

சுற்றியகரங்களால்விழுதிற்றூங்கவே
பற்றியபழியொடும்பாரைநோக்கியங்
குற்றவரோடுரையாடவொல்கியே
மற்றவனடந்துபோய்மனையின்மன்னினான். (௧௪௪)

பொருவியமண்டபத்தூடுபொன்மணி
விரவியவாதனத்தினிதுமேவியங்
கொருவனைவிளித்துநம்மொற்றர்தங்களைத்
தருகவென்றுரைத்தனனவருஞ்சார்ந்தனர். (௧௪௫)

வேறு

ஆலமனையான்றெண்டிரைநீராழிக்கப்பாலமர்ந்தபெரு
மூலபலத்தைக்கொணர்திரெனமொழியக்கேட்டங்கவரேக
நீலநிறத்தான்றுயினீங்கிநினைந்துவருந்திநிலைதளராக்
கோலமனைத்துமாலியவான்குறித்தங்குறுதிகூறியதை. (௧௪௬)

தள்ளிவெறுப்பமகோதரனுற்றக்கவிநயம்பலவெடுத்தாங்
குள்ளத்துள்ளவுரைத்தவெலாயோகோகேடென்றுணராமற்
கொள்ளைத்தலையான்றனக்கிளையகும்பகருணன்றனைக்கூவி
வெள்ளப்பெருக்கானறவெருமைசோறுவெறுப்பமிகவளித்தே. (௧௪௭)

ஆடைபுனைந்துபொற்கலனிட்டலங்காரஞ்செய்தனுசரித்த
சாடையறிந்தான்சனகிதுயர்தணியாதிருந்தகையோர்ந்தான்
வேடைமிகுந்தான்றமையனுக்குவிண்டானுரைகேளாததனாற்
கோடையிடிபோற்சமரநெடுங்கோலம்புனைந்தான்களம்புகுந்தான். ()

வேறு.

வருபவன்றன்னையும்வள்ளனோக்கவங்
கிருபதுகையினாற்கிளவலென்றனோன்
வெறுவுறுமேனியனென்றுவீடணன்
றருமுறையாலவன்றன்னைக்கூட்டென. (௧௪௯)

ஏவினான்வீடணனேகிமுன்னவன்
சேவடிதொழுதுரைசெப்பச்சீர்தரு
கோவினான்மறுத்துரைகூறக்கேட்டனு
மேவுவெஞ்செருத்தொழின்மலைதன்மேயினார். (௧௫௦)

மாருதியங்கதன்மயிந்தன்சாம்புவன்
சார்பெருந்தலைவரைத்தாக்கித்தன்கையாற்
சூரியன்புதல்வனைத்தூக்கியேகலுங்
கார்நிறவண்ணனுங்கனன்றுபொங்கியே. (௧௫௧)

விட்டனனெற்றியில்வேகவெங்கணை
பட்டதுசோர்வினைப்பார்த்துமூக்கையுங்
கிட்டியகாதையுங்கிள்ளித்துள்ளியே
மட்டிலாவானரத்தலைவன்வாவவே. (௧௫௨)

தங்கைதன்மூக்கெனத்தனதுமூக்கிழந்
தங்குதன்சினமிழந்தயர்கின்றான்றனைச்
சங்குறைகரத்தினூற்றனிவில்வாங்கியோர்
வெங்கணையாற்சிரமறுத்துவீழ்த்தினான். (௧௫௩.)

இங்கவனிறக்குமுன்னிலங்கைநாதனுந்
தங்களிலொருவனைச்சனகனுக்கியே
மங்கைபாற்சென்றுரைவழங்குமேல்வையிற்
றங்கவன்மடிந்தமைதூதரோதினார். (௧௫௪)

ஓதியகாலையிலோதநீர்த்திரை
மோதியதாமெனமுழங்கும்வாயினான்
மீதெடுத்தாற்றிமெய்மெலியநோக்கிய
சிதையுந்தெளிந்தனடியக்கந்திரவே. (௫௫௫)

கேட்டனன்றன்சிறுதாதைகேதத்தை
வாட்டமுற்றெழுமதிகாயன்மன்னிரு
தாட்டுணைபணிந்தனன்சமருக்கேகினன்
கூட்டுறவோடுயிர்கொடுத்துமாய்ந்தனன் (௧௫௬)

வேறு.

அதிகாயனிறந்ததுகண்டணியிலங்கைநகர்முழுதுமடடாவிந்த
விதிகாலநம்மளவோவெற்றிராற்கோவெனவேவிளம்புமோதை
புதிதாகச்செவிப்புகுதப்புழுங்கியநெஞ்சழன்றெழுந்தான்புயங்கஞ்சிந்துங்
கொதிகாலவிடமனையாராவணிபண்டமரர்களைக்குமையவென்றான். (௧௫௭)

தாதைதிருத்தாள்பணிந்தான்றம்பிதனக்கிரங்கியகண்டாரைசோர
வூதைமிகுந்தெரிநெருப்பினுயிர்த்தவனுக்காயபலவுறுதிசொல்லிச்
சீதையுநின்னில்லாளாயில்லாளேலெனதுவில்லுந்திறனுந்தீர்ந்திப்
போதுநகர்விலங்கியதேபோர்க்கும்விலக்கேனெனவும்புகன்றுபோனான். ()

ஊழிதிரிந்துலகமெலாமுண்ணும்வடவானலம்போலுறுத்துச்செங்க
ணேழிரண்டெட்டொருபத்தாயவெள்ளங்கடலெனச்சென்றெழுந்துசுற்ற
வாழிவரைபோனிமிர்ந்தம்பரந்தடவுதேர்க்கொடிநின்றசையச்சீற்ச்
சூழியணிந்திபம்பிளிறத்தாகதங்களுருமினொலிதொனிப்பச்சேர்ந்தான். ()

அந்தரம்பாதலமுலகம்முழுதுந்தூளியடைந்திடவெஞ்சினந்திருகியார்த்
தசேனை, நந்திடவங்கதனனுமானபனசன்சாம்பன்நளன்குமுதன்சதவலிகேச
ரிமற்றுள்ள, தந்திரவாகினித்தலைவர்முழுதுமோடச்சாடியிராவணியிளை யோ
ன்றன்மேற்பாணஞ், சிந்தினனெத்தனைகோடிமாற்றித்தம்பிதீயவனுக்கவ்
வாறுசெலுத்திப்பின்னும். (௧௬0)

சேர்ந்தபடையத்தனையுஞ்சிறுதகச்செய்தவன்கரத்தின்சிலையும்நாணுஞ்
சார்ந்தகொடும்பகழிகொடித்தேர்குதிரைபாகன்விழத்தரித்துவெற்றி
சோர்ந்திடநின்றார்ப்பரித்தான்ராவணியுங்கலங்கிவிண்ணிற்சென்றுபாசந்
தேர்ந்துவிட்டானிளையவனோடொருகுரங்கும்விலகாமற்சேர்த்துக்கட்ட. ()

பாசத்தாற்பிணித்த துகண்டிருவிழிநீர்கடலெனவேபரவிராமன்
மூசித்தேனெழுகுதழாய்முடிசாய்ப்பப்படிசாய்ந்துமூர்ச்சையுற்று
நேசத்தானத்திலராய்நின்றமரர்கலுழனையேநினைப்பவந்தான்
நாசத்தார்தலைவிலக்கினாகநெளிவுற்றோடநலம்பெற்றாரால். (கசுஉ)

பின்னாளுந்தென்னிலங்கைப்பெருமானுக்கொருமகனும்பெரும்போர்தாக்கி
முன்னாளுக்கெத்தனையோகோடிபங்குமுயன்றான்றுமுடியானுகித்
தன்னலேபெயர்ந்தந்தவிருளினும்பல்சமம்புரியச்சமைத்துக்கூசி
யெந்நாளுங்கலகமிடுமோதரனையிந்திரனுயேவியன்றே. (கசுந.)

அப்பாலுமயன்பாசத்தாற்பிணித்தான்சீதையைக்கொண்டவரைக்காட்டி
யிப்பாலிற்கொணர்கவெனவேவியபோதவளேகியெரிவாயுற்ற
கொப்போடுகுழைமலருங்குழைந்துகருகுவபோலுங்கூகூவென்றே
யொப்போடுமெழத்தேற்றித்திரிசடையுங்கொணர்வித்தாளுயிர்ப்பற்றார்கள். ()

மாருதியாற்சஞ்சீவிமலைகொணரப்பிழைத்தெழுந்தார்வானோர்தங்கள்
சோர்வகன்றாரிலங்கைநகர்சுடவென்றேமன்னுரையாற்றுள்ளிக்கொள்ளி
யோரொருவரிருகையோயாமலெடுத்தேவவுரவோன்வாளி
காருருமினெனச்செறியக்கண்டுதசமுகன்முதலோர்கலக்கமுற்றே. (கசுடு)

தன்மகன்பாற்கூறுதலுந்தங்கள்குலத்தொருவனைப்பொய்ச்சனகியாக்கிப்
பொன்னகர்விட்டெழுந்துவடபாற்போனமாருதிபாற்புகன்றுகாட்டி
மின்வடிவாளாலெறிந்துமாறிநிகும்பலைபுகுந்தான்விறலோனங்கண்
மன்னவன்பாற்சொலமருகுந்தன்மைகண்டுவீடணன்போய்வந்துசொல்ல. ()

நிகும்பலைகண்டடைந்திவர்கணிருதர்பெருங்கடல்கலக்கிநேரேசெந்தீ
மகம்பயிலுமொருவனைக்கண்டகஞ்சுடவன்மொழியனுமன்வழங்கலோடு
முகம்புரண்டதெனக்கொதித்தோரிமைப்பளவிற்றுதையிடத்துணர்த்திப்
பின்னு,மகம்பன்நிகும்பன்பொருதிமாய்ந்திடவோயாச்சமரமாற்றினனே.()

வேறு.

வாசவன்வரினும்வேதன்வரினுமால்வரினுமுக்க
ணீசனேவரினுமற்றையிமையவர்வரினுமென்கை
யாசுகமொன்றால்வென்றுன்முன்னையுமழிப்பலென்னு
வீசினனுருமின்வாளிவிடாமழையென்னமேன்மேல். (கசுஅ)

அன்றவன்விட்டவிட்டபடையெலாமவற்றான்மாற்றி
நின்றுளயிளவல்பின்னுநீசனைநெருக்கிச்சீறி
நன்றுநன்றுனதுவிற்போர்நமன்பதிவிருந்துகொள்ள
வின்றனுப்புவனென்றார்த்தாங்கிருஞ்சிலைகுழையவாங்கி. (கசுகூ)

ஒன்றொருபத்துநூறுகோடியென்றொன்றற்கொன்று
மின்றிரண்டடங்காவெள்ளமெனச்செலவீசியானை
பொன்றிடப்புரவிமாளப்பொருபடையடங்கநூறி
வென்றவனரக்கன்மேலும்பகழியின்கூடுவேய்ந்தான். (களo)

வாசியற்றிரதமற்றுவரிசிலையற்றவெம்போர்த்
தூசியற்றுண்மையற்றச்சொல்வலியற்றுநெஞ்சங்
கூசியுற்றனென்செய்வான்பின்னவன்குறித்தாங்கேவு
மாசுகம்வாங்கிமாறிவீசினனமலனஞ்சி. (களக)

வேறு.

இம்பருக்குமும்பருக்குமறைக்குமெட்டாவிறையவனேயிராமனெனில்
யானுமன்னன், நம்பியென்னிலெனதுரையுநன்றுமென்னிற்சனகிகற்புமற
னுமென்மேற்றழைக்குமென்னில், வெம்பியவெஞ்சிலையரக்கன்றலையைமண்
ணில்வீழ்த்துகவென்றொருவாளிவிரையவாங்கி, நம்பரமென்ற மாரெல்லா
மார்வந்துள்ளநயந்துவிட்டானவனுயிரும்நமன்பாற்கண்டான். (களஉ)

உலகமெலாங்களிப்படையவறமும்வாழவோங்கியநால்வேதமுனிவோ
ருந்துய்மை, யிலகவிண்ணுட்டமாரெல்லாந்தத்தங்காதலேழையரோடார்வ
முறவிடர்க்குளான, திலகமன்னசனகிமனக்கவலைதீரத்தீயரக்கர்குலமுழு
துந்தியக்கங்கொள்ளக், கலகமெலாம்புரிந்துபழிபாவம்வல்லகள்ளன்மடிந்த
தைத்தாதைகாதிற்கேட்டான். (களங)

நெய்யெரிந்தநெருப்பெனவேதுடித்தான்சிந்தைநெட்டுயிர்த்தான்மெய்
பாவிநிறைகண்சோரக்,கையெறிந்துவயிறறைந்தானெயிறுதின்றுகடலிறைந்
ததெனவழுதகலங்கிவெம்போர், செய்தெரிவெங்களம்புகுந்துமகனைக்கண்
டான்றேவியரோடாகுலித்தான்றிருவிலாத, பொய்யுறவோன்பட்டகொடும்
பாட்டையாரேபுகல்கிற்பார்கலைகற்பார்புவிமிக்கோரே. (களச)

மோதாலுமயக்கமுற்றான்றன்னைத்தேற்றிமொழிபுகலுமளவையின்கண்
முடுகியோரே, ழோதமெனமூலபலம்வரக்கண்டன்னார்க்குள்ளதெலாஞ்சொ
லக்கேட்டவுடனேவெம்போர்ப், பாதைகொண்டார்ரகுவீரனெதிர்வந் தற்
றன்பகைதீர விளையவன்மேற்படையொன்றேவிச், சீதையின்மேற்காத
னின்றானின்றான்சேனைசிந்தியதுகன்னலொன்றிற்றேவரார்ப்ப. (களரு)

மூலபலமடிந்ததுவுமரக்கர்மாய்ந்துமுடிந்ததுவும்பொன்னிலங்கைமுன்
னேனென்ன, காலமெனவெகுளியொடுநகையுந்தோன்றக்கதிர்ப்பிறைவா
ளெயிறுதின்றுகனன்றக்காலை, கோலமெலாமுன்முடித்துப்பின்னேநின்ற
கொடியமகோதான்சமரங்கொடுத்துமாண்டாங், கோலமிட்டுத்தரைவிழுந்த
தனையுங்கேட்டானேயாதபெருங்கவலைக்குள்ளிட்டானே. (களசு)

வற்றியநீர்க்கடலனையதானையோடும்வாவுமணித்தேரேறிவரிவிற்கோட்டி
வெற்றிமதாகவெனச்சங்கமூதிவேதியர்க்குமாதலர்க்கும்வேண்டிற்றெல்லா
முற்றமுகின்மழையெனக்கை யோய்வில்லாம லொளிர்பசும்பொன்னீதிகூ
றையுதவியப்பாற், கொற்றவனும்ரகுவீரன்கணையாற்பட்டான்குறைப்பட்ட
வானாருங்குணப்பட்டாரே. (களஎ)

வேறு

முக்கணன்வரையிடந்தமுாண்டடக்தோட்டசக்கிரிவன்முடிந்தவார்த்தை
திக்கனைத்தும்புகக்கேட்டாரடெய்வமயன்பயந்தமகள்சேர்க்கனுலி
யுக்கமுலைக்குவட்டினிற்கையுறவெறிந்துவயிறலைத்தாளுயிர்த்தாளொல்லை
மிக்கவாக்கியர்குழுவிரிதலையோடமர்க்களத்தைமேவினாள். (களஅ)

கண்டாடன்காதலனைக்கருவரைமேலருவரைசேர்காட்சியென்னத்
திண்டாடிமேல்விழுந்தாள்செங்நெருப்புந்தீவிடமுஞ்சேர்த்துவாரி
யுண்டாள்போலுளந்துடித்தாளொடுங்கினாண்மெய்யொடுங்கியுயிர்த்தாடன்
பாற், பண்டேவல்கொளுந்தேவமாதரெல்லாம்பார்த்திரங்கிப்பரிவுகூர. ()

மஞ்சிருக்குங்குழலாளைமதியிருக்குமுகத்தாளைவாளைவென்று
நஞ்சிருக்கும்விழியாளைநலமிருக்குங்குணத்தாளைநளினம்போலும்
பஞ்சிருக்கும்பதத்தாளைப்பார்த்திருந்தபெருங்காதல்பதிந்துநின்றன்
நெஞ்சிருக்குமெனநினைந்தோவுடன்முழுதுந்தடவியதுநெடியோன்வாளி. ()

வேறு

என்றழுதிங்கிவள்கிடப்பராவணனுக்கிளையோனு
மின்றிகழுமணிமார்பில்விழுந்தழுதுபுரண்டதற்பி
னின்றவனுக்காயபலநீர்க்கடனுதியநிரப்பி
யன்றுவந்தானுக்கிலங்கையரசாளமுடிபுனைந்தான். (கஅக)

மன்னுபலகீர்த்தியினான்மாண்டதற்பின்வீடணனுந்
தென்னிலங்கையரசாண்டான்சிலைவலிராகவன்மீண்டுந்
தன்னிலங்கைக்கொண்டுநகர்தன்னிலேசென்றுசெய்ய
பொன்னிலங்குமௌலிபுனைந்தான்புகழ்புனைந்தான். (கஅஉ)

வேறு.

உள்ளதுசொல்லினேனுறுதியென்றுநீ
கொள்ளினுநல்லதுகொள்ளாமலப்புறந்
தள்ளினுநல்லதுதாழ்வுமேன்மையும்
வள்ளலேயுனையலால்வரவற்றாகுமோ. (கஅங)

ஐயநானறிந்தறியாதுசொல்லிய
கைதவமென்னினுங்கருணைசெய்வதே
யுய்திறமென்றனனுருத்துவேந்தனு
நெய்யெரிநெருப்பெனநிகழ்த்துவானரோ. (கஅச)

வேறு.

அகலிகைசனகிதிரௌபதிபோலுமரம்பையுங்கற்பினிற்சிறந்து
மகிநிறைமுனிவோர்தங்களாற்பிறரால்வழுத்தவுந்திக்கவும்வாய்ந்த
தகையளோபாங்களுறவுகொண்டொருவன்றன்னையுங்கரவினிற்கலந்த
மிகையினாள்பொருட்டாவிவர்களென்னோடுவெஞ்சமராடவும்விதியோ. ()

என்பெருமிறலைக்கேவலித்தொருபுன்னேழைமைச்சிறியரைப்பெரிதாய்
மன்பெருமவையோர்மதித்திடநீதிவழுத்துவான்போலுநீயுரைத்த
வன்பினுக்கவதியென்கொலோநம்பாலாண்டெலாவேண்டுவதுவந்தே
யின்புறவாழ்ந்தாய்துன்பினுக்ககன்றேயிருக்கவுமெண்ணினாயிதமே. (கஅசு)

தருமநீமுதன்மையமைச்சனாதலினாற்சபையினிலவமதித்துரைத்த
கருமநான்பொறுத்தேன்போதுமந்திரஞ்செய்காரியம்போவெனச்சுழிந்தே
திருநகர்ப்புரிசைப்புறமெலாம்வளைத்ததெரியலர்சேனைகண்முழுது
முருவமில்லாதுகட்படுத்துமினென்றுருத்தூதற்றலைவருக்குரைப்பான். ()

தருமன் தசமுகன்கதையுரைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-ஙஅ-க்குத் திருவிருத்தம்-உ௦அ.

உ

# படைத்தலைவர்வதைப்படலம்.

பொன்னுளேவொளியும்புனலுளேகுளிரும்பூவுளேவாசமும்போலத்
தன்னுளேபுவனமுழுவதுந்தோன்றத்தானுமப்புவனமேற்றோன்றி
யென்னுளேயிருந்தானமதுரையுளிருந்தானேழைகட்கொருபொருளாகிப்
பன்னகாபரணனவனையேதுதித்துப்பாடுதும்பவம்விலங்கிடவே. (௧)

வேறு.

வலனதிகோபன்வினதனீர்கீழ்பான்மருவியதளாதிபன்படையை
யுலவையுந்தீயுங்காணும்போற்படர்வுற்றலப்புவீர்தென்றிசைவந்து
கலகமேபுரியும்விரிஞ்சனைவீரசிகாமணிகைப்பிடியாகத்
தலைமிசைப்பிணித்துத்தருகவன்மத்தன்றன்னொடும்போர்க்களஞ்சார்ந்தே.

குடதிசைச்சேனாதனுஞ்சுந்தவிந்தனுங்குறிப்புடனேகி
யடர்நவமணியைப்பாழ்படுத்திடுமினப்புறம்வடதிசையமர்ந்த
சுடர்முடிப்புவனேந்திரனொடுசார்ந்ததுணைவனும்படைகளுந்துசளா
யிடர்படமுருக்கிநொடிவரைப்போதிலெய்துவாய்நவையனீயென்றான். (௩)

மன்னவன்பணித்தபணிமுடியேந்திவருதினிப்பெருவெள்ளஞ்சாய்த்துத்
துன்னியவினதன்வலனதிகோபன்குறைமாருதமெனக்கீழ்பா
றன்னிலைதெரியாதெதிர்த்துமேலுற்றதளாதிபன்சரத்தினாற்றளர்வுற்
றெந்நிலம்புகுந்தானெனவியப்புறவானேறினுருடற்சுவையிழித்தே. (௪)

வென்றிறல்வீரசிகாமணிமத்தன்வெம்படைபன்முகஞ்சேர்த்துக்
கன்றியசீற்றமுருத்தெரியாதகடுங்கணைநெடுந்தடியோட்டித்
தென்றிசைபுகுந்தார்விரிஞ்சனுற்சிதையாதிவர்கள்பின்றிரும்பினபோது
மொன்றியகூற்றமீளவும்விடுமோவுயிர்ச்சுவைநசையொழித்துடனே. (௫)

மேற்றிசைச்சேனாதனுஞ்சுந்தவிந்தனுமேவியங்குற்ற
காற்றினும்வலிகூர்நவமணியெடுத்தகைச்சிலைப்பிறைமுகக்கணையாங்
கூற்றுவாயருந்தத்தீர்ந்தனர்வடபாற்குறுகியநவையனும்படையுஞ்
சாற்றியசமாமுழுவதும்புரிந்துசமத்தனுற்றன்னுயிர்சாய்ந்தான். (௬)

தீயெனவெழுந்தகாவிருதலைவர்சிதைந்தனர்நவையனுஞ்சிதைந்தான்
போயினபடையும்பொன்றினவினிமேற்போக்கரிதெனமணிப்புரிசை
வாயில்காத்திருந்தோராயிரங்கோடிவாட்படைமறவருமாண்டா
ரேயெனுமளவிற்றிருப்புவனேந்திரனேவியதானையோடெதிர்ந்தே. (௭)

நவமணிவிரிஞ்சன் றளாதிபன்மூன் றுதிசையுள்ளநாட்டினுங்காட்டும்
பவமணிகுடியையவரிடுபெயிரைப்பண்டவர்கொண்டபண்டத்தைத் [துச்
தவமணிபவர்க்குத்தத்தம்வார்ப்பவர்போற்றரையொடுதரையெனச்சமைத்
சிவமணிபுவனேந்திரனுழைச்சேர்ந்தார்கண்டவனுளங்களிசிறப்ப. (அ)

அணிநசர்ப்புறஞ்சூழ்ந்தனந்தன்மாமுடிநின்றம்பரத்தளவினுநீண்ட
திணிமதிணுட்டுங்கேதனம்பறிமின்சிகரியுநாஞ்சிலுமுறுப்பும்
பணிதரவகழிப்பரவையைத்தூர்மின்பாங்குறுகதலியின்படப்பும்
மணிமலர்க்காவுமிலஞ்சியுங்குளனுவயல்களும்வரம்பழித்திடுமின். (க)

எனக்கனன்றிருகண்பொறியெழப்புவனேந்திரன்புகல்வாய்மொழிகேட்டு
மனக்கடுஞ்சினமூண்டெழுந்தவாகினிகள்வாள்கதைசக்காங்கலப்பை
முனைக்கொழுநவியங்கொடுமரமுசலம்மூவிலைச்சூலம்வேல்வளரி
கனக்காம்வாங்கிவிடுத்தனர்மகராலயமெனப்பேரொலிகறங்க. (க0)

கொடிபறித்துயர்த்துகொத்தளஞ்சிறந்தகோபுரம்பொறிக்குலந்துகளா
யிடிபடத்தாக்கியகழியைத்தூர்த்தேயெழின்மலர்ச்சாளமென்சோலை
யொடிபடமோதிக்கதலியின்படப்புள்ளூறுதேன்பெருக்கெடுத்தோடும்
படுகுலைசிதறிப்பயிர்களோங்கியசீர்ப்பழனமும்பாழ்படச்சிதைத்தார். (கக)

எல்லொடுபொருதிநீண்டபொன்புரிசையிடிபடுந்தோறெலாந்தகர்ந்த
கல்லொடுவெயவர்பிடுங்கிவீசியபூங்காவொடுகொடிசெடிவீழ்ந்து
சொல்லொடுதொகுக்கவராதபேரகழிதூர்ந்ததுசேர்ந்தினுளு
மல்லொடுபகலுங்குடிபுகுந்திருந்தபுட்களுமாகுலமடைந்த. (கஉ)

தடிகொழுநவியங்கொண்டுகைவலியாற்றனித்தனிதகர்த்திடச்சிதறி
யிடிபடுமோசையண்டமுந்திசையுமிடையிடைநெக்குவிட்டுலைந்து
வெடிபடநாட்டுசொடிகளும்மெயின்மேல்விளக்கியபொறிகளுந்தவிடாய்ப்
பொடிபடத்தூசிகதிர்வெயின்மறைத்துப்பொங்கிருள்பரப்பினவெங்கும். ()

சோளெலாமடியமதியமுங்கதிருங்குழைந்திடச்சுடரொளாங்குறுக
வாளெலாம்பிறங்குமணியெலாந்தூக்கிமறிகடற்புவியெலாமகிழத்
தோளெலாமுனைவற்றருந்தவங்கடத்திதொன்மறைக்கம்மியப்புலவர்
நாளெலாஞ்செய்தபுரிசையுந்துகளாய்நாழிகையொன்றிற்றீர்ந்தனவால். (கச)

பாய்திரையகழிப்பரவையிலிருந்தபறவைகண்முறைமுறைதமது
வாய்களிலுயிர்த்தகருவினைக்கோலிவான்முழுவதுஞ்சுழன்றநற்றத்
தோய்துறைபுகுந்தகயங்கண்மேற்புரிசைதுலக்கியபொறிக்குலமிடிந்து
சாய்தலுந்தலைகணெறிந்துகார்மலையினருவிபோலுதிரங்கள்சரிந்த. (கரு)

தூர்ந்தவானகழிப்பெரும்புனல்கடைநாட்டோன்றுசாகரங்களோரேழுஞ்
சேர்ந்துபார்முழுதுநுங்கியார்த்தெழுந்தசெய்கைபோனகரினும்புறனும்
வார்ந்தலைகொழித்துமண்டிடக்கண்டமாநகர்ச்சனமெலாம்வெருவி
நேர்ந்தனவிறுதிபிழைப்பினிமெக்கிங்கிலையெனநின்றுநெட்டுயிர்த்தார். (கசு)

நாற்றிசையறியப்போனதூதுவருநராதிபன்பாலினின்மீண்டு
போற்றிநின்றரசேநம்பெருந்தலைவர்மந்திரிபொன்றினார்படைகள்
காற்றினிற்சிதைந்தபஞ்செனக்கழிந்தார்கடிமதிட்காவலர்முழுதுங்
கூற்றின்வாய்புகுந்தார்மருவலர்நகரிற்குறுகினார்கோட்டையையிடித்தே. ()

அரசன்வீற்றிருக்கப்பட்டினங்கொள்ளையானதென்றவனிபர்முன்ன
முரைசெயும்பழையகாதைநின்னளவிலுற்றதென்றொற்றருமோதக்
கரைபுரண்டெழுந்தகடலெனச்சிறிக்கட்கடைக்கனற்பொறிமலியப்
புரவலன்பால்வீற்றிருந்ததோரிளையபுதல்வனுமின்னணம்புகல்வான். (கஅ)

படைத்தலைவர்வதைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-ஙக-க்குத் திருவிருத்தம்-உ௦கஅ.

---

# சித்திரகேசரி சிங்கன் வதைப்படலம்.

உள்ளும்புறம்புந்துணையாகியுற்றபொருளும்பயனுமாய்க்
கொள்ளும்பொழுதுபாலமுதாய்க்குறையாதிருந்தென்குடிகாக்கும்
விள்ளுமறையும்பிறவுமறியாதவிமலன்விரிசடையிற்
கள்ளும்மலருங்கலந்ததிருமதுரைப்பெருமான்கழல்பணிவாம். (க)

வேறு.

தந்தைநீயுயிரோடிருக்கவெங்கையிற்றனுவொடுபலபடையிருக்க
மந்திரிமாருமிருக்கவாகினியுமற்றுநம்முயிரினுஞ்சிறந்த
பந்துமித்திரருமிருக்கவோர்சிறியபாலர்கண்மனத்துணிவோடு
வந்தமர்பொருதினரெனிற்சோறமுகர்தினிவாழவும்வழக்கோ. (உ)

இற்றொருகணஞ்சென்றவர்களையென்கையிருஞ்சிலையடாசுகமுனைகொண்
டற்றுகநூறிவெற்றியுமெனக்கேயாக்குவனன்றெனிலென்றும் [டு
வெற்றியும்வேண்டேன்வாழ்க்கையுமிறுவேன்விடைதரவென்றுளம்வெகுண்
பொற்றிருத்தாதைபதத்துணைபோற்றிப்போயினன்போர்மிசைபோவான். ()

மாதிரத்திருள்கொன்றெழுசுடர்க்கிரணம்மலிந்தபைங்கனககுண்டலங்கள்
காதிலிட்டவிர்பொன்மணிமுடிசிரமேற்கவினுறமார்பினிற்கவசஞ்
சோதிதந்திடப்பூண்டணிகழன்யாட்டிச்சுடர்நுதற்பட்டமுங்கட்டிப்
பூதரவரிவிற்றுங்கிநற்றூணிபுறத்துறக்கோதைகைப்புனைந்தே. (ச)

ஆடாகமததேர்பரியானையாட்படைபண்ணுமினென்றே
வீரடால்கொண்டசித்ரகேசரியும்விழிசிவந்தனற்பொறிவிளங்கக்
கோடாகையினேறெழுந்தொருதேர்மேற்கொண்டனன்கண்டவர்வெருவி
நேரிடாதொதுங்கடந்தனனனந்தனெளித்திடறலைப்பனிப்பெய்த. (ரு)

தந்திகடிரண்டமுகிலெனத்தேர்கடடவரைக்குலமெனத்திரண்ட
கந்துகந்திரண்டகடற்படுதிரைபோற்கணமீனினமெனக்காலாட்
பந்திகடிரண்டபடைக்கலத்தொகுதிபைம்பொழிலெத்தனைகோடி
தந்தபூந்துணர்காய்கனியிலைகிளைபோற்றிரண்டனதராதலமெங்கும். (௬)

இரவியுமதியுமிருளொடுபகலென்றிருபகுப்பின்றியேயொன்றாய்ப்
பொருவினதென்னபுதுமையென்றெவரும்புந்திநின்றலமரநிழறந்
திருவிசும்பகலமுழுவதுஞ்சுடர்விட்டெரிகதிர்க்கவிகையுங்கொடியும்
பரவிணைகவரிக்காடுபோற்கடலின்பாய்திரைக்குலமெனப்பரந்த. (௭)

விண்ணகந்தடவிநிவர்ந்தபொற்கொடிஞ்சித்தேர்நிரைமிளிர்வனசுடர்கள்
கண்ணகனுலகமுழுவதும்புதைத்தகாரிருட்பிழம்பையுண்டிரவி
யெண்ணறுங்கதிர்கள்விடுப்பனகடுப்பவிதிலுறுபரித்துகையதின்வாய்ப்
பண்ணமைகலினப்பசும்பரிபுரைந்துபாய்வனவாயுமெய்பதைப்ப. (௮)

அம்பரந்தடவியாடுபொற்கொடிகளனந்தனுயிரந்தலைக்கிடந்த
விம்பர்வாழல்கைதுணங்கைகொண்டடங்காதெரிபசியாற்றுதற்குகந்து
நம்பியைச்சூழக்கவிவதுபோலுநாற்பெருந்திசையினுங்காட்டத்
தும்பியின்குழாங்கள்பதாதியங்கடலிற்சூழ்முகினிரையெனத்தோன்ற. (௯)

தேர்செலுமோதைமால்கரிமுழக்கஞ்செழும்பரியொலிப்புவாண்மறவர்
வார்கழற்றமரந்திரண்டனமகராலயத்தினும்வான்முடிகுலவுங்
காரினுமதிர்ச்சிபிறந்தனதிசையின்காவலர்சிரம்பொதிரெறிந்தார்
மேருவின்சிகரங்குலுங்கினவிமையோர்விழிமுகிழ்த்தோடினர்வெருவி. (௧௦)

சங்குவார்முரசுபேரிகைகிடுகுதக்கைகைத்துடிதவில்சகடை
மங்குலின்முழங்கத்தாளவெண்கவிகைமதிநிலவெறிப்பவெண்கவரி
யெங்கணுமிரட்டப்பீலிகாளாசியிடையிடைநெருங்கவெஞ்சேனை [த்த.
பொங்குசாகரம்போலொலித்தனதுகள்போய்ப்பொலிகதிருடலினைப்புதை

ஒத்தனவலியுஞ்செய்கையும்பேச்சுமுள்ளனசமனிலைபடைத்த
சித்திரத்தேராயிரங்கோடிதிரண்டனரதிரதர்செறிந்தார்
மத்தமாவனையவீரரெண்ணிறந்தோர்மருங்கினிற்றுவன்றினர்மழைபோ
லெத்திசையினும்பல்லியந்துவைத்தேங்கவெழுந்தனபெரும்படையீட்டம்.

மந்திரிகளிலேதந்திரன்றன்னைமகற்குறுதுணைசெலப்பணித்து
முந்தினபுதல்வர்தனினடுமகனைமுகமனோடுடன்றுணையாக்கிக்
சந்துகங்கரிதேராட்படைதுவசங்கவிகைசாமரம்பலபவுஞ்சுஞ்
சிந்தையினினைத்தபடியெலாமேகச்செலுத்தினன்றனித்தனிதிரட்டி. (௧௩)

சித்ரகேசரியுநடுமகனானசிங்கனுஞ்சங்கையில்லாத
மத்தகமதமாவாம்பரிமணித்தேர்வரிப்புலியனையவாண்மறவ
ரொத்துடனாகமாநகர்வீதியிடம்பெறாதொல்லையிலேகிச்
சத்திரநீழல்விரிஞ்சர்கோன்மருகனின்றுழிவடதிசைச்சார்ந்தார். (௧௪)

மலையமாதவன்முன்னுவரிநீர்முழுதும்வாய்மடுத்தருள்கொடுபின்னு
நிலதிசைவிடுத்தவாறுபோனகரநெடுமதில்வாயிலூடுமிழ்ந்த
குலமணித்தேர்குஞ்சரம்பரிகாலாட்குடைகொடிசாமரத்தொகுதி
பலதிசைமுகத்துமொருதிசைமுகமாய்ப்படர்வதுகண்டனர்பகைவர். (கரு)

ஆயிரங்கோடிதேரினுக்கொருதோரதவன்றேர்நிகர்த்ததின்பாற்
பாயொளிமதியின்விமானமொத்தொருதேர்மீதினும்பலபடைதாங்கி
நாயகரிருவரெதிர்ந்தனரிவர்கள்யாவர்நீநவிலுதிசமர்த்த
வேயெனுமளவிலெனப்புவனேந்திரனிசைத்தசொற்கேட்டிவையிசைப்பான்.

தேர்மிசைமஞ்ஞைக்கொடிவிரித்துநிற்போன்சித்திரகேசரியவன்றன்
சார்பினிற்றுவசவேோதியன்சிங்கனிவனடுத்தமையணிங்கிவர்கள்
பேர்சொலிற்புவனமூன்றினும்பால்வேட்டமுஞ்சிறுபிள்ளைவாயடங்கு
மாரினியிவர்தம்வீரமும்விளைவுமறிந்தமராற்றுதற்காவார். (கள)

ஐயநின்கைவில்லலதுநின்னமைச்சனருஞ்சிலையாசுகமலதிங்
செய்வலிக்குறியார்யாவரென்றிசைப்பேமெனப்புகல்சமர்த்தனை நோக்கிச்
செய்வலிப்புவனேந்திரனிளமுறுவற்செய்துபின்மாதுலன்றன்னை
வெய்யநின்படையோடருகுநின்றெமதுவிற்றொழில்காண்மின்களம்மா. ()

எனவிவன்புகல்போழ்தயில்கடந்தமர்க்காங்கெய்தியதுணைவனுந்தானு
மனவலிப்படையும்போர்க்களங்குறுகிமாடுறுசாரணர்தம்மை
நனிதுநீராய்ந்தமட்டிலுமிவரைநவிலுதிர்விரைந்தெனப்பலசால்
வினவலும்பதமேற்பணிந்துவாய்புதைத்தேவிளம்புவார்விவரமாய்விரித்து.

இந்திரஞாலத்தேரினுஞ்சிறந்ததேரினிலிந்திரன்புரவி
பிந்திடவாயுமனநிலைபடைத்தபெரும்பரியிரண்டுகொண்டிருந்த
சுந்திரவில்லிதிருப்புவனேந்திரனருகினிற்றோழமைநீங்காத்
தந்திரன்புத்திசிகாமணிமாமன்நவமணிபின்னின்றதக்கோர். (உ0)

ஈங்கவர்பெருமைநுவல்வதற்கடங்காயினுமிறைவருங்கரத்திற்
றுங்கியவரிவிலாவரிக்கிலக்குத்தப்பிடார்சரதமென்றுறுதி
நாங்களுணர்ந்தோமென்றுதஞ்சென்னிநாயகர்பதமலர்பொருத்திப்
பாங்கினிற்பணிந்தார்சித்ரகேசரியுஞ்சிங்கனும்பரிவுகூர்ந்துவப்ப. (உக)

ஒற்றர்கள்புகலுமளவையிலிரண்டுபாலினுமுளபெரும்படைக
டெற்றியொன்றொன்றோடிடித்தனவடித்ததெரித்தனவரிச்சிலைப்பகழி
மற்றுளதண்டுபிண்டிவேல்சூலமழுக்கவண்டிகிரிவாண்முதலா
யுற்றனபடைகளெடுத்தனவீசியுடற்றினவுருத்தனவொலித்தே. (உஉ)

கரியொடுகரிமுட்டினபரிபரியோடருஞ்சமர்கலந்தனவுயர்வான்
கிரியெனக்கொடிஞ்சித்தேரொடுதேருங்கிட்டினமட்டறுபூசல்
புரிபடைக்கலங்கொண்டாளினோடாள்கள்பொருதினமுறைமுறையோசை
விரிதெங்கெட்டிசைகளெட்டினும்பரவிவிபுத ்தஞ்செ ்த்துணையலைத்த. (உங)

வேறு

மோதல்கொண்டுதொடர்ந்துநடந்தனர்மூரிவெஞ்சிலைநாண்குழையக்கணை
வாதுகொண்டுதொடுத்துவிடுத்தனர்வாள்கவண்கதைவீசியெதிர்த்தனர்
காதுகொண்டடியூதைகிளப்பியகார்வயக்கரிதேர்பரியாளொடு
தீதுகொண்டுடலங்கிழியத்தலைசிந்தவிந்திரனுர்படைநொந்ததே. (௨௪)

மண்டுகைச்சிலைகொண்டெறிநாணொலிமண்டியண்டமிடிந்துபொடிந்தெழு
கொண்டலுங்குலையக்கணைமாமழைகொண்டுடற்றிநெடும்படையாளுடற்
றுண்டைமண்டைநெறிந்துருளக்குடருங்கவெங்குருதிக்கடலெங்கணு
முண்டுபேய்நடனம்புரியப்பயந்தோடினர்விசையன்படையாளரோ. (௨௫)

தன்பெரும்படைசாய்ந்துபுறங்கொடுதானிடைந்தமைகண்டொருதேர்மிசை
மின்பெரும்புயலிந்திரவில்லொடுமேவிவந்தமரம்பொருதாலெனப்
பொன்பெருஞ்சயிலக்கையில்விற்குதைபூட்டிநாணொலிகாட்டியடுங்கணை
யொன்பதேவினன்மந்திரிதந்திரனுற்றமேவலர்கண்டுளமுட்கவே. (௨௬)

பின்னுமெத்தனையெத்தனையாயிரகோடிகோடிபெரும்பகழித்தொகை
யுன்னுமாறரிதென்னநெடுஞ்சிலையொன்றினுழிகையொன்றினில்வான்மழை
யென்னவீசியதிர்த்திருகட்பொறியெங்கும்வீசிநடுங்கமடங்கலின்
முன்னைநின்றமராடினனர்தாமுற்றசெங்கதிரும்மிருண்மூடவே. (௨௭)

தந்தியுக்கனதேர்களுடைந்தனதாவுபாடலமுந்துகளாயின
சிந்திமூளைசொரிந்தனவாள்படைசேரவுங்கரியாகியிடுங்கனல்
வெந்துவெம்புகைநீடினபேரொலிவிம்மிவானகமெங்குமிடைந்தன
பந்திகொண்டுகவந்தநடந்தனபந்தலிற்பலபுட்கள்பறந்தன. (௨௮)

வாள்கவண்கதைகொண்டுசுழற்றியவல்லபங்களிழந்துநெடுந்தலை
மூளைசிந்தநொறுங்கிவிழுந்துவிண்மூடிவெம்பிணமாகியவெம்படை
யாளருங்கரிதேர்பரிநந்தியவாகுலம்பெரிதானதுணர்ந்துள
மூளும்வெஞ்சினமண்டுசமர்த்தனுமோகரித்தவன்மீதமர்முந்தினன். (௨௯)

இங்குநின்றபெரும்படையாவையுமென்கண்முன்றுணிசெய்தனைநின்வலி
பங்கமெய்தநெடுந்தலையைச்சிலைபாய்கணைக்கிரையாக்குவனென்றனல்
பொங்குவெங்கணராவெனவங்கொருபூதரம்புரைபாரவரித்தவர்
செங்கைகொண்டுருமேறெனநாணொலிசெய்துசெஞ்சரமாமழைசிந்தியே. ()

சுற்றிநின்றபடைக்கடலைப்பெருஞ்சூறைமாருதமோதிடவேதுக
ளுற்றபஞ்செனவூதியிமைக்குமுன்னோங்குதேர்பரிபாகுமணிக்கொடி
யற்றுமண்மிசைமீளவிடுத்தவனங்கைவிற்றுணிசெய்துபின்னோர்கணை
நெற்றியிற்படவெய்தனனிங்கவனேர்சொலப்படுமோவொருவீரரை. (௩௧)

மாறுதேரினிலேறிநெடுங்கிரிமானும்வெஞ்சிலைகோலிமுனைக்கணை
நூறுநூறுதொடுத்தவன்வெம்படைநூறியங்கவனேறியதேரையோ
ராறுசந்திரவாளியினாற்பொடியாக்கிவில்லையொடித்துமுடித்தலை
கூறுசெய்குவனின்மினெனத்துடிகொண்டுதந்திரனும்முரைகூறியே. (௩௨)

வாசிசாரதியற்றுநெடுங்கையில்வாங்குவெஞ்சிலையுங்கணையும்பொடித்
தூசியற்றடியிற்றுமுடிக்கொடிதுட்கிளம்பிடநெட்டமைதட்டுக
ளாசுவிட்டுருடேருடைபட்டுமெய்யாகுலத்துடனோடைவடிக்கணை
வீசநொந்துமனந்தளாவெய்தினன்வெங்கொடாவலிமேவுசமர்த்தனே. (ருரு)

சிங்கமென்னமுழங்கிநெடுஞ்சிலைசெங்கைகொண்டதளாதிபனுஞ்சா
மெங்கணும்படவீசியெதிர்ந்தவர்யாவருந்துகளாகிமடிந்தொரு
பங்கமெய்தமுனைந்துநெடுஞ்சமர்பண்ணிவந்தையுசந்தருளச்செய
சங்கமூதினனண்டமுடைந்தொலிதந்ததென்றுவிண்ணோர்புறமோடவே. ( )

வச்சிரக்கணைநான்குவிடுத்துமுன்வந்தெதிர்த்ததளாதிபன்வாங்கிய
கைச்சிலைக்குதையைத்துணிசெய்தணிகட்டுகொய்யுளைமாவொடுதேருரு
ளச்சைவெட்டிமுறித்தவன்மெய்த்துளையாடிஞான்றதிவெள்ளமெனச்செறி
பச்சிரத்தமிகுத்தொழுகக்களைபற்றிமூர்ச்சையடைந்துபதைத்தனன். (ருரு)

கண்டுநெஞ்சமழன்றுசிவந்திருகண்கள்சிந்துகனற்பொறியெங்கணு
மண்டஇனமுசுழன்றுநெடுஞ்சிலைவாங்கிமீசைமுறுக்கிமுனைந்தெதிர்
கொண்டன்மாமழைபெய்தனவாளிகள்கொண்டுதந்திரனைச்சமர்வேதனை
யுண்டுபுண்படமீண்டமராடினனெல்கின்றசமர்த்தனுருத்தரோ. (ருசு)

பின்னையெத்தனையெத்தனைகாய்கணைபெய்துபெய்துதனக்கெதிரானவர்
சென்னியெத்தனையெத்தனையோபொடிசெய்துசெய்துகடக்கரிந்தர்பரி
தன்னையெத்தனையெத்தனைகூறுகடான்படப்புரிவித்தனன்மற்றிவன் [ஞன்
முன்னையெத்தனையெத்தனைபோர்தொறுமூண்டமன்னர்முகங்கள்கலக்கி

வில்விழந்தனர்வாசியிழந்தனர்வெங்கண்யானைரதங்களிழந்தனர்
மல்விழந்தனர்செங்கையிழந்தனர்வார்கழற்றுணைமுற்றுமிழந்தனர்
சொல்விழந்தனர்பல்லொடுநெற்றலைதுள்ளியோடிடவோடினராருயி
ரல்விழந்தபகற்படுசந்திரனுகினர்விசையன்படையாளரே. (ருஅ)

வேறு

சுடர்முடித்தாருந்தேருந்துரகமும்பாகர்தாமுங்
கடகரிக்குலமுஞ்செம்பொற்கவரியுங்கதிர்செய்முத்தின்
குடைகளுங்கொடியுஞ்சிந்திக்குருதிநீரற்றின்கொள்ளைப்
படைமுழுதும்பாய்ந்துசிவந்ததுபரிதிமான. (ருக)

தேரற்றார்பரிகளற்றார்சிலையற்றார்சரங்களற்றார்
தாரற்றார்தலையுமற்றார்தலைவராய்வந்தோரெல்லாம்
போரற்றார்பூசன்மாருப்பெரும்படையீட்டமெல்லாம்
போரற்றாருதவீரச்சமர்த்தனும்புலிமுன்புக்கு. (சு0)

வானமுந்திசையும்பாருமலைகளுங்கடலுமற்றைக்
கானமுமிடம்பெருதென்றுரைதாக்களமேனின்ற
மானமாப்படைகண்முற்றுமானம்விட்டாவிநீங்கி
யூனமாயினதேகண்டாரும்பருமுளநொந்தேங்க. (சுக

கைப்படுகணையாற்சேனை முழுவதுமு திரங்கான்று
பொய்ப்படுபுவிவிட்டென் றுமெய்ப்படுமுலகம்புக்க
நெய்ப்படுநெருப்பிற்காந்தித் தந்திரானிமிர்ந்தசீற்றப்
பைப்படுபாம்பிற்சீறிப்பருஞ்சிலைப்பகழி தூர்த்தே. (சஉ)

ஏரிருதேரையானைத்திரளினைப்பரியீட்டத்தை
வீரரைவிருதைச்செம்பொற்கவரியைக்குடையைவீழ்த்தி
யோரொருபகழிக்கோரோராயிரமுடைந்துசிந்தப்
பாரொருபத்துநான்கும்பயப்படநடுக்கியார்த்தான். (சரு)

இலையறுத்தலகுகூட்டியிருமுனைநீட்டிவாய்ந்த
கொலையறுத்திடுகூர்வாளியேழொருதொடையிற்கோத்துச்
சிலையறுத்தேறிவந்ததோறுத்தருகுசூழ்ந்தோர்
தலையறுத்தோடவிட்டான்சமர்த்தனைச்சரமொன்றாலே. (சச)

சேகரப்படைகண்முற்றுஞ்சிதைபடத்திண்டேருரும்
பாகனும்பரியும்பொன்றப்பாழ்படுத்தம்பொன்றாலே
வாகினித்தலைவனைதளாதிபன்மயங்கிவீழ
மோகரிப்போடுதந்திரன்கோளரிமுழக்கஞ்செய்தான். (சரு)

படைபொருதலைவரானவிருவிரும்படையும்போரிற்
கடைபடுமொருவனுண்மைக்கஞ்சிவெங்காலாலெற்றுண்
டுடைபடுமுவரிநீர்போலோடுவதுற்றுநோக்கித்
தடைபடாப்பாந்தள்போலுநவமணிதடந்தேர்தூண்டி. (சசு)

சிலைவலிபரப்பிவிண்ணோர்சிரம்பொதிரெறியத்திக்கின்
நிலைவலிக்கயங்கணெஞ்சமஞ்சிடநிலத்தைத்தாங்கும்
தலைவலிச்சேடனின்றுதவிப்புறச்சரங்கள்கோடிக்
கொலைவலிகொடுக்கவெய்தானிடிமழைக்கொண்டல்போலும். (சஎ)

தேரொடுதேருமுட்டச்சிலையொடுசிலையுந்தட்டத்
தாரொடுதாருங்கிட்டச்சமைத்திருமதிவல்லோருங்
காரொடுகார்கள்சேர்ந்துகடலொடுகடலைவாரிப்
பாரொடுபாரைத்தூர்க்கும்பான்மைபோற்பகழிதூர்த்தே. (சஅ)

தாளினுமார்பின்மீதுந்தலையினுந்தனிப்பொற்குன்றத்
தோளினுங்குருதிவெள்ளஞ்சொரிதரத்துளக்கமின்றி
மீளியொத்திருவர்வில்லும்வளைந்துவிண்பிறைபோனிற்ப
வாளியெத்தனையோவீசிவன்சமராடல்கண்டார். (சக)

ஒருவரோடொருவர்செய்யும்பூசலினிடையேயுற்ற
விருவர்தம்படையுஞ்சிந்திமிரிந்தனவிறுதிநாளிற்
பொருபுவியடங்கநுங்கிமேற்கிளர்புணரிபோலு
மருவினவுதிரமாரிவானினுமுதிரமாறி. (ருo)

மந்திரிகளிலேதந்திரனென்றுசொன்மதிப்புக்கேற்ப
வந்தமர்புரிந்தாயெங்கடலைவரும்படையுமாழ்கச்
சிந்தியவுனதுவீரச்சேவகமுழுதுஞ்சிந்திப்
பிந்திமற்றவரைச்செய்தென்பெருவல்பெறுகிற்பேனால். (௫௧)

பாரெனவிரண்டுகோடிபாணம்விட்டவன்பாற்சூழ்ந்து
போரெனவந்தவீரர்புயமென்னபுயத்திற்றாங்குந்
தாரெனகவசமென்னத்தலையெனத்துணிசெய்வித்தான்
நேரெனக்காணவந்தோர்க்கினதெனநிலையாவண்ணம். (௫௨)

இருகணைபுயத்திற்கொண்டாங்கெழுதிமற்றவன்றனெற்றிக்
கொருகணைகுதைமட்டேறவோட்டிப்பின்னேழுவாங்கிப்
பருதிவெஞ்சுடர்கள்போலும்பாப்பினான்பரியைக்கொல்வித்
தருணனேர்பாகன்றன்னையாருயிரழித்தவன்றே. (௫௩)

நன்றுநன்றுனதுவிற்போர்நவமணிநீயேகண்டே
னென்றுதந்திரனுஞ்சிறிவேறொருதேர்மேலேறி
நின்றிமைத்திடமுன்வாளிநிரைநிரைநிரப்பிநின்னைக்
கொன்றுயற்றுனதுமன்னர்கோறலுங்காண்பேனென்னா. (௫௪)

காய்கணைநான்கினாற்கந்துகங்களைக்கொல்வித்தப்பான்
மேயசாரதியையொற்றைக்கணையினாற்றலையைவீட்டி
நாயகன்விற்போராண்மைக்கிவனெனுநலமேற்கொண்ட
தூயதந்திரனுமன்னான்வில்லையுந்துணிசெய்வித்தான். (௫௫)

வில்லிவனிழந்தானென்றுவிழியிமையெழாததேவர்
சொல்விழந்திடற்குமுன்னந்தொடுசிலைவாங்கிவேறோ
ரெல்லிழவாதசேமத்தேர்தெரிந்தேறிவல்லை
மல்லிழவாததிண்டோணவமணிமானமிக்கு. (௫௬)

வடிக்கணையொன்றாற்பூட்டும்வாம்பரிமணித்தேர்தேரின்
கொடிக்குலம்பாகன்றாணிகொடுஞ்சிலையம்புகையி
னொடிக்குமுன்வேறுவேறுநொறுக்கித்தந்திரனுமாய
மிடுக்கினாற்சரமொன்றெய்தானவன்றலையற்றுவீழ்ந்தான். (௫௭

தந்திரன்பட்டான்சூழ்ந்ததானையுந்தலைவர்தாமும்
வெந்திறமழிந்துமாண்டார்வெங்களத்தலகைநாய்பேய்
பந்திகொண்டுதிரமாந்திப்பாடிடப்பகைமேற்பின்னு
மந்திரித்தலைவனானநவமணிமுனிவுமாறான். (௫௮)

சித்ரகேசரிமேற்றேர்மேற்சிங்கன்மேற்சங்கையின்றிப்
பத்திருநான்குகோடிபாணம்விட்டருகுசூழ்ந்த
வத்தனைபடைகண்மீதுமொன்றினுக்கனந்தமாக
வெத்தனைகோடிகோடியேவினானிமைக்குமுன்னம். (௫௯)

கண்டனரிருவர்கண்ணுங்கனற்பொறிகதுவச்சீற்றங்
கொண்டனர்கூற்றுங்காற்றுங்கூடிநின்றடுபோராற்ற
மண்டுதல்போலுந்தத்தம்மணித்தடமுனைத்தேர்தூண்டித்
திண்டிறற்சிங்கன்சித்ரகேசரிசெறுக்கண்வேட்டார். (சுO)

வாங்கினார்வரிவின்னாணிமாட்டினார்விரலிற்சோதை
தாங்கினார்சிறுநாணோசைதாக்கினார்பாக்கியின்றி
யேங்கினார்புவனத்துள்ளோரிமையவரிரியப்போனார்
நீங்கினார்மூவர்தத்தம்யோகத்தினிலையினின்றே. (சுக)

கரித்தலையவர்சென்னிதேர்த்தலைகாலிற்றாவும்
பரித்தலைதெரியாவண்ணம்பறித்தலைப்பகழிமுன்னீர்
விரித்தலைப்புவனமெல்லாம்வியத்தலைக்கருதச்சிந்தி
வரித்தலையரவம்போலும்மலைத்தலைவரித்துநின்றார். (சுஉ)

பட்டகானுலவைவெந்தீப்படுதல்போலுடலமெல்லாந்
தொட்டவெம்பகழிபாய்ந்துசுட்டிடக்கெட்டுள்ளாவி
விட்டனர்நெட்டுநெட்டாய்விழுந்தனபிணத்தின்குப்பை
முட்டினபருதித்தேர்க்காறடுத்துவிண்முகடுமுட்ட. (சுங)

சிங்கனும்பகழியொன்றால்நவமணிசிலையிற்கோத்த
சங்கபத்திரங்கண்முற்றுங்கரிந்துசக்கடிந்துவான
மெங்கணும்பருவகாலமழையினுமிடைவிடாமற்
புங்கநீர்பொழிந்தானஞ்சிப்புறங்கொடுத்தொதுங்கிப்போனான். (சுச)

கடகரிதுமிந்தவாவுங்கந்துகந்துமிந்தசெம்பொற்
குடைநிரைதுமிந்தநீண்டகொடிக்குலந்துமிந்தவீரர்
விடுபடைதுமிந்தவன்னார்விரிமணிச்சதங்கைகொஞ்சு
மடியொடுமுடியுமெய்யுந்துமிந்துயிர்துமிந்ததம்மா. (சுரு)

இருசிலையிருவர்செங்கையிரண்டினுமெய்யும்வாளி
பொருபுவிமூன்றுநான்குதிசையினும்பூதமைந்து
மருவியதோற்றமாறொன்றாயினவாறுபோலப்
பெருமைகொண்டடங்காதெண்ணுற்றார்ந்தனபீடுதோன்ற. (சுசு)

நின்றிடிற்சாய்க்குஞ்சாய்ந்தோர்தலையினைநிமிர்க்கும்பாரிற்
பொன்றிடிலுய்வுகாட்டுமுய்வெனிற்பொன்றல்காட்டும்
வென்றிடிற்றோல்வியாக்குந்தோல்வியேல்வென்றிகொள்ளு
மன்றவர்விடுக்கும்பாணசாலங்களறிதற்காற்றா. (சுஎ)

தலைவரிற்பெருமைவாய்ந்தசமர்த்தனைச்சாமொன்றாலே
நிலைதளர்ந்தோடச்சாடிநின்றெதிர்பொருதச்செங்கைச்
சிலையெடுத்தவரையெல்லாஞ்சிதைபடச்சேறுசெய்து
கொலைபடுத்தடுபோராற்றுங்களமெலாங்குழம்புசெய்தான். (சுஅ)

தாள்குறைந்துடலம்விண்டுதலைநெறிந்தகலம்போழ்ந்து
தோளொடிந்துதிரமார்சொரியக்கையெடுத்தவேலும்
வாளும்விற்கவணுங்கோலும்வளைமழுமுசலந்தண்டுந்
தூளுந்தூசியுமாய்ப்பூளைகால்படத்தொலைந்ததொத்த. (௬௯)

அமர்த்தலையாற்றலேற்றாரவமணியகன்றன்வெற்றிச்
சமர்த்தனுஞ்சாமொன்றலேதன்னிலைதளர்வுற்றேய்ந்தான்
றமர்தலையினுநிக்குள்ளதளாதிபன்றனும்போனான்
கமர்தலையுகுத்தபால்போற்களமெலாங்கழிந்தசேனை. (௭௦)

உடற்பாம்மலைகளாகவுதிரமுங்கடல்களாகப்
படைக்கலங்கான்களாகப்படுகளப்பாரோரண்டத்
திடைப்படுமுலகம்போலுமிருந்தனதெரிந்தவேதன்
றடைப்படாச்சிருட்டியாவர்சமைத்ததென்றையஞ்சார. (௭௧)

பொருஞ்சினக்கடாகல்யானைமீதினிற்போர்வேட்டுற்று
வருஞ்சினமடங்கல்போலும்விரிஞ்சனுமலர்க்கணேக்கிப்
பெருஞ்சிரிப்புளனுய்ச்செங்கைப்பிறங்குவிற்குழைந்துவாங்கி
வருஞ்சிறப்பொடுதேர்தூண்டிச்சிங்கனைமறித்தான்வந்து. (௭௨)

ஆடாவுனதுநாமம்யாதுகொலைதுநாளிந்தப்
போரடாகற்றாய்கின்போற்போர்புரிவீரரானோர்
வீரடால்விரித்தவெட்சிமிலைந்திடாதேகார்கண்டாய்
நோடாவென்றேயண்டங்குலுங்கிடவுரைகணேர்ந்தே. (௭௩)

ஒன்றிரண்டவைசெட்டித்தவோரிருநூறுவாளி
மின்றிரண்டனையவானத்தருமினுமதிரவீசிக்
குன்றிரண்டொளித்தபொற்றேடுளைபடக்குருதிக்கொள்ளை
சென்றிரண்டருகும்பாயச்சிலீமுகஞ்சிந்திமேன்மேல் (௭௪)

சிங்கனைச்சூழநின்றசேமத்தேரொழியவந்த
வெங்கயங்குதிரைபொற்றேர்வீரர்களீட்டம்வெங்கான்
செங்கனற்பட்டுநிறஞ்செய்கையிற்சிதைந்துமாயச்
சங்கமொன்றொலித்தான்மூன்றுபுவனமுந்தயங்கமன்னே. (௭௫)

சங்கத்தினொலியுமன்னான்றனிவினொலியும்வீசும்
புங்கத்தினொலியுஞ்செய்யும்போர்த்தொழில்வலியுநோக்கிச்
சிங்கத்தின்செயல்கொள்சிங்கன்சிறுநகைசெய்துமாது
பங்கத்தன்வரைவில்லன்னவில்லொலிபரப்பிச்சொல்வான். (௭௬)

பேர்தெரியாதுநின்றபேதையுன்பேருநின்றன்
காரிகைபெருங்கேட்டேனீசெயுங்கருமங்கேட்டேன்
போர்புரிவல்லமையொன்றும்புகுந்தெதிர்வினவிக்கேட்கப்
பார்மிசைவந்தசிங்கனெனப்பெயர்படைத்துளேனே. (௭௭)

வேண்டியவரங்களாற்றிமின்னிடையாளைப்பெற்றே
யாண்டகைதோற்றுநின்றவறிவிலியெவரும்பாரின்
மாண்டுபோவதுவும்மெய்யேயாயினுமகளைவேட்டோ
ரீண்டெவரென்பதோராதிறப்பதுதுணிந்தாய்பாவம். (௭௮)

சாகதீவுக்குவேந்தன்றையறன்மணத்தைவேட்டே
யேகமாய்வந்தமன்னர்தங்களிலென்றுதைச்கு
மோகமுற்றலங்கல்வேய்ந்தமுறைமைகண்டுளம்பொறாது
சேகரப்போர்செய்தாற்றாதோடினதிருவிலோனே. (௭௯)

அருமைமகன்மகடன்றாலியறுபடுமெனவோராது
மருமகற்பிழைக்கணேற்றுவந்தமர்க்குதவியானாய்
பெருமையிங்கிதுபோல்யாவர்பெறக்கிடைத்தவர்களென்று
வுருமினுமிடித்துச்சொன்னானசுநமழைபோலுய்ப்பான். (௮௦)

வல்லைநீயாகின்முன்னேவைத்தகான்மாறிடாது
நில்லுநில்லென்னவாளியைந்தொருநிரையிற்கோத்து
வில்லும்வில்லேவுமேவும்வெம்பரிபாகுந்தேருஞ்
சொல்லுமுன்கொல்லுங்கூற்றமிவையெனத்துணிசெய்வித்தான் (௮௧)

தனுவலங்காட்டிப்பின்னோர்சாத்தினாற்றரணிதாங்கும்
மனுமுறைவிரிஞ்சன்சென்னிவணைந்தபொன்மகுடநீக்கி
முனுமுடிபறித்திலங்கையரக்கனைமோதல்கொண்ட
வனுமனுக்கரசன்போலுமாவலங்கொட்டியார்த்தான். (௮௨)

வில்லொடுமௌலிநீத்தவிரிஞ்சனும்விளம்பாநின்ற
சொல்லொடுசெய்கைகுன்றச்சோர்ந்துளநாணமிக்கு
மல்லடுதிணிதோட்கேற்றமற்றொருமணித்தேரேறிக்
கொல்லடுபல்லவங்கள்குழுக்களாய்க்கோத்துவிட்டே. (௮௩)

ஏறியதேரைப்பாலகயிவுளியையெடுத்தவில்லை
நூறியங்கவன்றன்மெய்யினூறொருநூறுவாளி
பீறிநின்றுதிரங்கான்றப்பிலங்கொடுசெலுத்திநெற்றிக்
காறிருபாணமுய்த்துச்சிங்கனையலக்கண்கண்டான். (௮௪)

மற்றொருதேரிற்சிங்கன்மாறிநின்றடுபோராற்றுங்
கொற்றவர்குனித்துச்சங்கவெற்றியுங்குறித்துப்பாண
முற்றதிவ்வளவென்றில்லாதும்பாருவப்பச்சிந்தி
முற்றும்வெங்கோடைசாலக்கதிரெனமுனிவுகொண்டே. (௮௫)

துவசமுந்துரகத்தேருந்துணிபடமெய்யிற்பூட்டுங்
கவசமுங்கழியச்செம்பொற்கவரியுங்குடையும்வீழ்த்தி
யவசமாய்வெருட்டோடவடித்தனனலக்கண்வாய்ந்த
திவசமுற்றிடநின்றேங்குமுறைமைபோலுலகுந்தேம்ப. (௮௬)

தாதுலாதகோதைத்தானையுந்தலைவர்தாமு
மூதைவாய்நெருப்பினிட்டும்பொன்னெனவுருகிச்சாய்ந்த
வேதனைதீர்க்கும்வெற்றிவிளைவிக்கப்போர்மேற்சென்ற
மாதுலனேட்டங்கொண்டாற்படைபொரவல்லார்யாரே. (௮௭)

மருங்கினினின்றபுத்திசிகாமணிவதனநோக்கிப்
பெரும்படைகொண்டுவெல்லவந்துளபீடுந்தேசு
மொருக்குளகருமப்பாடுமெரிதரிதும்பர்க்கேனும்
வரும்புவியவர்கட்கேனும்வழுத்தவுமாட்சித்தாமோ. (௮௮)

விற்றொழில்வீரமில்லாவிரிஞ்சனைத்துணையாய்க்கொண்டு
செற்றநாம்வெல்லற்குற்றசின்மதியினிமேற்சிந்தை
யுற்றிருந்தாய்தலாலென்னூதியங்கிடக்கநீயும்
பொற்றடநெடுந்தேரீண்டுத்தூண்டுதிபோர்மேலென்றான். (௮௯)

அரசர்கோன்புகலப்புத்திசிகாமணியரசேயென்ன
வுரைசெய்தாயிவர்கள்வாழ்வுக்கோங்குபோர்வலிக்குநேரார்
விரைசெறிகமலயோனிவிளம்பவுமுடியாவென்றால்
வரைசெய்தோள்விரிஞ்சன்மீதுகுற்றநாம்வகுக்கலாமோ. (௯௦)

இற்றதுபோகச்சேடமிருப்பதைமுழுதுஞ்சேர்த்துக்
கொற்றவரினதுமாமன்நவமணிதனையுங்கூட்டி
மற்றொருபுறத்தினிற்கவைத்துநாமடுபோராற்றல்
வெற்றியுமழகுமென்றான்வருபொருள்விநயமோர்வான். (௯௧)

நன்றெனவுந்தான்மாமன்நவமணியிவர்கட்கூவிப்
பொன்றினதொழியப்பொன்றாதிருந்தபொற்படையைக்கூட்டி
யின்றுநீர்வெருவலூதெம்விற்றொழிலிருந்துகாண்மி
னென்றுரைபுகன்றான்கேட்டான்விரிஞ்சர்கோனுணமெய்தா. (௯௨)

சொன்முறைநின்றார்புத்திசிகாமணிதுணைத்தேர்தூண்டக்
கன்முறைவயிரத்திண்டோட்சுமந்தவிற்கையில்வாங்கிக்
கொன்முறைவாளிதூற்றிக்கோளரியென்னச்சென்றான்
மன்முறைநெறியிற்கோடாமனுமுறைவந்தவள்ளல். (௯௩)

இருவரும்யானைவேட்டாங்கெழுந்தகோளரிபோற்றெவ்வர்
வெருவுறவெதிர்த்தேன்றமளவில்வெவ்வரவைக்கண்ட
கருடனிற்களிப்புக்கொண்டார்காவலன்புதல்வரிங்குச்
செருவினிச்சரியென்றேந்துஞ்சிலைவளைத்தெதிர்த்துவந்தார். (௯௪)

போர்புவனேந்த்ரனுற்றப்புறப்பட்டானென்றலோடும்
பாரின்மேன்மாண்டமீண்டுற்பவித்தெழும்பரிசுபோலுஞ்
சீர்தரப்பரித்தேர்காலாள்செறிந்தனபம்பைதூரி
பேரிகைடமாரந்தக்கைபெருமழையிடிபோலார்த்த. (௯௫)

வில்லினர்வில்லாரோடுமிடைந்தனர்வீரங்கூசா
மல்லினர்மல்லாரோடுமலைந்தனர்படையில்லாதார்
கல்லினுமரத்தினானுங்கடாவினாரிதுக்கேலாதார்
சொல்லினுங்குதித்தலானுந்தோள்புடைகொட்டியார்த்தார். (௯௬)

ஏவியவேவுமேவுரிருமலைகடித்தொன்றொன்றோ
டோவலில்விசும்பைமுட்டியுகுந்தனபிறங்குசெந்தீ
காவுளபொருப்பினுள்ளகானுளவடங்கப்பற்றிப்
பூவுலகனைத்துந்தீய்த்துநாகர்வாழ்தலமும்புக்க. (௯௭)

இருதிறற்படையுமாலித்திருவிழிக்கனல்கள்சிந்தப்
பொருதிறற்படைகளோட்டிவாட்டினர்புரியும்வேலை
யொருதிறற்படையுமொவ்வாதிப்பெரும்படைக்கொன்றும்பர்
வருதிறற்படைகண்மேன்மேல்வழங்கினர்வரங்களோடும். (௯௮)

வேறு.

திக்குநாலினுமிருக்கும்வல்லிருள்சிதைத்துமேலொளிசெய்தினகர
ரொக்குமென்னுமுருள்பக்கமெங்கணுமுராய்ந்துபொன்கதிர்பரப்பிடத்
தக்கரத்தினமழுத்திமுத்தருகுதந்துபச்சைவயிடூரியந்
தொக்குபொற்குடமிருத்திநற்கொடிகடுன்னுதேர்பரிகடுண்டியே. (௯௯)

கார்முகங்குனிபடக்குழைத்துநெடுநாணினோசையெழுகடலெனப்
போர்முகங்கடொறுநின்றவீரரொருறுக்கிவன்சமர்பொரப்படாப்
பார்முகங்களின்மயங்கிமெய்பதைபதைத்திடச்செறியுயிர்ப்பினோ
டூர்முகம்புகுதவன்றொலித்தவொலியும்பர்நாடுமுலைவித்ததே. (௧00)

தேரினின்றுசிலர்கரியினின்றுசிலர்சிந்தினாருயிர்கணந்தியே
பாரினின்றுசிலர்பரியினின்றுசிலர்பட்டுலர்ந்தனர்களிஞ்சிரு
ழோரினுங்குருதிசொரியமாய்ந்தனர்களாண்மையீதகமுணர்ந்தவர்
போரினும்பொருதவேணுமென்றுளநினைக்கவுஞ்செயல்பொருந்துமோ. ()

வில்லொலித்தவொலிபோயடங்குமுன்விரிந்தகாரொலிகரந்தசீ
ரெல்வலிச்சுடரடங்குசங்கொலியெழுப்பினானவையினைந்தபார்
புல்லியந்தரசிரந்தரம்பரவியண்டகோளவரைபுக்கியே
கொல்புலிக்குலமெனத்தொனித்தபலகோடிகோடியுயிர்குறையவே. (௧0௨)

கழுகிறக்கைபலநிரைவிரித்துவலிகட்டுகோய்கணைகண்மட்டிலா
தெழுமுகிற்படலமழையெனப்பரவவெய்தவெய்ததிசையெங்கணு
மழிவுபட்டுளதுசேனையங்குருதியாறுபட்டுளதுபாரெலாம்
பழுதுபட்டுளதுபட்டிடாதபொருளுங்குலைந்ததிலைபாரவே. (௧0௩)

விண்ணினும்விசிகம்வெற்பினும்விசிகம்வெய்யகானினுமாத்தினும்
மண்ணினும்விசிகமானதிங்கெவர்செய்வல்லபங்களெனவெண்ணுவோ
ரெண்ணினும்விசிகமெண்ணியேயிவையெதிர்ந்துகாண்கவெனநண்ணு
வோர், கண்ணினும்விசிகமொய்த்துவெங்கனல்கள்சக்கியோடுபுகைகதுவின.

குதிரையைத்தலைதுரித்துமோதிவருகுஞ்சரங்கள்வதையுண்டுகொம
புதிரமுத்திரெண்டுபுரளவெட்டிமலையொக்குமொட்டிரதமிடறியங்
கெதிர்மலைப்பவர்கண்முடிதகர்த்துரிமிர்வானினுந்திசைகளெட்டினு
மதிர்படத்திருகியுலவுகின்றதிவனேவும்வாளியெனுமாளியே. (௪0௫)

வாயுவேகிமனவேகிவெங்கணைசுவங்கண்மன்னவர்முடித்தலை
தோயுமண்புழுதிபடமிதித்தடிதுவைத்துவாவுதல்கொடொழில்செயு
மேயதேரினுருளும்பிரிந்துநெறியெய்தியொன்னலரையெற்றியே
யாயுமாறரிதெனச்செலும்மதிவலானமைத்தகையமைப்பரோ. (௪0௬)

திருவிருந்தபுவனேந்திரன்செருவியற்றல்கண்டமரர்யாவரு
மருவிருந்ததமதங்கையான்மலர்களள்ளியாசிபலசொல்லியே
தருவிருந்தநிலையிலையெனப்புகறல்கொண்டுதூற்றினர்கடம்முளம்
பெருவிருந்தணவுதுய்த்துளாரினுமிகுக்குமன்புறுதல்பெற்றரோ. (௪0௭)

சிங்கமென்பவனையெய்திநின்றுசிறுநகைபுரிந்துமதுதந்தைதா
னெங்குளானவனையன்றியென்சினமுமென்கைவில்லின்முனைவாளியு
முங்கடன்மையினடங்குமோசிறியபிள்ளைகாளுயிரைவீணிலே
யிங்குநீவிரிழவாதுசெல்லுகநும்மாநகர்க்கெனவியம்பினான். (௪0௮)

நன்றுநன்றுனுரையென்றுகைத்தலமறைந்துபுன்னகைபுரிந்தவ
னின்றுநின்சிறியபருவநாங்கள்புகல்வோமெனக்கருதியோசொனாய்
வென்றிகொண்டுசெலுவீர்களுங்களுயிர்வீடுவோமிதுவுமெய்ம்மையா
மென்றசோதிடமறிந்துளீர்க்கெமதுவாளியென்புரியவல்லமோ. (௪0௯)

சித்திரம்பலபுதக்குதேரின்மிசையேறிவந்தபுவனேந்திரன்
வித்தையும்மெனதுசைத்தலத்திலுறுவில்லின்வல்லபமுமொல்லையின்
முத்தலத்தவருநின்றுகாண்கவிதமுற்றவிப்பெனமுனிவுகொண்
டத்திரத்தொகைதொடுத்தனன்புவியிலம்புராசிபொழியரியென. (௧௧0)

புயங்களிற்கணைகளாயிரங்கொடுபொருத்திநெற்றியிலொராயிரம்
வயங்கொளத்திருகியிவுள்சட்டுமனவாறுசெய்துமணிரதமிசை
யியங்கும்வெள்ளிடைகளினிற்கிடுமுனையாசுகங்கள்பலவேவினான்
சயங்கொளக்கருதிவந்தெதிர்த்தபுவனேந்திரன்சிறிதுதளர்வுற. (௧௧௧)

தொட்டவெங்கணையொரைந்துகொண்டுசமர்தன்னுசிங்கன்விடுகணையெலா
கட்டறத்துதிரவெட்டியொட்டியொருகணைகள்போலக்குகதிர்பெற [ங்
மட்டிலாதனவிடுத்தவன்கடவுவாவுதேர்ப்பரிகளின்றலை
வெட்டியச்சுகெடுவெட்டிமெய்க்கவசம்வெட்டிவிற்குதையும்வெட்டினான். ()

தோழிந்துபரியோடுமெய்க்கவசமுஞ்சினைதந்துசிலையுஞ்சிதைந்
தாழிந்துகிரணக்குலந்தகதிரோனையொத்தவசமாகியே
போழிந்துசிதைவானசிங்கன்மறுதேர்புகுந்துசமர்பொருதுமுன்
பாழிந்தெனமாடுநின்றரதம்யாவையும்பொடிபடுத்தினான். (௧௧௩)

முப்புவிக்குமொருவர்க்குமென்வலிமுடிந்திடாமலிதுநாள்வரை
யிப்புவிக்குளுயர்வெற்றிபெற்றபுகழியாவுமேயெளிதினின்கையி
லொப்புவிக்குமுறைகண்டவிற்றொழிலின்வல்லைநல்லையினியுன்றலை
தப்புவிக்கும்வகையில்லையென்றுவிசைகொண்டுதண்டமதையேவினான். ()

மாதிரத்தினொடுபூதரங்கணிலைமாறியந்தரமுமருகுறப்
பூதலத்தின்வலிமிக்குமீதில்வருபொழுதுகண்டுபுவனேந்திர
னேதுவிற்பகழியொன்றினிற்றுணிசெய்தாதிமற்றுமெழுபகழியாற்
பாதகப்பெரியசிங்கனைத்தலைதடிந்துநுண்பொடிபடுத்தினான். (ககரு)

அல்லினுக்குமதிபகலினுக்குமெழிலாதவன்மதனவடிவினான்
வில்லினுக்குமிகுவிசையன்மற்றுளவிதத்தினுக்குமுனைநாளுள
சொல்லினுக்குமுயர்வானவர்க்குமிகுதூய்மைவாய்ந்தபுவனேந்திரன்
புல்லினுக்குநிகரற்றசிங்கனெதிர்பொருதிவென்றதொருபுகழரோ. (ககசு)

சிங்கமன்னதொருசிங்கனைக்கொலைசெய்சிம்புளன்னபுவனேந்திர
னிங்குநின்றமரியற்றுகாலையயலேயெழுந்துபரிதேருட
னெங்கணுந்தடவிநின்றவீரர்முடியாவுமெற்றியொருநொடியினி
லங்குவந்துதமதிறைவனோடுதுணையாகினான்மதிவலாண்மையான். (ககஎ)

இருவரும்புரிவிலாண்மையுஞ்சமரிலெய்திநின்றவர்கடாழ்மையும்
பொருவருந்தமையனுயிரழிந்துபலபொருள்சிதைந்துளதொர்புதுமையு
மருவருங்குணநிறைந்தமேருநிகர்சித்ரகேசரிமலர்க்கணு [வான்.
லொருவருங்கொளவொணாதுகொண்டமுனிவோடுநோக்கியிவையுரைசெய்

என்கண்முன்னெனதுதமையனைக்கொலைபுரிந்துளோரிவர்கடம்மைநான்
வன்கணானவடிவாளிகொண்டுயிரைவாங்கிவிந்தைநடனஞ்செய
புன்கணுய்நரிகளுடலையுண்டுகளமுழுவதுங்களிபொருந்தவே
பொன்கணூருமலர்தும்பைசூடுதலலாதுமாநகர்புகேனென. (ககக)

வேறு.

மேருவரையைப்பொருவுதேரையவனுற்றுழிவிரைந்திடநடத்திமிர்கைப்
பாரவரிவிற்கடைகுனித்துமிராதெரிபரப்பிநொடியிற்பொடிபடப் [னி
போரொருகணப்பொழுதினுக்குண் முடிவிப்பனிதுபொன்னுலகினிற்புவியி
லாருமறிதற்கரிதெனப்பகழிவானின்மழைபாகுமெனவீசினனரோ. (கஉ0)

விண்ணகநிருண்டுசுடரோனொளிமறைந்தமரர்விஞ்சையரியக்கர்முனிவர்
கண்ணகமயங்கிநிலைபிற்றனரநற்பருவகாலமழைமாரியெனவே
யெண்ணரியகூர்முனைபொருந்துவிசிகங்கடிசையெங்கணுநெருங்கியினிமே
னண்ணுவதினுக்குமுலகங்களிலையென்றுசிலைநாரிதனிலும்படர்வுற. (கஉக)

அண்டமுகடும்வெடிபடக்கொடுமுடிக்கிரிகள்யாவுமுதிரக்கடல்களும்
மண்டலமுநின்றுசுழலக்கடையுகக்கனன்மருக்குறமருக்கமிலதோர்
சண்டனுடலும்பதைநின்றலம்வரப்பெரியசர்ப்பதலைவற்சுடிகையும்
விண்டுமணியுஞ்சிதறமற்றுளபொருட்டொகையுமம்முறைவிளிந்துவிழவே.

சித்திரவரிச்சிலைவளைத்ததிரதத்தவர்செலுத்துவயிரக்கணைகளுந்
தத்துபரிவீரர்களெடுத்துதவுசொட்டைவளைசக்கரமுதற்படைகளும்
மத்தகமதக்கரிநெடுங்கைமுசலங்களுமறித்தொருகாங்கொடிவனே
வித்திறும்விதைத்தனன்முளைத்தனதலைத்தலைமிகுத்தகுருதிப்புனலினே.

தேரர்பொடியச்சகடநீறுபடையானைபரிசிந்துதுகளாகியுதிரப்
பாரவரிவிற்குதையொடிந்துமருமங்கிழிபடத்தலைதணிந்துசிதறி
வீரர்படவெங்குருதியாறுகடலிற்றிரைமிகுந்தவனியெங்குநிறையப்
போர்முனைபுகுந்தபுவனேந்திரனெடும்படைகள்பொன்றியழிவுற்றனவரோ.

வெங்கரிபுரண்டுதலையற்றனகடும்பரிவிழுந்தனமுறிந்தவிரதஞ்
சங்கொலியடங்கினதடாரிபடகந்துடிதகர்ந்தனசிலைக்கைவயவர்
செங்குருதிவாய்வழிசொரிந்துயிரடங்கினர்சிதைந்தணிபுதைந்தபலவுங்
கங்கநாய்கழுதுவந்துணவருந்தினகவந்தநிறையுங்களமெலாம். (கஉரு)

பாருலகெலாம்பகழிபாதலமெலாம்பகழிபாமமணிதூவுதிரைசூழ்
வாருதியெலாம்பகழியாமலையெலாம்பகழிவானவருகந்துகுடிவாழ்
தாருலகெலாம்பகழிமாறடன்விதித்திடுதாரதலமெலாம்பகழியாய் [வே.
சேருறநிறைத்தனனநிற்றொருவரிற்செருகைநிகழ்த்துமுறையில்லையென

முப்புவனமுங்கடல்களுங்கிரிகளும்பகழிமூடியிருடென்னவமர
ரெப்புவியினிற்புகுதுமென்றனராமுப்புரமெரித்திடமுனித்துநகைசெ
யப்பணிசடைக்கடவுளிற்பொருதிமேலமரடர்த்தபலவீரர்முடிகள்
குப்புறவிழத்திருகினன்புயலினைச்சினவுகோளரியெனும்முனிவினன். ()

மாதுலனையாறகணையாலுடல்வருத்தியவன்மந்திரியையோர்கணையினன்
மோதியமருற்றவர்களைத்தலைநொறக்கிவழிமூளைதசையென்புகுருதி
பூதலமெலாம்பரவிவான்முகடளாவியபொருப்பினுநிவர்ந்துகுவியக்
காதிமுனிவோடுபுவனேந்திரனையுஞ்சமர்கடக்குநெறிகொண்டலசினன். ()

வேறு.

மேலடர்ந்ததம்படையைமாய்தல்செய்தசைவிலொடுமேவிவெஞ்சமம் பொருதியே, காலுறும்பயங்கொள்சாறுதைந்துமிஞ்சிவருகாளைதிண்புயங் களின்வலி, சாலவுந்தெரிந்துமுனிவோடுசொல்விளைந்துநகைதான்புரிந்து யாவுதல்செயா, பாலனென்றெனும்பரிவினல்வயங்குறைந்ததிதுபாவமென் றயர்ந்துருகியே. (கஉகூ)

சிக்கமென்றசின்றமையலுங்கலங்கவெல்றுசுவைதேடுகின்றதென்கை வரிவி, லிங்கிருந்ததுந்தெரிவை யெங்கண்முன்னைதிர்ந்துசமரெய்தவந்த தென்கொலெனவே, வங்கவன்றன்மெய்முழுவதுந்துரந்துநீள்குருதியாறு மண்டிடக்கதிர்செயும், புங்கமைம்பதொன்றுசிலவுந்துதைந்துவாயிதழ்பொரு ந்தசெங்கமுர்தொனிசெயா. (கஙூ0)

வானவில்லினுங்கமலமானதங்கையின்குலவுமாசிலங்கணைங்கொள்வரிவின்
மீனினம்கலந்தடனிரைமொண்டெழுந்தகருமேகமின்றதிர்ந்துபொழியும்
மானவம்பினும்பகழிமாரிசிந்தவம்பாமும்மாதிரங்களுங்கிரிகளு
நானிலங்களுங்குலையநாகரும்பயந்துபலநாடிநொந்திடைந்தனரரோ. (கஙூக)

பார்களாயிரங்கமர்களோடவண்டம்விண்டுவருபானுவுஞ்சுழன்றுதிரியத் [ம்
தேர்களாயிரங்களொருகோடிகொண்டடர்ந்துபலதேசமன்னரும்படைகளு
போர்களாயிரங்கள்விதமாசவும்பகிர்ந்துபொருபூசலும்புரிந்துசிதைவுற்
றூர்களாயிரந்தலைகளோடுமார்பகங்கள்பொடியாகியாசையுமழிதர. (௧௩௨)

சூலம்வாள்கவண்கல்சிலைகோல்குடாரிதண்டுமழுதோமரங்கலப்பைசுரிகை
வேல்படைக்கலங்கடிசைநாலுநின்றதிர்ந்துவிடுவீரரங்கமுந்துரங்கமுந்
தாலமெங்கணுந்தவிடுபோலுதிர்ந்தெழுந்தபொடிதாவியண்டமும்புதைபட
வாலமுண்டவன்றனொடுமாலுநின்றதொத்தமர்செய்தானமைச்சனென்னு
[மறிஞன். (௧௩௩)

வாவுபாடலங்கடலையோடவுந்துபாகன்முடிவாடவுந்தடிந்திரதமேன்
மேவுடால்குடங்கடவிடாய்நொறுங்கவாளியுருமேறினுமதிர்ந்துவிசிறாக்
கேவலம்படாதுசமராடல்குஞ்சரங்கண்மிசைகேசரந்திரிந்ததெனமெய்ந்
நாவிலங்கிடாதபுவனேந்த்ரமாநகர்க்கணிறைநாடியங்குநின்றிதுசெய்வான். ()

வேறு.

வைதாலெனசெய்வினையின்றெழில்கொள்வாளித்தொகையாயிரமாயிரமா
யெய்தான்மனதெய்த்திளையாவலிகொண்டிமையோர்களுமிந்திரசாலமிவன்
செய்தானெனவெண்ணுமுனேவிசையன்சிறுவன்றனையன்றியெதிர்ந்தவெ
லாங், கொய்தானிவனோடமர்யார்புரியக்கூசாதெதிர்நிற்றல்குறித்திடுவார்.

தேரும்பொடியாயினவாசிகளின்றிரளும்பொடியாயினவீரர்முடித்
தாரும்பொடியாயினதிண்புயமுந்தனுவும்பொடியாயினசிந்துமதக்
காரும்பொடியாயினபோரடுவெங்களமும்பொடியாயினமற்றுமுள
பேரும்பொடியாயினகண்டிவைதான்பேசும்படியோர்பொடிபெற்றவரார். ()

கடலொத்தனசோரிகளங்கதிலார்கலமொத்தனமுத்தமணிக்கவிகை
திடமொத்தனகாம்புகள்கூம்புகணேர்திகழ்வுற்றனநீடுமணிக்கொடிகள்
படமொத்தனமற்றுளதேற்றியதோர்பரமொத்தனசித்தமகிழ்ந்துதிரு
நடமொத்துநடித்தகவந்தமொடுநமனுந்துதிகொண்டுநலம்புகல. (௧௩௭)

கொடியற்றனதேர்கள்கடும்பரிகள்குடலற்றனமத்தகுலக்கரிக
ளடியற்றனகையொடுமெய்துணிவுற்றலமுற்றனசூடியவம்பொன்மணி
முடியற்றனமுத்தநெடுங்குடைகண்முறிபட்டனவெண்கவரித்தொகையும்
பொடிபட்டனபட்டழியாவுளவோபோர்பட்டநெடுங்களமும்புவியும். ()

வேறு.

ஆயிரங்கோடிசேமத்தேருகைத்தருகுசூழ்ந்த
நாயகரொழியமற்றைநால்வகைப்படையுமாண்டு
போயினதுணர்ந்துநெஞ்சமரவெனப்புழுங்கிச்செய்ய
வாயிதழ்துடிப்பவேர்வுபொடித்திடமலர்க்கண்சேப்ப. (௧௩௯)

கையறைந்துருமினக்கான்காவலர்முகங்கடோறு
செய்யெரிநெருப்பிற்சாந்திநோக்கினனீவிரெல்லா
மெய்தியிக்கென்செய்வித்தீர்மீண்டுநீர்நகருக்கேகிப்
பொய்யிடையவர்கட்கென்னைபுகலுவீர்போரின்வீரம். (கசo)

செங்கணற்பொறிகள்சிந்தச்சித்ரகேசரியுமன்னோர்
தங்களைச்சுழிந்துசண்டைக்குற்றநீர்தனுவினோடு
மிங்குவந்தவன்செய்விற்போர்க்கெதிர்பொரமுடியாதானீ
ருங்களைத்துணைக்கொண்டுற்றேற்கென்னலமுறுவதம்மா. (கசக)

ஒருவன்கையெடுத்தவில்லாலொருகணப்பொழுதினுள்ளே
பொருபடையினைத்தும்வெம்போர்க்களத்திடைப்பொன்றுவித்தான்
வருபடையினிமேற்கோடிவரினுங்கொல்விப்பானந்தோ
கருவினிலுயிருமாய்ப்பான்பகையெனக்கண்ணிற்காணில். (கசஉ)

எத்தனைபேர்களுறுமிவன்கையின்வின்முன்னின்று
சத்திரம்விடுதற்கஞ்சித்தலைமயக்குற்றேமானாற்
சித்திரைமதிவெங்கோடைத்தினகரனென்னக்காந்துஞ்
சத்துருநமக்குமுன்னலஞ்சுபுதகைமைத்தாமோ. (கசங)

நல்லதிங்கிவனேநானேநீவிர்கண்ணயர்ந்துநோக்கக்
கொல்லுவனென்னப்பொங்கிக்கொழுங்கடைப்புருவநெற்றிப்
புல்லமேலேறவிற்கால்வளைதரப்புரிநாணேற்றிச்
சொல்லுமுன்சோனைமேகமழையெனச்சொரிந்தான்வாளி. (கசச)

கொலைபடுவயிரவாளியொவ்வொருகோடிகொண்டு
சிலையினிற்கோத்துவாங்கித்தெறித்தனன்றேர்மேற்றார்மேற்
றலையின்மேலிடிவீழ்ந்தென்னத்தனித்தனிதகர்ந்துசோரி
மலைமுடியருவிபோலுஞ்சரிந்தனமருகுதோறும். (கசரு)

மத்தகம்பிளந்தயானைவாசிகாலறுந்ததேர்கள்
குத்தக்காலொடிந்தவீரர்குடலொடுதலைகள்சிந்திச்
செத்தனவுள்ளவெல்லாஞ்சிதைந்தனசேரமாண்டு
குத்திரமென்னவெம்போர்க்களமெலாங்குவிந்தகுப்பை. (கசசு)

அடுசரநூறுகொண்டுவிரிஞ்சனையலக்கண்செய்து
விடுசரமிரண்டுநூறுவனமணிதன்னைவென்று
படுசரமைந்தம்புத்திசிகாமணியுடலிற்பாய்ச்சித்
தொடுசரஞ்சொரிந்துசூழ்ந்தபடையெல்லாஞ்சூறையிட்டான். (கசஎ)

இன்னவாபுரியுமெல்லைசேமத்தேரூர்ந்தவீரர்
வன்னியும்வளியுஞ்சேர்ந்தவாறுபோலுடனுய்க்கூடிப்
பொன்னுடைமாக்கள்கைநூலச்சம்போற்பொகுத்துவாளி
சென்னியின்மார்பிற்றோளிற்சென்றிடச்சிந்தியார்த்தார். (கசஅ)

பொற்புவனேந்த்ரனென்னும்போர்மதக்களிற்றையன்றி
மற்பொருதவர்களெல்லாமயங்கினரனேகர்மாண்டார்
கற்பொருதடந்தோட்சித்ரகேசரிகைவில்வாளி
யற்புதமென்னத்தேவராவலங்கொட்டியார்த்தார். (௧௪௯)

நாமென்னவிற்போர்கற்றோநானிலந்தன்னின்மேனாட்
காமனும்புரமும்வேவக்கண்ணகைபரப்பினின்றோ
னாமிவனன்றிச்சொல்லற்கமைபடானென்றுநெஞ்சுட்
கோமகன்விரிஞ்சனாதியமைச்சரும்வியப்புக்கொண்டார். (௧௫௦)

முன்னவன்றன்னைக்கொன்றமுனிவினுமிரக்கங்கொண்டே
னுன்னையுஞ்சிறுவனென்றேயாதலானுனதுவித்தை
தன்னையென்பாலிற்காட்டிவிட்டனையினிமேற்றப்பா
தென்னுடைவாளிவாய்க்குன்றலைக்குறியென்னச்சீறி. (௧௫௧)

கைநொடிப்பளவிற்சித்ரகேசரிகைவிற்றன்னை
யெய்கணையொன்றால்வெட்டிப்பாகனையிவுளித்தேரை
நொய்யெனப்புடைத்துச்சூழ்ந்தநுவலருஞ்சேமத்தேரர்
மெய்யினுஞ்சாங்கண்மேன்மேல்வித்தினான்மின்னின்வீசி. (௧௫௨)

இற்றிலதென்னும்வேறோர்தேர்தெரிந்தேறிக்கையிற்
கொற்றவில்லொன்றுவாங்கிக்கொழுங்கடைப்புருவநெற்றி
முற்றிடமுனிந்துசித்ரகேசரிமுனைகொள்வாளி
புற்றராவென்னப்பொங்கிப்புரிவளைமுழக்கிச்சொல்வான். (௧௫௩)

அரசரிற்கடைப்பட்டந்தோவறிவிழந்தெளிமைகொண்டித்
தரைமிசையுன்போலெந்தத்தலத்திலும்வாழ்ந்தோரில்லை
மருவுநட்பிசந்துவேசைமயக்குகந்தெந்தையான்முன்
புரியும்வஞ்சனைக்குண்மாண்டுபிணமெனப்புதுப்போர்பூண்டாய். (௧௫௪)

மந்திரியிரக்கமுற்றுமாறினின்றனக்குமாவி
தந்திடமனுடனாகிச்சாம்பிணவதனமோடும்
வந்தமர்க்குற்றாயெல்லாமறந்தனைபோலுமென்னே
சிந்தையிற்களிப்புக்கொண்டிங்கெனைவசைசெப்புகின்றாய். (௧௫௫)

உமையொருபாகன்வேதன்மான்முதலும்பரெல்லா
மையரின்றனைக்காத்திங்காரமாற்றினாலுஞ்
சமையுமென்கைவில்லானின்றலைதமந்தென்முன்மாண்ட
கமைபடாத்துக்கமின்னேகளிக்குவன்சரதங்கண்டாய். (௧௫௬)

உன்னையுங்கொன்றுன்பாலுறவுபெற்றிருந்தநங்கை
தன்னையுங்கொடுபோய்த்தந்தைக்கருமணாஞ்சமைக்கின்றே
னென்னையுங்கொல்வாயானாலினியுளோர்தம்மைக்கொல்லப்
பின்னையுந்தடையொன்றுண்டோயிதுமெய்ம்மைபிழைபடாவால். ()

என்றுசொற்றவன்றன்மெய்யிலேவிஞனேவால்வேய்ந்த
குன்றெனக்குழுமக்கோடிகோடிமேற்கொண்டுகொண்டு
நின்றனதேரும்பாருந்திமிர்ந்திருள்படியவானத்
தென்றுளிகரப்பக்கண்டாங்கிமையவரிரியல்போக. (௧௫௮)

தோளிரண்டினுமிரண்டுசுடர்முனைப்பகழிபாய்ச்சி
நீளிரும்புயத்திலாறுநெடுங்கணைநிறுத்திப்பின்னும்
வேளினைவென்றபொற்பின்வீரன்வாணுதலிற்பட்டம்
வாளியொன்றாலேவெட்டிவலம்புரிமுழக்கஞ்செய்தான். (௧௫௯)

சற்றயர்ந்தவன்றன்விற்போர்தனக்குவப்புற்றவீரன்
கொற்றவிற்கொண்டுபாகன்குதிரைதேர்வரிவிலம்பு
முற்றினுந்தீர்த்தான்சித்ரகேசரிமுழுதுந்தன்கை
வெற்றியென்றொருதேரேறிவில்லொன்றுமடுக்கின்வாங்கி. (௧௬௦)

வாசவன்முகுந்தன்வேதன்வருந்தியுந்தேடிக்காணு
வீசனுற்றந்தவேலிங்கிதனைநின்றலைமேவினாறு
வீசுவன்வல்லையாகில்விலக்குகவென்னநெஞ்சாற்
பூசனைபுரிந்துவிட்டான்புற்றடைப்புயங்கம்போல்வான். (௧௬௧)

எழுந்ததுமழையுங்காற்றுமிடியுமின்னலுமாயெங்கும்
பொழிந்ததுபாம்பும்பேயும்பூதமும்பொலிவித்தின்றே
மொழிந்தமூவுலகுந்தீர்த்துமாறுமூவுலகென்றாலு
மழிந்திறச்செய்யுமென்னவதிர்ந்தண்டமுகடளாவி. (௧௬௨)

வருதலுமுணர்ந்தபுத்திசிகாமணிமன்னன்பாத
மிருகையாற்பரவியீசனீந்தவேலிதனையின்னே
யொருகையாலொடித்துவிட்டோனுயிரையுமுடிப்பேனெற்கு
வருதிதந்தருள்கவென்றானலதெனமதித்துநேர்ந்தான். (௧௬௩)

அஞ்செழுத்தமையவோதியாதியைம்முகனைப்போலு
நெஞ்செதிர்கொடுத்துநின்றானேர்பொரவந்தவேலு
மஞ்சினவலங்கொண்டேத்தியகன்றனவிமையோர்வாழ்த்தி
விஞ்சையிலிவனேயென்னவிளம்பினார்சொரிந்தார்மென்பூ. (௧௬௪)

சித்ரகேசரியும்புத்திசிகாமணிக்கஞ்சித்தீர்ந்த
சத்தியின்சத்திநோக்கித்தனிமைகொண்டிவனைநாமு
மெத்திறங்கொண்டுவெல்வதினியெனவெண்ணிப்பின்னும்
புத்தியிற்சலிப்பொன்றின்றிப்பொருவயப்புலிபோலார்த்தே. (௧௬௫)

வேன்முறிந்தனவென்றங்கியாவரும்விளம்பாமுன்னந்
தேன்முரிந்தெழுஞ்சொனல்லார்திருக்கெனமுருக்கும்வாளி
வான்மறைந்திருளவிட்டான்வனப்புவனேந்த்ரனென்னுங்
கோனறிந்ததனைமாற்றிக்கூன்பிறைக்கணையொன்றேவி. (௧௬௬)

வலவனைத்தடிந்தானேழுவடிச்சரம்பின்னுந்தொட்டுக்
குலமணிவயிரத்தேரினுருக்குலைத்தசுவந்தன்னைத்
தலையறுத்தாறுநான்குசரத்தினான்மார்பிற்பூட்டும்
விலைமணிக்கவசஞ்சிந்திவில்லையுந்துணிசெய்வித்தான். ௧௬௭)

வலவனும்பரியுந்தேருங்கவசமுமலர்க்கைதாங்குஞ்
சிலையுமற்றினிமேலென்னசெய்குவானென்றுசொல்லு
நிலைதலைக்கொண்டசித்ரகேசரிநெஞ்சமஞ்சான்
மலைதலைக்கொண்டுமற்றோர்மலைநிகர்வரிவில்வாங்கி. (௧௬௮)

அற்றதேர்த்தட்டினின்றுமணிபுவனேந்திரன்மெய்யி
லுற்றிடுமயிர்க்காறோறுஞ்சரநுளைத்துதிரப்போர்வை
பெற்றனனென்னச்சொல்லப்பெய்தனனிதற்குமுன்னங்
கற்றனவின்மையின்மையினியெனக்கையோயாதே. (௧௬௯)

பங்குனிமதியம்பூத்தபலாசநீள்வனம்போற்சோரி
யெங்கணுஞ்சொரியமேனியிருங்கடன்முகட்டிற்றோன்றுஞ்
செங்கதிரென்னநின்றதிருப்புவனேந்திரனென்னுஞ்
சிங்கமுமயங்கிநொய்திற்றேறிமேற்சினங்கொண்டார்த்தே. (௧௭௦)

வலக்கையுமிடதுகாலும்வடிக்கணையொன்றால்வாங்கி
யிலக்கமுந்தலைக்கென்றெண்ணியிருஞ்சரமமைக்குமேல்வைக்
கலக்கமில்லாதசித்ரகேசரிகைவாளேந்தி
நிலக்கணிற்குதித்தேயொற்றைக்கால்கொடுமலைபோனின்றே. (௧௭௧)

வீசினான்வீச்சுக்கோரோராயிரந்தலைகள்வீழ
வாசைகண்முழுதுங்குந்திக்குந்திமேலனிலந்தாக்கத்
தேசுறுகறங்குபோலத்திரிந்தெதிர்சூழாநின்ற
மூசுவாகினிகண்முற்றுமுடித்தனன்முடிவிலாமல். (௧௭௨)

உற்றதம்படைகண்முற்றுமுயிர்கவர்கூற்றம்போலுஞ்
செற்றிடக்கண்டுசிந்தைபொறாதுசெந்தழலிற்சீறி
யற்றகையொழியப்பின்னுமறாதகைவாளினோடு
மிற்றுகவரிவில்வாளியொன்றுகொண்டெய்துவீழ்த்தான். (௧௭௩)

மெய்த்துணையமரனான்முன்மிளிர்சிறகிழந்துநீண்ட
மைத்துணைக்குடுமிக்குன்றம்போலுருவயங்கித்தோன்றக்
கைத்துணையிழந்துவெம்போர்க்களமிசையொருகாலோடும்
பொய்த்துணைச்சிறுவனின்றுபோர்விளையாடல்செய்தான். (௧௭௪)

தேரற்றான்சிலையுமற்றான்செங்கரமிரண்டுமற்றா
னாற்றகதிரைப்போலுமுலைவுற்றானினிமேலென்ன
போரற்றிடாதுசெய்யப்போதுவானென்னுமேல்வை
காரற்றிடாதவோசைகாட்டிவாய்கரிப்பதானான். (௧௭௫)

பல்லினூற்சரிக்கமாண்டபதாதிகள் பகழிசோத்தி
வில்லினுலெய்யத்தீர்ந்தவொருவனுமிக்கதென்றுன்
மல்லினன்கருமக்கண்டவானவரொழிபமற்றோர்
சொல்லினூற்காண்டுமீண்டுஞ்சொலுந்தகைத்துண்டோபாடம். (௪௭௬)

அடாதகொண்டறநீத்துள்ளோரவனியிலெவருமேசப்
படாதுபட்டழிவாரென்னும்பழமறைபொய்த்துரும
லெடாதொருகாலுந்திரப்புக்கமொன்றெய்தானென்னார்
சடாதபோர்வலியான்சித்ரசேசரிதரைமேற்சாய்ந்தான். (௪௭௭)

கரும்பனைமுண்டம்போலுங்கால்கரமற்றுவீழ்ந்த
பெரும்புயவலியான்முன்னோர்குழவியாப்பிறங்குபூமேற்
பொருங்களமம்பியாய்க்கொண்டுருண்டனன்பொருதும்வீரர்
மருங்கினிற்சாந்துபோலுமறைபட்டுமாய்ந்துவீழ. (௪௭௮)

மண்டுபோர்வலிமைகுன்றுன்மானமுஞ்சிறிதுகுன்றுன்
கொண்டதோர்முனிவுகுன்றுன்கொடுமையான்றன்னைவிண்ணாட்
டண்டரேயெனினுங்கோறலரிதரிதச்சோகாமுய்
பண்டுசெய்தவமேவென்றதாமெனப்பரிவுகூர்ந்தான். (௪௭௯)

சாவரிதிவனுக்கென்னுஞ்சங்கையைத்தள்ளியின்னே
பூவரிதாக்கிப்பொன்னூர்புகுத்துவனென்னச்சிறித்
தேவரினுமஞ்சிந்தித்தணிமலர்ச்செங்கைவிற்கொண்
டாவரியொன்றுவிட்டானவன்சிரமற்றுமாண்டான். (௪௮௰)

எத்தனையடுபோராற்றிவலியினுக்கொன்றில்லாச்
சித்ரசேசரியுபட்டான்றேருங்காலெவர்கட்சேனும்
பத்திமெய்த்தவமலாலெவ்வெண்ணமும்பலியாவாமென்
றுத்தமருரைக்கன்னறுமெவையும்வந்துறுவதாமோ. (௪௮௧)

வேறு.

சிங்கன்மாண்டதுஞ்சித்திரசேசரி
பங்கமுற்றுயிர்மாண்டதும்பார்த்தனர்
செங்கண்மயெழச்சிந்தைவருந்தியே
யங்கைவிற்குனித்தார்துணைத்தேரோ. (௪௮௨)

ஆடன்மாபணித்தேர்களோராயிரங்
கோடிவீரர்நெடுஞ்சிலைகோட்டியே
வோடுவாளியுலப்பிலசிந்தினர்
நீடும்வானும்புவியுஞ்சம்பவே. (௪௮௩)

கல்வியொன்றினைநாய்க்குலம்வாய்க்கடைக்
கவ்வியீர்த்துறக்காட்சிகடுப்பன
வொவ்வொருத்தருமோரொருகோடிகள்
செவ்விமன்னவன்மேற்சாஞ்சிந்தினர். (௪௮௪)

சங்குதூரிதடாரிதவின்முர
செங்கும்விம்மியிரைப்பநெடுங்கையின்
சிங்கசாபமுழங்கத்திசாதிசைப்
புங்கநீர்மழையென்னப்பொழிந்தனர். (கஅரு)

மீளியன்னவிரற்புவனேந்திரன்
ரேளின்மேனுதன்மேற்றலைமேற்றுணைத்
தாளின்மேற்புயமேன்முனைதைத்திட
வாளிவீசினர்சோரிவழியவே. (கஅசு)

எய்யும்வில்லினரொத்தனையெத்தனை
வெய்யமாப்படைவீசினர்கூசிடா
தையனும்புன்முறுவல்செய்தங்கையிற்
பெய்யும்வில்வளைத்தான்பிறைபின்னிட. (கஅஎ)

வில்வளைத்ததலாதுவிசிகங்கள்
செல்விதத்தினைச்சென்றுசெறுநரைக்
கொல்விதத்தினைநோக்கிக்குறித்தொரு
சொல்விதத்தினுஞ்சொல்லத்தொலையுமோ. (கஅஅ)

தேர்முகங்களும்பாகருஞ்சிந்தின
கார்முகங்களுங்கைகளுமெய்களும்
போர்முகங்களும்வீழப்புண்ணீர்த்திரை
பார்முகம்பரந்தூர்முகம்பற்றின. (கஅகூ)

குஞ்சரம்பலகோடிகுழுக்களாய்
வெஞ்சமம்பொரவஞ்சிவிலங்குமோ
சஞ்சலமறியாதுதருக்குறும்
மஞ்சலம்பரிவர்ந்தெழும்வாளரி. (ககூ0)

சென்றசென்றதிசைதொறும்வாளிகள்
கொன்றுகொன்றுகுவித்தனபோர்த்தொழிற்
கென்றுவந்தவர்முற்றுமிறந்தன
ரன்றுபோர்க்களமும்வெளியாயின. (ககூக)

வந்தமன்னவன்மக்களுமற்றுள
வெந்திறற்படைவீரருமாண்டபி
னந்திவானகமொத்ததடுகளஞ்
சிந்துசோரித்திரைகடியங்கவே. (ககூஉ)

இன்றுபோர்புரிந்தாரிவர்நாளையு
நின்றுபோர்புரிவாரெனுநேயநெஞ்
சொன்றுமாசைகொண்டும்பர்களொல்லையி
லன்றுதத்தமுறைவிடமண்மினர். (ககூந)

இற்றைவெஞ்செருவென்றநம்மேந்தன்மெய்
யுற்றதாபமொழிக்குதுமென்றொளி
செற்றநல்லந்திமாலைசெறிதரக்
கொற்றவெங்கதிர்மேற்றிசைகூடினான். (௧௯௪)

ஆருமின்றியகன்றபின்னாண்டுவெம்
போருமின்றிப்புகழ்புவனேந்திரன்
சாருமாப்படைதன்னுடன்சார்தரத்
தேருடன்றிகழ்பாசறைசேர்ந்தனன். (௧௯௫)

எட்டின்மூன்றொழிந்தெண்ணருமாகவம்
பட்டொழிந்தபரிபவநோக்கியே
சிட்டரிற்புகழ்புத்திசிகாமணி
நட்டமின்றியெழுப்பவுநாடினான். (௧௯௬)

ஒன்னலார்படைநீக்கியுறும்படை
தன்னையெண்ணிநல்விஞ்சைசமைத்தனன்
முன்னையின்படியேமுனைத்தார்தெரிந்
தெந்நிலத்தவரும்வியப்பெய்தவே. (௧௯௭)

உக்கிரவீரனோடோங்குசமர்த்தனுந்
தக்கவீரருநால்வகைத்தானையும்
மிக்கிறந்துளவெம்படையோடுசேர்ந்
தொக்கமல்கியுறவுகொண்டாடினார். (௧௯௮)

மாண்டுமெய்சிதைவாகியவாகினி
மீண்டுவந்தமைகண்டவிரிஞ்சனு
மாண்டமைச்சனுக்காயரசன்கழல்
பூண்டுபூண்டுபொருங்களிப்பெய்தினான். (௧௯௯)

இன்னவாறிவரிங்கிருந்தாரிருண்
மன்னியெங்குமலிந்தகவந்தங்கள்
கன்னியும்பெரும்பூதமுங்காண்கவே
சொன்னநாடகமாடினதன்ளியே. (௨௦௦)

மண்டுவெம்பிணக்குப்பைகள்வான்றொடும்
விண்டுவென்னவிளங்கினசோரிகள்
கொண்டல்பெய்மழைத்தாரைகொழுவின
வெண்டிசாமுகமும்பனிப்பெய்தவே. (௨௦௧)

வேறு.

தனிவிராவிருப்பதற்குளஞ்சகித்திடாத்
துனியுழந்தயர்வுறுந்தோகைமாரெலாம்
பனிவிழிப்புனன்முலைமுகட்டிற்பாய்தர
நனிசிகுழாங்குழாங்களக்கணண்ணினார். (௨௦௨)

வல்லிருடமதுசெங்கமலவாண்முகம்
புல்லியமதிநிலைவகற்றப்புக்கினார்
சில்லரிச்சிலம்பொலிசிலம்பநொந்தவர்
சொல்லொலியாழினுஞ்சுவைதந்தோங்கவே. (௨௦௩)

எய்கணையாலுயிரிழந்தநாயகர்
கைகளின்றலைகளின்குறைகள்கண்டவர்
மெய்களைத்துருவுவாருதிரவெள்ளமேற்
கொய்களேபரங்களின்குப்பைநாடியே. (௨௦௪)

நாய்தினுங்கரங்களைநாடிப்பற்றியும்
பேய்தினுந்தலைகளைப்பறித்தும்பின்னுள
தாயுடலறிந்ததிற்றெருகுத்துத்தங்களின்
சேயர்கள்கணவர்களென்றுதேறுவார். (௨௦௫)

அனிலங்கொண்டெரியமுன்முடிகளற்றதோர்
பனிவரையின்சில்மெய்கள்பார்த்தவர்
துனியினோடருங்குறிதுலங்கவாய்ந்துள
வனிதையருடன்செலவெண்ணிமாய்வரால். (௨௦௬)

இச்சைநீங்காதங்கணவரின்றநம்
மெச்சமிங்கிதுவெனவெண்ணியாய்ந்துளம்
பச்சைமாமயிலெனப்பதைப்புமீக்கொளா
மச்சவேல்விழிமுகிழ்த்தாவிமாய்வரே. (௨௦௭)

போரினிலாவிபோய்ச்சுவர்க்கம்புக்கிய
வீரர்கடமதுடற்பொறையைமின்னனார்
பாரினிற்றழுவினின்றேங்கப்பார்த்தவ
ரார்வமுற்றினியபுன்முறுவலாற்றுவார். (௨௦௮)

மயிலினும்வனப்புவாய்ந்தெழுந்தமங்கையர்
குயிலினுமினியசொற்குழறியேங்கியே
யயிலினுங்கூர்விழியரும்பத்தீயினும்
வெயிலினும்படுநெயினுளம்வெதும்புவார். (௨௦௯)

கணவரைப்புதல்வரைக்கருதியன்புசெய்
துணைவரைநண்பரைச்சூழ்ந்தகேளிரைப்
பிணமெனக்கண்டுகண்டுளம்பெருததுன்
பணவுறநின்றுநின்றவலமாயினார். (௨௧௦)

ஆகவமடிந்ததுமடுங்களமெலாங்
கூகையுநரிகளுங்கவந்தக்கொள்ளையு
மேகமாய்நிறைந்ததுமிளஞ்சொன்மங்கைய
ராகநொந்தழிந்ததும்புகறற்காவதோ. (௨௧௧)

ஆதவன்மேற்றிசையடையுமேல்வையு
மீதெலாக்கூட்ரின்றெய்தநோக்கியவ்
வேதனையுறத்தமேல்விரைந்துகாலினுந்
தூதுவரோடினர்தோன்றல்பாலினே. (உ௬உ)

சித்திரகேசரி சிங்கன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௪0-க்குத் திருவிருத்தம்-உ௩௯0.

---

# விசையதரன் சோகப்படலம்.

பொன்வேண்டிப்புவிவேண்டிச்சுதர்கள்வேண்டிப்
பூவுலகிலலையாமற்போற்றுவோர்க்கிங்
கென்வேண்டினும்முதவியாயுளெல்லா
மினியதவத்தருநெறிக்கணியையவாற்றிப்
பின்வேண்டிப்பதமிரண்டுமுதவியாருப்
பெரும்பதந்தந்துய்விக்கும்பெம்மான்றன்னை
முன்வேண்டிமறைதேடக்கூடனுடி
முளைத்தமுக்கட்பரஞ்சுடரைமுன்னிவாழ்வாம். (க)

வேறு.

பாரில்வீழ்ந்திருபதம்பணிந்துநின்றெதிர்
காரில்வீழ்ந்துறுமழைகான்றுகண்களி
னீரில்வீழ்ந்துடல்பனித்துயிர்ப்புநீடவே
போரில்வீழ்ந்தனவெலாம்புகறன்மேயினர். (உ)

கூறியகுமுதமுவைந்துசொன்கணக்
கேறியவாயிரங்கோடியிற்றுக
மாறினனுவல்புவனேந்த்ரனெய்தினு
மாறிரேடிரண்டுளமுகூர்த்தமாகவே. (௩)

சிங்கனுஞ்சித்ரகேசரியுஞ்செய்சம
ரெங்களாற்சொலவொணுதெனினுமாற்றலன்
செங்கைவிற்பகழியாற்சிதைவுற்றாருயிர்
பங்கமாயினர்பெரும்பாவம்பாவமே. (௪)

மாண்டனர்படையொடுமக்களீண்டுள
பூண்டருமுலையினர்புக்குநோக்கியே
காண்டருங்களமெலாங்கலந்தவன்பினுன்
மீண்டிடாதுடன்மடிந்துயிர்விளிந்தனர். (௫)

அடுசமர்முடிந்தபினவர்கண்மாப்படை
படுகளத்திறந்தமைநோக்கிப்பண்டுபோ
னடுவறிபவன்புகனுமவிஞ்சையா
ருடன்வரக்கூட்டிப்பாசறைக்கணுற்றனர். (சு)

என்றுதூதுவர்சொலக்கேட்டவேந்தலும்
நன்றுநன்றென்னடாநீங்கணம்மெதிர்
சென்றுநோக்காதுபொய்செப்பலென்றுகை
மின்றிகழ்வாளினுற்றலையைவீசினன். (எ)

மாடுநின்றவர்முகம்மலர்க்கணோக்குமு
னோடினர்போர்க்களத்துற்றவாறெலா
நாடினர்திரும்பினர்நாமவேலிறைத்
தாடலைகுடினர்சாற்றன்மேயினர். (அ)

ஐயநின்னணைகொண்டளிக்கும்பாரினி
லுய்பவருனதுழையுண்மையின்றியே
வெய்யதீவினைகொடுவிளிவதாயினும்
பொய்யுரையெட்டுணைபுகலப்போகுமோ. (கூ)

மாண்டனர்வாகினியோடுமைந்தரு
நீண்டவானளவினுநிறைந்துகுன்றினுங்
காண்டகுங்களமெலாங்கலந்தவெம்பிண
மாண்டகாய்நாங்கடேர்ந்தறையற்பாலதோ. (க0)

கேட்டனனுருமொலிகேட்டபாந்தளின்
நாட்டநீர்சொரிதரநடுங்கிமண்மிசைக்
கோட்டமுற்றுருயிர்குலையவீழ்ந்தனன்
தோட்டளிமுழங்குதேன்றொங்கற்றோன்றலே. (கக)

பார்த்தலைப்பூழிமெய்படியப்பின்னொரு
வார்த்தையுமியம்பிலன்மயக்கநீடினன்
வேர்த்துளம்வெதும்பினன்மெலிந்துவாயினு
லார்த்தலைப்பாவைபோலாற்றலாயினன். (கஉ)

வேறு.

மருவார்படையைப்பொடியாக்கிமற்றவரை
வெருவாவடர்த்தரியவிண்ணவரைவென்கண்டு
வருவாமெனப்புகன்றீரவ்வுரையைமாறாக்கி
யுருவானதுமொழித்தீர்மகவீருமக்கழகோ. (கங)

பேதைமயலால்வருந்திப்பேதுற்றறிவழிந்து
வேதையடைந்தான்மானிடர்க்குன்றிருபதர்நங்
தாதையெனவோதமியேன்றனைநீத்துத்
தீதையடையாதபரலோகமதிற்சென்றீரோ. (கச)

மாழைவடிக்கண்ணிளஞ்சொன்மாணராடிவருடச்
குழுமணியாங்கிற்றயில்பஞ்சணைநீத்துப்
பாழில்கவர்ந்துணங்கைப்பறைதுவைப்பப்
பூழிநிலனிற்றயிலப்போமோபுதல்வீர்காள். (கரு)

கால்கழுவக்கீழ்ப்புதைத்தகல்லன்றோவென்னருமைப்
பாலர்களேகுழுமபருவதங்கள்பற்றாதார்
கோல்களிறாற்கொன்றாராமென்னுங்கொடியமொழி
காலனையேபோலென்னுளத்தைக்கவற்றினவால். (கசு)

பொருந்தாரெனுமசங்கள்பொன்றப்பொருதி
வருந்தாக்கோடுவரிகண்யானுந்திருமகவீ
ரருந்தாகமதனுக்கார்வம்பொருஞ்சமன்பால்
விருந்தாகினவாவென்வீரங்குறைவித்தே. (கஎ)

புவனேந்திரத்தரசைப்புத்திசிகாமணியை
நவமணியைமாதலனைநாமப்படைசுமந்த
பெவனத்தலைவர்களையின்றவென்றீரென்றசொல்லுங்
கவனப்பெரும்புகழைக்காதாரக்கேட்கிலனே. (கஎ)

தோமாமுங்கப்பணமுந்தோட்டிமுனையீட்டிகளு
நேமியும்வேலுந்தாங்கிநீவிர்விட்டதவ்வளவுஞ்
சேமங்குறைந்தனவாந்தெவ்வர்சிறுபகழி
நாமம்பெருகினவாமென்னேநம்மாண்மைநன்றால். (கஅ)

இன்னபுலம்பியிவளாற்றும்பேரோசை
பொன்னகருமந்தப்புரமும்புகுந்தலைப்பக்
கன்னிசபலீலையுங்கேட்டுள்ளங்கவன்றோடி
மன்னனடிவீழ்ந்தழுதாண்மயில்போல்வாள். (ககூ)

மண்ணீர்ந்தெழும்பூழிமெய்முற்றினுமறைப்பப்
பெண்ணீர்மைகுன்றாப்பெரும்புகழாள்பேதலிப்போ
டுண்ணீர்வறண்டுற்றுயிர்ப்பெறியாவோவியம்போற்
கண்ணீர்வெள்ளத்துட்கரைந்தாள்கனங்குறைந்தாள். (உ0)

பொய்ம்மலராச்செங்குமுதபூமலராம்வாயுடையாள்
கைம்மலராலெற்றியிருகண்மலரானீர்பெருக
மெய்ம்மலராகங்கனலில்வெந்துமெலியக்கருகி
நைம்மலராமென்னவிவைவெண்ணிநவில்கிற்பாள். (உக)

நேற்றுப்பிறந்தசிறுபாலர்களைநேரலர்செய்
யேற்றச்சமருக்கெதிர்பொருதவென்றேவி
வேற்றுக்கொடியாள்விடவிரகதாபத்தாற்
றேற்றுக்கனக்குறைந்தாயென்கே துயர்ப்படுதல். (உஉ)

கோதாகியகாமங்கொண்டாய்தலைமயங்கி
யாதாரமாகியநம்மைந்தர்தமையழித்தாய்
பேதாயறிவிழந்தாயென்பதுபெற்றாயினிமே
லேதாமோவென்பேரரசினிருக்கையுமே. (௨௩)

வீணாகமாற்சலியமேல்விளைத்தாய்நாளுமனங்
கோணாகம்போற்றொழிலுங்கொண்டாய்குறிக்கும்வகை
பூணாகப்பூண்டாய்புகழிற்றாய்போர்மாண்டா
யாணாகநீபிறந்திங்கென்னேபலனடைந்தாய். (௨௪)

ஆரமுலைமாதுமயலால்வருந்தியன்றுசிலை
மாரன்விடுசாயகங்கண்மார்பேற்றமன்னவனே
நேரலர்கள்சாயகமுநீயேற்பதன்றியென்னே
போரறியாப்புத்திரரைப்போயேற்கச்செய்ததுவே. (௨௫)

மைந்தரிறந்தாரெனுஞ்சொல்வாய்மையறிந்துன்னுடனே
வந்தழுதேனியிறக்கினமாநிலத்திலாரோடே
நொந்தழுவேனிக்கொடுமைநோக்காதென்னாருயிரைச்
சிந்துவதேநன்றென்றுசிந்தித்தெழுந்தாளே. (௨௬)

ஆயங்கள்கைதாங்கியங்கவளுக்கேதமது
வாயங்கஞ்சோர்ந்திருகண்மாரிபொழியச்சிலரி
யாயங்கொடுதேற்றியாயிழையோடேமனைக்கண்
போயங்கிருப்பளவிற்கேட்டான்முதற்புதல்வன். (௨௭)

வெந்தீமெழுகென்னமெய்கரைந்தான்கட்கடைநீர்
சிந்தினான்மூச்செறிந்தான்றேம்பித்தன்றாதையுழை
வந்தானெடுமரம்போன்மண்வீழ்ந்தடியிறைஞ்சி
நொந்தான்பலபிதற்றிநோவாறுவல்கின்றான். (௨௮)

நானிருக்கநீயிருக்கநஞ்சேனைகள்பலவுந்
தானிருக்கச்சூழ்கிளைஞோர்தாமிருக்கத்தம்பியரை
யூனிருக்காதாருயிரைவோட்டுசிலையொட்டாரை
வானிருக்கச்செய்யாதிடற்படுதன்மாட்சித்தோ. (௨௯)

வெம்பிவருந்தேல்வருந்தேல்வேந்தாவென்னாருயிராந்
தம்பியரைக்கொல்வித்தோர்தங்களையின்னேநொடியிற்
கும்புதகரக்கரங்கொள்கோதண்டங்கொண்டுவென்றே
தம்பிகுடையும்பசுந்தேன்றும்பையந்தார்சூடுவேனால். (௩௦)

மாநகரும்பொன்மாமனையும்புலம்போசை
தானகலநாளையுதையத்திற்றனுவலத்தா
னானிகல்வெல்லாதிங்குறுவேனேனாளும்
போனகமும்வேண்டேனடைவேன்புதுநரகம். (௩௧)

மாதுபங்கனிந்ததுவும்மாலோனளித்ததுவும்
வேதனருளியதுமாயபலவெஞ்சரங்க
ளாதியதாய்வேண்டுபடையாவுங்கொண்டேனமரி
லேதிலர்க்கிங்கஞ்சுவனேலென்னாகுமென்வலமே. (௩௨)

சொல்லானின்னுள்ளத்துயரசலாயிவ்விருள்போ
யெல்லோனுதிக்குமளவிற்பெரியவெங்கரங்கொள்
வில்லாலெதிர்த்தவரைவெல்வேனப்போதுகண்ட
பல்லோராற்கேட்டிங்கடைவாய்பெரும்பயனே. (௩௩)

வேறு.

சொற்றவாசகக்கேட்டலுந்துரந்தரன்பகையன்
றிற்றதாமெனமனங்களித்தினியநன்மகனைப்
பொற்றடந்தவிசிருத்திமார்பிறுகுறப்புல்லி
முற்றுநோக்கினன்முகமனோடின்னனமொழிவான். (௩௪)

உம்பிமார்களுமொன்னலர்போர்க்குடைந்துயிர்போய்
வெம்பினார்களுமீண்டனவாமெனவிண்டாய்
தம்பிநின்னுரைநம்பினேன்சலனமுந்தவிர்த்தேன்
றம்பையத்தொடையுனக்கரிதாகுமோகூடல். (௩௫)

நானுநீயுமாய்நாளைநம்படையெலாநடத்திக்
கோநகர்ப்புறம்வளைத்துநம்மீதமர்குறித்த
தானைமன்னர்கள்சிரங்களைத்தனித்தனிதடிந்து
போனபூவையைமீட்குதல்செயத்தகும்புகழே. (௩௬)

இந்தநண்ணிசிநீங்கிநீயெய்துவையென்று
மைந்தனைச்செலப்பணித்தவன்மாதுமேற்காதற்
றந்தசிந்தையோடிருந்தனன்றனதுமாநகரம்
வந்தகேதமுற்றுகுலம்மூழ்கினவருந்தி. (௩௭)

அறத்திறனிகந்தறிவிழந்தருணிலைகுன்றிப்
புறத்திறனுளவசையெலாமெய்யணிபூணாய்த்
திறத்திறநின்றுற்றியதேர்வலான்றனக்கிங்
கிறத்தலென்பதிலாதநீளாயுளெய்துறுமோ. (௩௮)

தருமன்முன்னெடுத்துரைசெய்ததன்மையைக்கேளாக்
கருமமப்பெருங்கேதமுங்கேட்டனன்காதா
னிருபனுக்கினிவெற்றியுநேருமாறெவனென்
றுருமிடித்தெனவாகுலங்களெலாமுற்ற. (௩௯)

கேடுகொண்டவற்குழ்ந்திடுங்கேளினர்தமக்கும்
பாடுநீக்குதலின்றெனும்பான்மையாற்பரிந்து
நீடுநேர்நகர்வாவியினிறைபுனற்கமலம்
வாடுகின்றதிக்கேதமீக்கூருதன்மானும். (௪0)

சங்குபேரிகைசச்சரியாகுளிதாளம்
பொங்குவேயிசைநிரம்பியபொன்னகர்வீதி
யெங்கணுஞ்சிறுகானரிநாய்கழுதிகலித்
தங்கள்ற்பிணங்கரிக்கும்வாயோசையேசார்ந்த. (சச)

மன்னவன்பெருங்கேதங்கொண்மனத்தினுள்வருந்தி
யின்னல்வாருதிமூழ்கினனெனன்பதோர்ந்திரவி
மன்னும்வாரியுளிருப்பதற்கஞ்சினவாபோற்
சொன்னகீழ்த்திசைதோன்றினன்வெயிற்கதிர்சுலவ. (சஉ)

விசையதரன் சோகப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-சக-க்குத் திருவிருத்தம்-உருஉ.

---

# வீரசிங்கன் விசையதரன் வதைப்படலம்.

பன்னுகம்பரித்தசடைப்பண்ணவனையிமையவரைப்பாவைபாதி
தன்னுகங்கொளவளித்ததற்பரனைமுப்புரமுன்றழலாய்வேவ
கன்னுகந்தவர்கொளுமுக்கண்ணனைமதுரைநகர்கலந்துளானை
யென்னுகந்தவறடையாதெந்நாளும்பன்மலர்கொண்டிறைஞ்சிவாழ்வாம். (க)

வேறு.

கதிர்வரக்கடனுற்றுறுகாவலன்வேரூர்
புதியபொன்மணிமண்டபத்தரியணைபுக்குத்
துதியினர்பலர்சூழ்தரவிருந்துதன்போட்டி
மதிதெளிந்துதுற்சனனைக்கூயீதுரைவகுப்பான். (உ)

நென்னலேகியநம்பெரும்புதல்வருநிறைந்த
மன்னர்தானையுமாற்றலர்வாளியான்மடிந்த
வின்னதீர்வுறமுதன்மகன்முதவினேரெல்லாஞ்
சொன்னவாகினியுடன்வரநான்பொரத்துணிந்தேன். (ந)

அரசவீதியோடணிநகர்வீதிகண்முற்றும்
முரசம்வாரணமுதுகின்மேற்றூக்கியேமுழக்க
வுரைசெய்வாயெனத்துற்சனனுல்லைவள்ளுவர்க்கூய்
விரைசெய்தாரவன்சொற்படிபுரிந்திடவிதித்தான். (ச)

தந்திவான்பிடர்தூக்கியேதடமணிமுரச
மந்தமாநகர்முழுவதும்வள்ளுவரறைந்தா
ரிந்தவாசகங்கேட்டலுமெழுகடற்றிரண்டு
சிந்துவெண்டிரையோதைகொண்டெழுந்தனசேனை. (ரு)

வேறு.

கிரிமுடித்திரளருவியிற்சொரிகிளர்மதச்சலதிகணிறைத்
தரியதிர்த்துதிர்நிலமிசைப்பொடிதலைபடுத்தணிநிழல்சுழித்
தெரிமுறச்செவிவளிவிழிக்கடையெரிவிரித்துறுமகரிகை
நெரிமருப்புறள்புகர்முகக்கரிநிகரமெங்கணுநிகரில. (சு)

எவனமுற்றழகொளிர்தரச்சுழியிலகுநற்பரிமளமிகுத்
தவனியிற்பொருவினசிரிப்பொலியரியினத்தொகைதிரிதரக்
கவனவிற்படுகுரநடைப்பொடிகடன்மடுப்பனநெடுநடை
பவனமெய்க்கதியடர்படுப்பனபலசிறத்தனபரிகளே. (எ)

படமணித்தலையுரகருக்கிறைபயமிகுத்துடனெளிதரப்
புடவியிற்றிகிரிகள்செலத்துகள்பொழிவெயிற்கதிர்மறைபடுத்
தடவியிற்பருவதநடைத்தொழிலடைதலிற்குரகதமனைத்
திடுகொடிக்குலமுடிவிரித்துளவிரதமொய்த்தனவிடையிடை. (அ)

மனதழற்படவிடுமுயிர்ப்பொடுவெளியுறுத்தியுள்ளெழுபுகை
யனல்விழிக்கடைபொறியுகுத்தனவணிகாத்தயில்வெயிலினுந்
தனிநகைப்பலின்வெயில்விரிப்பனதழைமுகிற்குலமழையென
வினிமொழிச்சிறுசொலினுமிக்குளநிருதரொத்துளவிறைவரே. (கூ)

நிரைமணிக்கதிர்புறம்விரித்தொளிர்நிழல்பரப்பியகுடைகள்வா
னெரிசுடர்க்கதிர்வெயின்மறைப்பனவிருள்விடுப்பனகொடிகள்வெண்
டிரைவரிக்கயலுகள்வனப்பலதிசைகளுக்கணிதுவசமொத்
தரிமணிக்குலவொலிமிகுத்துவிண்ணகலமுற்றினுமிகலுவ. (க0)

குடைமிகுத்தனமதியெனப்பலகொடிமிகுத்தனவிடையிடை
யடிமிகுத்தனமதகரித்திரள்வயமிகுத்தனவரசர்பொன்
முடிமிகுத்தனபடைமிகுத்தனமுரிதிரைக்கடல்வாள்படப்
பொடிமிகுத்தனவிவைநெருக்கலினிடிபடப்படுபுடவியே. (கக)

தனிநகர்ப்படையுரவினர்ப்படைசமரிலெய்த்தவர்தருபடை
வனசிறைப்படைபொருவிலைப்படைமனவலிக்கொடுபுறமிடா
வினியசப்படையெனவுரைத்துளவறுவகைப்படைகளுமெழுந்
தனிலமொத்தெரிமுழுதுமொத்திடியாமொய்த்தனவவணரோ. (கஉ)

துடியரற்றினவயிரொலித்தனசுரிவளைக்குழல்சகடைக
ளிடியிடித்தனகுறடுற்றினவெதிரிசைத்தனபரவையிற்
கிடுகுகொட்டினகிளையிமிழ்த்தனகிணைதுவைத்தனபணைகுழீஇ
படிவெடித்தனமுடிதெரித்தனபனகனுக்கெனபணிகளே. (கங)

விருதர்கைப்படைபுடைநெருக்கலின்விரிகனற்பொறிதிசைதிசை
பொருதிறற்கரிமுடிசுடப்பலபொருள்பொடித்தடர்விபுதரூர்
தருதடக்கவடுகளிடைப்படுதளிர்நனைக்கனிகொடிகரிந்
தருதிடத்தவருடல்வெதுப்பினவுலகும்வானவருலகுமே. (கச)

இவ்வகைப்படுபடைபுறப்படுமளவினிற்பெரிதிறைவர்க
ளெவ்வகைப்படையொடுதடக்கொடுமுடிவிரிக்கதிரணியெழச்
செவ்வகைப்படுதவர்முனைக்கணைசெறிமழுக்கொழுகுலிசம்வாள்
வெவ்வகைப்படுவிடநடுக்குவதெனவெடுத்துடன்விரைவினர். (கரு)

வேறு.

வல்லிருட்குடைந்தசோதிவகைமணிக்குவைகளாகி
யல்லினைவீரசிங்கன்றுணைநயந்தடுவான்போலும்
புல்லினமிலைச்சிமெய்யிற்பொன்னணிபலவுமின்னக்
கல்லினுந்திண்டதிண்டோளங்கதங்கவினச்சேர்த்து. (கசு)

மார்பினிற்கவசம்பூட்டிவைரவாளிடையின்மாட்டி
நேர்படவீரபட்டநெற்றியில்வீக்கிச்செம்பொன்
வார்கழலிறுக்கிவெட்சிமாலைவேய்ந்திருள்கால்சீக்குஞ்
சூரியருதயம்போலுஞ்சுடர்க்குழைகுழையிற்றூக்கி. (கஎ)

மழுக்கவண்டிகிரிசூலம்வாள்கதையுலக்கைநாஞ்சில்
கொழுக்கதிர்ட்டிதோட்டிகுடாரம்வேல்குந்தம்பாச
மிழுக்கடையாதமற்றைமுழுக்கவுமிடையிற்சேர்த்து
விழிக்கடைசிவவாவானத்துருமினுமதிர்ச்சிவீங்க. (கஅ)

காத்தவர்வாங்கியாவமுதுகினிற்கட்டிமுன்முப்
புரத்தவர்மடியவாற்றும்புன்னகைப்புனிதன்போலும்
வரத்தவர்முனிவர்தேவர்மனுக்கண்மற்றனவாயுள்ள
தரத்தவரஞ்சத்திண்டேரேறினன்சங்கமார்ப்ப. (ககூ)

சதமகன்மீதுமுன்னந்தசமுகன்மகன்போர்க்குற்ற
விதமிவனெவன்கொலென்னவிண்ணவர்பண்ணையஞ்சக்
கதமிகுந்தெழுந்தான்காலக்கூற்றினும்வெம்மைகாட்டி
முதன்மகன்வீரர்க்குள்ளுமுதன்மகனான முன்னோன். (உ0)

புனைமணியிடைக்கச்சார்த்துப்பொலிகழனாலவீக்கி
முனைபடுமயில்வாளேந்திமுறையரிக்குருளையென்ன
வினையமும்வெங்கொடாதவீரமும்விடையுங்கொண்ட
தனைநிகர்பொலம்பொற்றேராயிரங்கோடிசார. (உக)

விற்சனங்கோடிகோடிவெம்பரிகோடிகோடி
மற்சனங்கோடிகோடிமதமலைகோடிகோடி
துற்சனனுடனுய்க்கொண்டுதுணைவருங்கிளைஞரோடு
முற்செலநடந்தான்வேந்தன்முதன்மகனேடுங்கூடி. (உஉ)

தருமனைத்தவிரவந்தமாநகர்தன்னிலுள்ள
பொருவயப்பரியுந்தேரும்பூட்கையும்பொருதிவெல்லு
நிருதரில்விருதர்தாமுநிகரமிவ்வளவென்றில்லாத்
தருதிரற்கழற்கால்விரர்கூட்டமுஞ்சமரைவேட்ட. (உங)

தும்பிவெம்பரித்தேர்காலாட்சுதன்முதற்றானைவெள்ளம்
வெம்பாவென்னவெட்கிமிலைந்தவெண்டிரைநீர்சிந்து
மிம்பருமிடம்பெறுவென்றனந்தனுமுலைவுற்றேங்கா
வும்பருமேங்கச்சூழ்கொண்டெழுந்தமையுணர்ந்தான்வேந்தன். (உச)

மும்மையுமொருமையானமுதல்வனையம்மைக்கான
செம்மைகொண்முறையாற்பூசைசெய்துநான்மறைகள்சொன்ன
விம்மையின்றானமீந்தங்கேற்றனவேற்றோர்க்கெல்லாஞ்
சும்மையாய்த்திரட்டிமேன்மேற்சொரிந்தனன்சோனைதோற்க (உரு)

வேறு.

மைவரைக்கணுயிரங்கதிரிடியொடுமருவி
வையகத்தொருமுகத்துதித்தனவொளிமலியச்
செய்மறைக்கணூர்மகத்தழலமைத்ததுஞ்சேர்த்தே
யைமுகத்தவனளித்தபொற்கவசமுமணிந்தான். (உசு)

வரைவளைத்தனபாக்ளின்வாண்மருங்கிலகு
மரைவளைத்தவிர்பொன்மணிக்கச்சினேடார்த்தே
நிரைவளைத்தனமணித்தொகைசிரப்புகிம்புரிநே
ருரைவளைத்தனவிலைமணியங்கதமொளிர. (உஎ)

உவணவான்சிறைவிரித்தலிலொழுங்குசேர்த்துலவாச்
சுவணவான்கலைச்சொய்சகசிரைநிரைதுலக்கி
யெவணமானதிக்கோசிகமெனமுறுக்கிட்டே
வவணணிந்தனன்பிறையுறழ்பணிப்படமமைத்து. (உஅ)

உருமினும்மழைக்குலத்தினுமொலிகாந்தொலிக்குங்
குருமணித்தொகைசிரைநிரைமருங்கினிற்குலவப்
பொருகழற்புனைந்தரிக்குரல்புணரியிற்பொருவும்
மருவுதெண்டிரைச்சிறுமணிச்சதங்கைதாண்மாட்டி. (உகூ)

முட்டியார்த்துமுன்கையினின்முற்றிலுந்தருவை
யட்டிவைத்தனவிரற்கணியணிந்தவிர்கோதை
சுட்டிகின்புவிமுழுவதுந்தழுவகட்செவிகொண்
டிட்டகங்கணமணிச்சுடர்குழைந்தினின்றெறிய. (௩0)

திருப்பயோதரமின்னிலும்பொன்னொளிசெய்யப்
பொருப்பிழிந்தனதாரையின்மார்புநூல்புரள
வருப்பமுற்றவெங்கதிர்ச்சுடரோட்டிவெண்ணிலவங்
கிருப்பமாண்டபொற்குண்டலக்குழையழகிலங்க. (௩க)

அருக்காயுளயாவருமடையுமாளுகுத்த
பெருக்கிளங்கதிர்தழைந்தனசுடர்மணிபிறங்குந்
திருக்கிளர்ந்தபைம்பொன்மணிமெளலிவான்றிசையி
லிருக்கும்வல்லிருளுண்டுநீணெறிவுமெடுப்ப. (௩உ)

மட்டில்வான்கவுட்டுளைகளிற்பெருமதம்வழங்கு
மட்டதிக்குளவிபங்களின்முகங்களுக்கமையத்
தொட்டமைத்தபைம்பொன்மணியோடையிற்றுலங்கும்
பட்டநெற்றியிற்கட்டினான்சுடரொளிபரப்ப. (௩௩)

புரியின்மன்னரைப்போர்தொறும்புகுந்துவெங்கொண்ட
தருணமங்கவர்தந்ததுந்தவத்தினுக்கீசர்
பெரிதளித்ததும்பேதையர்விழியளிபிரியாப்
பரியதும்பையுஞ்சூடினான்பண்ணவர்பதைப்ப. (௩௪)

வாணியுமவண்மகிழ்நனுமவருண்மாருப்
பேணியுள்ளனமுனிவரும்பேசிடத்தொலையா
நாணியார்த்தவெஞ்சாபமுநறுந்தமிழ்த்தொடைநேர்
தூணியும்புறந்தூக்கினானுலகெலாந்துளங்க. (௩௫)

சருகதேரெனத்தந்தனன்றபனனுக்கருணன்
பொருவுநேரனச்சாரதிபுவனமும்விசும்பு
மொருமுகங்கொடுநிவரினுமுச்சியிற்சொருகும்
மருமலர்ச்சிறுவிதமெழனச்சுமக்குறும்வலிய. (௩௬)

உரவுநீர்க்கடலுண்டுவாயுமிழ்தரும்வடவை
விரவுவெங்கனல்வெம்மைகொண்டனிலமும்வீயப்
பரவுகாற்கதியிந்திரன்பரிவலம்பரித்த
புரவியாயிரமாயிரமுகந்தொறும்பூண்ட. (௩௭)

பாரிற்றாவுறும்பரவையிற்றாவுறும்படர்வான்
காரிற்றாவுறுங்கனலினுந்தாவுறுங்களையா
நேரிற்றாவிநின்றுடமராடல்செய்நேரார்
போரிற்றாவுறுமென்பதுமிவைகட்குப்புகழோ. (௩௮)

ஆழியோசையையுட்கரந்தட்டமாதிரஞ்சூழ்
சூழிமாலிபமணியுறள்கண்டைகடொகுத்த
பாழிமால்வரைக்குடுமியிற்பருதிமண்டலங்கள்
வாழிவித்தியவழுத்தியகாசினமலிந்த. (௩௯)

இந்திரன்பதியெமன்வருணன்பதியிவையோ
டந்தனீள்பதியுள்ளனபடைக்கலத்தமைதி
தந்தவான்சுமைகிடந்தனதபதியர்நெடுநாட்
சிந்தையார்வமுற்றியற்றியதவத்தொழில்சிறப்ப. ௪௦)

அன்னதேரினைவரன்முறையருச்சினையாற்றி
யின்னதானமென்றின்றியேயிரப்பவர்க்கெல்லாஞ்
சொன்னதானமேமேகமுகின்மழையெனச்சொரிய
மன்னவனுவந்தேறினானுலகெலாமருக. (௪௧)

எதிரொளிவையுணர்ந்தளவிமையவருலகும்
மாறுகின்றனவையமுமற்றுள்ளபொருளுங்
கூறும்வாயுளம்வாளிமெய்யுயிர்நிலைகுழைந்து
தேறெலாநெறியிழந்தனசிதைந்தனசிதறி. (சஉ)

ஆற்றன்மாற்றிலாதுலகெலாம்பெருவலியமைத்துக்
கூற்றின்வட்டணைகொண்டநங்குமரனைக்குமைத்த
மாற்றலன்றுயிர்வாங்குதலன்றெனின்மாழ்த
ரேற்றமீதிரண்டொன்றுசெய்யாதமர்தொலையேன். (சங)

என்றுகண்சிவந்தெரியுயிர்த்தெறிபுகைப்படலம்
நின்றதிக்கினும்பாரினும்விசும்பினுநிறையக்
கன்றியேயெழுமுனிவினன்கைவிதிர்த்துதடு
மென்றதோள்புடைத்தார்த்தனனுருமினம்வெறிப்ப. (சச)

வேண்டுதேனினும்விருப்பமுற்றருஞ்சமம்விளைக்க
மாண்டசிந்தையான்வரிவளைவலம்புரிமுழங்கத்
தூண்டுதேரினிற்றோற்றினன்காலனுந்துளங்கப்
பூண்டவிற்சிறுநாணொலிதிசைதொறும்போக்கி. (சரு)

தேவரோடுமுன்னசுரர்கள்செருச்செயுமுறையே
மூவகைப்படுமுலகமுமின்றொடுமுடிப்பான்
பாவகனிவனிலையினைப்பண்டுகண்டுள்ள
வேவருமெலிவடைந்தனர்பூசைமுன்னெலிபோல். (சசு)

உரகரச்சமுமுலகவர்பதைப்புமேலுற்ற
சுரர்களச்சமுந்தொன்முனிவர்மனத்துனியு
மிரவிநாண்மதிகோள்களின்றேங்குறுமியல்பு
நரகருக்குமங்குளதெனச்சொல்லவுநாணுதேம். (சஎ)

பாரைநுங்கிமேலெழுந்தனபரவைநீர்படிக்குங்
காரைநுங்கிவானெழுந்தனவுருமினங்கலிப்ப
வோருமெஞ்சினருணர்வினுக்கப்புறமுயருஞ்
சாருங்கம்பலையாகவந்துறைதுறைதழுவ. (சஅ)

எழுந்தனனிவனெழுதன்முன்னெழுந்தவாகினியின்
கொழுந்துபோயடுசமர்க்களங்குழீஇயினவமலை
யழிந்தகேதமின்றெடுப்பதற்கடைந்ததாமென்று
மொழிந்ததொற்றனார்முகத்தினுஞ்செவியினுமுழ்க. (சகூ)

களம்புகுந்தனன்முதன்மகனோடுமக்களமே
விளங்கதிர்க்குழைந்தாய்ப்படுத்தெறிவெயில்காந்து
வளங்குறைந்தனமாண்டதன்மக்களைக்கண்டா
னுளந்தளர்ந்துகண்ணீருகுத்துயிர்புறம்புலைய. (ருo)

சோகமுற்றுளநிருபனைச்சூழ்ந்தவாகினியை
யாகுலத்திடாமுதன்மகனறிந்தவர்த்தேற்றி
மோசரித்தெதிர்முனைபடுமூர்ச்சையுண்டாக்கி
யாகவத்தினைமகரவியூகமிட்டணிந்தான். (௫௧)

நெற்றிபோன்மதசயங்களைநீண்டநன்வால்போ
லுறறவாம்பரிக்குலங்களையுறுவலியுடல்போற்
பொற்றடமணித்தேர்களைப்பொருசதிக்காற்பலத்தை
மற்றும்வாய்செவிகண்சிலாம்பெனனவும்வகுத்தான். (௫௨)

சூரமிச்சுடைத்துற்சனன்றனைத்துணையாக்கிப்
போரணிசதலைதந்தையைப்பெலப்படநிறுத்தி
வீரசிங்கனும்விற்குழைத்தமரரும்வெருவப்
போர்வயப்படைததுண்டத்துநின்றனன்புலிபோல். (௫௩)

வேறு.

இவ்வகையணிந்தவனிகங்களொடுபோர்பொருசவெண்ணியவணிற்குமளவி
லவ்வகையுணர்ந்துழையர்வந்துபுகல்வாய்மொழியறிந்துபுவனேந்த்ரநிருபன்
செவ்வகைபராவுநியமங்கடவராதபடிசெய்கடன்முடித்திரவலர்க்
கெவ்வகையினும்மனதுவப்புறவெறுக்கைபணியாவுமழையென்னவுதவி. ()

செங்கனகமௌலியுதையங்கிளருபானுநிகர்சென்னியில்வனைந்துகுழையிற்
பைங்கனககுண்டலமிலங்குமதியம்பராவுபானிலவெறிப்பநுதலிற்
றிங்கள்பதைதாரகையினங்கணடுவிற்பொலிவதென்றுதிகழ்பட்டமணியா
வங்கதமவிர்ந்தொளிததும்புகவசத்திரளெளியாரவடமிட்டனனரோ. (௫௫)

வச்சிரமணிக்கடகமிட்டுபுடையிற்றொடர்மலர்த்தருவினைக்கொடிகண்மே
னச்சுறவளைத்தனையமுன்கையணிகோதையொடுநன்கைவிரல்கட்குமுறையி
ட்டிச்செருவிலக்குமொருகாலெனமணிக்கழலிலங்குகழலிற்கலிசெயக்
கச்சிடையிறுக்கிமுனைவாளினொடுநீளொளிகவின்பரவுவெட்சிபுனையா. (௫௬)

தேவுநிறைபொற்சிமையமால்சிலைநிகர்த்தசிலைசீர்காமிலங்கவுரகர்
நாவுநிறைவற்பகழியாவமுதுகிற்புரளநாளொளிவிளக்குகதிரிற்
பூவுநிறைதற்ககலமானவுருளைப்பெரியபூவிரதமீதுபடராப்
பாவுநிறைதற்புகழினனுமதனுக்கதிகபான்மைகொளமைச்சனுடனே. (௫௭)

முடியழகெறிக்கவிருகுழையழகெறிக்கநுதன்முழுதழகெறிக்கமலர்நே
ரடியழகெறிக்கமணியிதழழகெறிக்கவிழியருளழகெறிக்கநடுவின்
றுடியழகெறிக்கவிரிபுயமழகெறிக்கமொழிசொலுமழகெறிக்கவிவனே
படியழகினுக்குமுயர்மதனழகினுக்குமொருபடியழகுமிச்சமெனவே. (௫௮)

மசரிகைதரித்துமதியுறழ்கவர்மறுப்பிலகுமதசலதிமொய்த்துவரிநீர்
நிகர்திரைபரப்பவிருவிழியழலுகுப்பவணிநிழலொடுசுழித்துநிரையார்
புகர்முகவுரற்பருமனடிபொருதடக்கையிருபுறமுறமணித்தசெவிசால் [ல். ()
பகர்திசையனுக்கவருகரிநிகரமெய்த்தொகைசொல்பரிசெவர்படித்ததுளவா

தேரினமெழுந்தபரியார்கலிருதிர்ந்தகொடிசேணளவிகந்தகவிகைச்
சீரணியெழுந்தமதிநேரெனவிரிந்தவருதீரர்மெய்யுகந்தவணிகள்
காரிருள்விழுங்குகதிரோனிலும்விளங்கவல்காலனுமடங்குபடைகள்
போரணிநடந்தவிதமாரணியிடுந்தொகைபொருந்துறவிருந்துமொழிவார். ()

வேறு.

சதாசதிக்கிருமடங்குநேர்மெய்வலிசார்ந்த
பதாதியங்கடலுடன்வரவகிளம்படராக்
கதாயுதன்றனக்கிளையவில்விசயனைக்கடுக்கு
முதாரமிக்கவன்மாதுலன்றனைவிழித்துரைப்பான். (௬௧)

நென்னன்மாண்டவர்க்கின்னுமப்படிவந்துநேரில்
வின்னநீக்குதலரிதவர்தங்களைவிலக்கிப்
பின்னுமற்றுளபடையொடுபெருஞ்சமர்தணப்புற்
றின்னனீங்கியென்விற்றொழில்காண்மின்களென்றான். (௬௨)

ஆண்டகைத்திருவருணினைந்தராசனுநென்னன்
மாண்டுளோர்களைவிலக்கியம்முறைநிறபமனத்துண்
டூண்டதஞ்சினங்கிளம்பவாளாவெனமுனிவற்
றுண்டுவெஞ்சிலைகுனித்துநாணெறிந்துநின்றார்த்தே. (௬௩)

தன்னின்மிக்குளதடம்புயச்சமர்த்தனைநோக்கா
முன்னர்நின்றுளார்யாவரிங்கிவர்தமைமொழிமி
னென்னவங்கவற்றொழுதனக்கெதிரினிற்கலுழன்
றன்னுகேதனன்முதன்மகனுமெனச்சொன்னான். (௬௪)

நடுவன்வெண்குடைநிழற்றிடநறும்பயோததியிற்
படுதிரைக்கவரிகளிருபாலினும்பணிப்ப
வடபுலிப்புயவலியினனின்னுயிரகற்றிக்
கடுவிழிக்கினல்கொடுத்துளகருதலனென்றான். (௬௫)

ஆயகாலையிலவனுமங்கிவர்களையறிவான்
மேயதூதரைவினவலுமென்கரங்குவியாத்
தூயமுப்புவனத்தினுந்தன்வலிதோலா
நாயகனிவனேபுவனேந்திரநகரான். (௬௬)

மன்னுமாநகர்புகுந்திருளெவரையுமயக்கிக்
கன்னியைக்கவர்ந்தனனமக்கருஞ்சனிகாலன்
பின்னைநின்றுளார்மாமனுதியரெனப்பிரித்துச்
சொன்னவாசகங்கேட்டனன்சுடுமெதிர்த்தோன்றல். (௬௭)

இருதிறத்துளபடைகளுமிவர்களுமிகலிப்
பொருதிறற்பெருமூசலுக்கமைவுறும்போழ்திற்
றருமறைச்சுராதியாமுழுவதுந்தவரா
தொருமுகப்படக்காண்பதற்கங்கண்வந்துற்றார். (௬௮)

அம்பரம்புகுந்திச்சமர்காண்பதற்கவாவுற்
றும்பர்கோன்முதலடைந்தமைதிருவுளத்துணர்ந்து
நம்பனம்பிகைக்கோதுவானங்கையிப்புவிமேல்
வெம்புபாரதச்சமரினுமொருசமர்விளைவால். (௬௯)

திருவினோடுபைந்துழவணிமுகுந்தனுந்திகழ்நாப்
பொருவும்வாணியோடருமறைக்கிழவனும்புலவோர்
பரவுமிந்திரன்சசியொடும்படர்ந்தனரிருக்கை
யொருவிவானகமிடம்பெறுதமர்க்களமுவந்தே (௭0)

அங்குபுக்குளகடவுளர்கூட்டமோடடைவுற்
றிங்குமீழ்குவோமெழுகவென்றியம்பலுமிறைவி
செங்கைகூப்பிநின்றுவந்தனள்சேவுகைத்தெழுந்தான்
நங்கையோடுதங்குமரர்களிருபுறநண்ண. (௭௧)

அமரர்புக்குழியமாருக்கிறைவனுமரியுங்
கமலயோனியுமிறைஞ்சினரெதிர்வரக்களியா
விமலன்வானவர்முழுவதும்பரவவீற்றிருந்தான்
சமரபூமியுங்கைலையொத்தணிநலஞ்சார. (௭௨)

வேறு.

இருவருக்குளும்விருதெடுத்தவர்இருவிழிக்கடைநெறிதரப்
பொருதலுற்றனரிவர்களுக்கிணைபுவனமுற்றிலுமிலையெனப்
பருவலிக்கரவிரலுதைத்தெழுபகழிவித்தினர்வடவனற்
பெருநெருப்பெனமுதிர்சினப்படைபிறவும்விட்டனருராறியே. (௭௩)

சிலைவழங்கினவொலிமிகுந்தனதிசைநடந்தனசெவிடுபட்
டுலைவுகொண்டனகலகமிஞ்சினவுலகும்வானவருலகுநீ
ணிலைகலங்கினமலைபெருங்கடனிரையழிந்தனபொருளெலாந்
தலைமயங்கினவிருதிறத்தளும்வலிமிகுந்துளதலைவரே. (௭௪)

வாளிதூவினர்வேல்களேவினர்மாரதாதியர்சமரதர்
மீளிபோல்பவர்யானைதேர்பரிவீடவுஞ்சமராடினர்
தோளினுந்தடமார்பினும்பலதொளைசெயச்சொரிசோரிகள்
தாளினுங்கியெழுந்தவானதிவெள்ளநீடலைசரியவே. (௭௫)

முற்குறித்ததிர்பணைதடாரிமுழக்கினர்சமர்முனைதொறும்
விற்குறித்திருவிழியழற்பொறிமிளிரவாளிகள்வீசினர்
கற்குறித்துயர்தோளறுந்திருகையறுந்துளசென்னிபோய்ச்
சொற்குறித்துளநாவினேடுயிர்சோரமெய்துகளாயினர். (௭௬)

ஒன்றினொன்றமராடிவெஞ்சரமோரொருத்தர்கரத்தினொன்
மின்றிரண்டொளிர்மழையெனச்சரமதிரவீசவினிடியினிற்
குன்றிடிந்தனதேருடைந்தனகுஞ்சரங்கள்குழுக்களாய்ப்
பொன்றவாசிகண்மண்டுபூழிபுரண்டழிந்ததுபுதுமையே. (௭௭

கரியுருண்டனசிரமுடைந்தனகவுணெரிந்தனகலினவெம்
பரியுருண்டனகொடியொடிந்தனபடைமுரிந்தனகழுதுநாய்
நரிதிரண்டனதசையயின்றனஈனிதுடற்குருதிகள்பெருந்
திரைபுரண்டனவிருதிறத்தினுமடுதொழிற்புரிசெருவினே. (எஅ)

வேறு.

இச்சமர்ப்பெரும்படைபொருபடுகளத்தெதிரின்
மச்சயூகமிட்டணிமுனைதாங்கிவான்முடிமேற்
செச்சைசூடியமுதன்மகன்செருத்தொழில்புரிவா
னச்சிவாம்பரித்தடமணித்தேர்செலநடத்தி. (எகூ)

பாரவெஞ்சிலைவளைத்தனன்சுடர்முனைப்பகழி
தோர்கந்துகம்மதமலைசெருப்புரிகதிர்வாள்
வீரர்கால்காயேல்சிதைத்தழற்சிகைவிரிந்து
நாரநீள்கடல்சுவற்றிவான்கங்கையைநக்க. (அ0)

விண்ணினும்பெருந்திசையினும்விரிதிரைக்கடல்சூழ்
மண்ணினும்பினுமற்றுளமுற்றினும்வாளி
யெண்ணினும்மொழியாவகையுருத்துநின்றெய்தான்
கண்ணினுங்குறியாதுபோர்க்களமெலாங்கலந்தே (அக)

கூளியுங்கடுக்கூற்றமுநிகர்முனைக்கொடுங்கண்
மீளியும்மிவன்விறற்படுவெஞ்சிலைவிடுக்கும்
வாளியுஞ்சரிதிரிவனமண்டமர்க்களமேற்
றாளியுங்கனற்றாயமுந்திசாதிசைசூழ. (அ௨)

மைவிழுந்தனமதமலைமழைவிழுந்தன்ன
கைவிழுந்தனவிழுந்தனதேர்மலைகடுப்ப
மெய்விழுந்தனபனையினும்விரிகனற்பிழம்பில்
நெய்விழுந்தனசுடுசரம்விழுந்தொறுநிலமேல். (அ௩)

வரைபுரண்டனபுரண்டனமதகரிவாரித்
திரைபுரண்டனபுரண்டனசெழும்பரியுதிரங்
கரைபுரண்டனபுரண்டனகதிர்மணிக்கவிகை
நுரைபுரண்டனபுரண்டனநுனிப்பெருங்கவரி. (அ௪)

வந்தவெம்படைமுழுவதும்வலிகுலைந்துதிரஞ்
சிந்தியோடவிரிஞ்சன்மேற்பாகன்மேற்றேர்மே
லைந்துபத்துநூறாயிரம்வாளிகொண்டலசிச்
சிந்தைதேம்புறநவமணிமீதினுந்தெரித்தான். (அ௫)

கண்டகன்சமர்க்கடுமையைக்கடைக்கணித்துருத்து
மண்டுதீயெனவிரிஞ்சனுந்தடஞ்சிலைவாங்கித்
திண்டிறற்றடந்தேரினைமுனைபடத்திருகித்
துண்டவெண்பிறையடுசரமழையெனச்சொரிந்தான். (அ௬)

தெண்டிரைக்கடன்முழுவதுமடுத்துவாள்செருமிக்
கொண்டல்சாய்த்தனபெருமழைக்கொள்ளைபோல்வாளி
யண்டரண்டமுமவனியுமரவுவாழுலகுங்
கண்டமற்றுளபொருள்களுநிறைத்தனன்கலங்க. (௮௭)

தேரழிந்தனபரிக்குலஞ்சிதைந்தனசிலைக்கை
வீரர்வீந்தனவெண்மணிக்கவிகையுங்கொடியுஞ்
சேரநுண்பொடியாயினதிசைதொறுங்கடல்போற்
சோரிபொங்கினசழுதுகணுங்கினதுவன்றி. (௮௮)

தோளுமார்பமுங்கவசமுந்தொடையும்வாண்முடியுந்
தாளுந்தாளிடுகழல்களுந்தனித்தனிசிதறிக்
கோளுநாள்களுங்குவிந்தனகுவிந்தனகளமேன்
மூளைவெண்ணுரைபரப்பினவுதிரநீர்மொய்ப்ப. (௮௯)

கரந்தைசூடியகண்ணுதற்புன்னகைக்கனலா
லிருந்தையானமுப்புரத்தவர்தம்மினுமெதிர்ந்தோர்
வரந்தைகொண்டுயிரற்றுமாண்டுலர்ந்தனரம்மா
சிரந்துணிந்தணியங்கமுமங்கமுஞ்சிதைய. (௯௦)

கூற்றுங்காலனுந்தூதனுமொருநெறிக்கூடித்
தோற்றினலன்னசுடர்க்கணைமூன்றுவிற்றொடுத்து
மாற்றலன்மகன்நெற்றியினிறுத்தினன்மயங்கி
யாற்றறேற்றிடக்குறைந்துளஞ்சிறிதுநின்றயர்ந்தான். (௯௧)

வீரசிங்கனுந்தெளிந்தெதிர்விரிஞ்சனைவியவாப்
பாரசங்களிற்பாய்புலியுறழ்வனபகழி
நேரசங்கமாய்த்தொடுத்தவனிரைமணித்தேரைப்
போரசங்குறத்தகர்த்துநுண்பொடிபடப்போக்கி. (௯௨)

பட்டமுமணிக்கவசமும்பருவலிச்சிலையும்
வெட்டிமற்றவன்படையையும்வீற்றுவீற்றாக்கி
மட்டிலாப்புகழ்ச்சிங்கனும்விரிஞ்சர்கோன்மனது
சுட்டிடச்சிலதீயொழிசுடச்சுடச்சொன்னான். (௯௩)

மாழையின்வடுக்கண்மகவடைந்தபூமன்ன
ரேழையென்னினும்வான்முறைவரன்வரித்தீவார்
பாழினன்மகட்கதுகெடுத்தரவுழைபழக்கிட்
டாழிவந்தர்களிருவருக்கொருவிலையணங்காய். (௯௪)

உனதுமாமகடன்னைவைத்தவ்வசையுணரா
மனதினுட்களிபொருந்தினாய்மானமுமறந்தாய்
கனதையெவ்வழிபெறுவதற்குறுதிகைக்கொண்டா
யினதெனத்தெரியாவறிவுடைமையுமிழந்தாய். (௯௫)

இன்றுவில்வளைத்தெனதுகைச்சரங்களாலுன்னைக்
கொன்றதாற்பயனென்னைகொல்லெனமனங்குழைந்தேன்
நன்றுநீக்கவென்றம்பியர்நமன்பதிநண்ண
வென்றவீரனைவென்றிடச்சமைத்தனன்விரதம். (௯௬)

ஆதலாலுனைக்கொன்றிடிலென்சினமடங்காப்
பேதைபோதியென்றுரைத்தனன்விரிஞ்சனும்பிழைத்தோ
மீதல்லாலினிவேறெவைபுரிகுவமென்னாப்
பாதைதேடினானோடினானவயணிபார்த்தான். (௯௭)

வேலின்மன்னவன்வீரமுஞ்சூரமும்விடுத்துக்
காலிமேய்ப்பவர்தம்மினுங்காலினாற்கவடி
கோலினானினியாவராற்பெருஞ்சமர்குறைத்துச்
சாலிநாமங்கொண்டாடுவோரெனமனஞ்சலியா. (௯௮)

தனதுமன்னனையெதிர்புகுந்தோடுதறவிர்த்து
மனதுதேறெனத்தேரினிலேற்றிநின்மதியுங்
கனதையும்பொருவீரமுநொய்யினிற்கழீஇய
வுனதுகாற்கதிகாட்டுதெனியாயமோவுரையாய். (௯௯)

தடந்திரைக்கடல்சூழ்புவிதனக்குமோரரசா
யுடம்பெடுப்பதிற்பெரிதவர்க்குறுதியும்வலியு
மிடம்படத்துணிந்தியற்றவதன்றெனிலிறத்தல்
நடந்திடச்செயாதுடற்சுமைசுமப்பதென்னலமே. (௧௦௦)

அரசர்கேவலமுரைப்பதுமன்றியேயரச
புரசையானையிற்கவரிகாலிருபுறம்புரட்ட
வரிசைமாநகர்புகுந்துலாவரும்பொழுதன்னை
விரைசெய்தார்குழன்மடவியரென்சொலார்வெட்சம். (௧௦௧)

துச்சம்வேய்ந்தனதுலமுந்துலத்திற்றனிசெ
யச்சமும்பழியலதுயிர்க்கருந்துணையாமோ
கொச்சைவேந்தருஞ்செருவெனிற்குறிக்கொளும்வாகை
யிச்சைதாங்குவரவைமறந்தென்செய்தாயேந்தால். (௧௦௨)

இன்னவாபுகன்றரசனைவேறுதேரேற்றித்
தன்னெடும்பரித்தேரொடுந்தானைகளோடும்
பொன்வடிம்புளபுங்கம்வான்புயலெனப்பொழிந்து
கன்னல்வேளனநவமணிபோர்முனைகலந்தான். (௧௦௩)

வேறு.

மற்கொண்டெழுஞ்சிங்கனுக்குள்ளதளவீரர்மகிபாலர்மேல்
விற்கொண்டெழும்புங்கநிரைவானசர்தந்தமீன்போலவே
முற்கொண்டெழுந்தங்குபகவெஃதுதொகுமங்கமுகமாறிடப்
பிற்கொண்டெழுங்கொண்டலுந்தாழமழையம்புபெய்தானரோ. (௧௦௪)

வாள்கொண்டடர்த்துச்சினந்தேறிமுற்பட்டவயமன்னரைத்
தோள்கண்டமுடல்துண்டுபடவெய்துபலகோடிதுணைவீரரைத்
தாள்கொண்டுறத்தள்ளிமகுடங்குலைத்துத்தளம்பாறிடக்
கோள்கொண்டிடச்சாடினானண்டர்துதிகொண்டுகொண்டாடவே. ()

வில்லுந்துணிந்தேவுமேவுந்துணிந்தூற்றமிடல்வீரர்தம்
பல்லுந்துணிந்தோடவோடாதநாவும்பகிர்ந்தோடிடக்
கொல்லுங்கொடுங்கூற்றினுக்கஞ்சுமுயிரன்னகுலைவெய்தியே
வெல்லுந்திறத்தாண்மையுஞ்சிந்திமெய்ந்நொந்துவெந்தந்ததே. (௧௦௬)

தன்சேனைவெந்தந்ததும்பின்னவன்சேனைதடையின்றியே
பொன்சாயகஞ்சிந்தியெதிர்நின்றதுங்கண்டுபுலர்வாகியிங்
கென்சாதகங்கொண்டெனுஞ்சிந்தையலமந்தெழுஞ்சிங்கனும்
புன்சாதகம்பாறநேர்நின்றுதுணிவோடுபுகல்வானரோ. (௧௦௭)

முன்னாண்மையிற்றக்கநிலைபெற்றசயவீரமுடிமன்னனு
மென்னாண்மையிற்றப்பியுயிர்கொண்டுவெந்நிட்டதெதிர்கண்டுநின்
றன்னாண்மையிற்றேற்றிடத்தேற்றமற்றுத்தவிக்கின்றனன்
பின்னாண்மையென்பெற்றடைந்தாயடாவிங்குபெருமூடனே. (௧௦௮)

மன்னானவன்வெங்கொடுத்தோடிடச்செய்தவலியென்வயின்
நின்னானினைக்கிற்றுணிந்திங்குபொருதற்குநேர்வாய்கொலோ
வென்னாநெடுஞ்சித்திரக்கைத்தடஞ்சாபமெதிர்கொண்டுகார்
மின்னாமெனக்கோடிமுனையாசுகங்கொண்டுமேல்வீசினான். (௧௦௯)

சதுரங்கம்விரிசிந்துநடுவிந்தநிகர்நின்றதனிவையமோ
டெதிரங்கமுனைகொண்டுகடைநின்றசினவாலியிவனாமெனக்
கதிரங்கெழுஞ்சாயலின்சாயகங்கோடிகைதூற்றினா
னுதிரங்கள்களமெங்கணும்பொங்கவமராடுமொருசிங்கனே. (௧௧௦)

விரிஞ்சாதிபன்றன்னையுங்கொன்றிடாதிங்குவெம்போகவே
பொருஞ்சாயகஞ்சிந்துநானுன்னையுங்கொல்லல்புகழாகுமோ
பெருஞ்சாதகஞ்செய்யுமென்றம்பியர்க்கொன்றபிழைதீரவே
வருஞ்சாதகங்காணுமுறைநின்றதென்கையின்வடிவாளியே. (௧௧௧)

வேறு.

வருவதுதெரிவார்தேர்ச்சிமதியுளார்வந்துந்தேருப்
பொருவதுபொருளாக்கொண்டபுலனிலிபொருதிநின்னைப்
பருவலித்தோளுந்தாளுந்தலையும்பாழ்படுத்துச்சூழ்ந்த
செருவலிதீர்வனென்னாச்சிலையினாண்டெறித்தசிங்கன். (௧௧௨)

மொழிவனகடந்துவெம்மைமுதிர்வனபெருகநின்று
பொழிவனவிடியுமின்னும்புதுமழைக்குலமுந்தீயு
மழிவனபடைகண்முற்றுமசைவனமாமுமண்ணுங்
கழிவனபுவனமென்னுங்கடுங்கணைநூறுவிட்டே. (௧௧௩)

வலவனைத்தடிந்துபூட்டெவ்வக்குராசதங்கள்சிந்திக்
குலமணிக்கொடிகுஞ்சப்பொற்றேர்ககுழந்துகள்படக்கொண்டுதிச்
சிலையிணைமத்துப்பின்னுஞ்செய்வனமுழுதுஞ்செய்து
கலகம்மற்கொண்டானந்தோகவமணிகலக்கங்கொண்டான். (ககச)

மன்னவனேடுமாறுமானமென்றன்னிவேறு
பின்னையுந்தெரியானாகிப்பிடித்திடவிழிக்குங்கள்வன்
றவனையத்தலமங்கைகுதவிப்பதையுணர்ந்தான்சிங்க
னென்னடாபோரவோவல்லாதோடவோவெண்ணினின்றாய். (ககரு)

உற்றதுபகர்தியென்னாவுமர்போலுரைபொன்றின்றி
மற்றவனிற்றலேச்சிவமௌனயிலங்ககுச்
செற்றமுமானந்தானுந்தீர்ந்தனைநின்னைக்கோறல்
குற்றநீயாடற்கஞ்சலேதெனக்கூறுமேல்வை. (ககசு)

வடவையின்மருகித்தேரும்வரிவில்லுங்கணையுங்கொண்டு
படபடத்தெதிர்த்துமேதுஞ்சமர்த்தனைப்பசழிபொன்றாற்
புடவியிற்றகழ்பட்டோடப்போக்கினன்பொருதவீரர்
கடகரிபரிதேர்தூசிமுனையினைத்தூசிகண்டான். (ககஎ)

வந்தனவந்தவெல்லாம்வரவரவுயிரைவாங்கி
யந்தகன்விருந்துகொள்ளவருங்களியாடல்கொண்டான்
கந்தனைப்போலவன்றவிளக்கினனவன்விற்கல்வி
யெந்தநாளினுந்தேர்ந்தோதற்கிசையுமோவிசையாவம்மா. (ககஅ)

காமனைக்கடிந்தநெற்றிக்கண்ணுதல்கடுப்பச்செம்பொன்
மாமணித்தேரினின்றவனப்புவனேந்திரவீரன்
சேமவிற்கொண்டவீரசிங்கனையுவந்துநோக்கிப்
பூமியில்வீரமென்னும்பூணிவனெனப்பூரித்தான். (ககக)

மாமனையவனுக்கானமந்திரிதனைவெங்கண்டு
சேமவில்வேடுநின்றசிங்கனைச்சிங்கந்தன்னைப்
பூமியின்மாய்க்குமெண்காற்புள்ளினிற்புக்குமாய்ப்பேன்
நீமனப்படையொன்றாலேயென்பதோர்சீற்றமானான். (கஉ0)

எரியவெகுளிவெந்தீயிருவிழிக்கடையினின்று
மாறொருவடவையென்னவாகினிக்கடலின்மண்டச்
சீறினனவிற்கோட்டித்தெறித்தனன்சிறுநாணோசை
மீறினதிசைகண்முற்றும்பிளந்ததுபிரமனண்டம். (கஉக)

ஊழியினுவரியன்றியுலகினைப்புறத்துச்சூழ்ந்த
வாழியினேறைத்தக்கூற்றுவலம்புரியக்கைவாங்கிப்
பாழிவெற்தடந்தோள்வீரன்பவளவாய்வைத்தலோடு
மேழிருபுவனத்துள்ளுஞ்செவிடுதெழுந்தவோதை. (கஉஉ)

மச்சவியூகஞ்சிந்திமதமலேயிரதம்பாய்மா
செச்சைவாள்வயவர்முற்றுஞ்சிதைந்தனசிந்தைதேம்பி
முச்சகமுற்றுமச்சமுற்றனவினிமேலிந்த்ரான்
வச்சிரப்பகழிகோக்கிலென்படாவையமன்னே. (கஉ௩)

எதிர்வருசிங்கன்சிங்ககேதனத்திறைவன்கொண்ட
முதிர்சினக்குறிப்பும்வீரமூர்க்கமுமூரிவின்னு
ணதிர்தருகலிப்புநிற்குநிலேமையுமடங்கநோக்குக்
கதிர்நகைபரப்பிச்சீற்றக்கனலொடுகெளிப்புஞ்சோ. (கஉ௪)

காற்றிடிமழையைமுற்றுங்காந்ததுவயிற்றிற்காலக்
கூற்றினுங்கருமங்கோடிகொண்டதுதிங்கள்வெண்மை
மாற்றருந்தவளச்சோதிவலம்புரிகையின்வாங்கி
யேற்றெருலிமுழக்கஞ்செய்தானிவைக்கெவையேற்றஞ்சொல்வாம். ()

ஓடியவிரிஞ்சனேடற்குரு துகுப்புற்றுமண்மேல்
வாடினனமைச்சனன்னமன்னினன்மற்றுளோர்தங்
கேடினியென்னே யானுங்கிளத்துவனமரர்செங்கண்
மூடினரென்றபோதுசேடனுமொழிப்போமோ. (கஉ௬)

இருவருஞ்சரிதான்வீரமிவர்கடம்மனத்தினுள்ள
கருமமும்விஙயப்பாடுங்கைத்தொழில்வலியுங்காணற்
கருமையேயென்னவைந்துதருவையும்வெறுமையாக்கி
மருமலர்கொள்ளேகொண்டுசொரிந்தனர்வானேரெல்லாம். (கஉஎ)

இன்னதோரமைதிகொண்டாங்கிருவருஞ்சமர்நின்றேற்று
ரன்னதோரமைதியுள்ளத்தாகுலமகற்றித்தத்த
மன்னவர்க்குதவிகோண்டுவாகினிமுழுதுஞ்சூழ்ந்த
பின்னினிநடந்ததன்மைதெரிந்தவாபேசுகிற்பாம். (கஉஅ)

வேறு.

இருவருஞ்சமர்பொருதினரெதிரெதிரிவர்களின்சிலேயுமிழ்தருசுடுசர
வருடமிஞ்சினகடல்புவிதிசைநிலேமருகியஞ்சினசுரர்முனிவரர்முத
லொருவருந்தலேநிமிர்கிலர்மனதயருறவருந்தினரொளிநிறைகதிருடல்
பொருபெருஞ்சுடரவிதரவிருள்கமைபொலிவமைந்ததுபுகலவுமுளதரோ. ()

காதலங்களில்வளைபடுசிலேவிடுகணேகளின்குலமுமிழ்தரவெரிபொறி
சிரதலஞ்சிகைகருகினநிமிர்புகைதிமிரமுஞ்சலமழிவனபொருபரி
யிரதமங்குலியளவினுமுருளேகளிடிபடும்படியுரசினமுறைமுறை
தாதலம்பொடிபடமுடுகினர்சமர்சரிசொலும்படிபொருதினர்விருதரே. ()

அருவிபம்பியமலேநிகர்மதமலேயபராமுந்தறிபடவிடுகெடனதி
பெருகவம்பரமிசைநடமிடுபெரிபிரளேயம்புரள்திரைமுறிவதுபுரை
பொருவுமங்கதமணிமுடியுடைபடுபுழுதிமண்டினசமரிகேளவெளி
மருவிவந்தெதிரிதர்முதலியர்மறலியின்றிசையணுகினர்மலியவே. (கங௧)

கொடிதொறுங்கினசிலவொளியிமிழ்தருகுடைதொறுங்கினகடகரிவிடபரி
யடிதொறுங்கினபருமணிரதநிரையணிதொறுங்கினவயவர்களணிமணி [ளொ
முடிதொறுங்கினசிலைகணைகொழுமழுமுனைதொறுங்கினபணைகிடுகொலிவ
துடிதொறுங்கினபடிகளினிடிபடுதகனெறுங்கினசமரடுகளமரோ. (கநஉ)

தமரகங்கிடுகொலிவளைபணைகுழல்சகடைதம்புருதவின்மணிமுரசதிர்
பமரமங்குழலிணைமருவினபடைபவுரிதந்தமர்முடுகினரொதிரொதி
ரயரங்கதமுறவசுரரைமுனமடையவென்றிடுபடுகளமதைநிகர்
குமாருங்குமரியர்களுநிறைபுவிகுணலைகொண்டதுகுதிகுலமுழுகவே. ()

சமரமுஞ்சரிபொருதினரிவரடுதநவினுண்கடையிடிபடவலிகொடு
பமாமிஞ்சியசழுகிறகணிகணைபகைவர்தங்குழுமுழுவதுமுடறலை
சமர்படும்படிவிடுமளவினிலுயிர்கருகியங்கமுளுருகிடநமனுல
கமர்தல்கொண்டனர்பரிகரிரதநிரையழிவுகொண்டடுகளமிசையலையவே. ()

திருகிவெஞ்சமரிடுபடைகொடுவருதிரண்மிகுந்துறுமதிரர்முதலியர்
கருகிவெஞ்சிலைதொடுகணைமுறிபடுகதியிழந்தனருடல்பிரியுயிர்நிலை
யுருகியந்தகனுலகுறைமகளிர்களொளிநலம்பெறவிவர்தசைகுருதிகள்
பருகியந்தாமுழுதினுமுலவினபறவையின்குலமுறைதருபரிசரோ. (கநு)

துணைவரும்பரிரதமுறபவருடறணிபடும்படுகளமிசைகுருதிக
ளணைவரும்புனலெனநுரைகவரிகளலைநெடுங்கரையெறிவனவிடையிடை
யிணைவருங்குலவரைநிகர்மதமலைவிழுபடுங்கயலுறழசிகடல்விடு
புணைவருங்கதிருமிழ்குடைபலபலபொருள்விளங்கினபொலிவனபுதுமையே

வேறு.

இருவருமிரண்டுகையிலெடுத்தவில்லிரண்டுகொண்டு
வருபடையிரண்டுபொலுமடிந்திடவாளிதூர்த்துக்
குருதிநீராற்றின்கொள்ளைவெள்ளத்துட்குளித்துநின்றே
பொருவிளையாடல்கண்டார்போர்வயப்புலிபோலம்மா. (கநஎ)

இன்னவாநின்றுசெங்கையின்னவாசிலைகள்வாங்கி
யின்னவாசாங்கள்விட்டாங்கின்னவாவடுபோராட
லின்னவாவெனத்தோநின்றிமையவரேக்கங்கொண்டா
லன்னவாவெவர்காவாற்பின்னறையலாந்தகைமைத்தம்மா. (கநஅ)

இப்புவிதனிலேயன்றோநிகலிநின்றடுபோராற்று
மப்படைதவிருலன்றேவப்படைவேலையென்றே
செப்பிருவரிதன்னைசெப்புதற்கருமையாய
முப்புவனத்துமுள்ளமூதறிவுடையோரின்னும். (கநக)

சுடுகணைதூறுவாங்கிச்சொலும்புவனேந்திரமன்னன்
கொடுவரியனையசிங்கனுடன்முற்றுங்குளிக்கவெய்தான்
படுதிரையுதிரவெள்ளம்பௌவமேய்ந்துயர்ந்தவானந்
தொடுமேலமுடியின்மேகஞ்சொரிந்தனசொரியமேன்மேல். (கசo)

சிங்கனுமதனைச்சற்றுஞ்சிந்தையுட்கருதான்வில்லின்
புங்கநூறைந்துகொண்டுபுகழ்ப்புவனேந்த்ரவீர
னங்கநொந்தலசச்சிந்தியவனுதனடுவின்மூன்று
துங்கவான்சரங்களோட்டித்துளங்கிடத்துள்ளியார்த்தான். (கசுக)

நெற்றியிற்குதைமட்டேறிநெடும்புனற்குருதிபொங்க
வுற்றமூவாளியாலுமுணர்ச்சியற்றரிதிற்றேறி
மற்றவன்கையில்வாங்கும்வடிச்சரமொன்றுகொண்டே
செற்றமுற்றெதிர்த்தசிங்கன்றிருநுதறிறக்கவெய்தான். (கசுஉ)

அடுசரநுதலிற்கட்டும்பட்டத்துக்காணிகொண்டாங்
கிடுதாந்தரைந்தாற்போலுமிருத்தலுமெய்த்தசிந்தை
நொடியினிற்றேறிநின்றுநுவலுவானடடாநின்கைக்
கடுமையும்விநயப்பாடுங்களறுதற்கருமையந்தோ. (கசுங)

உன்னையுங்கொல்வித்துன்பாலுரிமைகொண்டிருந்தமாது
தன்னையுமழைத்துவந்ததாலியற்றவளாற்சொல்ல
முன்னையுங்கேட்டேனெம்பிமார்களைமுனைந்துகொன்ற
பின்னையுங்கேட்டேனின்றுங்கண்டனனினதுபெற்றி. (கசுச)

ஆயபோர்வல்லநின்னையடுசமர்தனிலேவென்றுன்
ஞயகிதனையுமெங்கைநன்மணம்புணர்த்தற்கான
மேயநன்முகூர்த்தங்கேட்டுமேவினேனினியானுன்னைக்
காய்கணைக்கிரைகொடாதுமீள்வனோசிங்கன்காண்டி. (கசுரு)

எம்பியர்தம்மைக்கொன்றவேழைநின்றலையையின்றெ
னம்பொடுமும்பர்செல்லவனுப்புவனென்றுவாளி
வெம்பரவென்னவாங்கிமின்னெனவிடுத்தான்சோடி
தம்பமற்றுலகமெல்லாந்தலைதடுமாறவன்றே. (கசுசு)

ஐந்துநாலைந்துகூறுமையைந்துநாலறுத்துவாளி
சிந்தினன்றுரோணஞ்சங்காரித்தமாவர்த்தஞ்சூழ
வந்துபெய்சோனைமேகமழையெனமாறுநின்ற
தந்திவாம்பரிதேர்காலாடவரையின்மேன்மடிந்துசாய. (கசுஎ)

இடும்புகள்சுற்றதல்லாலெதார்த்தமேகல்லாவுங்கள்
குடும்பமுந்திருவுமின்றுகொள்ளைகொண்டெரிவாயிட்டு
நெடும்பழிதீர்வான்வந்தேனென்முன்னேநின்றிங்கென்னைக்
கடுஞ்சினம்புகன்றாய்கொல்லுங்கரிமுன்கல்லெறிவார்போலும். (கசுஅ)

உங்களிலுமதுதந்தையன்றியேயும்பிமாரைப்
பங்கமேபடுத்தற்கெண்ணேனவர்களும்வாளாபட்டா
ரங்கதுபோலநீயும்படுவதற்கமைந்துநின்று
யிங்கெதுநான்சொன்னாலுங்கேட்குமாறெண்ணுவாயோ. (கசுகூ)

படுகளம்புக்கபோதொப்பாரியார்பயிலுகிற்பா
ரடுவதுநீத்துநின்றோடாவதுபேசியாண்மை
விடுவதுவிழுமமாமோவெனச்சொலாவெகுளிவீங்கா
நடுவதுகுறித்துநின்றதிருப்புவனேந்த்ரநாதன். (௧௫௦)

இமையொடுமிமைகொட்டாமுனிருபதுபகழிகொண்டு
சிமயமந்திரத்தையொத்ததேர்பரிபாகுசிந்திச்
சமையும்பொற்கவசம்வீழ்த்தித்தனிநுதற்பட்டம்வெட்டி
யமையும்வில்லறுத்துக்காலாளாக்கினனவனிமீதே. (௧௫௧)

கவசம்போய்ப்பட்டமற்றுக்கைவிலுந்துணிந்துகட்டுந்
துவசம்போய்ப்பரியும்பாகுஞ்சுடர்மணித்தேருந்தூளா
யவசமுற்றெழுந்தானென்றுங்கறியுமுனொருதேரேறி
நவசரம்பலபெற்றன்னசாபமுங்கனிதுவாங்கி. (௧௫௨)

கொக்கரித்தடற்சிம்மேற்றின்குருளையொத்துருத்துநான்கு
பக்கமும்விசும்பும்பாரும்பருதிவெஞ்சுடரையோட்டி
மிக்கிருட்படலமூடமின்னொளிவாளிகோளின்
சுக்கிரனுதையகாலப்புயலெனச்சொரிந்தான்மேன்மேல். (௧௫௩)

அண்டமுந்திசையும்பாருமடைத்தவான்சரக்கூடத்தைக்
கண்டகாம்போசவேந்தன்கைநொடிப்பளவிலெல்லாம்
பண்டைபோல்வெளிசெய்தந்தப்படிசெய்துசிங்கன்மீதுந்
துண்டவெண்பிறைவாயம்புசொரிந்தனனுதிரஞ்சோர. (௧௫௪)

உதிரமுங்கருதான்வானத்தருமையும்வெருவல்கொள்வா
னெதிர்படத்திருகிநின்றுஞ்செழிற்புவனேந்த்ரன்பொற்றேர்க்
குதிரைகட்காறுநூறுகொடுஞ்சரமுடலிற்பூட்டிக்
கதிவிதந்தளரச்செய்தான்கைவிற்சிஞ்சினிக்காலார்ப்ப. (௧௫௫)

கரைபுரண்டெழுந்தவெள்ளக்கடலெனச்சரங்கள்கொண்டு
விரைசெறிமாமனன்றன்மந்திரிமிடைந்ததானை
தரையினினிலைபெறாமற்றனித்தனிமயக்கிச்சாய
வரைமுழைமுழங்குசியத்தழனியும்வாயாற்செய்தான். (௧௫௬)

வீரசிற்சிறந்தவீரசிங்கனும்வீரங்குன்று
மாரனேர்திருக்காம்போசவள்ளலைச்சுழிந்துநோக்கிப்
பாரினிலெவரானாலுமாருயிர்படுக்கும்பாணம்
நேர்விடுக்கின்றேன்வல்லைகாவெனநிகழ்த்தியெய்தில். (௧௫௭)

அயன்படைவாங்கிப்பூசையாவனமுறைமைமுற்றும்
பயன்படமனத்தாலூட்டிவிட்டனன்பருவகாலப்
புயன்மடுத்தாற்றநீரின்புக்கநீரெங்குஞ்சாய்த்து
வியன்படவிபுதருரும்விதர்ப்புறத்தவனிவிம்ம. (௧௫௮)

சரோருகநாமவாளிசதுர்முகத்தெட்டுத்திக்கும்
விரோசனம்பரப்பிநேரில்விரவலும்விரைவிலந்தச்
சரோசனந்தழுவும்வெய்யசரம்விடுத்தெய்யாநின்றே
னரோசனங்கொள்ளவீழ்த்தானமராவலந்தார்ப்ப. (கருக)

அச்சரமழித்தானென்னுமவசரங்கொண்டசிங்கன்
றச்சரம்மனமேபன்னூட்டவத்தினிற்சமைத்துச்செய்த
முச்சரஞ்சோமசூரியாக்கினிமுதுபேர்கொண்ட
வச்சிரச்சரங்கொண்டெய்தான்மறலியும்மனநின்றஞ்ச. (கசுo)

மூவகையுலகமுற்றுமொருவகைமுடிப்பானுற்ற
மூவகைமூர்த்திபோலுமுதிர்குணமூன்றுங்காட்டி
மூவகைச்சுடர்செய்வாளிமூன்றுவந்திடக்கண்டந்த
மூவகைச்சரங்கொண்டாறுகூறறமுறித்துவீழ்த்தான். (கசுக)

தனுவலங்கொண்டுமூன்றுசரங்களுந்தவிடாயோட
மனுவலங்கொண்டவிச்சைமன்புயத்தாறுநூறு
பினும்வலங்கொண்டுவிட்டான்பிறைமுகவயிரவாளி
முனும்வலங்கொண்டார்யாவரிவன்வலங்கொண்டார்முற்றும். (கசுஉ)

வீழியின்கனியையன்றிப்பலாசமென்பூவுமேய
பாழிவன்புயங்கண்முற்றும்பசும்புலாற்குருதிபாய
வாழிசூழுலகம்போற்றுமடற்புவனேந்த்ரனெஞ்சஞ்
சூழிமாலிபம்வேற்குற்றுண்டசைதலிற்றுளக்கமுற்றான். (கசுங)

நின்றனன்சிலையையூன்றிநெடுமணித்தேரிற்சற்றே
சென்றபின்மயக்கந்தீரச்சிங்கனைவியந்துநோக்கி
நன்றுநன்றுனதுவிற்போர்நானினியுன்னையின்னே
கொன்றடுகளத்திலக்ரபூசையுங்கொள்வனென்றே. (கசுச)

குகரம்விட்டெழுவெஞ்சியக்குருளையேறனையவீரர்
நிகரமும்நெடியதேரினிரைவயப்பரியும்பாகுந்
தகரமும்மதவெண்கோட்டுத்தந்தியுஞ்சிந்திச்சேனைப்
பகரமுங்குலையப்பாணம்பரப்பிமேற்பதகன்றன்னை. (கசுரு)

காருடத்துவசம்வீழ்த்திக்கந்துகஞ்சிந்திப்பாகுந்
தேருடனழியமோதிச்சிஞ்சினியறுந்துவில்லும்
பாருடன்பாகமாகப்பாணமொன்பதுகொண்டெய்து
தாருடன்றலையையொற்றைக்கணையினூற்றடிந்தானன்றே. (கசுசு)

வீரகேசரியும்வீந்தானென்பதையறிந்தவிண்ணோர்
சூரரிலிவன்மிக்கானென்றுவலங்கொட்டித்துள்ளித்
தாருவின்கனிகாய்மென்பூதளிர்களைகொள்ளைகொண்டு
நீருடன்சொரிந்துதூசுவீசினார்நேயநேர்ந்தே. (கசுஎ)

ஐம்முகன்ஞதிதேவர்தங்களையருளானேக்கிச்
செய்யாங்கருணையாலுற்பவித்தளசிறவரின்னேர்
பையுளிற்படாருற்றபோழ்திறும்பண்புதோலா
ரெய்வலிச்சிங்கன்றன்னைக்கொன்றதோவிவர்க்குமேன்மை. (கசுஅ)

காயமேசிறியரேனுங்கருத்தினிற்பெரியரன்றே
நேயரூவுலகும்வெற்றிசெம்புவர்நெறியினீசர்
மாயமேபுணர்த்தபோதும்வலிகிலைமன்னவற்றே
வாயமேயுணரில்யார்க்குமறமலாலறமற்றுண்டோ. (கசுக)

ஆக்குவதேதுவென்றனல்லறத்தினையாக்கவேண்டும்
நீக்குவதேதுவென்றற்கோபத்தினைநீக்கவேண்டும்
நோக்குவதேதுவென்றன்மெய்ஞ்ஞானமேநோக்கவேண்டுங்
காக்குவதேதுவென்றனல்வாய்மையேகாக்கவேண்டும். (களo)

கருவகங்காரம்வென்றகருணையோர்வடிவமான
மருவகன்பிருகுவென்றுமாமுனிதன்னைத்தங்கள்
குருவெனக்கொண்டுவேண்டும்பொருளெலாங்கொள்ளைகொண்டார்
பெருவலியுடையமைந்தரேதுசெயப்பெறர்களம்மா. (களக)

தந்தையுமைமந்தன்பட்டதன்மையிலிவன்கைக்கொண்ட
மந்திரவில்லாற்பட்டுமாளுவானென்றுதேவர்க்
கெந்தையெம்பெருமான்கூறக்கேட்டனரீசற்போற்றிப்
புந்தியும்புலனுநீரும்பூவும்போற்பொலிந்தார்மன்னே. (களஉ

வேறு.

பட்டனன்முற்புதல்வனெனும்பரிபவந்தன்செவிகளிடைப்பட்டலோடுங்
கெட்டனனென்றழிந்தழியாக்கேதமிகுந்தறிவுகுன்றிக்கிளர்பொற்றேர்மேற்
றெருட்டனவிற்கணைசோரத்துணைமலர்க்கண்டுளிசோரச்சோராவாவி
விட்டனவாவெனச்சாய்ந்தான்விசயதரன்படைமுறிந்துவெந்கிட்டோட. ()

கனமுழுதங்கப்படலங்கனைமுகிற்படலமெனக்கலந்துதத்த
முனமுழுதுங்களிபொருந்தற்றகுசோரிதசையருந்தியுலவச்சூழ்ந்த
வனமுழுதுங்குறைந்தனவாமலர்விழியாற்றச்சனுைம்வருந்திநோக்கித்
தனமுழுதுந்தனைச்சாரத்தானுந்தன்னிறைவன்றேர்தன்னைச்சார்ந்தான். ()

வண்பட்டமதகரிவெவ்வழற்பட்டகான்புளினர்வைவேற்பட்டுப்
புண்பட்டதெனக்கிடந்தபுரவலனைத்தெளிவுபட்டுப்பொருதச்செய்வான்
றண்பட்டபுனல்விசிறித்தனித்தென்றல்வதனமிசைதவழமேன்மே
லெண்பட்டபல்வகையுங்கொடுபுரிந்தான்மூர்ச்சைபட்டவிறைவன்றேறி. ()

முற்றுபகைகெடவேறுவைசிமுழுதுமிருவேமுமுடித்துப்பேசி
யுற்றனமின்றெனைநீத்துமருவலன்றன்சாம்படைவாளுற்றுயெற்றாய்
மற்றினியான்வென்றுமியார்க்கொண்டுபுவிபுரக்கவைத்துவன்மை
பெற்றிவெனம்மவெருதுயிர்சுமந்துதனிநின்றபேதையேனே. (களசு)

ஒருகோடிகுஞ்சரமுமிருகோடிவயப்பரியுமொருகோடின்றி
வருகோடிநராதிபருமணித்தேருமனீகினியின்வனமுஞ்சேரப்
பொருகோடிமகன்கரத்துத்தனுக்கோடிவளையாமுன்பொருதுகொன்றான்
முருகோடியளிசுவைக்குந்தாமத்தேனமுதிழவான்முன்னின்றேனே. (கஎஎ)

தருமன்சொன்முறைநீதிதலைநின்றதவன்வாய்மைதள்ளியென்ற
னருமைந்தர்தமைத்தோற்றுமருங்கடல்வாகினிதோற்றுமாசைதோலாக்
கருமங்கணிரைசூழவினுமொருத்திமுலைநலமேகருத்தைக்கல்லக்
குருமந்தநகைவிலங்கவில்வண்மைகண்டுவெற்றிகொளநின்றேனே. (கஎஅ)

இன்னபலபலபிதற்றியிருவிழிபுண்செய்தருநீரொழுந்துபாய
மன்னவனுந்துற்சனனுமடிந்துளவாகினிபோகமற்றுங்குள்ள
தன்னுரியசேனையுமெய்தவிப்புற்றுமத்தெறிதண்டயிர்போனின்றே
யின்னலுழந்துறும்வேலைதன்னகர்க்கணிக்கேதமெய்திற்றாலோ. (கஎகூ)

முந்துமகன்போர்சாய்ந்தமுறைதருமன்றிருச்செவியின்மூழ்கலோடு
நிந்தனைசெய்திறைவன்முனநீக்கியதன்மனத்துனியுநினையானுகிக்
கந்தவகன்பிற்படப்போய்க்களம்புகுந்தானரசனிருகான்மேற்கண்ணீர்
சிந்தவிழுந்தானிறந்ததிருமகார்தமக்கழுதான்றெளிவுசூழ்ந்தான். (கஅ௦)

அரசர்பலகோடிநின்றுகடையேற்றமுடியேற்றவரசேமுன்னீர்
பரசுபெரும்புவியனைத்தும்பரித்தபரம்பரியபுயப்பாழியோய்நா [கோடாக்
னுரைசெய்பொருளியாவுமுணர்ந்துரைபுரிந்தேன்கோடியெனவொன்றுங்
கரைசெய்பெருங்கடற்சுழியினவ்வெனநின்றலமுழந்துகவலுகின்றாய். ( )

சங்கமின்றிமணமியற்றுந்தனிவிழவும்வரம்புதகாக்குலமுந்தாழாக்
கங்கையிலாவளநாடுங்கதிர்விளைவிலாதபுலக்காடுங்கற்பின்
மங்கையிலாமனைவாழ்வும்மகவில்லாநிதிப்பெருக்கும்வண்மைசூழ்ந்த
தங்கிளையில்லாவரசுந்தரணியினன்றெனவுவத்தறகைமைத்தாமோ. (கஅஉ)

கறுவுதல்கொண்டிவரொடுவெங்களம்பொருதலாற்பயனென்கருமந்தேர்ந்து
செறிமலர்ப்பூங்கழல்வேந்தநானெனுவைகொளப்புரிந்துன்சிறுவரோடு
நெறிமுறைவாகினியுமவராற்றருவன்சமமொழிகநீயின்றென்றான்
வறிதுபுகல்வதுமறந்துமறங்கொடுபுன்னகைசெய்துமன்னன்சொல்வான். ( )

நீயுமுனமெடுத்துரைத்தநீதியொன்றுங்கேளாமனேயநெஞ்சில்
வீயுமுறைநெறிநின்றேன்விதிமுடிவும்வினைவலியுமேலேநின்ற
காயுநெடுங்கணைபாயக்காளையரும்படையுமுயிர்சுழிந்தார்யானிங்
கேயும்வகைதேர்ந்தினியிவ்வரசாளவெண்ணுவதுமியற்கைத்தாமோ. (கஅச)

பிறத்தலுளபொழுதேபின்பிரியாதுதலைமீதுபின்னியூழி
னிறத்தலுமுண்டாயபலயோனிகட்குமிதுமுறைமையியற்கையாலோ
வறத்துறைநீங்கியபொழுதுமவனிதலமுழுதுடைத்தொல்லாண்மைவேந்தர்
மறத்துறைநீங்காதவின்மைகொடுசிற்றல்பெரும்புகழின்வண்மைத்தாமால்.

இன்றெனதுபுதல்வரினுமினியபடைத்தொகையினும்வேறெதுவோவெற்கு
நன்றிதருமாக்கவர்பாலுனிரந்துவாழ்வுகொளனன்றேநன்றே
நின்றுசெயத்தருங்கருமநெறியமைச்சர்புகன்றநியாயங்கோடேன்
சென்றுநகர்க்கேகுவையென்றவற்போக்காவாண்மைகொடுதேர்வல்லோனும்

தற்சனனைமுகநோக்கிநீயுமந்தப்புத்திசிகாமணியைச்சூழ்ந்து
விற்சரங்கொண்டடுதியிந்தவிறற்புவனேந்திரனையொருவினாடிக்குள்ளே
கெற்சனைவெம்புலிவாயினசமெனச்செய்துயர்கீர்த்திகிளரச்செய்வேன்
முற்சனங்கொண்டெழுகவென்றான்மொழிப்படியேமுறிந்தபடைமுழுதுங்
[கூட்டி. (௧௮௭)

தற்பலன்சேர்தற்சனனுந்தோமடைந்தவருதினியின்றொகையுஞ்சூழ
இற்புறல்கண்டிடத்தேற்றிக்கிளர்மூர்க்கமுண்டாக்கிக்கிரிமாவென்ன
முற்புகுந்தானியங்கோடிமுகிற்றனிதமெனமுழங்கமுறுவல்பூத்து
விற்புருவமொடுகுனித்துக்கெற்புலிபோற்புத்திசிகாமணிவீறிட்டே. (௧௮௮)

தனதுமணித்தடந்தேருந்தற்சனன்பொற்றேருமிருதளமும்பொங்கி
மனதுநெருப்பெழத்திருகித்திரிதூளிகடல்சுவற்றிவானோர்செங்கண்
முனைபுதைப்பப்பெருஞ்சபதமுறைகூறியரிக்குலங்கண்முழங்கல்போலுந்
துனைபவனக்கறங்கெனமாதிரஞ்சுழலப்படைக்கலங்கள்சொரிந்தார்சுற்றி. ()

வேறு.

வில்லிட்டனர்கணையிட்டனர்வேலிட்டனர்கவண்மாக்
கல்லிட்டனர்கதையிட்டனர்கதமிட்டனர்கைசேர்
மல்லிட்டனர்வலியிட்டனர்மாறுமனவயிரச்
சொல்லிட்டனர்சுணைமிக்குளசூரத்தனவீரர். (௧௯௦)

கணையும்பல்கதையும்மெறிகவணுங்கொழுமழுவுந்
திணையுந்துகள்படவுந்தினர்செறிமால்வரைமுடியார்
புணையின்வனமிடுவெங்கனல்புரையும்பொறிபுகையு
மிணையின்புகழுயர்விண்ணவர்தருவும்பணையெரிய. (௧௯௧)

கலிதண்பணைவளைவன்றுடிகழைமத்தளமுழவ
மொலிதண்கடல்சுலவும்புவிமுழுதுஞ்செவிடுறவே
பொலியன்னவர்படையின்வெயிலிடமன்னவர்பொன்னின்
மலிமின்னணியொளிகண்ணிணைமருண்மண்டினவெறியே. (௧௯௨)

மதமற்றனபுரசைக்கரிவடிவற்றனதேர்கள்
கதமற்றனகுதிரைக்குழுகவினற்றனகவிகை
பதமற்றனகழன்மன்னவர்பனகத்தலையிறைவன்
நிதமற்றனவிமைபொத்தினன்மைசேரமருமே. (௧௯௩)

தோல்போயினதோளுந்துகண்மாவாயினதுணைமாக்
கால்போயினகாலாளணிதேருங்கடைதேரு
மேல்போயினமேலானவர்தன்மேலுளவியலும்
மால்போயினமால்விண்ணவர்மனமுந்நனிமருள. (௧௯௪)

பிதிரஞ்சலதாமஞ்சுறுபிறையம்புகணிறைவா
னுதிரஞ்சலமுறுசஞ்சலமவிர்கொண்டொளிபரவ
வெதிரஞ்சலமுனைகவ்வினபடிநின்றனவிடையி
லுதிரஞ்சலமெனவிஞ்சினவுவரித்தலையொழுக. (ககூரு)

எய்யும்படைமுறியும்பொழுதெழுவெம்பொறியெரியிற்
கையுந்தலைகுடலும்மிருகாலுங்குருதியுநீண்
மெய்யும்விழுவனநான்மறைவேள்விக்கிடுவிறகும்
நெய்யுந்திகழ்கனலும்மொருகுழிவீழ்வனநிகர்வ. (ககூசா)

மரணஞ்சிறிதுணராதுகைவலியாமனமெலியா
விரணம்படவமராடினரிருபாலுளவீரர்
கரணம்பொறிபுலனும்பொடிகதுவிக்குடலெரியச்
சரணம்புகுநெறிகண்டிலர்நிலைகெட்டுயிர்தளர்வார். (ககூஎ)

துற்சன்சலதாமாமழைசொரிவாளிகொடெதிர்போ
ரற்சந்திரனெனவெய்தனனறிவோர்புகழறிஞன்
மற்சுந்திரவலிதிண்சிலைவடிவம்பெழுமுனையான்
முற்சந்தனமழியப்பொருதினன்மற்றதுமுடிய. (ககூஅ)

தேருந்தறிபடவண்சிலைமுறியக்கணைசிதையாக்
காரும்முதிரிடியுஞ்செறிகனலும்பலமுகமாய்
நேரும்படிதிருகித்திரிபவனும்பவனனுநேர்
போரும்பொரவருவானொருகதைகொண்டெதிர்புக்கான். (ககூகூ)

கதைகொண்டுயர்தேரும்பொடிகதுவப்பரிநிரையும்
வதைகொண்டணிவலவன்னுயிர்மடியக்கைபுடைத்தா
னதையஞ்சுபுகலைவண்மையிலதிசுந்தரதிலகன்
புதைவெம்புலியெனவங்கொருகதையிட்டமர்பொருவான். (உ௦௦)

வேறு.

இமையவர்வாங்கிப்பண்டுபயோததிநடுவணிட்ட
சிமையமந்தரமேயன்னகதைவலந்திரித்துவெம்போ
ரமையநின்றடடாநின்போற்றுற்சனுவடர்க்குமாண்மை
சமையுநற்கூற்றுக்கேவர்நிகரெனச்சாற்றலாவேன். (உ௦க)

நிருபன்மேன்மைந்தர்தம்மேனின்றுளபடைமேல்வெம்போர்
பொருதொழின்மறந்துநீயிங்கெய்துதல்பொருந்தநோக்கி
வருநெறிதுருவாநின்றேன்யான்செய்மாதவமேயின்று
தருமதேவதையுங்கூட்டித்தந்ததுநின்னைத்தானே. (உ௦உ)

பொய்கொலைகளவுகாமங்கட்குடிபூணும்பூணாய்
மெய்புனைந்துள்ளமெய்யைமெய்படவிலங்காநின்ற
வெய்யதுற்சனநின்புன்மைவிரகினாற்கற்பினெம்மோய்
மையரிக்குவளைக்கண்ணிக்கின்னன்முன்வருவித்தாயே. (உ௦ங)

மந்திரிக்கழகுமன்னந்காவனவாய்ப்பநாளுந்
தந்திரம்புரிதல்காலமிடம்வலிமுடியுந்தன்மை
முந்துறத்தெரிதலென்றுமுறைமைபோய்முறைக்கேடாயுன்
புந்தியிற்சிறுமைகொண்டபுன்கணேன்புலமைத்தம்மா. (உ0௪)

கதையிதன்றலையைபன்றிக்கடவுளர்கூட்டங்கூடி
யிதமுறவிலக்கினாலும்பிழைபடாதெதிர்வாயென்னப்
பதயுகம்பெயர்த்துவிதியாநிபோய்ப்பவனனஞ்சப்
பிதிரமுஞ்சலெங்கொள்ளப்பிறங்கற்றோள்கொட்டியார்த்தான் (உ0௫)

ஆர்த்துளவமலேயண்டகோளமுமதற்கப்பாலுங்
கோத்துளவுமையினாடல்குறுக்கெடுத்திசனேடுஞ்
சேர்த்துளவமருள்ளந்திகைத்துளபோர்க்கணின்று
பார்த்துளவெவருநெஞ்சம்பதைத்துயிர்ப்படங்கினால். (உ0௬)

அதுகுறித்தெதிரினின்றதுற்சனனம்மகின்றன்
முதுமொழிச்சினமும்வீரமுறைமையும்மொழியவேண்டாம்.
மதிதெளிவினர்குணியேமதிதெளிவினனென்போல்வார்க்
சதுசெயற்கருமையாகாவென்பதுமடுக்குமாலோ. (உ0௭)

வஞ்சனையறியாய்வேடமாறித்தாபதன்போல்வந்து
செஞ்சொலான்மறைமாதுள்ளந்தெருட்டிமோதிரங்கைக்கொண்டு
கஞ்சவான்விழியினாளைக்கங்குலிற்காந்துசென்ற
தஞ்சியோவலதுவீரத்தாண்மையோவறிகிலேனால். (உ0அ)

புன்னெறிக்காமத்தாலேபொருந்தாட்பிகந்துமாண்ட
மன்னனுக்குயிருந்தந்தவஞ்சினமுடிப்பானன்றன்
றன்னெறிநெஞ்சமருக்குற்றநின்பெருந்தகைமையெம்மா
விண்ணிலத்தேவர்தம்மாலியம்பலாந்தகைமைத்தம்மா. (உ0௯)

மாண்டவர்பிழைக்கும்விஞ்சைவலியினைநீயுமாண்டான்
மீண்டெவனெழுப்பவல்லவிரகினனென்பதோர்ந்தே
மாண்டகையோடுபேசிநின்னுயிரகற்றற்கிக்கண்
வேண்டியவலிகொண்டுற்றேன்வெட்டாதெதிர்தியென்றான். (உ௧0)

திண்டிறற்றடந்தோள்கொட்டிச்செவிபட்டண்டமெல்லாம்
விண்டிடநகைத்துவிதியாநிபோய்வெம்போராற்றத்
தண்டொடுசமைந்தான்புத்திசிகாமணிதானுநேர்ந்தான்
கண்டவர்போர்விட்டின்னோர்போர்முனைகாணச்சூழ்ந்தார். (உ௧௧)

வேறு.

இருவருஞ்சமம்பெறவுத்தரித்தனரெதிர்மலைந்துதண்டிறகப்பிடித்தனர்[ன
மருவினின்றுசெந்தழல்கக்க மொத்தினர்வலமிடம்புகுந்செயன்முற்குறித்த
ருகினிற்பிரிந்தடிவைத்தடுத்தனாகலவுஞ்செலாதுடன்முட்டியிட்டனர்
கருகுமம்புயலிடியொத்துரைத்தனர்சனதடங்குவடுகணைக்குவிட்டவே. ()

முனைமிகுந்துநின்றெதிர்கொக்கரித்தனர்முகில்வலம்படுத்துயாக்குதித்தன
ரினிதுவந்துதண்டொளிரச்சுழற்றின ரிருவிசும்பெறிந்தொருகைப்பிடித்த
னர், பனிமுகம்மலர்ந்திலகச்சிரித்தனர் பகரும்வஞ்சினம்பலசொற்றெறித்
னர்,நனிதுகண்டகண்டகர்வெட்கியுட்கிடநகமிரண்டுநேற்சமர்கற்பதொக்கவே

பகைமுதிர்ந்துவன்கதையொத்துமொத்தொலிபடுமழைக்குலங்களினொத்
தொலித்தன,வகிலமுங்குழிந்ததுகட்செவித்திரளழல்விடங்கழன்றுடனெட்
டுயிர்த்தன,சிகரியந்தடமுடிபொட்டுதிர்த்தனதிசைநிலைக்கயமதமுற்றும்வற்
றின,விகலியண்டமுமுடைபட்டுமெப்புறத்திசைகொள்கங்கையும்புனல்கெட்
டுவிட்டவே. (௨௧௪)

வியர்வரும்பிமுத்தெனநெற்றியிற்றறவிழிகளுஞ்சிவந்தழல்சுற்றுமுற்றுற
பெயர்பொருந்துசொற்களுமுட்கிளம்பிடபிறைவகிர்ந்ததிண்புருவச்சிலைத்
துணை, யியல்புடன்செறிந்தகலத்தடித்தனவிகலில்வண்ட டங்கிரியொத்த
பொற்புயஞ்,செயல்கெடும்பயங்கரமற்றுமுற்றினுஞ்செறியும்வெஞ்சமங்கதை.
யிட்டடித்தனர். (௨௧௫)

இவர்கண்மிஞ்சிவெஞ்சமரிப்படிக்கடர்ந்தெதிர்பொருந்திவண்புயமுத்தரிக்க
வும், பவர்கொளங்கமொன் றினுமுற்றுமிற்றிலர்பரியதண்டுமென்முறிபட்
டெடுத்தனர், நிவர்தலின்முனிந்துளர்கெட்டுகிற்றிலர்நினைவினும்வலியொரு
சற்றுமற்றிலர், கவர்விரற்காங்கருகிச்சிவத்தலிற்கதைகழித்துமுட்டினர்முட்
டியுத்தமே. (௨௧௬)

வேறு.

கைநிமிர்த்துநீள்விரல்களைந்தையுங்கவினுறக்குவித்தொளிர்நகங்களை
மெய்புதைத்துவெங்குருதிசோர்தரவெய்யதுற்சனன்விலாவெலும்புதோ
ணைபடப்புடைத்துதடுவாய்விழிநாசிகால்காந்தூசியுற்றுகத்
தொய்படத்துவைத்தலசியாருயிர்தொலையமோதினன்றலைகொணீதியான்.

கட்டிமுட்டியுங்கைகண்முட்டியாற்கண்டகண்டமுமண்டையுந்தகர்ந்
திட்டிடச்சினந்தொட்டியொட்டிநெஞ்செய்த்திடாதெதிர்த்துத்தரித்துநேர்
கிட்டிநின்றுடன்றட்டிடச்சமர்கெட்டிடற்புறைகெட்டுளாவியும்
பட்டிடப்பரிபவம்விலங்கியிப்பாரெலாம்புகழ்பாடியாடின. (௨௧௮)

வேறு.

பொரவரிதாயவானோர்க்கரும்பகைபூட்டிநின்ற
விரவரியனையசீற்றத்திரணியன்றன்னைவென்று
நரவரிநகங்கொண்டூர்த்தநலத்தினும்பலத்ததாகக்
கரவரிற்கொடியனுந்துற்சனனுடல்கழித்தானன்றே. (௨௧௯)

கற்பினுக்கணியைக்கண்டகண்ணிணைக்கருதுநெஞ்சைச்
சொற்பிழைகொண்டுசொன்னவாயினைச்சுரிகையாலவ்
விற்பனன்வீற்றுவீற்றுய்விதிமுறைத்தண்டஞ்செய்தான்
முற்பினுமினிமேலுள்ளகாமுகர்முயலாவண்ணம். (௨௨௦)

மலைவளம்பொலிகாம்போசமகிபன்மந்திரியாற்போரின்
தொலைவளம்பொலியமாண்டகொள்கையைக்குறித்துமுன்னி
நிலைவளம்பரவச்சூழ்பாரரசரும்பிறருந்தத்தஞ்
சிலைவளம்பொலியநோக்காதுயிரின்மேற்சிந்தைசெய்தார். (௨௨௧)

கதையுத்தமுட்டியுத்தங்கைபிணேந்துறுமல்யுத்தம்
பதயுத்தமானநான்குயுத்தமும்பார்த்துநின்ற
முதயுத்தவின்மைவீரர்முழுவதுமினிநாமெந்த
விதயுத்தம்புரிவதென்றுமெலிந்தனர்வீரமாழ்கி. (உஉஉ)

தேர்புனைந்திருந்ததங்கச்செழுஞ்சுடர்மணிப்பொன்மௌலித்
தார்புனை திருக்காம்போசத்தலமகிபதியும்விண்ணின்
கார்புனைகாத்திறன்மார்பிறகுறக்கட்டிமோந்திங்
கார்புனைபவனேர்நீயென்றமைச்சனுக்கன்புசெய்தான். (உஉ௩)

வணக்கமுமுகமனின்சொன்மனத்திறுண்மலியப்பேசு
மிணக்கமுமருதகிற்பநவமணியிறைஞ்சிநின்விற்
சணக்குநாள்வினைக்கிற்சொல்லிற்கருதநெஞ்சுரைவாயென்றும்
மணக்குமென்றுரைத்தான்புத்திசிகாமணிமகிழ்ச்சிகொண்டான். ()

வாகினித்தலைவர்மைந்தர்மந்திரிமுதலாயுள்ளோ
ராகவத்தழிதலேக்கியழிவுகொள்விசையதேசன்
நாகமுநாகத்துற்றவமாருநாகமெட்டுஞ்
சோகமுற்றிடத்தேர்தூண்டுஞ்சுதனுக்கிதனைச்சொல்வான். (உஉ௫)

நம்படைமுழுதுமாண்டதினியொருநாளுநீயும்
வெம்படைமுடிப்பாளின்றேமறிவையென்வீரமென்கை
யம்படைதொழிலும்வாசிக்கருத்துமென்னமைவுநோக்கி
கும்படைமணிப்பொற்றிண்டேர்தூண்டுதிகோல்கொடென்றான். ()

என்வலியறியாரித்தச்சிறுவர்களிவன்றீசன்
றன்வலிகொண்டேற்றாலும்வெல்லுதல்சமைப்பேனின்றிங்
குன்வலிமிரத்திண்டேருருதிவிரைந்தென்றேறுதி
மன்வலிக்கமைந்தமேருகிரிநிகர்வரிவில்வாங்கி. (உஉ௭)

பதயுகவிரவிட்டொற்றைக்காத்திறனுனியைப்பற்றிக்
குதையொடுநுதைகொண்டொற்றிவளைபடவின்ஞாண்கூட்டிச்
சிதைபடத்திசையும்பாருந்திரிபடத்தேவரும்
புதைபடநமனேடொர்துப்பொலிசுதைப்புங்கம்விட்டான். (உஉ௮)

தேரினையறுத்தான்வாவுதேசியையறுத்தான்பூண்ட
தாரினையறுத்தான்வேழத்தலையினையறுத்தான்வீரர்
போரினையறுத்தான்கண்டபொருளெலாமறுத்தானந்தோ
பாரினிலறுபடாதபதார்த்தமங்கொன்றுமில்லை. (உஉ௯)

மண்ணினுநிற்பான்சூழ்ந்தமாதிரத்தளவுநிற்பான்
விண்ணினுநிற்பான்மையவெளியினுநிற்பான்றெவ்வர்
கண்ணினுநிற்பானெக்கிற்கருத்தினுநிற்பானெண்ணி
லெண்ணினுநிற்பானென்னத்தேயுமோவிவன்றன்கூரம். (உ௩0)

ஏவுவானேவுஞ்சூழ்ந்தவிருங்கடல்வடவைச்செந்தீ
நாவுநாகங்களுவுநமனுடைநாவுமன்றி
மேவுநாமெதனைத்தேறிவிள்ளுதுமென்னவிண்ணோர்
கூவுநாவமலையண்டங்குலுங்கிடக்குழுமியார்த்தார். (௨௩௧)

செயவலையுவக்குமாலின்மாயைபோற்செல்லும்வாளி
யெயவலைவரிவிற்சால்கொண்டெறிவலையெரிகான்மோத
வயவலையியக்கள்சிந்தியனீகினியழிந்தமற்றும்
நயவலைமெளலிவேந்தர்நடுங்கிநாவுலர்தல்கொண்டார். (௨௩௨)

விக்கிரமவாளிகொண்டுவிரிஞ்சனைவீட்டிப்பின்னும்
வக்கிரவாளியொன்றானவமணிதன்னைமாய்த்தங்
கக்கினிவாளிகொண்டுசமர்த்தனைப்படையையட்டான்
மிக்கதன்புகழ்கொண்டெல்லாவுலகினுமெழுதும்வீரன். (௨௩௩)

என்படைமுழுதுமாண்டதெணியுவந்திழிவுசொல்லா
துன்படைமுழுதுங்கொன்றேனுனையுமந்திரியுங்கொல்ல
மின்படைதாங்கிநின்றேனாயினும்வீணேகொல்லி
லென்பயனென்றுநெஞ்சத்தெண்ணிநாணிரங்கிற்றேனால். (௨௩௪)

மாதையென்னுழையிற்றந்துவேண்டுவவழங்கப்பெற்றுப்
போதுதல்புரிவையானானின்னுடைப்புகழும்பொற்பும்
மேதகுகுணனுமிந்தமேதினிதனிலெஞ்ஞான்றுந்
தீதடையாவாமென்றின்றெனதுளஞ்சிந்தித்தேனால். (௨௩௫)

புன்னுனிப்புனலேயன்னவென்படைபுனல்கட்கெல்லா
மன்னையிவ்வுலகஞ்சூழுமாழியம்புனலேயானு
மென்னநீநினைதியென்னைவெல்லகில்லாய்நின்சேனை
தன்னைநின்கண்முன்கொன்றதோர்பெருஞ்சான்றுங்கண்டாய். ()

வில்லினான்மழுவாற்சூலம்வேல்கதைவாளாற்றிண்டோண்
மல்லினான்மற்றுமுள்ளவித்தத்தினான்மலைந்துநீயுங்
கொல்லுதல்கூடாதென்னையென்பதுமுணர்ந்துகோடி
சொல்லினாலென்னைக்கூற்றுமெனதுவிற்றொழிலுக்கஞ்சும். (௨௩௭)

ஆதலாற்பொருதலின்றேலணங்கினைவிடுத்துன்னூர்க்குப்
போதலிவ்விரண்டிலொன்றுபொருக்கெனப்புகறியென்றாங்
கோதினானதனைக்கேளாவொருங்கமுப்புரமுன்சுட்ட
நாதனின்ஞால்விந்த்ரனைகைத்திவைகவிறலுற்றான். (௨௩௮)

சொற்றதுநன்றுநன்றுசூரமும்வினையப்பாடும்
மற்றெனக்குணர்த்தல்போதும்வாளியொன்றானின்சென்னி
யிற்றுகப்புரிவதன்றியெளிமைகொண்டழிவுபேசக்
கற்றிலனுன்போலென்றேகாளையுண்டாட்டங்கொண்டே· (௨௩௯)

அமைச்சனைநோக்கிநீயுநானுமிங்கலதுசூழ்ந்து
நமைத்துணையாகவந்தநால்வகைப்படையுங்கொன்று
னிமைக்குமுன்னிவனைவிண்ணுடேற்றவனென்பொற்றிண்டேர்
சமைப்பருந்தொழில்கொண்டூர்திபொருக்கெனச்சாற்றலோடும். ()

மந்திரியிவனேநின்றன்வலியினுக்கெதிரியென்ன
மந்தகாசத்தினோடும்வாவுமான்றடந்தேருரும்
மந்திரக்குறித்துப்பூசைவான்முறையாற்றிவானத்
திந்திரர்க்கமைந்தவிச்சையாதலியிவனேயென்ன. (உசக)

சிங்கடால்விரித்துச்செங்கைக்கோல்கொடுகயிறுசேர்த்தே
யங்கடாவலிசொல்விஞ்சைபரிசனுக்கமையவோதி
யெங்கடாபொருவதென்றுங்கிபமதத்தெழுந்ததென்ன
சங்கடாதொலிக்கப்புத்திசிகாமணிதடந்தேரூர்ந்தான். (உசஉ)

கருமுகின்முழக்குற்றென்னுங்கம்பலைக்கனகத்திண்டே
ருருமுறழ்முழக்குற்றென்னவருளொடுமுருள்கடெற்றிப்
பரியொடும்பரிகடுள்ளப்பாகருமுடன்றுகூவக்
கிரியொடுகிரிநின்றுற்றும்போரெனக்கிட்டிநின்றே. (உசங)

நெருநெருத்தண்டகோளநெரிபடவிமையாவிண்ணோர்
விருவிருப்படங்கநாகர்விஞ்சையர்வெறிதுமாழ்க
வொருமொருத்திரண்டுபாலுமூரிவிற்குழையவாங்கி
யொருவருக்கொருவர்காலாந்தகனிகர்வாளியுய்த்தார். (உசச)

விற்குழைதவளையவாளிவித்தினர்வித்தொன்றேனு
முற்பவித்தளவில்கோடிபலன்களையுதவுமாபோற்
றற்பலமடங்காதொன்றக்காயிரஞ்சரங்களாக
வற்படுத்தண்டகோளமூடினவலரிமாழ்க. (உசரு)

மண்டலமொன்றேசூழ்ந்தமணிவெயில்பாப்பும்பானு
மண்டலநிலவுகான்றவயங்கொளிவழங்குஞ்சந்த்ர
மண்டலக்கதிர்செய்முத்தும்மணியுமேமானுமீனின்
மண்டலஞ்சுழற்சிகொண்டயட்கலத்திகிரிபோலும். (உசசு)

நிருதிநீர்வருணன்வாயுநீணிதிக்குபேரன்மற்றும்
மருவுமீசானனிந்த்ரனக்கினிமறலியென்பா
ரான்வலியொழிப்பவெட்டுவசுக்களுமும்பலெட்டு
மாவஞ்சவெட்டுந்தத்தரிலைகுலைந்தவதிநீத்த. (உசஎ)

விட்டனவிட்டவெல்லாமிருபுறமெய்யிற்சற்றும்
பட்டிலவட்டமெல்லாம்பயிர்க்கிடும்வேலிபோலும்
வட்டமாய்விழுந்தவானவரையினும்வரையினீண்டு
முட்டினவுவமந்தேர்ந்துமொழிபவர்க்குள்ளமுட்ட. (உசஅ)

எய்வராயிரத்தின்மேலுமாயிரமெதிர்ந்துவாயால்
வைவராயிரத்தின்மேலுமாயிரமாயவித்தை
செய்வராயிரத்தின்மேலுமாயிரஞ்செய்யும்போரி
லுய்வராரிறப்பாரென்றியாவர்க்குமுணராவண்ணம். (௨௪௯)

வேறு.

மன்றறங்குதொங்கன்மௌலிமன்னர்மன்னரிருவரு
மொன்றிழைன்றடங்கொணுதருத்துவெய்யவுருமினும்
நின்றுகோடிகோடிபோர்விதங்கணேருறப்பகர்ந்
தன்றுசெய்தவெஞ்சமங்களமரருக்குமரிதரோ. (௨௫0)

கடலதிர்ந்தமலையதிர்ந்தகண்டுநின்றவண்டர்த
முடலதிர்ந்தநஞ்சுவாளெயிற்றுநாகரொளிமணிப்
படமதிர்ந்தபரியவில்வளைத்திரண்டுபாலினும்
விடநிறைந்தவாளியின்றும்விண்ணின்மின்னுமின்னலே. (௨௫௧)

கோடிகோடிவாளிகொண்டுகோடிகோடிபுண்பட
நீடுதேரினூடுகேதனத்தினூடுநிமிரன்
ரூடுபாடலத்தினூடுசொருகியங்குமிங்குமாய்ப்
பாடுகொள்ளமுந்துபாகர்மீதுமம்புபாய்ச்சினர். (௨௫௨)

வலமிடஞ்சுழன்றுவாசிமன்னுசந்தனங்கணே
ருலகமெங்கணும்புகுந்துலாவவீரரிருவருங்
கலகமிஞ்சினர்சினந்துவிசையதேசகாவலன்
றலமகன்றுவிண்ணினூடுதேரிஞேடுதாவினன். (௨௫௩)

விண்டலங்கலந்திலங்குமீனிஞேடுவெண்மதி
மண்டலங்கலந்துகோடைமழையும்மின்னுமிடியுமாய்க்
கொண்டலங்கலந்துசோரவாடைமீதுகொழுவியே
மிண்டலம்வழங்கும்வாளிவெள்ளமென்னவீசினன். (௨௫௪)

விசையதேசன்விண்மறைந்துவீசும்வாளிமூசுநீள்
திசைமறைந்துவரைமறைந்துதிரையினீர்மறைந்துபா
ரசையநின்றபொழுதுகண்டகங்கொளாதமுனிவிஞே
டிசையும்வில்விதாரமிக்குபுவனதேயனிவைசொல்வான். (௨௫௫)

வானிருந்தமீனுமாகிமதியுமாகிமற்றுள
கானிருந்தமழையுமாகியிடிமினுங்கலந்துபா
ரூனிருந்தவுயிர்கலங்கவாளிவெள்ளமொழுகிஞு
ஞனிருந்ததிசையிஞேடுநானுமூன்றுநலமற. (௨௫௬)

இன்றுநீயுமதேசைமையெழவிடென்றுபடபடத்
தன்றுசொல்லிஞன்விசும்பிலானதென்றுமதிமக
னின்றுசொல்லிஞன்வியந்துநிருபர்சிங்கநேர்படச்
சென்றுகாண்கிலாதுளந்திகைப்பிஞேடுமிதுசெய்வான். (௨௫௭)

மதியின்வாளியுடுவின்வாளிமழையின்வாளியாதியாய்ப்
பொதியவிழ்ந்ததெனவெழுந்துபோசவங்குபோக்கலுங்
கொதிகொள்சீற்றமுங்குறைந்துகுறைபடாதுகுறுகினான்
விதியினாலலாதெவர்க்கும்வெந்நிடாதவென்றியான். (௨௫௮)

வேறு.

எதிர்புவனேந்திரநகரினேந்தலு
முதிர்சினைப்பாந்தளின்முனிவுமூண்டெழா
வதிர்புலன்றேர்ப்புலிக்கொடியையற்றுகக்
கதிர்முனைவண்டினாற்காதிவீழ்த்தினான். (௨௫௯)

தோற்றிடாவீரமேதுலக்கித்தேர்தலை
யேற்றியபதாகையுமிற்றுவீழ்தலும்
கூற்றையும்வட்டணைகொள்ளுங்கூற்றென
மாற்றருந்தடஞ்சிலைவளையவாங்கினான். (௨௬௦)

பொழிந்தனன்வானமும்புவியும்புங்கநீ
ரெழுந்தனசுடர்த்தலமிருண்டுதோற்றின
வழிந்தனனரம்பைநாயகனென்றஞ்சியே
மொழிந்தனர்வானவர்பிறர்கண்முற்றுமே. (௨௬௧)

வாயுநன்மனதுந்தம்வலியைமானுமாப்
பாய்பரிக்காயிரம்பாய்ச்சிமந்திரிக்
காயிரம்பகழிமெய்யழுந்தவெய்தனன்
வாய்வழிகுருதிநீராறுமண்டவே. (௨௬௨)

சுழித்தெழுசோரிகள்சொரியவாம்பரி
விழித்தனமந்திரிமூர்ச்சைமேவினான்
பழித்தலையறத்தினாற்படுக்கும்பண்பென
வொழித்தனனவைகளையுன்னுமுன்னமே. (௨௬௩)

மந்திரிகுருதிவாய்வழங்கநோக்கினான்
சிந்தையுள்ளுருகிமெய்த்தீயினெய்யென
வெந்தனன்வெகுண்டுகண்வெறியினீடவே
யந்தரஞ்சுழலவில்லையைவாங்கினான். (௨௬௪)

நாசியில்விழியினினாவின்மெய்யினி
லூசியுமிடைபுகாதுருத்தவாளிகள்
வீசினான்விசையதேசத்துவேந்தனுங்
கூசினான்றன்வலிகுலையகின்றரோ. (௨௬௫)

வில்லினைத்தேர்மிசையூன்றிவெய்யதன்
சொல்விழுந்தங்கமுந்துளக்கநீண்டுள
கல்லெனநின்றனன்கன்னலொன்றிரண்
டொல்லைதீர்ந்தயர்ச்சிதீராமலுற்றரோ. (௨௬௬)

தேரினைப்பிற்படத்திருகிவெங்கொடுத்
தோரிமைப்பொழுதினிலுடன்றுபோர்புரி
வீரர்கட்புலன்களில்வெளிப்படாவகைப்
பார்புகுந்தான்விரகறியும்பாகனே. (௨௬௭)

அண்ணலைத்தேரொடுமரியசாரதி
கண்ணிமைப்பளவினிற்கரந்துபோயினன்
மண்மிசையென்றுதன்வலவன்றன்னுளத்
தெண்ணியாங்குரைத்தசொல்லிறைவன்கேட்டனன். (௨௬௮)

சாரதிதொழில்குறித்தறிஞன்றன்னையு
நேரினிற்புகழ்ந்தவனீயுநந்திருத்
தேரினைச்செலவிடுசெலவிடென்றலும்
பார்மிசைப்பவுஞ்சுறப்படுத்தினனரோ. (௨௬௯)

மன்னவன்மயக்கம்போய்மலர்க்கணோக்கினன்
றன்னையத்தேரொடுந்தனதுசாரதி
நன்னிலம்புகுந்தமைநாடியென்கொனீ
வெங்கொடுத்தனையெனவெகுண்டுசொற்றனன். (௨௭0)

மாற்றலர்நிலையினைமதித்துவாசியின்
றேற்றமுந்துருவித்தன்றேன்றலானவ
ரேற்றமுங்காலமுமிடனுமெண்ணிய
வாற்றுதல்வலவர்கட்கங்கமாகுமால். (௨௭௧)

ஒய்ந்தனைவலிமனத்துண்மயக்கினற்
சாய்ந்தனைதேர்மிசைத்தரியலன்கணை
பாய்ந்துருதகலுதல்பண்பெனக்குறித்
தேய்ந்துநான்செய்தனனென்னப்போற்றினன். (௨௭௨)

கேட்டலும்வெண்ணிலாக்கிளருமூரலான்
நாட்டம்வெந்தீயுகநாமவிற்கொடு
சேட்டிளங்கதிரெனத்திகழும்பல்லவ
மோட்டினன்கடன்மடுத்துதவுமஞ்செனை. (௨௭௩)

வாள்கதைகப்பணம்வளரிவேன்மழுத்
தாளினுங்கரத்தினுந்தலையினும்படத்
தோள்வலிச்சுமைகொடுதூக்கித்தூக்கியங்
காள்வலிகாணவிட்டெறிதலாற்றினன். (௨௭௪)

கட்டமைபல்படைக்கலங்கள்சேர்நடுத்
தட்டினிலுள்ளனயாவுந்தன்கையால்
விட்டனன்விடவிடவீரன்வாளியால்
வெட்டிநுண்பொடிபடுத்துதிரவீசினன். (௨௭௫)

இந்திரருலகினுமிலங்குசூரியர்
சந்திரருலகினுஞ்சரோருகத்துறை
யந்தணருலகினுமன்றியுஞ்செல
வுந்தேரிடம்வலந்திரியவோட்டினர். (௨எ௬)

வரையினுநதியினும்வயங்குகானினும்
விரைமலர்க்காவினும்வெளியினுங்கடற்
கரையினுங்கடலினுங்கலந்துபோர்புரி
தரையினுங்காணலாமிவர்கள்சண்டையே. (௨எஎ)

வயப்படுவீரமும்வனப்பும்வாய்மையுஞ்
செயப்படத்திகழ்ந்தனன்றிருவிஞயகன்
நயப்படுசரமெலாநசிப்பத்தன்வலி
பயப்படவோய்ந்தனன்பதகனன்றரோ. (௨எஅ)

வேறு.

மோகனக்கணையொன்றெய்தான்மூண்டபோர்தன்னின்மாண்ட
வாகினித்தலைவரோடும்மைந்தரும்பிறவுந்தொக்குச்
சேகரவனைத்தலோடுஞ்சேகபதிதனதுதிண்டேர்ப்
பாகனுமமைச்சைநோக்கியிதுவென்னபான்மையென்றான். (௨எ௯)

ஆயவனறிவாற்றேறியையகேள்கொடியோன்வெய்ய
மாயையின்கணையைவிட்டானதுசெயுமாயமீதா
ஞயகஞானவாளிதொடுகவையேனசமுற்று
வீயுமென்றுரைத்தான்கேட்டவீரனும்வியப்புக்கொண்டான். (௨அ0)

எய்தனன்ஞானவாளியெய்தலுமெதிர்ந்தமாயை
வெய்யதன்றுண்மைகுன்றிவெய்யவன்கதிர்முன்பட்ட
செய்பனிப்படலம்போலுஞ்சிதைந்ததுசிதைதலோடு
முய்நெறியிலையென்றோர்ந்தபதகனுமூக்கமுற்றே. (௨அக)

இந்திரன்வாளிதொட்டானிரும்புவனேந்த்ரவீர
னந்தவாளியினாற்றண்டமாக்கினனரியின்வாளி
சிந்திரன்றீயோன்கண்டதிருவினன்வருணவாளி
யுந்தியங்கதனைமாய்த்தானூன்வலியுடைமைதோன்ற. (௨அ௨)

நிருதியாசுகங்கொண்டெய்தானிருதிரேரனையகீரான்
நிருதியாசுகங்கொண்டையளிக்கினன்குபேரபாணங்
கருதியக்கெய்தான்பொல்லாக்கயவனுமதனையாய்த்தான்
கருதியப்பாணங்கொண்டேகவின்றருகழற்கால்வீரன். (௨அ௩)

திருத்துமீசானன்வாளிசிந்தினன்சிந்தைதீயோன்
திருத்துமீசானன்வாளிகொண்டவைசிதைத்தான்றீரன்
மருத்துவின்வாளிகோடிமாயவல்லவனும்விட்டான்
மருத்துவின்வாளிகோடிதொடுத்தவைமறுத்தான்வள்ளல். (௨அ௪)

சண்டன்வெம்பகழிகோடிகோடிமேற்சரித்தான்றீயோன்
சண்டன்வெம்பகழிகோடிகோடியாற்றடுத்தான்றூயோன்
பண்டையவசுக்கள்பாணம்பாரப்பிஞன்பதகனய்யன்
பண்டையவசுக்கள்பாணம்பாரப்பியங்கதைப்பாழ்செய்தான். (உஅரு)

கயந்தலேக்காண்டங்கோடிகயவன்கைகடுக்கவெய்தான்
கயந்தலேக்காண்டங்கோடிகைவிடுத்தையன்காத்தா
னயந்தலேவண்டுகோடியசடன்விட்டார்த்தானேய
னயந்தலேவண்டுகோடிபெயர்த்தவையறுத்தானன்றே. (உஅசு)

வெள்ளெயிற்றரவவாளிவிட்டனன்வெங்கணுகங்
கொள்ளேயுற்றணவச்சூழ்ந்துவானமுங்குறுகவந்த
கள்ளனேவியந்துதன்கைக்காருடவாளிவிட்டான்
வள்ளலுமன்னியுண்டுதீர்த்தனவுகிரால்வாறி. (உஅஎ)

துள்ளுவான்பரிமேற்றேர்மேற்றனதிருதோண்மேன்மொய்த்த
வள்ளறன்பகழிக்காடேயானமற்றவனுக்கங்க
ணுள்ளனவெல்லாமய்ந்ததுணர்ந்தனன்வலிமற்றேயாக்
கள்ளனுமதனேக்கைக்கொண்டவன்மிசைகடாவலுற்றான். (உஅஅ)

எய்கணேமுழுதுந்தோற்றுஞன்சினந்திவண்மேலெய்யு
மெய்யுறங்கணேகைவாங்கிவிடுக்கின்றான்கடுப்பும்வீயான்
செய்கையுஞ்செயலும்வின்மைவன்மையுஞ்சிறிதுதீரான்
வையமேலிவனேயாவர்வெல்லுறும்வலிமற்றென்ன (உஅகூ)

அந்தரத்தமராதிமுனிவாருளாஞேக்கித்
தந்துளயாவுமின்றுதீர்ந்தனதரியலான்மே
லெந்தவத்திரம்விட்டாலுமிவனுயிர்க்கிறுசெய்யா
சந்த்ரசேகரன்றன்பாணந்தொடுப்பதுசமைப்பேனென்ஞ. (உகூ0)

வேதன்மால்பகழிபக்கமேவிடநவெண்முக்கண்
நாதன்மெய்ப்பகழிசெல்லநன்கமைத்தணிவிவிட்டாங்
காதரித்தனந்தபூசைமானதவிதியாலாற்றித்
தீதுடையவன்றன்சென்னிசிதைபடக்குறிசெய்தெய்தான். (உகூக)

வானமும்புவியுநாகர்வைகுபாதலமுஞ்சூழ்ந்த
வேனையபொருளுஞ்சோவிறுதியின்முருக்குமுக்கண்
ஞானநாயகன்றன்வாளிஞானநாயகனேயென்ன
மேனிவர்ந்தண்டமெல்லாம்வெவ்வழல்வீசிச்சென்ற. (உகூஉ)

கதறினமேகமெல்லாம்கலங்கினவிண்ணோர்பண்ணே
பதறினவுலகமுற்றும்பசையறவறண்டவாழி
சிதறினபொருள்கள்யாவும்பிறிதெனவெசெப்பந்காவேன்
முதிர்சினப்பகைஞன்பட்டுமுடிவதற்கையமுண்டோ. (உகூ௩)

அருவரையனையதிண்டோளிரண்டினுமயன்மால்பாணம்
பொருவினவீசன்பாணம்பொய்புகல்பவன்றன்சென்னி
சொருகினதிருகித்தூளாயுடற்சுமைதாற்றிற்ருலோ
வுருவழிந்தனதேர்வாசிவலவனவ்வெம்மையுற்றே. (உகூச)

இறந்தனனென்றுதள்ளியிமையவர்குழுக்களீண்டி
யறந்தருசிந்தையான்மேலலர்சொரிந்தாவவெல்லா
நிறந்தாவழங்கினர்கணிமலன்மால்வேதனுனோர்
திறம்படவிவன்றன்சேனையுயிர்பெறக்கருணைசெய்தார். (உகூரு)

மாண்டவாகினிகண்முற்றும்வானவாருளினுலு
மாண்டகையமைச்சனுலுமடுகளந்தன்னினின்று
மீண்டுயிர்பெறுதனேக்கிவிரற்புவனேந்த்ரவீரன்
பூண்டருங்களிப்பானீண்டபொருப்பெனப்புயம்பூரித்தான். (உகூசா)

உள்ளமுமுடலும்வாக்குமொருப்படாதெழுந்தவோகை
வெள்ளநீரொடுக்கண்ணீரும்பரவசவெறியும்போர்ப்ப
வள்ளலும்பாடிசேர்ந்தான்வருதினிக்கடவிளுேடு
கள்ளவிழ்கடுக்கைவேணிக்கடவுளும்பிறரும்போனர். (உகூஎ)

தேவர்கள்சென்றபின்னர்சிலையைநாணிறக்கியம்பு
மாவமிட்டுடல்விதிர்ப்பாங்கசுற்றிப்பாசறைநின்றப்பாற்
காவலன்ருனேருழக்காரிகையிருந்தகுழன்
மேவியங்கவளுக்கெல்லாம்விளம்பிவீற்றிருந்தானன்றே. (உகூஅ)

வீரசிங்கன் விசையதரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-சஉ-க்குத் திருவிருத்தம்-உகூடு௦.

---

# ஈமவிதிப்படலம்.

இறவாதபேறளிப்பானிறந்தாலுந்தாய்வயிற்றிலெய்திமீளப் [ன்
பிறவாதபேறளிப்பான்பிறந்தாலும்பெறுதவெலாம்பெறவேசெய்வா
றுறவாதபேர்க்கரியான்றுன்மதுரைத்தலத்திருந்தசோதிபாதம்
மறவாதநாடோறும்வாயாரவோயாமல்வாழ்த்திவாழ்வாம். (க)

வேறு.

நீடியதிசையும்வானுநாயகனிறைத்தவாளி
வீடினருடலைவிட்டுப்போகியவுயிரைவிண்ணிற்
கூடினபோதுற்சென்றுபிடிப்பதுகுறித்துப்பின்னே
தேடினசெய்கைபோலத்திரிந்தனசிதைவில்லாமல். (உ)

வேறு.

அம்பொடும்பர்புக்கடைந்தமாத்தலைத்
தும்பியின்றலைபொருசூரர்வன்றலை
யிம்பரில்வீழ்வனவிறுதிநாளினிற்
றம்பதம்விலங்குவாலுடுவின்றன்மைபோல். (௩)

சோரிகள்சுழியெறிந்தோடித்தூய்த்திரை
வாரியிற்படிந்தனமலைகள்போன்றன
பேருடல்படைக்கலம்பிறங்குகானெனப்
போர்புரிகளமெலாம்பொலிவுகாட்டின. (௪)

நீடினவுடற்சுமைநிறைந்துவான்முடி
மூடினதலைகளின்மூளையுண்டுவாய்
பாடினசம்புவின்குலங்கள்பாங்கர்நின்
றாடினதுணங்கைகொண்டலகையீட்டமே. (௫)

மன்னவர்முடிமணிமுடியதாய்வளைந்
தன்னவரணியணியாரமாகவே
தன்னலம்பெறப்புதிதழகுதந்தனள்
பன்னரும்பெரும்புகழ்பரிக்கும்விந்தையே. (௬)

மனத்துளவேதையுமதனவாதையுந்
தனத்துளசோம்பினைத்துடைக்கத்தாங்கலா
ரினத்துளார்தடுக்கவுமெழுந்துவல்லைபோய்க்
கனத்தமெய்களத்தினிற்கரையமாய்ப்பரால். (௭)

வாண்மலர்விழிக்கிடுமைகள்கைகளிற்
காணுறுபேரடையாளங்காணுவர்
பூண்முலையலமரப்புடைத்துவல்லையின்
மாணுயிர்நீக்குவார்மயில்கள்போலுளார். (௮)

வேறு.

பரசைமதக்களிற்றனையபுரவலரும்பெரும்படையும்புதல்வர்தாமு
மரசனும்பட்டதுகேட்டார்திருநகரும்புறநகருமாற்றுமோசை
திரைசெய்கடலொலிபோலுந்தேவிசுகலீலையிருசெவியின்மூழ்க
வரிசைமருகியரோடுமருகிநெடுங்களம்புகுந்தாண்மயிலையன்னாள். (௯)

வயிறலைத்துக்குழல்சோரமதிவதனமீதினும்பூமலர்க்கையெற்றி
யுயிரகலவரைபோலுந்தரைகிடந்தகொழுநனைக்கண்டுருகிக்கண்ணீர்
புயல்போலும்பொழியமனநிலைகுலையப்பசுங்காவிற்பொருந்திவாழுங்
குயில்போலுங்குரன்மாழ்கிக்குழைந்துகுழைந்தழற்படுமென்கொடி
போற்றீந்தாள். (௧௦)

நான்முகற்குமாலவற்குநாரியொருபுறத்தமைத்தநாதனார்க்கும்
வான்முகற்கும்பிறரெவர்க்கும்வலிதோலாதொருகோடிவரமுந்தேசும்
வேன்முகற்குமில்லாதவிழுப்பமடைந்துலகாண்டவிறலோய்நீயிக்
கூன்முகற்குநெடுவாளிமருவலன்கைவிடத்திராவுயிர்தீர்ந்தாயோ. (௧௧)

அண்டருக்குங்கிடையாதபெருந்திருவும்புயவலியுமழகுநீங்கா
வெண்டருக்குமிடைவிழவண்டிருக்குங்குழலாண்மேலெடுத்தகாத
லுண்டிருக்கும்படிபுரிந்துநாடோறும்பெருங்கலகமுளுற்றும்வீரங்
கொண்டிருக்குமலர்க்காமன்கோதாட்டந்தவிர்ந்தனையோகுளிர்ப்புற்றாயோ.

சொல்லியசீராபாதகுடமுதலொருத்திமுலைத்துணையினாசை
புல்லியகலாதிருக்குமெனநினைந்தநினைவன்றோபொருனன்றன்கை
வில்லிவியல்பாகியவன்சாத்தொகையுன்னுடன்முற்றும்வீற்றுவீற்றாய்க்
கல்லியநெஞ்சமுங்கிறியாருயிரும்புறம்போடக்கழித்ததின்றே, (௧௩)

வருமமறியாவறத்தினாறொழுகிப்பலநீதிமருவாநிற்குங்
கருமமுணர்ந்தயர்காலமிடனறிந்தபோராசுகாத்துநின்ற
தருமனுவன்றனவெல்லாந்தாளாக்கிநின்னுரையேதலையாய்க்கொண்டு
பொருளனமேற்பொன்றினைபெண்ணன்றிலெனவுனைநீத்துப்புலம்புமாறே.

மாமிசுகலீலையொடுமருகியர்கடத்தமதுமணாளர்க்காங்கே [பிப்
தேமன்முலைத்துணைபுடைத்துச்சிற்றிடைதள்ளாடமண்மேற்சிந்தைதேம்
பூமலர்க்கண்புனல்சோரப்புயல்ளகமழைவாரப்புண்ணெஞ்சேறக்
காமமெனுங்கடலோட்டச்சுழிவாயினாவாயின்கலங்கினாரால். (௧௫)

மகவிறந்துமன்னிறந்துவாழினியெல்லாமிறந்துவசையுமிந்தச்
சகமுழுவதுங்கிடந்ததனித்தேதஞ்செவிக்கோதச்சகியானாகி
யகமுழந்ததருமனுந்தன்னிலைகுலைந்தான்களம்புகுந்தானாசைக்கண்டான்
சகமுழுதுந்தனியருந்தச்சுகலீலையொடுபுலம்பித்துயரங்கூர்ந்தான். (௧௬)

கூர்ந்தமதிமந்திரியைச்சுகலீலைதிருக்கடைக்கண்கொண்டுநோக்கி
யார்ந்தயர்கூர்ந்தினியாமுமழுவதினாற்பயனென்னையமரின்மாண்ட
வேந்தனுக்குமைந்தர்கட்கும்பாந்தமிகுமீமவிதிவினைகளெல்லா
நேர்ந்துயிரையாங்கள்விடுவோமதற்காம்வகையறிந்துநீசெயென்றாள். (௧௭)

சொற்றமொழிப்படிதவருமந்திரியுமவண்மனத்துட்டொகுத்தவெல்லா
முற்றதொடிப்பளவினிற்கொண்டமைத்தனன்மற்றதுகண்டவுருவின்மிக்
சுற்றநிரைப்புனல்குடைந்துநீறணிந்தாவனபலவுந்துலங்கவேய்ந்து [கார்
மற்றுமணவாளர்களுக்கீமவிதிக்கடன்களெல்லாம்வழங்கிப்பின்னர். (௧௮)

சந்தனந்தேக்கிற்றுணியாற்சமைத்தபுடந்தனிலேற்றித்தைலமிட்டு
முந்துமனுவாற்சிறந்தமுதிர்மறைநாவலரமைத்துமுறையாற்றந்த
செந்தழலின்கொள்ளியிட்டார்செறிந்தசுடர்சிதைவானந்தீண்டநோக்கி
யந்தரதுந்துபிமுழக்கவதின்மூழ்கமனம்வலித்தாரணங்குபோல்வார். (௧௯)

வன்னியைமூவலம்வந்தாண்டிரப்பவர்க்கெலாங்கனகமாரிபெய்திங்
கின்னமிவரோடுசென்மமெடுத்துமனைவியாகவெங்கட்கீசா
னன்னருளோர்வாயெனச்செந்தழன்மூழ்கியுயிர்பிரிந்தார்நின்றவாறே
யன்னவர்தங்கற்பினைக்கொண்டாடிவியானத்தலைகொண்டடைந்தார்தம்மூர்

மற்றவினையவ்வளவுமரசர்கட்குமகாரெனுஞ்சொன்மறையாருய்ந்தாங்
குற்றவினைத்தருமனும்பன்முனிவரொடெங்குறைதீரவுஞற்றிவெம்போர்
வெற்றிபுரிகோமகனுந்திருப்புவனேந்திரற்காணவிருப்பங்கொண்டே
யுற்றுளதன்வாகினிகள்புறஞ்சூழமற்றவனையுற்ருனன்றே. (௨௧)

தருமனும்வாகினியையொருபுடைநிறுத்தித்தனியேகித்தரையைத்தாங்கு
நிருபனுக்கென்வரவுரைமின்னெனப்புகலவாயிலுளார்நேர்ந்துசொற்ருர்
குரிசிலுந்தன்மந்திரியையெதிர்கொடுபோயழைமினெனக்கூறக்கேளாத்
திரிதமுடனெழுந்துபுத்திசிகாமணியுந்தருமனுழைதன்னினுனல். . (௨௨)

ஈமவிதிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௩௩-க்குத் திருவிருத்தம்-௨௬௭௨.

---

# தருமன் பட்டாபிஷேகப்படலம்.

கூடலிருந்தான்
பீடுபொருந்த
வேடனைவென்ருன்
ருடலைநின்ருன். (௧)

வேறு.

மன்னனேவலிற்புத்திசிகாமணி
தன்னையண்மியழைக்கத்தருமனு
மன்னவன்றனையேபுகழ்ந்தன்பொடுஞ்
சொன்னவேத்தவைதுன்னினனன்றரோ. (௨)

எய்திமன்னனெழின்மலர்த்தாளிணைக்
கைகளாற்றெழுதேத்தலுங்காவலன்
பொய்யில்கேள்விப்புலமையினுன்றனை
மெய்யின்மெய்யுறப்புல்லிவிளம்புவான். (௩)

நீதிமுற்றுநிறைந்தனைநீமனக்
கோதுதீர்ந்தனைகொற்றவற்கும்பல
சேதிசொற்றனைதேறிநலங்கொளாப்
பாதகன்னழிவாயினன்பாவமே. (௪)

ஊன்றம்வித்துமருதலகுற்பவித்
தான்றவொன்றுபத்தாயிரமாவபோ
லூன்றாதவர்செய்கையினுதியந்
தோன்றமென்பதுமான்றவர்சொற்களே. (௫)

வெய்யசோதிவிபாகரன்போலொளி
செய்துபூவுலகாண்டுளதீரரும்
வையமேலெலதுகொண்டுளர் மாண்பலா
லையநீயறியாதுளவாறரோ. (௬)

அங்கவன்றிருநாட்டுக்கரசினி
யிக்குநின்னையலாதிலையாதலாற்
றங்கமாமுடிசூடுதிநன்றெனப்
பங்கமில்குணத்தேந்தல்பணித்தனன். (௭)

சொன்னபோதவன்றாய்மலர்த்தாளிணை
சென்னிசூடித்திருக்கரஞ்சேவியா
மன்னநின்மொழிவாய்மைமறுப்பதர்க்
கென்னையோபொருள்கொண்டிங்கிசைப்பதே. (௮)

மானிலத்தரசாள்வதுமந்திரர்க்
கினமேயலதின்பம்பயக்குமோ
ஞானவித்தகநாயினுக்கேடுகொள்
நானுனக்கினியாதுநவிற்றுவேன். (௯)

அரசுநின்னரசேயவ்வரசினுக்
குரைசெய்நீதியுரைப்பதுமென்னதே
புரசையானைப்புரவலவென்றுகைப்
பரசிஞனுவந்தின்னபகருவான். (௧௦)

ஞானவின்றதுநீசொனியாயமும்
மானமானவெனினுமிவ்வையக
மீனமானவெறிதியைத்தேயொரு
கோனைநீத்திங்கிருப்பதுகூடுமோ. (௧௧)

என்னதாருகவென்றனையிவ்வர
சுன்னதாகவுவந்தளித்தேனினி
முன்னதாகமொழிந்தமுறைப்படி
தன்னதாகத்தனியரசாற்றுதி. (௧௨)

என்றுரைத்தவற்சேற்றனயாவையு
நன்றளித்துநலம்பெறபொன்முடி
யின்றிவற்சணிவாயென்றியம்பறு
நின்றபத்திசிகாமணிநேர்ந்தனன். (௧௩)

மன்னர்வேழமுந்தேர்களும்வாசியும்
பின்னுமுன்னுஞ்செலப்பிரியாதுபோய்ச்
சொன்னகோயிலைதுன்னிமணிகளாற்
பொன்னினிடியமண்டபம்புக்கனர். (௧௪)

பொன்னுமுத்துமணியும்பொதிந்துபைங்
கன்னல்வாழைகமுகுகலந்துசீர்
நன்னகர்த்தெருவெங்குநலம்பெறச்
சொன்னகாவணந்தோரணஞ்சோடித்தே. (௧௫)

வேதநீர்மைகொள்வேதியரோதநீர்
பூதலத்துளபுண்ணியப்பூம்புன
லாதிமற்றுளதீர்த்தமுமாடல்செய்
தேதநீங்குசடங்குமியற்றியே. (௧௬)

சிங்கவாதனத்தேற்றித்திருமறை
யங்கர்வாய்மனுவாலமைத்தீந்திடத்
துங்கமாமுடிதன்மனேச்சூட்டினன்
மங்கலஞ்சொலப்புத்திசிகாமணி. (௧௭)

பாரமௌலிபரித்தரியாதனத்
தேர்பொருந்தவிருந்ததருமனுஞ்
சூரியன்ஞெளிசென்னியிற்சூடிய
மேருமால்வரையென்னவிளங்கினன். (௧௮)

பூவினுள்ளபுராணபுராதனர்
நாவிலாசிநறுமலர்சிந்தினர்
தேவருந்தருமாமலர்சிந்தினர்
பாவைமாரும்பலாண்டிசைபாடினர். (௧௯)

தீங்குநீங்கியபுத்திசிகாமணிக்
காங்குசெய்வனயாவுமமைத்தனன்
பாங்கினுள்ளவர்கட்கும்படிப்படி
தாங்கொளுதவரிசைசமைத்தனன். (௨௦)

பூத்தபொன்மணிகொண்டுபுதுக்கிய
வேத்துமௌலிமிலைந்ததருமனும்
பாத்திபன்னுழைவந்துபதம்பணிந்
தேத்தினன்றிருநாத்துதியேறவே. (௨௧)

போற்றிநின்றதருமனேப்புன்கணேய்
மாற்றிநல்லுரைவண்மைவளர்த்திநின்
றூற்றுவாய்நெடுநாளிவ்வரசெனச்
சாற்றினனருள்யாவுந்தழைந்துளான். (௨௨)

அன்னவன்றனக்காவனநீதிகள்
சொன்னநற்புவனேந்திரத்தோன்றலு
மின்னறந்தவிருபிறப்பாளுமிங்
கென்னிலத்தினுளாள்றவல்வாயென௫ (௨௩)

நேயமோடுகைகூப்பிநிருபனுக்
காயதன்மனுமோதவனையவென்
றுயுநின்னுழைசார்ந்தமையோர்ந்திடாத்
நீயவேந்துஞ்சினந்தவடன்னையே. (௨௪)

கூவிக்கேட்டெக்குமானுக்காகவோ
பாவியிந்தப்படிமுடித்தாயுனை
யாவிநீக்குவனென்றமைந்தானிடை
மேவியானவன்சீற்றம்விலக்கியே. (௨௫)

மாதைநீமுனியேவிந்தவாறெலாம்
வேதமங்கைவிளைவன்றுநாளையே
நீதிலாதுனக்கேவெளிசெய்குவன்
பூதலத்திலென்றேபுகன்றனரோ. (௨௬)

வெந்தசெய்யில்வெதும்பியவேந்தனுஞ்
சிந்தையாகுலமுற்றுத்தியங்கியே
யந்தநாளையுமீதறியும்வரைப்
பந்தனஞ்செயச்சொற்றமுறைப்படி. (௨௭)

காவலுக்குளிருந்தனள்கைமையென்
றேவலிற்புகன்றேதன்னுழையுள
வேவலாட்களைநோக்கலுமெய்தியே
பாவையைக்கொணர்ந்தார்நலம்பாறவே. (௨௮)

வந்தகைமையுமன்னனைக்கண்டலுஞ்
சிந்தைதேம்பியுளுணஞ்செறிந்துருச்
சந்தமென்மலர்த்தாடன்றலைக்கணிந்
தந்திபட்டபுவியினின்றனரோ. (௨௯)

நின்றகைமையைநேரினிருபனு
நன்றுநோக்கிநகைபுரிந்துன்வலிக்
கென்றுமீறிலவேயென்றியம்பினு
னன்றுபட்டபுண்ணெஞ்சிலயர்த்திலான். (௩௦)

நீதுகொண்டெனைக்கொன்றித்திருநிலம்
பாதிபெற்றனைபாக்கியம்போதுமோ
வேதிறும்விருப்பாய்த்தனக்கியவிப்
போதழைத்தனன்வேண்டிற்புகன்றனே. (௩௧)

வல்லியுன்னையடாதிந்தமானிலத்
தில்லைவெங்கொலைசெய்பவரென்பதோர்
சொல்லையேந்தியதோமடந்தோய்சிறுல்
கல்லையல்லைசெய்தாய்நலமானதே. (௩௨)

வையமீதுவிலங்கியமந்திரி
யெய்துமாறுதுணிந்தங்கெனைக்கொலை
செய்தநன்பெருஞ்செய்கைமறந்துனக்
குய்தநீர்தலுஞற்றலொழுங்கரோ. (௩௩)

ஆயநன்மையையெண்ணினுமம்மநின்
சேயெனப்புகன்றேனெனக்குந்திருத்
தாயெனச்சொன்னதன்மைதணப்புற
தீயவெங்கொலைசெய்தனைபாவமே. (௩௪)

வேறு.

இன்னவளென்னைச்செய்தகொலையினுலெனக்குநன்மை
துன்னினதெனினுந்தீராச்சூழ்வினையெவர்க்குஞ்சூழ்ந்த
வன்னதுமாறும்வண்ணமகந்தெளிந்தமைந்தகேள்வித்
தன்மநின்கருத்துக்கேற்றதண்டமேசமைத்தியென்றான். (௩௫)

நீதியானினைந்துசொற்றவிநயத்தினிலைமைதேர்ந்து
பாதகிதன்னையின்றேபடுகளங்கொடுபோய்ச்சென்னி
சேதமிலாதுமாறுகால்காஞ்சிதைமினென்று
வோதினனீர்த்துப்போய்த்தமுழையர்களுஞற்றிமீண்டார். (௩௬)

செய்ததீவினையுஞ்செய்தார்க்கெய்துறுஞ்சகத்திலென்று
மையமேயில்லைமுக்கணீசன்மேலாணையென்றே
துய்யநான்மறைபுகன்றவாய்மைக்கோர்துசளுண்டாமோ
பையுளுற்றுயங்கித்தண்டத்தாலுயிர்பட்டாளன்றே. (௩௭)

தருமனைநகருக்கேகச்சாற்றியாங்கவற்குமிக்க
வரிசைகண்மிதப்பநல்கிவிடுத்தபின்மாமன்றன்னைப்
பொருபடையோடுநும்மூர்புகவெனப்புகன்றான்கேட்டு
மருகனைத்தழுவிப்போற்றியீதுரைவகுப்பதானான். (௩௮)

ஐயவென்புதல்விமேனுள்ளரக்கனுலலக்கணுற்ற
வெய்யதீவினைதீர்ந்துன்னைமேவிநன்மாலைவேய்ந்த
செய்கையும்பிறவுங்காணத்தாய்செவிலித்தாயாதி
துய்யமாநகருளாருமருத்திகொடியரஞ்சூழ்ந்தார். (௩௯)

ஈதொருகருமமன்றென்றெண்ணிநீவாதபோதும்
மாதவவடிவோடுன்பின்மடமலாள்வருதனன்றே
வாதலான்முன்னஞ்சொன்னவஞ்சினமகலநீக்கிப்
பேதையைத்தீமுன்வேட்டுப்பெயர்வதேபெருமையென்றான். (௪௦)

ஆங்கவன்பகரப்புத்திசிகாமணியதுவேநல்ல
பாங்கெனப்புகலக்கேட்டபார்த்திபனதற்குநேர்ந்தான்
தேங்கமழ்தெரியலான்றன்னசாலங்காரஞ்செய்ய
வீங்குநீமுன்செல்கென்னநவமணியெழுந்துசென்றான். (௪௧)

தருமன் பட்டாபிஷேகப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪௪-க்குத் திருவிருத்தம்-உ௪௩௩.

---

உ

# விரிஞ்சநகரடைந்த படலம்.

ஒருமுதலாகிக்கவடுமூன்றாகியுலகங்கண்முழுவதுங்கலந்து
வருபல்வான்மகோடிகட்கெல்லாமனத்தினும்வாக்கினுமெட்டாத்
துரியமாய்த்துரியாதீதமாய்விபுவாய்த்தொல்லைநான்மறைமுடிவினுஞ்சீர்
பெருமைகொண்மதுரைப்பதியினுமிருந்தபிஞ்ஞகன்பெரும்பதம்பெறுவாம்.

வேறு.

ஆதனைவிளித்துத்தாலபுரந்தான்றனக்குத்தோன்ற
வீதெலாமியம்பியிந்தமுடங்கலையியென்றீந்தே
மாதுலனன்றுதிர்ந்தமற்றைநாளுதையகாலத்
தாதவனெழுதனோக்கிநகர்செலற்கமைந்தானன்றே. (௨)

இருந்தபாசறைக்கண்விந்தைக்காவனகடன்களெல்லாந்
திருந்துறச்செய்துசேனைமுன்செலத்தேர்மேற்கொண்டு
மருந்தினுமினியதீஞ்சொன்மகளொடுமருகனோடும்
பொருந்திறலமைச்சனோடுந்தன்னகர்நோக்கிப்போனான். (௩)

முத்தவெண்கவிகையோங்கமும்முரசார்ப்பச்செம்பொற்
சித்திரக்கவரிதுன்னச்செழுங்கொடிசேணளாவ
சுத்தவெண்சங்கம்விம்மத்தொகுபடைக்கலன்கள்சூழ
மத்தமாமணித்தேர்வாசிவயவர்கண்மருங்குபோத. (௪)

காயெரிசுரங்கானோடைகல்வரையருவிபம்பிப்
பாய்நதிபழனஞ்சோலையாதியபரந்தபாரிற்
சேயதொல்லாந்தவிர்த்தனதுநாட்டெல்லைசேர்ந்தா
னையவன்வரவுகேட்டவணிநகர்மாக்களெல்லாம். (௫)

மந்திரியேவல்கொண்டுவட்டமாயாறுநூறு
தந்தகாவதஞ்சூழெல்லைத்தடநகர்த்தெருக்களெல்லா
மிந்துவுங்கதிருஞ்சூழ்கொண்டெழுந்தவுதயம்போலுஞ்
செந்தகிர்மணிபொன்முத்தஞ்செறித்தலங்காரஞ்செய்தார். (௬)

மங்கலவள்ளையோங்குமனையெலாம்வானத்துற்ற
திங்களினிலவுமாறும்வெண்சுதைதீற்றித்தீப
மெங்கணுந்துலக்கியட்டமங்கலநிரையவாற்றிச்
சங்கொலிதழைப்பவெண்ணெய்விழாக்களுஞ்சமைத்தாரன்றே. (௭)

விண்ணுடுக்குலமுமுத்தும்வேற்றுமைதோற்றிடாத
வண்ணமாய்க்காவணங்கள்வகுத்துநீண்மறுகுதோறு
மண்ணல்வாண்மனையேபோலுமயலவர்மனைகளெல்லாங்
கண்ணகலுலகுக்கீதோர்கண்ணகமெனச்சூழ்வித்தார். (௮)

கலிங்கமுங்குழையும்பூணுங்கடகமுங்கலவைச்சேறு
நலங்களுநயத்தின்மிக்கநயந்தருமுருவின்மிக்கா
ரிலங்கள்சத்திரங்கடேவாலயமுதலாயெல்லா
மலங்கரித்தழகுசெய்தாரளகைமாநகர்போலம்மா. (௯)

இறையவன்கோவின்முற்றுமிந்திரன்கோவில்போலும்
முறைபடவகுத்துவேறுயருகற்குமொழிநல்லாட்கு
முறையுளொன்றமைத்துவேணகாட்சியுமொருங்குசெய்து
நிறைமதியமைச்சன்வேந்தையெதிர்கொள்வானெறியுநேர்ந்தான். (௧0)

பூரணகும்பந்தாங்கிப்புரோகிதர்முனிவர்வேத
பாரகர்முதலாயுள்ளோர்பலபெரும்பவுஞ்சுஞ்சூழத்
தோரணவாயினீங்கித்தொடர்ந்தருகாதநீத்து
நேரெதிர்ந்தரசைப்போற்றிமருகற்கும்வணக்கநேர்ந்தான். (௧௧)

வேறு.

வந்துவந்திருமருங்கினுஞ்சேவடிவணங்கு
மந்தண்மாநகர்ச்சனங்கண்மேலருள்சுரந்தரசன்
முந்துநான்மறையவர்முனிவார்மொழியாசி
சிந்தையுட்பதித்தவர்பதமலர்முடிசேர்த்தான். (௧௨)

இரண்டுமொக்கடலெழுந்துபார்நடந்ததையேய்ப்ப
முரண்டரும்பலபடைகளுமூரிமாநகர்க்கண்
டிரண்டுவந்துளசனங்களுஞ்சேர்ந்தனசெல்லக்
குரண்டமாடுநீர்த்துறைவனுநகர்வழிக்கொண்டான். (௧௩)

வேந்தன்வெஞ்சமராடியுள்வேடையோடிங்கண்
போந்தவாவுணர்ந்தயர்ச்சியுஞ்சோகமும்போகப்
பாந்தமோடுசென்னெறியெலாம்பார்மகள்பரப்பும்
பூந்தண்காவணநீழலிற்பொலிந்தனபூகம். (௧௪)

உம்பருக்கிடருளுற்றியவொருவனைச்செருவா
யம்பினுக்கிரைசெய்துநம்மிறைவனிங்கடைந்தா
னிம்பரிற்புகழ்பாப்பியென்றெழுந்தெழுந்தெங்குந்
தும்பிபாடினகளிமயிலாடினதுள்ளி. (௧௫)

பிள்ளைமென்மொழிமாதிவணந்துணைபிரிந்து
கொள்ளைவேதனைகொண்டுளாளென்பதுகுறியா
வள்ளைமெல்லியர்வாய்புகன்றுருகுதன்மானுங்
கிள்ளைபேசினபூவைவாய்கிளத்தினவொத்தே. (௧௬)

ஒங்குவெஞ்சமருடற்றிமெய்ப்பசியினுலயங்கி
யீங்குவந்துளார்க்கமுதருத்துதலியல்பென்னுப்
பாங்கரெங்கணும்பாதவஞ்சினைக்கரம்பரப்பித்
தூங்குதேன்சுவைப்பசுங்கனிசொரிந்தனதுவன்றி. (௧௭)

பசியவட்டிலில்வெண்மணித்தொகைபலபரப்பி
யிசைகொண்மாநகரணங்குகையேந்துமாஞ்சனம்போற்
றிசையெலாந்திரைத்திளியொடுபாசடைசெறிந்து
வசையிலாதமென்வனசநீர்மலிந்தனவாவி. (௧௮)

இன்னபல்வளம்யாவையுமிருகணானோக்கி
மன்னனுந்திருமருகனுந்தனதுமாமகளும்
பின்னுமற்றுளதலைவரும்பெரும்படைக்குழுவுந்
தன்னுடன்வரத்தானுந்தன்னகர்வயிற்சார்ந்தான். (௧௯)

நகரிசார்ந்தவன்னுபகனவமணிகுயின்ற
நிகரில்பேரொளிநிரம்பியநீண்மனைபுகுந்தான்
சிகரிமென்முலையாம்பையைக்கண்டலுந்தீர்ந்த
புகரிலாயமுந்தாயரும்புகழ்ந்துபூரித்தார். (௨௦)

தாயைமற்றுளதாயரையாயத்தைத்தழுவி
நேயமுற்றுளவாம்பையுநென்னலிற்பிரிந்த
தூயபாவையும்பூவையுஞ்சுகமுங்கண்டடங்கா
தேயவோகையக்கடல்குழித்தவசமெய்தினளால். (௨௧)

இதற்குமேலிலையவனியிலென்றபொன்னொருகையாற்
புதுக்குமாளிகைவேறுகொண்டீந்திடப்புகுந்தான்
மதிக்குமேறுளமந்திரியுடந்தையாய்மருகன்
கதிக்குவந்தெதிர்புகுந்துளகடவுளைக்கடுப்ப. (௨௨)

அரசனுந்திருமருகனுமம்பையும்பிறருந்
திருநகர்ப்புகுந்திருந்தபின்சென்றதூதுவர்கள்
விரவுகாலினும்விரைந்துபோய்வீரனைப்பயந்த
புரவலன்சபைபுகுதலுமதர்க்குமுன்பூபன். (௨௩)

போனமைந்தனையெண்ணிராப்புலர்ந்துளம்வருந்தி
யானதின்னதென்றாய்தலுக்கமைபடாளுகிக்
கானமும்பலதேயமுந்திருவியேகாண்பான்
மானமந்திரரோடிருந்துசாவுதன்மதித்தான். (௨௪)

பூண்டவன்பிறுக்குரியநம்புதல்வர்கள்புகன்ற
வாண்டுபன்னிரண்டடைந்தமூவைந்துநாளான
மீண்டொருநகர்வந்திலர்வேறுநாமறிதற்
கீண்டுசெய்வினையாதெனவருந்தினேனென்றான். (௨௫)

தெய்வவாக்குநன்னிமித்தமுந்திருமனக்களிப்பு
மெய்திநின்றனமடிக்கடியிக்குறிதப்பா
தையநீங்குறியார்த்தையின்றல்லதுநாளை
யுய்தல்காண்பதோர்சோபனநமக்குவந்துறுமால். (௨௬)

என்றுதேற்றலுந்தேறிலனிறைமனம்வருந்திக்
கன்றுகாலையிற்புகுந்துளதூதருங்கான்மேற்
சென்றுபோற்றியேதிருமகன்மணவினைசெப்பி
யன்றுநன்மணமுடங்கலுமீந்தனரன்பாய். (௨௭)

ஆங்குநீட்டியமுடங்கலையவைக்கணோதினான்
வாங்கினானதிவிரைவினிலதின்கணேவரைந்த
பாங்கெலாமுணர்ந்தோதினான்பார்த்திபன்கேளா
வீங்கினான்புயவரைபலவரையுளம்வெள்க. (௨௮)

விரிஞ்சநகரடைந்தபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪௫-க்குத் திருவிருத்தம். ௨௭௪௧,

---

# தாலபுரந்தரன் விரிஞ்சநகரடைந்த படலம்.



ஆடரவகற்றிச்சூடுபொன்மகுடமணிந்துபொற்கையினிலிருந்த [நீக்கி
வேடொளித்தொருசெங்கோலினைத்தாங்கியுரியவெள்விடைக்கொடி
நாடெலாமீனக்கொடியினைநாட்டிநராதிபர்தனதுதாள்வணங்கக்
கூடலிலிருந்தவொருபெருங்கடவுளிருமலர்ச்சரண்டலைக்கொள்வாம்.()

வேறு.

தனையனும்பெருமந்திரிதனையனும்புரிந்த
வினைநலங்களைக்கேட்டலும்வேத்தவையிருந்தோ
ரனைவருந்தமைமறந்துநின்றாடினர்பாடி
நினைவழிந்தனருவகையாங்கட்குடிநிறைந்தே. (௨)

வந்ததூதுவர்மறுத்திடமறுத்திடவரிசை
தந்தவேந்தனுமம்முறையிரவலர்தமக்குஞ்
சிந்திமற்றுளபூசையும்விழாக்களுஞ்செய்தங்
கந்தனாளைக்கேட்டனன்செல்லுநாளம்மா. (௩)

இத்தினஞ்சுபதினமிந்தத்தினத்தினுநாளை
யுத்தமத்தினமெனமறையாய்ந்துளாருரைத்தா
ரத்தினங்கழித்தயற்றினங்காலையிலெழுந்தான்
முத்தவெண்குடைமன்னவன்முரசினமுழங்க. (௪)

வேதவேதியர்பண்டிதர்பழையவர்விரகாய்ந்
தோதுமந்திரர்பருணிதர்கருணிகருறவோ
ராதியாயபல்லிட்டமுமனிகினித்தொகையும்
மாதராயமுமோதமொத்திருபுடையயங்க. (௫)

முந்துதொல்குலக்குரவனும்பிருகுமாமுனியு
மந்தண்மாமுனிக்குலங்களுமமைச்சரின்முதன்மை
மந்திரந்திகழ்சுமந்திராகானுமற்றவருந்
தந்தம்வாகனந்தனித்தனியூர்ந்துடன்சார. (௬)

தருமமேதருமாபதியுருவெனச்சமைந்த
திருபன்றேவியுநெறியுரையமைச்சனுக்குரிய
திருமடந்தையுந்தமனியச்சிவிகையிற்செல்லக்
குருமடந்தையுங்கூடினளுயானமேற்கொண்டே. (௭)

கவரிதுன்வாரவமணிக்குடைநிழல்கவிப்ப
சிவரிவானகமுடிக்கொடிகதிர்வெயினீக்க
பவரிலாப்பெரும்புவிமகளிடையினிற்படர்ந்த
வுவரியுக்கடந்தொலித்தனவியங்களினோசை. (௮)

மாதர்பாடலும்வயிரியர்பாடலுமறையோ
ரோதுபாடலுநாதயாழ்முனியுளமுருக்கிப்
பாதலத்துமீதலத்தும்பூதலத்துமிப்பண்ணின்
றேமேர்நிறைந்துள்ளவர்செவியெலாங்கிடப்ப. (௯)

எழுந்தமன்னவன்முன்னெழுந்தேகியசேனைக்
கொழுந்துபோய்விரிஞ்சாதிபனகர்வயிற்கூட
செழுந்தண்பூவிரிகானமுநதிகளுந்தீர்ந்தே
மொழிந்தநாள்பலதணந்திடநடந்தனன்முடுகி. (௧0)

ஆறுபத்திருயோசனைகடந்துபோயப்பா
லேறுதேர்முடிமன்னவனெய்தினன்றீந்தேன்
மாறிலாமொழிவிரிஞ்சனுமாநகர்ச்சனமுங்
கூறும்யோசனையிரண்டொன்றுநடந்தெதிர்கொண்டார். (௧௧)

தந்தைவந்துளாரென்றறுங்கேட்டளந்தழைக்கு
மைந்தர்சென்றெதிர்தேசிகன்மலரடிவணங்கிச்
சுந்தரத்திருவாசனைத்தாயினைத்தொழுதே
மந்திரிக்கவன்மகன்றெழுவவன்ருள்வைத்தான். (௧௨)

வந்துபோற்றியமைந்தரைமார்புறத்தழுவி
சிந்தைநோயகன்றவசமுற்றருகினிற்சேர்ந்த
தந்திரப்பெரும்விரிஞ்சனைமற்றுளசனத்தை
யந்தவேலையிலறிந்துகொண்டார்வமேலடைந்தான். (௧௩)

வணங்கினர்க்கெலாமெதிரெதிர்வணக்கமுமற்றோர்க்
கிணங்குநன்மொழியினிமையுமுறைமுறையீந்தே
மணங்கொடாரவன்விரிஞ்சனோடணிநகர்மன்னிக்
கணங்கொண்மாளிகைபுகுந்துவீற்றிருந்தனன்களித்தே. (௧௪)

தாலபுரந்தரன் விரிஞ்சநகரடைந்தபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪௬-க்குத் திருவிருத்தம்-௨௭௫.

---

# திருக்கல்யாணப்படலம்.

அண்டமுந்தானுய்ப்பிண்டமுந்தானுயண்டமும் பிண்டமுமடங்கா
மண்டுபேரொளியாயெண்டிசாமுகமுமறுவிலாதொருபெருஞ்சுடரா
யண்டருக்கறியாவமலனையடியார்க்கன்பனைச்சோலைகடோறுங்
கொண்டல்கண்ணுறங்குங்கூடனுயகனைக்கூடுவார்கூடுவார்கதியே. (௧)

வேறு.

அரசர்தங்களுக்கோலையுந்தூதருமனுப்பி
விரைசெய்தார்மணமிபற்றுவான்விழவுணர்ந்தருங்கான்
கரவிலாதுமெய்த்தவம்பயில்கௌசிகன்வசிட்டன்
மரிசிரோமசனத்திரிதௌமியன்மச்சன். (௨)

சுகத்துநாரதன்பரத்துவாசன்சுகன்வாம
னகத்தியன்சமதக்கினிகோதமனனந்தன்
நகத்தின்மிக்குகார்புலிமுனிநான்மறைவியாதன்
சகத்தின்மாமுனிக்குலமெலாமன்னகர்சார்ந்தார். (௩)

மாதவக்குலமுனிவரர்வரவறிந்தரசன்
பாதபூசனையருக்கியபாத்தியம்படையா
வாதனத்திருந்தருளவென்றடிபணிந்திரந்தான்
வேதவித்தினராசிசொற்றுண்டுவீற்றிருந்தார். (௪)

அந்தவேலையில்வேலையையகங்கரித்துயர்ந்த
விந்தவெற்பினையங்கையிலடக்கியவிஞ்சைச்
சந்தவெற்பினிலிருந்தருடமிழ்முனித்தலைவன்
முந்துவான்முனிவரர்முகநோக்கியேமொழிவான். (௫)

இவன்கருத்துளகருமமுமினதெனவெணியிங்
கவன்றனக்கினியருளுதன்முறையெனவறவோ
ருவந்துளான்றனையுமைமினென்றுரைத்தநுமுலகிற்
பவந்தாதசொல்விரிஞ்சனும்பணிந்திவைபகர்வான். (௬)

மனதவந்தருள்வடிகண்மீர்வருவதற்கிங்க
ணெனதுமாதவமிருந்தவாவிருந்தவாவென்னே
தனதுநாயினேனுமதருட்கொண்டுமெய்த்தவத்தா
லினதெனச்சொலாவண்ணமோர்பெண்மகவீன்றேன். (எ)

எந்துபெபொழிலாள்புவனேந்திரனாள்
வேந்தன்மாதவவிடலையைக்கண்டுளம்விழைவாற்
காந்தருவன் மணம்புணர்ந்தாட்கின்றுகடிநாள்
பாந்தமோடுசெய்வதற்குளம்பரிவுகூர்ந்தனனால். (அ)

முன்னமேமணம்புணர்ந்துளமொய்குழன்மகட்குப்
பின்னுமவ்வான்பெருமணமுடிப்பதுபிழையா
மென்னவென்னுளமையுற்றதிதுவெளியாக்கிச்
சொன்னமன்றலைமுடிப்பதுங்கடனெனத்தொழுதான். (கூ)

கேட்டம்மாதவக்குலங்களில்வியாதனுங்கிருபை
நாட்டமுற்றிதுநவிலுவானராதிபநீயும்
வாட்டநீங்குதிதுதியைமாமணம்புரிவதனாற்
கோட்டமில்லெனக்கூறினதலகினாற்கோடி. (க0)

மருவல்கொண்டுளோன்றன்னையேமறுமணமுடித்தல்
பெருமையன்றெனின்முதன்மணம்பெற்றவள்பினுமோ
ரருமகன்மணம்பெறுவதுமங்கமுமாமோ
குருமுகங்களுஞ்சுருதியும்பிழைபடக்கூறா. (கக)

புனத்தின்வள்ளியைப்புணர்ந்துளமுருகனைப்புனத்தி
னினத்துளார்தெரிந்தருங்கடிவியற்றியவியற்கை
மனத்திலெண்ணுதியின்னலுநீங்குதிமகட்குங்
கனத்தமாமணம்புரிகுதியென்றனன்கலையோன். (கஉ)

பாரதந்தெரிந்துரைத்தசெந்நாவினான்பகருங்
காரணஞ்சரிசரியெனமகதயாழ்க்கரத்த
நாரதனெழுந்தாடினான்கோசிகனலமென்
றாரணம்புகன்றான்பிறர்சுவத்தியோதினரால். (கங)

மாமன்போரவைதன்னிலம்மறைபயின்முனிவோர்
தாமடைந்தமைதிருப்புவனேந்திரத்தலைமைக்
கோமகன்மகன்கேட்டுடன்பிறர்வாக்குறுமி
பூமலர்ப்பதம்பணிந்துமாதவர்களைப்போற்றி. (கச)

ஆசிபெற்றருகாசனத்திருந்தனனவன்றன்
றேசிகத்திருப்பிருகுவுமினத்துடன்சேர
மாசிலாப்புவனேந்திரன்மலர்முகநோக்கி
யீசனிற்பொலிவசிட்டனுமீதுரையிசைப்பான். (கரு)

தேவருக்கிடர்விளைத்தருமறைநெறிதிரும்பிப்
பாவகம்புரிதசமுகன்றலைபத்தும்பறித்த
பூவைவண்ணனுநீயுமிங்கல்லதிப்புவிமேல்
யாவரைத்துணையெடுத்துயானறைகுவனம்மா. (௧௬)

விசையனைவிரற்புதல்வரைப்போரினில்வென்ற
விசையும்வீரமுமிவ்வுலகொன்றுமேவாவிதன்பாற்
றிசையும்வானுமற்றண்டமும்பார்த்தனசென்று
நசைமிகுத்துனக்கெவர்பணிவிடைசெய்யவார். (௧௭)

மற்றமாமுனிக்குலங்களுமிவன்புகழ்வாய்மைக்
கொற்றமுமெடுத்துரைத்துநல்லாசியுங்கூறி
முற்றுநன்மணவினைபுரிமுகூர்த்தநாண்மொழிந்தா
ரற்றைநாட்டொடுத்தேழுநாணீத்துப்பின்னம்மா. (௧௮)

வேறு.

மதர்விழித்திருவன்னாட்குமணவணிவருவையாமென்
றிதரதேயத்துவேந்தர்க்கெழுதியமுடங்கல்கண்டே
யதிர்குரன்மணித்தேர்தூண்டியவாவொடுமெதுப்பூவொன்றை
மதுகரமொய்க்குமாறுமாநகர்வந்துமொய்த்தார். (௧௯)

வாவியுநதியுஞ்சென்னல்வயல்களும்வண்டுமொரூப்
பூவிரிபொழிலும்வந்துபுகுந்தனவைம்பத்தைந்து
காவலர்தேயத்துள்ளகடகரிகலினமான்றேர்
பாவையராயந்தாயம்படைப்பெரும்பாவைவெள்ளம். (௨௦)

கலிங்கர்கர்நாடர்சேரர்சோழர்பாண்டியர்காஸ்மீரர்
தெலுங்கர்செஞ்சியர்மராடர்சீனர்சோனகர்பாஞ்சாலர்
புலிங்கர்வங்காளர்கொங்கர்போடர்மாகதர்விராடர்
நலங்கொளிவ்வுலகத்துள்ளநராதிபரெவரும்வந்தார். (௨௧)

மருமலர்க்குழல்வேற்கண்ணாண்மன்றல்காண்பவர்களெல்லாம்
வருகவென்றழைத்தபோதுமாடகேதனங்களாடுந்
திருநகர்தன்னிலெல்லாச்செல்வமுஞ்சிறப்புஞ்சேர
நிருபர்தங்குழாங்களெங்குமிடமறநெருங்கிற்றம்மா. (௨௨)

எண்டலமுழுதுமுள்ளவிறைவரும்படையும்வேறு
கொண்டுளபொருளும்வந்துகுழுமினதோற்றம்பண்டை
யண்டமும்புவியுந்தன்பேருதரமுற்றடங்கநின்ற
வண்டுளாய்ப்பரமனுந்திவனசநேரொத்ததவ்வூர். (௨௩)

அரசர்களொருக்காலண்டமேலெழுந்தரியதன்மேற்
பொருவினபூழிபோகப்புனன்மதித்தெழுந்துநொய்தில்
விரவுதல்போலும்வெய்யோன்வெம்பரித்தடந்தேரோட்டித்
திரையெறிநறுநீர்மேலைக்கடலிடைச்சென்றுபுக்கான். (௨௪)

வேலையில்வெய்யோன்சென்றுமறைதலும்விரிந்தசெக்கர்
மாலையாம்பொழுதிலாண்டுவந்துளமன்னர்க்கெல்லா
மாலையம்பதிதவேறுவேறுகொண்டமைவித்தன்ன
சாலையுந்திருத்தியீந்தான்றாதல்விரிஞ்சர்கோமான். (உரு)

உண்டனருடுத்திப்பூசியணிந்தகண்ணுறக்கமாங்குக்
கொண்டனர்பண்டையின்பங்கொண்டுளகுமாரனோடு
மொண்டொடிதானுங்கங்குனீங்குழியுற்றுநோக்கி
யெண்டருமனத்துட்காயன்படைபொரத்துயினீத்திட்டார். (உசு)

கானெலாமுலவுந்தென்றற்கடும்புலியிவர்கண்மெய்யி
னூனெலாஞ்சுவைப்பவங்கமுடைந்துயிர்ப்பயரும்வேலை
மீனெலாமுடலின்புள்ளியாமெனவிளங்கத்தோன்றி
வானெலாமுடலமாகிமதிப்புலிவந்ததம்மா. (உஎ)

மந்தரவரையால் வானோர்மகோததிகடைந்தஞான்று
சிந்தியவமுதத்துள்ளியள்ளியேதிரட்டிவைத்த
சுந்தரமணிப்பொன்மூத்தின்குடமெனச்சுதைததும்ப
விந்தமேலெழுந்தவானத்திருஞ்சடன்முகட்டினின்றே. (உஅ)

காவெலாங்காமன்காளக்கோகிலங்கனிந்தசெந்தேன்
பூவெலாமவன்வின்னாணுஞ்சுரும்பினம்போர்ப்பப்பூவா
மேவெலாமாவின்வாங்கியேவுமோரேவம்வைக்கு
மாவமுமிவர்கண்மெய்யேயாகினவனங்கற்கம்மா. (உகூ)

கங்குலும்விடமாய்த்தென்றற்காற்றும்வெங்கூற்றாய்த்தோன்றுந்
திங்களுந்தழலாய்வாட்டச்சிந்தையுள்வருந்தித்தேம்பி
மங்கையுமன்னையெண்ணிமாழ்கினண்மன்னன்றானு
நங்கையையெண்ணியெண்ணிநாவுலர்ந்துடலைந்தான். (௩0)

இருவர்க்கும்பழையவின்பமிடையினிற்றடைப்பட்டந்தோ
வொருவினையென்செய்வாரிதுணர்விலாதுருவிலான்செய்
பொருசமர்க்கஞ்சிக்கங்குற்போதுபோம்பாதைநோக்கி
யொருவரையொருவர்காணக்கண்படையொழித்துநின்றார். (௩௧)

ஐயனுந்தையலாளுமகன்றவின்பமெல்லா
மெய்படப்புணர்த்துநாளினுண்மகிழ்நல்விழாவுகாண
வெய்துவேனெய்திலென்னவெண்ணிவந்தெழுந்தான்போலும்
வெய்யவன்கீழைவேலைமுகட்டிடைவிளக்கஞ்செய்தான். (௩௨)

முனிவர்சொல்லெழுநாளுமுற்படக்கழிந்தபின்னற்
றனிமணமியற்றுநாள்வந்தடுத்தலுந்தரணிவேந்த
னினிநகராதிக்கமூதொடாயணிகவென்றே
யனைவர்க்குமறியயானையேற்றுமுரசறைமினென்றான். (௩௩)

மணமணிமுரசினோதைமாநகர்முழங்கக்கேட்டாங்
கணவவிண்ணவர்களோடுயளக்கருநிதிக்கோனோடும்
பணமுடியுரகர்நாடு மற்றுளபதியுமிந்தக்
குணமிலையென்றுசெம்பொன்கொண்டுவேய்ந்தழகுசெய்தார். (௩௪)

இலங்களின்சுவர்செம்பொன்னாலிழைத்திடையிடையின்முத்த
நலங்கொளக்குயிற்றிமேன்மேனவமணிவிதானந்தூக்கித்
தலங்களைக்கலவைச்சேறான்மெழுகிச்சந்தனக்கோலங்க
ளலங்கரித்தெவர்க்குந்தீம்பாலனமுதற்பிறவுமீந்தார். (௩௫)

நேரினிலிமையாவானோர்நிலமிசைவருதற்கான
காரணம்பாருமென்னக்கவின்பெறத்தெருக்களெல்லாந்
தோரணநட்டுச்சோபானங்களுந்துலக்கிச்செம்பொற்
பூரணகுடங்கள்வைத்துத்தீபமும்பொலிவுசெய்தார். (௩௬)

பண்டையகலனுந்தூசுநீத்துளம்பரிவால்வேறு
கொண்டுதத்தமக்கேமன்றற்கூட்டுதல்குறிக்கொண்டாங்கே
விண்டதுபோலுந்தேசுநலந்தரவிளைவுகண்டார்
வண்டடைகுழலினாருமதுகைவாட்கையினாரும். (௩௭)

பன்னிருகாதத்தெல்லைப்பரப்புக்கொண்டுயர்த்திவான
மின்னிருகாதம்வீசவிளக்கொளிபலவுஞ்சூட்டிப்
பொன்னிருமணியுமுத்தும்புனைந்துளமணமாடத்தின்
மன்னிருவோரும்புக்கார்மற்றுளமன்னரோடும். (௩௮)

பாணித்தவிதியாற்சிங்கப்பிடர்மிசைப்பலகைகூட்டி
யாணிப்பொன்றரளக்குப்பையருகுவேய்ந்தழகுமின்னு
மாணிக்கப்பீடமீதுமணவினைக்குரியவெல்லா
மேணிக்கையோடுசூழ்கொண்டிருபிறப்பாளராற்ற. (௩௯)

நவமணிதன்னைக்கூய்நீநந்திருமருகன்றன்னை
யிவணழைத்திடுவாயென்னவேவலிற்றிரம்பானேகிப்
புவியினிற்சிறந்ததாலபுரந்தான்புதல்வன்றன்னை
யவனடைந்திறைஞ்சிக்கூறவாண்டுவெந்தெழுந்தவீரன். (௪௦)

புண்ணியநதிகளெல்லாம்புகுந்துமாதவர்கடந்த
வெண்ணறுந்தீர்த்தம்யாவுங்குடைந்துமெய்யீரம்போக்கிக்
கண்ணொளிமழுங்குஞ்செம்பொற்கோசிகங்கவினவார்த்து
நண்ணுபேர்நாமமிட்டான்றன்குலநாமந்தோன்ற. (௪௧)

ஆரகேயூரஞ்செம்பொனரைவடம்மதாணிகண்டி
நேர்படப்புனைந்துதிண்டோளங்கதநிறையச்சாத்தி
வார்கழலிறுக்கிச்செம்பொன் மணிக்குழைகுழையிற்றூக்கி
மேருமால்வரையினுச்சிக்கதிரென்மகுடம்வேய்ந்து. (௪௨)

மற்றையவணிகளெல்லாம்வான்முறைமலியக்கொண்டு
கற்றைவெண்கவரிவீசக்கவிகைமேனிழற்றச்சங்கம்
வெற்றிகல்யாணிருடிமும்முரசியங்கள்விம்மப்
பொற்றடந்தேர்மேற்கொண்டுபுறப்பட்டான்புவனதேவன். (சங)

வீதியிற்பவனிசெல்லும்வீரனைக்கண்ணிற்கண்ட
மாதருமாதாங்கமகாநீர்புதிதுகண்டாங்
காதரித்தெதிர்கொண்டேறுமாறுபோல்டைந்துமொய்த்தார்
காதன்முன்செல்லநாணம்பின்செலக்கவறல்கொண்டே. (சச)

நாணெலாம்பின்னேயோடநாரியர்மெய்யினாறும்
பூணெலாமுன்னேயோடப்புனைதுகிற்பொலிவுமாழ்கி
யாணெலாம்பெண்ணாய்த்தோற்றவைத்துளவரசன்றன்னைக்
காணலேயன்றியன்னார்மற்றொன்றுங்கண்டிலாரால். (சரு)

நாரணனென்றுகாமனன்றுநன்றொளிர்செஞ்சுட்டு
வாரணத்துவசனன்றுவானவர்க்கிறைவனன்று
தாரணிதனிலேயிந்தத்தாதலவிரிஞ்சனாற்றுங்
காரணத்தவங்கண்டீக்குவந்தருள்கடவுளென்பார். (சசு)

இன்னவன்வடிவுகண்டவெழிற்றிருமடந்தையன்ன
கன்னியும்பின்னேவேறுகாசினிதன்னையானா
மன்னரைக்கினையாளென்றல்பெருமையோமறனென்றாலுஞ்
சின்னமாய்க்கினைத்தலன்றிச்சிந்தனைசெய்யாளென்பார். (சஎ)

பொன்மணிக்கவிகைகாணார்புரிவளைத்தழனிகேளா
ரின்னியமுழக்கமோராரிவனையேமுழுதுநோக்கி
மின்னிடைமகளிரெல்லாம்வீதிவாயொருவனாக
மன்னியதென்கொலந்தோதமியனோவள்ளலென்பார். (சஅ)

எவினாற்பகையைவென்றிச்செய்துநின்வடிவுகாண
மேவினநங்கண்மீதுவிழியழல்பட்டுவீய்ந்த
பூவினானிடையில்வந்துபொருதினான்றனையும்வென்றெம்
மாவியுக்காதபோதுனாண்மைமாசடையாதன்றோ. (சகூ)

கலன்களுந்துசுகானுஞ்சழீஇயநின்வடிவுகாணா
நலன்களிற்பட்டுவைபுசங்களைவிலக்கியென்னே
புலன்களும்பொறியுஞ்சோரப்புகுந்துகொண்டேகாநின்றா
யலக்கவின்வீரற்கேதோராண்மையோயறமோவென்பார். (ருo)

வள்ளலென்றிவனைக்காணவந்ததுபிழையேநந்த
முள்ளமுநாணும்பூணுமுணர்வுமற்றுளவுமீண்டு
கொள்ளைகொண்டகலாநின்றொருவருங்குறிக்கொளாத
கள்ளனிக்கிவனைவாளாவிடுவதோகருமமென்பார். (ருக)

என்மனத்திருந்தானிந்தவேந்தலென்றொருத்திக்கோதித்
தன்மனத்தடங்காவோகைததும்பினாளவளுமென்னே
புன்மனக்காமங்கொண்டுபுலம்பினாயிவனுமென்றன்
நன்மனத்திருந்ததோராஙவில்வதரியாயமாமோ. (௫௨)

மதர்விழித்திருவினல்லார்மயலொடுபுலம்பிநிற்ப
விசரதேயத்துவேந்தரிறைஞ்சவந்தியர்கள்வாழ்த்தப்
புதுமணக்கோலம்வேய்ந்தபொன்னகர்வலமாய்ப்போந்து
வதுவைமண்டபத்துட்புக்கான்மங்கலமுரசமார்ப்ப. (௫௩)

ஆதவனுதயநோக்கியரும்புனற்றடங்கண்மல்குஞ்
சீதமென்னளினப்போதுசேயிதழ்விரித்தாலொப்ப
நீதியான்புகுதலோடுநிறைந்தபேரவைக்கணுள்ள
பூதலவேந்தர்செங்கணிணைமலர்பூத்ததன்றே. (௫௪)

மணிகுடங்கவரிபேரியங்குசம்வயங்குதீப
மணிகிளர்துவசமாடியரியமங்கலங்களெட்டும்
பணியினார்பரித்துநேர்வந்தேந்தப்பல்லாண்டுகூறக்
கணிதநூன்மறையோர்வாழ்த்தக்கடிமணமாடஞ்சார்ந்தான். (௫௫)

தன்பெருங்குருவைப்போற்றித்தாதையைத்தாயைச்சேவித்
தன்புகொண்மாமன்மாமிபதமலரங்கையேத்தி
நன்பெருமுனிவர்துய்யநான்மறையவர்களாசி
யின்புறவணிந்துமன்றற்றவிசிடையிருந்தானேந்தல். (௫௬)

ஆதனத்திருத்தலோடுமாதுலனருகினின்ற
மாதரைவிளித்தவல்லையெனதுமாதவத்தில்வந்த
பூதலத்தரம்பைதன்னைப்புதுமணக்கோலஞ்சூட்டித்
தீதிலாதிங்குகூட்டிவம்மெனச்செப்பிவிட்டான். (௫௭)

பொருக்கெனவெழுந்துசென்றபூவையர்நால்வரோடித்
திருக்கிளரரம்பைபாதஞ்சென்னியிற்சூடியம்மா
மருக்கிளர்வதுவையாற்றமன்னவைதனக்கின்றுன்னை
விருப்பொடுமழைக்கச்சொற்றான்றாதையாம்விரிஞ்சனென்றார். (௫௮)

கேட்டனண்மகிழ்ந்துபச்சைக்கிளிமொழிமயிலினாளும்
வாட்டமுஞ்சடைப்புநீங்கிவாண்முகமதியமொத்தா
ளாட்டினார்கங்கையாதியரும்புனற்கலசநன்னீர்
கூட்டியபனிநீர்சாந்துமான்மதம்புழுகுகோட்டி. (௫௯)

புனைசடையவிழ்த்துள்ளீரமகற்புகைகொண்டுபோக்கி
வனைதுகிற்காவிநீக்கிமருங்கினிற்பிறங்குஞ்செம்பொன்
றனையிழைநூற்றுச்செய்ததனிப்பசும்பட்டுக்கட்டி
யனையமுந்தானைமேற்கொண்டணிந்தனரழகுமின்ன. (௬௦)

வேறு.

எதிரிலாடியொன்றெடுத்தொருமடவாலேந்தத்
துதிசெய்சேடியர்தோகையைநாற்புறஞ்சூழ்ந்து
மதியைமற்றொருமதியினன் மதித்தணிவதுபோற்
புதியபொன்மணிக்கலன்களாலுடலினைப்புதைப்பார். (௬௧)

பாந்தளுண்டுவாயுமிழ்தருபான்மதியேய்ப்பக்
காந்துபன்மணிச்சில்லணியுச்சியிற்கட்டிப்
போந்துபொன்முகமதியநீள்புறங்கிடந்திலங்க
பூந்தண்வார்குழல்வகுப்பெடுத்தருஞ்சடைபுனைந்தார். (௬௨)

வட்டவாண்மதிநடுவினின்மற்றுமோர்மதிவந்
திட்டதாமெனமுகமதிக்கிடைப்படுநுதலிற்
சுட்டியிட்டனர்சுமாவிருக்காதெனுந்துணிவாற்
கட்டியிட்டவாபோன்றெழிற்பட்டமுங்கட்டி. (௬௩)

ஆசைகொண்டுளகாமுகர்மனக்கவர்ந்தலைக்கு
மூசலொத்தவார்குழையினுக்கொளிர்மணிக்கலன்க
ணேசமோடணிந்தவிர்மணிமுருகுமேனிறைத்தார்
மாசிலார்மனமுருகுமாறிதுவெனமதித்தே. (௬௪)

கருமையென்பதெனருமையோவிதனலங்கலந்து
பெருமைகொண்டதென்றடிக்கடிபிறர்நலம்பேசற்
கிருமைகொண்டிருவிழியினுக்கெழுதினர்சிந்தை
யொருமைகொண்டவரிருமையுங்கைவிடுத்துருக. (௬௫)

முத்தெனப்பெயர்படைத்தநாமிவண்மணிமுறுவற்
கொத்துறுதலமிருப்பதினுருவினையொழித்தன்
மெத்தனன்றெனநான்றுயிர்விடுவதைமானும்
நத்தணிந்தனர்நாசியினிலவொளிநால. (௬௬)

பூணின்மிக்கவைநாணவைபுனைவதற்கிடமிக்
காணினம்வயிறுளதெனவுரைசெயுக்கவின்போ
லாணிமிக்குபொன்னட்டியல்களந்தனிலணிந்தார்
மாணின்மிக்குமேனகையெழிற்கழிவுசெய்மடவார். (௬௭)

உலப்படுத்திடாதத்தாசங்கமிட்டொழித்துப்
பலப்படுத்தியபருமுலையானையைப்பின்னும்
புலப்படுத்திடாப்புரிந்தனபாகரைப்போலும்
நிலைப்படுத்தினர்வடங்களுமாமுகிறைத்தே. (௬௮)

காந்தண்மென்மலரிதழ்தொறுங்களசவண்டினங்கள்
போந்ததாமெனமோதிரம்விரல்களிற்புனைந்து
மாந்தர்கண்கதுவாவகைவச்சிரயாப்புச்
சேர்ந்தபொன்மணிக்கடகமுந்தொடிகளுஞ்செறித்தார். (௬௯)

விரியுஞ்செங்கதிர்ப்பவளமுந்தாளமும்விராவிப்
புரியுநூலினிற்கோத்துமுன்காத்தினிற்புனைந்தா
ரரிவையின்றிருவழகினுமழகுமேற்சரியச்
சரிவனைந்தனர்புவியெலாஞ்சரிசரியென்ன. (௭௦)

கட்டுபூங்கழற்சுமையினாற்கனதனப்புரையால்
வட்டவானுதன்மடக்கொடிகொடியிடைவருந்தா
திட்டபூணினுங்கவின்மணிச்சுடர்குழைத்தெரியு
மொட்டியாணமுங்கட்டினார்சிட்டர்மெய்யுருக. (௭௧)

கலாபமேகலையிருசிகைபருமநற்காஞ்சி
நிலாவணிப்பணிநிதம்பமேனிரைநிரைநிறைத்தார்
பலாசனம்படுமொழியினாள்பதுமமென்பதமேல்
விலாசநூபுரமிலைந்துபொற்சதங்கையுமிட்டார். (௭௨)

அட்டபாலினுந்தேனினுமருங்கனியினுஞ்சீ
ரிட்டவொப்பனைபுரிந்துகண்ணேறிவண்மீது
பட்டிடாவகையொதுங்கிடத்தெய்வதம்பரவித்
திட்டிசுற்றியேவிடுத்தனருலகெலாந்திகைப்ப. (௭௩)

மாலையிற்பொலியாமருவானவர்மேனாள்
வேலையிற்கடையாமருந்தணிமலர்விருக்கச்
சோலையிற்பொருந்தாக்கனிசுவைத்திடாவிரத
மாலையிற்படாக்கரும்பெனவிளங்கினாளம்பை. (௭௪)

பொன்னின்பாவையும்பூவையும்புதுமடக்கிளியு
மன்னமன்னதன்பாங்கியரங்கையிற்றாங்கி
முன்னும்பின்னும்மொய்த்தேகிடமுத்தவெண்கவிகைச்
சென்னிமேற்றருநிழலொடுசிறுநிலவெறிப்ப. (௭௫)

வேறு.

இருபுறங்கவரிவீசவெழின்மணித்துவசஞ்சூழ
பொருதுகில்விதானநீழல்போர்த்திடப்பொதியவிழ்ந்த
மருமலர்க்குழலினார்கண்மங்கலவள்ளைபாடப்
பெருமழையென்னச்சங்குபேரியின்னியங்களார்ப்ப. (௭௬)

வேறு.

கொத்துமலரும்பனியினீருமிடைகொட்டி
மெத்தையினெடுந்துகிலின்மென்படம்விரித்தே
தத்தைமொழியார்புடைவளைந்திருகைதாங்க
மத்தகமுலைத்திருமடந்தையுநடந்தாள். (௭௭)

இன்னதிருமாதுபுவனேந்திரனலாமற்
பின்னையொருவர்க்குரிமைபேணுதல்செயாளென்
றுன்னுபுமெனப்புகலுசந்துரையினொப்ப
வன்னவள்பதத்தணிசிலம்பொலியலம்ப. (௭௮)

முத்துமணிமாலைமணிமாலைமுலைமாலை
வித்துருமமாலைமுலைமீதொளிவிரிப்பப்
புத்தமுதினும்மினியபுன்னகைவிளங்கச்
சத்திரவிழிக்கடைதழைந்தருடதும்ப. (௭௯)

தண்டலைநறுங்குழலின்மீதுகுடிதக்கும்
வண்டுகள்கலைந்தொலியடிக்கடிவழங்க
வுண்டுமெனவோதுவதலாமலொருநாளுங்
கண்டுபிடியாவிடைநுவன்றொசிதல்காட்ட. (௮௦)

மேலையசுரேசர்முழுதும்விழிதன்மேவ
மாலையுருவானதிருமாலையுமடக்குங்
கோலவுருவானதிவடன்னிலைகுறித்தே
ஞாலமிசையாவரெவைநாவினவில்கிற்பார். (௮௧)

இட்டபடமீதினிலெடுத்தவைவருந்தா
தொட்டிநடைபெற்றவருமோவியநிகர்ப்ப
மட்டவிழ்மலர்க்குழலியன்றல்புரிமாடங்
கிட்டினனிருந்தவரெலாந்துனிகிடப்ப. (௮௨)

தாதையுறையாசனமடைந்துதலைதாழா
மாதயலொதுங்கிமடமாமயிலினணிக்
கோதையர்கள்கும்பலொருகொம்பெனவொசிந்தே
பாதமலரைக்குறிகொள்பார்வைகொடுநின்றாள். (௮௩)

நின்றமகண்மீதருணிறைத்துளவிரிஞ்சன்
நன்றுமணவாளனெடுநற்றவிசிருத்தி
மன்றல்புரிதற்குரியயாவும்வருவித்தே
யன்றுமறையாகமவிதிப்படியமைப்பான். (௮௪)

வேறு.

மருமகன்றிருமலர்க்கரமீதினின்மகடன்
பொருவுமெல்லிதழ்க்காந்தளின்கரமலர்பொருத்திப்
பெருகுதூரியமுழங்கிடப்பேரருள்விரிஞ்சன்
றருமலர்ப்பெருங்கரத்தினுற்றாரைநீர்வார்த்தான். (௮௫)

நாதயாழிசையிசைத்தனர்நாரதரிசையின்
கீதமங்கலம்பாடினர்கிளிமொழிமகளி
ரோதுநென்மணிதூவிநல்லாசிகளுரைத்தார்
வேதவேதியர்விரிமலர்சிந்தினர்விபுதர். (௮௬)

நெய்பசுந்தயிர்பாலறுவகைச்சுவைநிறைத்துச்
செய்யதீங்கனிதேங்கனிபோனகஞ்சேர்த்தே
துய்யபாசனத்தமைத்திடத்தோகையாற்றோன்றல்
கைவினுற்றொடப்புரிந்தவரோடுளங்களித்தார். (௮௭)

துடுவைமென்னடுநாவினானெய்க்குடஞ்சொரிந்து
படுசமுத்தொடுதிரவியமாகுதிபண்ண
யிடுபதார்த்தமுண்டிருவிலாப்புடைத்துடல்வீங்கிச்
சடசடப்பொடுவலஞ்சுழித்தெழுந்தெரிதயங்க. (௮௮)

நெய்முகந்தழல்வேள்வியினாகுதிநிரப்பிச்
செய்யுநான்மறைச்சடங்குநூல்கரைந்தபின்செம்பொன்
றுய்யமங்கலநாணணிதோகைமென்கழுத்தி
லையனுந்திருக்கரத்தினாலணிதரவணிந்தான். (௮௯)

பொரியையங்கையின்வாங்கிமூவலங்கொடுபோற்றி
யெரியினிட்டுணவாற்றிநல்விறைவனுமயிலும்
புரியுநான்மறைச்சடங்கெலாம்புரிந்தபின்மறையோர்க்
கரியபொன்னிதிமுதலியதானமுமளித்தே. (௯0)

கைகளான்மணிச்சதங்கைநூபுரவொலிகறங்குஞ்
செய்யதாண்மலரம்மியிலேற்றியேதேவிக்
கையமின்றிவானமர்ந்துளவருந்ததியெனுமீன்
றுய்யகற்பினைத்துதித்தெதிர்காட்டினான்றோன்றல். (௯௧)

மலரில்வாசமும்புனலினிற்குளிர்ச்சியுமதியின்
நிலவும்பொன்னினிலொளியுமொப்பாமெனநிறைநீ
ருலகும்வானமும்பிறவுநின்றுவந்தினிதுரைப்பக்
குலமடந்தையுங்குரிசிலுமலர்க்கரங்கோத்தே. (௯௨)

குருவைநான்மறையாளரைக்குரவரைத்தலையாற்
பரவிமற்றுளயாவர்க்குநல்லுரைபகராப்
பொருமணிக்குலக்குவையினாற்புதுமலர்ச்சுமையாற்
றிருமணத்தினுக்காற்றியமணவறைசேர்ந்தான். (௯௩)

சேர்ந்தசெம்மலுமீளவும்பேரவைசேர்ந்து
கூர்ந்தநண்பினோன்றனக்குநன்மணஞ்செயக்குறித்தா
னோர்ந்தமாதுலன்மருமகன்கருத்தினுக்கொத்துச்
சார்ந்தமாமணமியற்றுதற்காவனசமைத்தான். (௯௪)

வேறு.

எத்திசையும்புகழ்ந்தருளுமெழிலமைச்சனவமணியின்
புத்திரியாமேனகையைப்பூபாலர்சூழ்சபையி
லத்தினஞ்சித்திரம்போலுமம்பொன்மணிக்கலன்பூட்டிப்
புத்திசிகாமணிதனக்கும்புதியமணஞ்சூட்டினனால். (௯௫)

வேறு.

மன்றன்முடிந்ததற்பின்மாதவந்தேரும்முனிவர்க்
கன்றுசெயுங்கடன்கள்யாவும்புரிந்ததற்பின்
நின்றமுடிமன்னர்கட்குநீணகரமாக்களுக்கு
நன்றுவிருந்தாற்றியாவுநயந்தளித்தே. (௯௬)

சங்கப்பெரும்படையுந்தார்வேந்தரும்பலரு
மங்குதத்தமாநகருக்கேகவழியனுப்பிப்
பங்கமிலாதுள்ளத்தெழுந்தபரிவினொடுஞ்
சங்கையறவீற்றிருந்தான்றன்பேர்மருகனொடும். (௬௭)

திருக்கல்யாணப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪௭-க்குத் திருவிருத்தம்-உ௮௫௨.

---

## தன்னகர்சென்றபடலம்.

தேடருநிதியையடங்கொளுமதியைத்திருமணிச்சுடிகையம்படமா
ராடரவணிந்தவங்கனை மங்கைபங்கனையமலனையரும்பாங்
பாடுதலருளியென்பணியேற்கப்பதமலருதவியபரனைக்
கூடனாயகனைச்சொக்கநாயகனைக்கும்பிடுவாற்கிலைகுறையே. (௧)

வேறு.

மும்மதிதணந்தபின்னர்மூகின்முலையரம்பையோடுஞ்
செம்மதித்தாதையோடுந்திருநகர்செல்வானெண்ணி
யம்மதிகங்கொண்மாமற்கோதினனவனுங்கேட்டுச்
சம்மதிகொடுத்தான்றன்பேராசையுந்தத்தஞ்செய்தே. (௨)

பார்நிதிகவிகைபீலிபரிகரிபணிபொன்னுடை
தேர்கிளைகவரிகுஞ்சஞ்சேயிழையவர்கள்கூட்ட
மேர்பெறவிருந்தவெல்லாமினிதுவந்தீந்தேதன்னுந்
தார்புனைவிரிஞ்சர்கோமான்மருகனைத்தழுவிச்சொல்வான். (௩)

ஐயநான்வருந்தியீன்றவரம்பையையரசிற்குக்
கையினுதவம்வார்த்தேனெனக்குளகடன்களெல்லாஞ்
செய்வதுன்கடனேயல்லாதிலையெனச்செப்பிப்பின்னும்
பொய்யிலானேகவென்றபுகன்றனன்மனம்பூரித்தே. (௪)

ஏகெனச்செலவுதந்தவேழின்முடிவிரிஞ்சன்றன்னைப்
பாகினுமினியதிஞ்சொன்மாமியைப்பாவிமென்பூங்
கோகிலமனையாளோடுங்கொடிஞ்சியந்தேர்மேற்கொண்டு
சேகரக்கிளையுமற்றைச்சேனையுஞ்சேரச்சென்றான். (௫)

விரிஞ்சநாடகன்றகாறும்விலக்கலுநதியுநீத்துப்
பெருஞ்சாகிலனுந்தள்ளிப்பெய்மழைமுகில்சூழ்வான
முரிஞ்சமென்கொம்பர்வாய்ப்புற்றும்பர்பொன்னுலகம்போலுந்
தருஞ்சிறப்புளதோர்சோலைகண்டதிற்சார்ந்தானன்றே. (௬)

தேக்கமிற்கடம்புபுன்னைதென்னைகோங்கிலவுசாதி
மாக்குருந்தாசுசந்தவருக்கைமாதளைவேய்பூகம்
மேக்குயர்ந்துயர்ந்தவைந்தருக்குலம்வெட்கித்தக்கப்
பூக்கினர்ந்தழகுவாய்ந்தன்றதப்பொங்கரய்யா. (௭)

கிள்ளைகோகிலமென்சூதங்கேகயங்குரங்குபூவை
கொள்ளைசேர்ந்திரைகொள்சாலமகிருகங்குறைபடாத
கள்ளவிழ்மலர்மென்சோலைக்கண்புகுந்தரியசெவ்வேல்
வள்ளலுமமைச்சுந்தானைமன்னரும்வதிந்தாரன்றே. (௮)

தங்குலத்தரசன்வெம்மைசார்ந்தனனென்பதெண்ணி
யங்கவற்குதவிசெய்வான்போன்றுவானதனினின்றுஞ்
பங்கயஞ்சாம்பச்சேதாம்பன்மலர்ந்தழகுகாட்டச்
செங்கதிர்ச்செல்வன்மேலைத்திரைக்கடல்சென்றுபுக்கான். (௯)

தாமரைசாம்பச்சேதாம்பன்மலர்ந்தழகுதங்கப்
பூமலிதடமுஞ்சோலைப்புறவமும்புறவுஞ்சூழ்ந்து
காமர்வெண்கலைகண்மொய்ப்பக்கங்குலைக்கரைத்துச்சீத
மாமதிவிளக்கஞ்செய்தான்மருமகன்வேடைமாற. (௧௦)

உத்தமக்கலைகொளிந்துதன்குலத்தொருத்தியோடும்
வித்தகனடைந்தானென்னும்வேட்கையின்விளைவுதூண்ட
முத்தினாற்றிருத்திவானமுழுவதுமுடித்துவைத்த
சித்திரப்பந்தல்போலுஞ்செறிந்தனவுடுக்களெல்லாம். (௧௧)

குயில்கிளிபூவைமாருக்குளிர்பொழிலிடங்கடோறும்
பயில்சிறைவண்டுபாடப்பசியமென்கலாபந்தூக்கி
மயிலினநடிப்பமந்தாநிலமலர்வாசஞ்சிந்தக்
கயல்விழிமாதுந்தானுங்களித்தகமோடுவைகா. (௧௨)

முத்தினான்மணியாற்செம்பொனிழையினான்முழுதுஞ்செய்த
சித்திரப்படங்கணாற்றித்திருவிளக்கமையவேற்றி
யத்தலத்தமைத்தமஞ்சத்தலந்தொறுமணிவாள்வீரர்
தத்தைமென்மொழியாரோடுந்துயில்கொளுந்தலைமைசார்ந்தார். (௧௩)

உறங்கினவேந்தரீட்டமுறங்கினவமைச்சரீட்ட
முறங்கினவீரரீட்டமுறங்கினமகளிரீட்ட
முறங்கினதந்தியீட்டமுறங்கினவாசியீட்ட
முறங்கினபேரிசங்கமுறங்கினவுள்ளமெல்லாம். (௧௪)

உலகெலாமுறக்கங்கொண்டதுலகினுக்குயிரேயன்ன
தலைவனுந்துயின்றான்மாதுமடியின்மேற்றலைவைத்தந்தத்
திலகவாணுதலினாளுந்துயின்றிலள்சிலைவாளேந்தி
நிலைபெயராதுபுத்திசிகாமணிகாத்துநின்றான். (௧௫)

இருவருந்துயிலாதங்குகண்ணிமையிமையாவண்ண
மொருவருக்கொருவரோயாதுள்ளனகதைகள்பேசி
நிருபனைக்காத்தல்செய்தார்நடுநிசிநேரந்தன்னிற்
பெருவினையொன்றுண்டானததனிலைபேசுகிற்பாம். (௧௬)

கும்மல்கொண்டகன்றுநீண்டுமெகிருகங்குறைபடாத
வம்மாப்பொதும்பர்காப்பணயனுறையண்டந்தாவி
யெம்மாத்தொகையுமிந்தமாத்திலுக்கிணையின்றென்னச்
செம்மலர்க்கிளைகள்வாய்ந்ததெய்வவான்விருக்கமொன்று. (௧௭)

முப்புவிதன்னிலான்றமூதறிவுடையோராலுஞ்
செப்புதற்கரியவந்தச்செழுமலர்த்தருவினுச்சிக்
கொப்பினிலண்டாண்டப்பறவைகளிரண்டுகூடி
யெப்பொழுதேனுநீங்காததிற்குடியிருந்துவாழும். (௧௮)

அங்கவைகளுக்குட்பேடைசேவலையன்பானோக்கி
யிங்கிவர்யாவர்யாதுபதியிவணெய்தற்குற்ற
சங்கையெனுள்ளவெல்லாஞ்சங்கைதீர்த்தெனக்குத்தோன்றப்
பங்கமில்லாதுசொல்வாயென்னவாண்பறவைகூறும். (௧௯)

சிவனயன்மாலேயன்றிச்சிறியவென்னுவாற்றேறி
யிவன்செயலெடுத்துச்சொல்லற்கேயுமோயிவன்றனூரும்
புவனியிலழகுவாய்ந்ததிருப்புவனேந்திரமாகுங்
கவனவெம்பரியான்பேருந்திருப்புவனேந்திரன்காண்டி. (௨௦)

மந்திரியோடுதேசவளக்குறித்திணையிலாத
கந்தகங்களின்மேற்கொண்டுகோசினிமுழுதுநோக்கி
வந்தபோதமைச்சனிங்கமாதிவடன்னைச்சேர்ந்து
நந்துருஞ்தடாகத்துள்ளோர்சுரங்கத்தினண்ணிவாழ்ந்தான். (௨௧)

மாற்றவனொருவனிந்தமன்னனைவதைசெய்தப்பாற்
கோற்றொடிதனைக்கைக்கொண்டான்கோதையும்விநயமாக
வேற்றுடையவனற்பூசையிட்டினலமைச்சைக்கண்டு
சாற்றிமாண்டவனுக்காவிதந்துமூவருமாய்க்கூடி. (௨௨)

மாமனைச்சேர்த்துச்சோறுவிலையைவாங்கிப்பின்னே
பூமலர்க்குழலினாளப்பதுமணம்புணர்த்திவந்தா
ளுமெனப்பெடையுங்கேளாக்கொல்லுலையழல்வாயிட்ட
தீமெழுப்படையைக்காதிலோட்டியதென்னத்தேம்பி. (௨௩)

உத்தமியிவளேவேந்தனுயிரினையிறச்செய்த
தத்திணையொழித்துவாழ்விற்றங்கினளென்றகண்ணீர்
முத்தெனவுகுத்தபேடைசேவலைமுழுதுநோக்கி
யித்தனையடைந்தார்க்கின்னுமேதமேதேனுமுண்டோ. (௨௪)

எனக்குநீயுரைவைவென்னச்சேவலுமிதனைச்சாற்ற
மனக்கிலேசத்தாற்சற்றுமெனனமுற்றரிதிற்றேறி
யுனக்குநானொழிப்பதென்னேயுள்ளவாவுணர்தியென்னக்
கனக்கதிருதையகாலத்திவர்செலுங்கானிலம்மா. (௨௫)

வாவியிலாவிமாண்டதாதைதன்மரணங்கேட்டாங்
காவியுமனமுஞ்செந்தீயாமெனமேன்மேற்சிற்றம்
மேவியவிடும்பன்மைந்தன்வெஞ்சமராடற்கொல்கிப்
பாவனையினதென்றோராமறுநெறிபடராவண்ணம். (உசு)

வழியினை மாற்றியொற்றைக்காலினுல்வகுத்தபத்தி
யெழில்செய்மண்டபந்தானென்றுநுழைந்திவனேகும்போது
பழிபடவிடிந்துகொல்லுந்தவறினுற்பதிக்கண்மேனு
ளழிவுகொளரக்கன்மைந்தனரவுருவெடுத்துக்கொல்வான். (உஎ)

இரண்டினுமாவிதுஞ்சாதிறையவன்பிழைப்பானுகின்
முரண்டரும்வாழ்நாட்டீர்தலன்றிமுன்னீர்சூழ்ஞாலந்
திரண்டுமேல்வரினும்வீயானென்றுரைசெய்துபின்னும்
மருண்டிடப்பெடையைநோக்கியீதையும்வழுத்துமன்னே. (உஅ)

சொல்லியவிதனைக்கேட்டோர்முற்படவெளியேசொல்லிற்
கல்லுருவாவார்பின்னுற்களறுவார்க்கதுவந்தெய்தா
வல்லையக்கல்லின்மீதுமாநிலமுழுதுநேமி
புல்லிடப்புரக்குஞ்சக்கரவர்த்திக்கோர்புதல்வன்றன்னை. (உகூ)

தந்தையோர்தலையின்பக்கந்தாயிருகாலின்பக்கம்
வந்துநின்றுளநோகாதுவாளினுலொருவெட்டாகச்
சிந்தைநின்றுவப்பவெட்டிப்பலிசெயிற்றீர்ந்துபண்டைச்
சுந்தரவடிவமோடுதுலங்குவார்சூட்சமீதால். (௩௰)

என்றுரைசெய்யக்கேட்டபேடையுமெதைநாமெண்ணிக்
கன்றுதல்புரிவேமென்னுக்களறிவீற்றிருப்பவாண்டு
நின்றமந்திரியுங்கற்புநிறைந்தபொன்மயிலுங்கேளா
வொன்றினுக்கொன்றுபேச்சற்றுள்ளழிந்துலைவுசூழ்ந்தார். (௩௧)

நங்கையுமமைச்சுந்தன்புநண்ணினுரினிமேலாவி
பங்கமாகினுமாவார்களிப்பெரும்பாவம்பற்று
தங்குபோய்த்தீர்ப்பேமென்னுவெண்ணிவந்தடுத்தான்போலுஞ்
செங்கதிர்க்கடவுள்கங்குற்சிதைத்தொளிவிளக்கஞ்செய்தான். (௩௨)

சூரியனுதித்தகாலையிதெலாந்தோன்றுத்தோன்றல்
காரிகைமடியினின்றுங்கண்விழித்தெழுந்தான்மற்றை
வீரருந்தேருமாவும்வேழமுந்துயில்கணீத்த
பேரிகைசங்குகொம்புபெருமழையிடிபோலார்ப்ப. (௩௩)

காலைநித்தியஞ்செய்தானக்கடன்முடித்தமுதமுண்டு
மாலையுங்கலவைச்சேருங்கமழ்தரவணிந்துசேனை
வேலைபோலிருமருங்குமிடைந்தருநெறிக்கொண்டேகச்
சோலையைநீத்துத்தன்மாநகர்வழிதருவிச்சென்றான். (௩௪)

தன்னகர்சென்றபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪அ-க்குத் திருவிருத்தம் - உஅ௮கூ.

# மீட்சிப்படலம்.

தேடரியநான்மறைகள்தேடவரியானை
வேடனையழித்தநுதல்வித்தகனைமுற்றும்
மாடமலிகூடனகர்வைகியருள்வானை
பாடல்புரிவார்மனதுபுன்செயல்படாதே. (௧)

வேறு.

வருநெறிமீதிலொற்றைக்காலின்மேல்வயங்கிவானம்
பொருவிடவுயர்ந்துநீளம்புகல்வதற்கருமையாகிப்
பெருநிலைவாயிலோடுங்குறுகியவகலம்பெற்றே
யொருவருமறிதற்கொண்ணாதுள்ளமண்டபந்தானென்று. (௨)

கண்டுளம்வியப்புக்கொண்டான்காவலனிதனுற்கேது
முண்டெனப்புட்கள்சொன்னவுண்மையையுளத்தினுடிக்
கொண்டனனடங்காத்தூக்கங்கொம்பனுளமைச்சன்றானு
விண்டிடாதிடரைமாற்றுமாறுமோர்விநயம்விள்வான். (௩)

ஒற்றைக்கான்மீதிலும்பர்வரையினுமுயர்த்திநீளம்
மற்றைக்கால்புகாதவண்ணம்வகுத்தமண்டபந்தானீது
செற்றலர்செய்தசெய்கையென்பதுசிந்தைசெய்தேன்
கொற்றவவஃதின்றேற்பின்னினுமொருகருமங்கோடி. (௪)

தனக்குமேல்வலிமைசார்ந்தோரிருப்பினுமிதற்குட்டாழ்ந்து
மனக்குளவலிமைதோற்றுப்போவதற்கானவண்ணங்
கனக்குறும்புடையார்செய்தகபடத்தின்கருமமென்றே
யெனக்குளந்தோற்றினுமிறைவவிங்கிதையுங்கேட்டி. (௫)

எதிரினேந்தெவர்கள்செய்தசெய்கையேயெனினுநிற்கக்
குதிரைகளிரதமோடுஞ்சேணெறிகூடிச்செல்லுங்
கதியுமிங்கிதாண்மட்டுங்கண்டிலமறிதலோடும்
புதியமண்டபத்தைத்தாண்டிப்போவதோர்புகழுமுண்டாம். (௬)

ஆதலாலரசேயிந்தவாத்தினையடியேன்வேண்டற்
கேதல்செய்திடுவையென்றானிறையவனிவன்றனெஞ்சின்
போதமேயுணரானேனுமமைச்சுரைதள்ளிப்போத
லீதமுமன்றென்றெண்ணிமந்திரிவினைக்கணேர்ந்தான். (௭)

அகமகிழ்ந்தனிகமோடுகுரவருமதனினூடே
புகவமைத்தகன்றபின்னரமைச்சனும்புரவிபூண்ட
நகைமணிக்கனகத்திண்டேர்மீதுநாயகனுமாதந்
தகவொடுமிருப்பச்சேண்மீதோட்டினன்றபனனஞ்ச. (௮)

மண்ணினின்றமைச்சன்கற்றவிஞ்சையின்வலியினாலு
மெண்ணினின்றெடுத்தவீரப்பரிகளினியற்கையாலும்
விண்ணினின்றமாருரும்விமானத்தின்விரைவுந்தட்பக்
கண்ணினிமைக்குமுன்னமண்டபங்கடந்துசென்ற. (௯)

சென்றபொற்றேரும்வீரர்தாமுந்தஞ்சேனைசூழ
வன்றுசெல்லளவிலண்டரண்டமுமதிர்ச்சிவிம்மக்
குன்றின்மேலிடியிடிப்பத்தகர்ந்துளகொள்கைமானு
நின்றமண்டபமுநேரேநெறிந்துபாரிடிந்துவீழ்ந்த. (௧௦)

மண்டபமிடியவேந்தன்மனத்தினுணீங்காவையங்
கொண்டனன்மாதுநெஞ்சிற்குதுகுலிப்படைந்தாடுயோ
னெண்டருபாந்தளாற்கேடெய்துமென்றேக்கமுற்ருன்
கண்டமற்றவருந்தீராக்களிப்பினுற்கலிப்புற்ருரால். (௧௧)

ஆருயிரமைச்சரன்றியரசர்கடமக்குவேறு
பாரினிலிலையென்றெண்ணிப்பரவசம்பலதாற்கொண்ட
தீரனுந்தேவிதானுமந்திரிக்கினிமைசெப்பிச்
சார்பெரும்படைகளோடும்வந்துதன்னகரஞ்சார்வான். (௧௨)

எல்லியும்பகலுமோயாதாறுபத்திரண்டுகாதஞ்
சொல்லியநெறிகளெல்லாந்தோன்றலுமெளிதினீத்துக்
கல்லியகுழிகளெல்லாங்கனிவெடித்தொழுகுதீந்தேன்
புல்லியபொதும்பர்சூழ்ந்தபொன்னகர்ப்புரிசைபுக்கான். (௧௩)

கள்ளெலாமலரேசாலிக்கதிரெலாமணியேவாவி
யுள்ளெலாமீனேபக்கத்தொழுங்கெலாமனமேசூழ்ந்த
புள்ளெலாம்பசுமென்சோலைப்புறவெலாம்புனிற்ருக்கிர
மெள்ளெலாந்தள்ளிநீண்டவளனெலாமெதிர்ந்தேந்த. (௧௪)

உம்பருக்கொருவன்வைகுமுலகினுக்கிதுவேமேலன்
றிம்பரையன்றியுந்தவும்பருமினிமைகூறச்
செம்பதுமங்கொண்மாதுதினங்குடியிருந்துவாழுந்
தம்பதிவந்துபுக்கான்யாவருமுவகைசார. (௧௫)

வேறு.

மன்றலுக்குமுன்னெழுந்தநாண்முதலிதுவரைக்கு
மொன்றுமின்றிநல்குரவடைந்திருந்தமையொழித்தே
யன்றுமாநகர்புதுக்குடியேறினதாமென்
றென்றுமில்லதோர்பெருங்களிப்பெய்தினரெவரும். (௧௬)

தத்தமக்களுக்கருங்கடிதனித்தனிபுரிந்த
தொத்தசிந்தையார்மனைதொறும்விழாக்களுண்டாக்கி
யெத்திசைக்கணுந்தோரணஞ்சித்திரமியற்றி
வித்தகர்க்குமற்றவர்க்குநல்விருந்தயர்வித்தார். (௧௭)

அரசனுந்திருமாளிகைபுகுந்துபினங்க
ணுரைசெய்மந்திரர்வேதியருறவினர்பழையோர்
பரசுநால்வகைப்பரிசனமுதலியபலர்க்கும்
வரிசைநல்கினன்வான்மழைமுகிலெனமகிழ்ந்தே. (௧௮)

சாலைசத்திரந்தடமடங்கூபமுய்யான
மாலையம்மறையவர்நிலமணிமலர்பொதுளுஞ்
சோலைமற்றுளதொல்லைநல்லறமெலாந்துலக்கி
மாலைமன்மகன்வாழுநாள்வருவினைவகுப்பாம். (௧௧)

மீட்சிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் - ௪௧-க்குத் திருவிருத்தம் - ௨௧௦௫.

---

## கார்க்கோடகன் வதைப்படலம்.

நீரும்மாவுநிமிர்செஞ்சடையா
ரூரும்மறியாவமலன்றனையே
சாரும்மடியார்தமையேதமராய்ப்
பாரின்னினையும்பரனைப்பணிவாம். (௧)

வேறு.

தருமலர்த்திருக்கரத்தினான்றனதுமாமகற்கு
மருமலர்க்குழன்மருவிக்கும்புதியமாமனையோன்
றருமையாகவேறமைப்பதற்கெண்ணினானிந்தாங்
குரிமையாயசொற்றபதியருளுற்றானுவந்தே. (௨)

வல்லொண்டேகம்மியரிரண்டொருமூன்று
காவதம்பொருளேழுமகலமுங்காட்டி
மேவுகோபுரஞ்சாளரமேனிலம்விதித்து
மூவகைப்படுமுலகினுமுதன்மையென்றுரைக்க. (௩)

கொள்ளையாடகத்தகடுகொண்டணிசுவர்கொளுவி
மின்னொளுச்செழும்பவளக்காணிரைநிரைவிரவி
யுள்ளினும்புறவெளியினுநவமணியொளிக
ளெள்ளலாம்படிவரம்பிகந்தமைத்தனரன்றே. (௪)

கோளெலாமொருங்குளதெனவுலகெலாங்குறிக்க
நாளெலாம்புரிதவமெலாம்வெளிப்படாயந்து
தோளெலாம்வலியுருத்திடக்கைவலிதுலக்கி
வாளெலாந்தருமனையிதுவாமெனவகுத்தார். (௫)

அரசனுக்கறிவித்தனரமைச்சரோடரச
னெரிசுடர்ப்பசும்பொன்னினுமணியினுமிழைத்த
புரிசைமாளிகைமுழுவதும்புகுந்துகண்ணோக்கி
யுரைசெயாப்பெருங்களிப்பினுளம்புதைப்புண்டான். (௬)

செய்ததச்சருக்கரியனகடன்முறைதிருத்தி
யெய்துறும்படிபுரிந்தவனினியநாடன்னிற்
றையலோடுதன்மகன்குடிசார்ந்திடச்சமைத்தான்
வையகத்திவரிந்திரன்சசியெனமதிக்க. (௭)

திணிகொண் மாமனைபுகுந்துபின்றேவியுந்தானும்
பணிகொண் மாதருமேவல்செய்வீரரும்பலரு
மணிகொண் மாடநின்றகன்றிடாதனுதினமமைத்து
மணிகொண் மாதர்செய்வாழ்வுகொண்டமர்ந்தனன்மன்னே. (௮)

கானகந்தனிலிருளின்வாயிவருறைகாலை
வானகந்தொடும்பொதும்பரிற்புட்கள்சொல்வாய்மை
தானகம்மறந்தனள்பெரும்போகமேதருக்கி
ஞானகஞ்சுகமந்திரிநினைந்துளனைவான். (௯)

பவர்கொணுப்பகுவாய்ப்பணிவருமெனும்பயத்தாற்
றவறிடாதசொற்சிகாமணிதனிபுகுந்திரவி
லெவர்களும்முணராவகையிறைவனைக்காத்தங்
குவரியாதவனுதிக்குமுன்றன்மனையுறுவான். (௧௦)

ஈதிவன்புரிந்தொழுகுநாளிறைவன்மேற்றணவாக்
காதலாற்கலந்தரியதன்வயிற்றிடைக்கருப்ப
மாதடைந்தொருமைந்தனைப்பயந்தனள்வருந்திப்
பூதலத்தரசினுக்கெலாமங்குரம்போலும். (௧௧)

பிள்ளைமீதினும்பேதைதன்மீதினும்பிரியா
வள்ளலன்புகொண்டுறையுநாண்மந்திரிமகனு
முள்ளமாழ்கியெள்ளளவினுமுறக்கமேயின்றி
நள்ளிராவெலாநயந்துகாத்தகலுவானாளும். (௧௨)

இன்னவாறிவரியலுநாளிதற்குமுனிறைவன்
மின்னவாமிளிர்வாளினால்வீய்ந்துளவரக்கன்
றன்னவாவினுக்குரியகார்க்கோடகன்றனையன்
சொன்னமண்டபமிடிந்தமைகேட்டுளந்துடியா. (௧௩)

ஒருமனிதனந்தாதையையுயிர்க்கொலைபுரிந்த
கருமநன்றுநன்றின்றவனுயிரினைக்கவர்தற்
கருமையோவெனவகங்கரித்தராவுருக்கொண்டே
யிருளின்வாய்நகர்புகுந்துகோமனைவயினெய்தா. (௧௪)

வேறு.

சமையமுங்காலமுமிடனுஞ்சார்வதோ
ரமைவுதனுளங்குறித்தரசன்மாளிகைச்
சிமையமேலொருபுழைதெரிந்துதங்கினான்
கமைதராதழன்றெறிகதங்கொண்மூர்க்கனே. (௧௫)

உரகவெவ்வுருவெடுத்தழலுமூர்க்கனு
மிரவினினாடொறுமெய்தியங்குறை
யரசினையிடம்பெறுதற்றநோக்கியே
பரவுவான்றனமர்பதிவுநாடியே. (௧௬)

பழிபடுபார்த்தனின்பதகனுவியு
மழிபடுகோலமன்றடைதலான்மத
னெழிலுடையிறைவனுமிரவின்மாதொடும்
விழிதுயிறணைப்புறுமயக்கமேயினர். (௧௭)

ஆயதோர்காலமோர்ந்தரவின்மேனிகொ
டையவாணிருதனுந்திகிரிதாங்கிய
நாயகன்றுயில்வதோரமளிநாடியே
பாயொளிச்சிமையநின்றிறங்கிப்பையவே. (௧௮)

பச்சையும்பவளமும்பதுமராகமு
மிச்சையாற்கலந்தருகிழைத்துநாற்புற
மச்சினிற்கடைந்தகாலமைத்துமென்மணிச்
செச்சைகொள்விதானமேற்சேர்ந்தவல்லையில். (௧௯)

கால்வழிகடையிலான்விதானக்கால்வழி
மேல்வழிநின்றுகீழிறக்கும்வேலைவாய்
கோல்வழிக்குரிசிலைக்காவல்கொண்டுளா
றல்வழிமதியினனேனக்கினனரோ. (௨0)

நோக்கினனிடையில்வாளுருவிநொய்தினி
றூக்கமுற்றுடலைவிட்டுயிரைவேரற
வாக்கினன்சோரிசிந்தாமலப்புற
நீக்கினன்றீவினைநீக்குநீதியான். (௨௧)

ஒதுக்கியசோரியிற்சிதறியோர்துளி
புதுக்கொளியிந்திரகோபம்போன்றவான்
விதுக்கிணைமுகத்தினன்முலையில்வீழ்ந்தது
மதிக்குடைமந்திரிகண்டுமாழ்கினன். (௨௨)

வடுக்கணுண்முலையின்மேல்வயக்குசோரியை
யெடுக்கவுமஞ்சுவானெடாதுகால்கொடு
நடக்கவுமஞ்சுவானுமன்னிருள்
கடக்குமேலெதுசெய்யக்கடவனென்றரோ. (௨௩)

மாதுமிக்குருதியான்மாயுமன்றெனி
னீதியான்புணர்ச்சியினேயமின்றியே
சோதிமென்முலைத்துணைசுவைப்பனுமேனிற்
கேதமேபடுவனென்னகேடெனா. (௨௪)

யாதனைவேறொருமைந்தர்கைதொடப்
போதுமோவிதனினும்பூவைகாப்புடை
நீதியான்மனைவியிங்கிவளைநேர்ந்துநான்
கோதுறுகுருதியைத்துடைத்தல்கூடுமோ. (௨௫)

மாதுமென்முலையின்மேன்மன்னவன்கரப்
போதலால்வேறுகைதீண்டப்போகுமோ
பாதகமிதுகண்ணுற்பார்த்துநாமுமிப்
பூதலத்திருத்தலிற்பொன்றனன்றரோ. (உ௬)

துடைத்திடாதகல்வனேற்றேன்றலாருயிர்
மடக்கொடியின்னுயிர்மாயுஞ்செய்வனேற்
கடக்கரும்பெரும்பழிகதுவுமென்னவே
தடுக்கருஞ்சங்கையிற்றளர்ந்துசாம்பினன். (உ௭)

குருதியான்மடிவரொன்பதுகுறித்துமேல்
வருபொருளாற்பழிமதித்துமந்திரி
யிருபுறம்பிடித்தெரியெரியுங்கொள்ளியூ
டொருசிறுபிபீலியினுள்ளமாழ்கினன். (உ௮)

இவைநினைந்திரங்குவானிறைவர்தேவிய
ரவனியிலனைவர்க்குமரியதாயெனச்
சிவனுமைதனக்குமுன்னெடுத்துச்செப்பிய
தவமிகுஞ்சுருதியேசரதமாலரோ. (உ௯)

ஆனதாற்பவமிலையணங்குபோல்பவள்
பீனமாமுலையின்மேற்பிறங்குசோரியை
யீனமேயிலாதுதொட்டெடுத்தனன்றெனு
ஞானவான்மனத்தினுட்டுணிந்துநண்ணினன். (௩0)

செங்கையின்சிறுவிரல்கொண்டுசேயிழை
கொங்கைமென்முகட்டுறைகுருதிதன்னையும்
பங்கமில்லாதவன்றுடைத்துப்பையவே
யங்குநின்றகல்வுறுமமையம்பொன்னனாள். (௩௧)

மணிமுலைமீதுதன்மணாளன்செங்கையி
னணிவிரற்படுவதையன்றிவேறொரு
திணிவிரற்படுவதேதெதென்றுசிந்தையு
ளெணிவிழித்துயில்கழித்தெழுந்துநோக்கினாள் (௩௨)

நோக்கலும்பொய்புகலாதநூல்பயில்
வாக்கினனடந்தமைவழுத்தற்கஞ்சியாங்
கேக்கமுற்றுவிதிர்ந்திறந்தபாந்தளி
னுக்கையைமடநலாட்கறியக்காட்டினன். (௩௩)

வேந்தறியாதுவேறிடத்துவெந்தழற்
பாந்தளின்றுணிகளைப்பதனஞ்செய்தெதிர்
போந்தமந்திரிதனைப்புதல்வன்வாஞ்சைகொண்
டேந்தெழிலரம்பையுமிவையியம்புவாள். (௩௪)

அந்தநாண்மடிந்துளவரசதற்காருயிர்
தந்தனைவெஞ்சமர்தனையும்வென்றனை
வந்துறுநெறிமிசையடுக்கண்மாற்றினை
யிந்நாளினும்பெரிதிடரைநீக்கினை. (௩௫)

உன்னையேபுகல்புகுந்துள்ளவெங்களுக்
கின்னமுமிதனின்மேற்செய்வதேதெனத்
தன்னிருகைகளாற்றழுவியுச்சிமோந்
தன்னைநாவிமகனுருகுமென்னவே. (௩௬)

முகமொடுமுகத்தினையொட்டிமுத்தமிட்
டகமகிழ்ந்தருகிருந்தவேலையிற்
சுகமலராமளிவாய்த்துயின்றவேந்தனு
மிகுதுயினீத்துக்கண்விழித்துநோக்கினான். (௩௭)

இருவருமொன்றுபட்டெதிரினின்றதோர்
கருமமுமினதெனக்கருதகிற்றிலா
னிருபனுங்காவினினேர்ந்துகாதல்கொண்
டுருகினார்புணரவுமொருப்பட்டாரரோ. (௩௮)

நன்றுநன்றிதுவரைநமக்குத்தோன்றிடா
தென்றுமிப்புணர்ச்சிகொண்டிருந்துளாரிவ
ரன்றெனிலின்றிஃதாற்றற்குள்ளமு
மொன்றுபட்டுருகிடாதென்பதுண்மையால். (௩௯)

என்பதுகருதினானெழுந்தசீற்றமுந்
தன்பெருமானமுந்தன்னைத்தான்மறைத்
தன்பையும்விழுங்கியங்கவர்கடம்மையுந்
தின்பதுபோலுங்கண்சிவப்புற்றானரோ. (௪௦)

இத்தொழினாடொறுமியற்றிவந்ததோர்
சித்திரநானறியாதுசிந்தையு
ளுத்தமியென்றனையுவந்துவாழ்ந்தபுன்
புத்தியையெவ்வயிற்புகழ்ந்துகாட்டுகேன். (௪௧)

அரவினோடிருந்ததுமதன்பின்னாலொரு
புரவலன்பாலினிற்புகுந்திருந்ததும்
விரவுமித்தொழிலினாலின்றுமெய்ப்படு
காவுடைக்கற்பெனக்காட்டிற்றாலரோ. (௪௨)

சொந்தநாயகன்றுயில்சோதித்திச்சிற
மந்திரியேயமேமகிழ்ந்தபுன்றொழில்
சிந்தைதங்கியகொடுநீலிநின்னுயிர்
சிந்துதல்காண்பனென்றுருத்துச்சீறினான். (௪௩)

மாதருக்கணிகலன்மடமைவாய்ந்துள
பேதைமையென்றுமுன்பேசுநூல்களோ
யோதியுமுறவினிலுவந்தநின்றநீ
யேதடாவித்தொழிலியற்றற்கெண்ணினாய். (௪௪)

நாளெலாந்தோழனுமாகிநம்பணி
யாளனுமாகியதருமையல்லநீ
நீளநீள்குழலினாட்குரிமைநேர்மண
வாளனாய்க்கிடைத்ததேயருமைமாட்சியால். (௪௫)

உனக்கவாவுறின்முனமுண்மையாயிவ
டனக்குளசாதகஞ்சார்ந்துவாவியி
லெனக்குயிரளிப்பதற்கேதுகாரண
மனக்கசடகற்றியேவழுத்துகிற்றியால். (௪௬)

உள்ளவாறியம்பிடாதொழித்துநீமனக்
கள்ளமாய்ப்புகன்றிடிற்கையின்வாளினாற்
கொள்ளைகொண்டுன்னுயிர்குடிப்பனானென
வள்ளலும்வெகுண்டுரைவழங்கினனரோ. (௪௭)

கொதிகொதித்தாருயிர்குலைந்துமற்றிவர்
மதிமுகநோக்கியேவழுத்தும்வேந்தனுக்
கெதிர்மொழிபிறிதுசற்றின்றிநின்றனர்
மதிவலிவிதியினான்மடங்கியன்றரோ. (௪௮)

பறவைமுன்கூறுசாபத்தையெண்ணியிம்
முறைமையைமொழிந்திடமுற்றுமஞ்சியே
குறைபடுகுற்றமேபுரிந்தகொள்கைபோ
னிறையுநாணொடுநிலங்கிளைத்துநின்றனர். (௪௯)

சொல்லிடிற்கல்லுருத்தோன்றுஞ்சொல்லுதற்
கில்லையேல்வீண்பழியெய்துமீதென்ன
தொல்லையாய்வந்ததென்றமைச்சுந்தோகையும்
வல்லபமிழந்துளமயக்கநீடினர். (௫௦)

நல்லதுநாஞ்செயநவினின்றதோர்
தொல்லறக்கடவுளுந்துணைசெயாதுவிட்
டெல்லையிற்பெரும்பழியியற்றினுலிதைச்
சொல்லுவதாருமையென்றுசோர்ந்தனர். (௫௧)

கன்றியமுகத்தினர்கருத்தழிந்தெதி
ரொன்றினுக்கொன்றுபேசாமலூமர்போ
னின்றனர்முனிந்துளநிருபனுந்தணிந்
தன்றவர்வினைத்திறமாய்தல்கொள்ளுவான். (௫௨)

இன்றிவர்கேட்பதற்கெதிரில்வாய்திறந்
தொன்றுரையாதுநின்றூமராகினர்
வன்றிறற்காவுசெய்வார்கட்குண்மையு
நன்றியும்பெறுவதென்னாளுமுண்டரோ. (௫௩)

கண்ணிஞனெதிர்கண்டபோதிறு
மண்ணல்போவைதனக்கனுப்பியாங்கவ
னெண்ணமுங்கருமமுமெவர்க்குந்தேற்றிமே
னன்னுறுதண்டமுநடத்தனன்றரோ. (௫௪)

ஆதலாலரசனுக்கறிவியாதநா
மேதையுஞ்செயத்தகாதென்பதெண்ணியே
தூதனைவிளித்துநீர்தோன்றல்பாலினிற்
பேதையையமைச்சனைப்பின்புகாவகை. (௫௫)

கொண்டுபோய்நடந்ததோர்கொள்கையாவையும்
விண்டுரைப்பீரெனவிரித்துவிண்டவ
னண்டையிலேகுமென்றனுப்பிவைகினு
னெண்டிசாமுகத்தினுந்தனக்குநேரிலான். (௫௬)

தூதரும்பொருக்கெனத்தொழுதுசின்றதோர்
மாதையுமமைச்சையும்வம்மினென்றுரை
யோதியேவேத்தவையுற்றநாலெயி
லாதவன்கீழ்த்திசையுதையமாகினுன். (௫௭)

கார்க்கோடகன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௪௧-க்குத் திருவிருத்தம்-௨௧௬௨.

---

# புத்திசிகாமணி இடையூறுற்றபடலம்.

கரிக்குருவிப்பாயவொருவலியமைத்துப்பரியாக்கிநம்புமன்பற் [பொற்
குரிக்குருவிக்கனையமொழியுபதேசித்ததற்பின்னுமொழிசெய்செம்
புரிக்குருவிக்கடிநகரொன்றதிசயிக்குந்திருமதுரைபொருந்திவாழுங்
கரிக்குருவிக்கருளியநக்கண்ணுதலையெண்ணுதலேகடமையாமால். (௧)

வேறு.

ஆதவனுதித்தலுமரசனுதியர்
நீதிலாகித்தியக்கடன்கள்செய்துபி
னேதொருகருமமுமெண்ணியாற்றறு
நீதிகொண்மண்டபநிறைந்திருந்தனர். (௨)

கோதையையமைச்சனைக்கொண்டுதோன்றிய
தூதுவாஞ்சிவாய்புதைத்துத்தோன்றல்பொற்
பாதவம்புயமலர்பணிந்துநின்றெதி
ரோதினர்நவறன்னுள்ளமுட்கவே. (௩)

இன்றிரவினிற்புகுந்திவனும்பொற்புடை
மன்றலங்குழலியுமருவியவ்வையி
னின்றமைநெடுநெடுந்துயினீத்துபின்மகன்
றன்றிருவிழிகளாலிவர்கடன்மைமையை. (௪)

கண்டனன்வெகுண்டுளங்கனன்றுவெவ்வுரை
விண்டனன்கேட்கவும்விளம்புகிற்றிலார்
கொண்டுபோய்வேத்தவைகுறுகிக்கோமக
னண்டையிற்கூறுமென்றனுப்பினனரோ. (௫)

சொற்றதுகேட்டலுந்தோன்றலுந்துடிப்
புற்றுளங்குலைந்துயிருசலாடிட
வெற்றுடம்பாகியேமெலிந்துவாடினன்
சற்றுமெய்யசைவில்சித்திரத்தின்றன்மைபோல். (௬)

குலத்தையுங்குணத்தையுங்குடிப்பிறப்புள
நலத்தையுங்கற்பையுநாணையுந்துறந்
தலத்தகப்பதத்தினள்யார்க்குமெள்ளலாய்ச்
சொலத்தகாப்பழிசெயத்துணிந்ததென்கொலோ. (எ)

ஈசன்மாலயன்முதலெவர்க்குமோர்குறை
பேசுவான்பெரும்பிழைபிழைக்கின்மற்றினி
மோசமென்பதற்கெனமுறைமைவேண்டுமென்
றாசலாடியமனத்துளைந்துசாம்பினன். (அ)

அகக்குறிநோக்குவானலர்ந்தபங்கய
முகக்குறிநோக்குவான்முற்றுமையமே
சகக்குறியுடையவன்சார்ந்துசெந்தழல்
புகக்குறியழிவதோர்வெண்ணெய்போன்றனன். (௯)

என்னவாவிளைந்ததென்றேங்கியாவர்க்கும்
பன்னவாவின்றியேபதைபதைத்துள
மன்னவன்சோர்தலும்வயங்குபேரவை
துன்னினர்நடந்ததோர்சூழ்விலாசியே. (௧௦)

மன்னனைத்தேற்றியேவந்தசூழ்வினை
யின்னதென்றறியுமுன்னிறைவரின்னுளந்
தன்னிலேவருந்துதறகாதென்றேதினர்
பின்னவன்றெளிந்துரைபேசன்மேயினன். (௧௧)

வேறு.

ஆதரவாயுடன்கூடியடவியெலாஞ்சஞ்சரித்துமகன்றுமப்பாற்
சாதலுறுமெனதுதிருத்தனயனுக்காருயிரளித்துந்தாழாதேகித்
தீதுபடாதருஞ்சமாஞ்செயித்தும்மறுமணமுடித்துஞ்சேர்ந்தநீவீ [னே.
ரோதுபெருங்கலகம்விளைத்தரும்பழிகொண்டவைபுகுந்ததென்னேயென் ()

உன்னாலோவலதுமருமகளாலோவெனதுயிர்க்கோருயிராமைந்தன்
றன்னாலோவிளைந்தவிச்சங்கேதமுண்மைமொழிதப்பிவேறு
சொன்னாலோமூவருக்குளெவரெனினும்புடைவாரஞ்சொல்லாநீதி
யென்னாலோசெயத்தகுந்தண்டனைபுரிவேனிறையளவுமிரங்கித்தாழேன். ()

விதிக்குமறியாதபலவிதியனைத்துநான்முகத்தில்வினவித்தேர்ந்து
மதிக்குமுயமாசானாய்மாநிலத்துக்கமைச்சானாய்மற்றோர்செல்லுங்
கதிக்குமொருகாலனாய்கருமமிழந்தனையிந்தக்கருமஞ்செய்யிற்
றதிக்குமோபேருலகமிதன்மேலுங்கொடியவினைசூழவற்றோ. (கச)

மானாளுநீயுமிந்தவல்லிருளிற்றனியாகமருவிநின்ற
தேனாளுமோவலதுபுதிதாகநீவிர்செய்தவியற்கைதானோ
கானாளும்பொழுதெல்லாமில்லாமற்சொல்லரியகாமக்கோட்டி
மீனாளும்வயல்வளஞ்சூழ்நகர்புகுந்தபின்வந்தவிந்தையென்னே. (கரு)

கற்றவர்கண்மணியானபுத்திசிகாமணிபயின்றகல்வியெல்லா
மற்றனையோபேரறிவுமகன்றனையோவுனதுகுணமழகுவாய்மை
மற்றனசற்கருமமெல்லாமறந்தனையோதிறந்திறம்புவழியேபுக்கு [னோ.
குற்றமெல்லாஞ்சுமக்குமொருகொள்கலமொத்தவைபுகுந்தகோட்டியென் ()

தையலையுமுகநோக்கித்தாயேயென்றிருமைந்தன்றனக்குநீயுஞ்
செய்தவுபகாரமெழுசெனனமெடுத்துனக்குரிமைசெய்தபோதும்
வையகமேவினையாகாதெமதுகுலம்வாழ்விக்கவந்தகற்பின்
றெய்வதமென்றெண்ணியவென்சிந்தனைசிந்திடப்புகுந்தசெய்கையென்னே.

உன்னையேதனதுயிரென்றோம்புமகன்றனையுனதின்னுயிராயெண்ணுங்
கன்னியேயிருவருக்குங்கருத்துவேறுதிப்பரியகலகமான
தென்னகாரணமிந்தமந்திரியுமுன்கண்மிசையென்றுநீங்கா
நன்னயஞ்செய்நண்பினாளிவைபுரிதற்சேவரையுண்ணாடித்தேர்வேன். ()

நிருபனும்பற்பலவானநெறிகூறிவற்புறுத்திநேசங்காட்டி
யரிவையையுமமைச்சனையுமயராமற்கேட்டுமனதலுத்தேபின்னும்
வருபொருள்சற்றேனுமிவர்வாய்திறந்துகூறாதவாறுநோக்கிக்
கருமவிளைவினுக்கினியானேதுசெயக்கடவனெனக்கழறுவானால். (கக)

ஒருகுலமுமொவ்வாதிவ்வுலகமிசையெனப்புகல்வதொன்றேயன்றிக்
குருகுலமுங்கனற்குலமுங்குறைவடைந்தவடுப்பட்டகொள்கையன்றோ
பெருமறுவொன்றில்லாமற்பேசரியநெடுங்கீர்த்திபெற்றேயந்த
விருகுலமுங்கீழ்ப்படமேற்பட்டதெமதிரவிகுலத்தியற்கையம்மா. (உ0)

இக்குலத்திலுதித்திந்தவுலகாண்டபலகோடியிறைவர்க்குள்ளே
முக்கியமாநிருபதியுமுனரிமலர்த்திருச்சனகிமுகத்தைநோக்கித்
தக்கபொருளேதனக்குத்தாகமென்றான்முனம்போலுந்தவத்தோர்தங்கள்
பக்கமிருவருமேகிவணக்குமனத்தினவாப்பழுத்ததென்றான். (உக)

அதுகேட்டதாசரதியவனியுள்ளார்பொல்லாதவாக்கர்தங்கள்
பதிபோனபாரியையும்பரிந்தழைத்துமீண்டாசுபரித்தானென்று
துதிபோனபழிபுகன்றார்தோகையுமிக்கதற்கிணங்கச்சொற்றாளந்தோ
விதிதீராவசையெனமற்றவளைவனம்போகவிடுத்திருந்தானன்றே. (௨௨)

எங்கண்மனுகுலவழக்கமெள்ளளவும்வடுக்கண்டாலிரக்கமின்றி
மங்கையரேயாகமற்றையாடவரேயாகமுனைவாளால்வீசி
பங்கமுறாதகற்றுதலேபரிந்திவர்கள்புரிந்தகொடும்பழிதானேரே
சங்கையறவெனதுதிருத்தனயனுங்கண்டதற்கெதுநான்சான்றுகேட்பேன்.

மூவருக்குளொருவரைவிட்டொருவரைமுக்கியமென்றுமொழியாவண்ணம்
பாவனையாலெத்தொழிலும்பயின்றுவந்தாரினியெதுவும்பயிலவல்லா
ராவதினாலிவர்களுக்குளடுத்தபழிதடுத்தெவர்களாற்றலாவார்
மேவுநமதிடத்தன்புகொளுமமைச்சர்காள்வினவிவிளம்புவீரால். (௨௪)

என்றுரைத்துப்பின்னாலுமிவர்களுக்காவனபலவுமெடுத்துக்கூறி
மன்றம்விடுத்தெழுந்தரசன்மனக்கவலையோடுதிருமனையிற்புக்கான்
நின்றவரையருகழைத்துநேரிருத்திமுகமனுரைநிகழ்த்திநீவி
ரொன்றுமுரையாதுகற்போல்வாய்திறவாதூமரெனவுற்றீரென்னே. (௨௫)

எழிலடைந்தாய்பலகலையுமெளிதிலடைந்தாயிதன்மேலெட்டுப்பங்கு
வழியடைந்தாய்போர்வீரம்வருபொருளுந்திரிகாலவகையுஞ்செய்யுந் [ன
தொழிலடைந்தாய்ராகாதிதொலைத்துமனதெளிவடைந்தாய்தூயோயென்
பழியடைந்தாயெளியவர்போற்பதைப்படைந்தாயவையடைந்தாய்பாவம்
[பாவம். (௨௬)

புத்திசிகாமணியேயுன்பொற்சரணம்படச்சிதறும்பூழிதோய்ந்த
பித்தருமிங்கிதுநினையார்பெரும்பிசகுநீநினைக்கிற்பின்னையாரை
யுத்தமர்களெனநினைக்கவுளதுனதுகுணம்வலிமையுரிமைவாய்மை
யெத்தலத்திற்பறிகொடுத்தாயாவரிதுபயிற்றிடக்கற்றியற்றல்செய்தாய். ()

உன்னாலேநங்கண்மரபுள்ளகுலக்குரவர்கட்குமுறவினோர்க்குந்
தன்னாலேபெருங்கேடுசார்ந்ததுமற்றெதையெடுத்துத்தயவாயிங்கு
சொன்னாலும்பேசாததொழில்படைத்தாயுனக்கினியார்சொல்வாரையா
முன்னாலேபுரிந்தநலம்பின்னாலேசெய்தபிழைமூடிற்றாலோ. (௨௮)

அரவினால்வருமிடையூறகன்றுபுரவலனோடுமணைந்துபின்னோர்
கரவினான்புரிந்ததுயர்கடந்தவன்றன்குலமுழுதுங்கல்விமற்றை
யரிவையர்க்குணியதிகமருந்ததிக்குநேரிணையென்றவனியுள்ளார்
பரிவுசெயப்புகழ்பெருகும்பாக்கியவதியுமக்கிதென்னபாவமந்தோ. (௨௯)

உங்கள்குலந்தனிலுதித்தகற்புடையமடந்தையர்க்குளுனையேமற்றை
மங்கையர்கடெய்வமெனவந்தித்தாருன்றனைநின்மனத்திற்கொள்ளா
தெங்கள்குடிமுழுவதுமின்றீடேறவருந்தியவேலிறைவனுள்ளஞ்
சங்கையறவுள்ளபடிநடந்தவகைவாய்மலர்ந்துதாயேசொல்வாய். (௩௦)

அம்மாவுங்களுக்குநினைப்பாதியிலேயிருந்திருக்குமானான்மாண்ட
பெம்மானுக்குயிருதவிப்பெரியமணமுடித்துமற்றைப்பிழைபாடின்றி
யிம்மாநகர்க்குறுதற்கேதுவிலைத்தவறிதுவென்றெண்ணியந்தோ
செம்மானைத்தரித்தபிரானருண்மறந்துநாங்களேதுசெப்புவோமால். (௩௧)

இந்தவிதநெறியறியுமந்திரிமாரைம்பதின்மரினியையாகத்
தொந்தரையிலாதுபணிந்திரந்துபலவாறெடுத்துச்சொல்லித்தத்தஞ்
சிந்தைவருந்தினதுமன்றிவாயுமலுத்தாகும்வகைசெய்வதோரா
தெந்தவிதம்யாவரிதுகண்டுணரவல்லாரென்றேக்கமுற்றார். (௩௨)

மந்திரிகட்குண்முதன்மைமந்திரியுந்தன்மகனைவருந்தியையா
வெந்தவிதத்துசன்சிறிதுமில்லாதவுனதுமதிக்கிதுதானென்னே
வந்தவிதஞ்சற்றேனும்வாய்திறந்துபுகலாமன்மௌனமான
வந்தரங்கமெனக்கருள்வைதாய்க்கொழித்தருளுமுண்டோவவனிதன்னில்.()

மாதுநீயும்மருவிநின்றதெனப்போரசன்மகன்சொல்வாய்மைக்
கேதுகாரணமுளமையிருளிலந்தப்புறந்தனக்கேதனியாயெய்துஞ்
சூதுனக்குன்யாதுவெளிசொல்லாதபோதுநம்மைச்சூழ்ந்தவிந்தப்
பாதகமெப்படித்தொலையும்படித்துமறியார்மூடம்படைத்தாயப்பா. (௩௪)

தாயரைமற்றரசர்புணர்தாரமதையுடன்பிறந்தமக்கைதங்கை
யாவரையுமுன்னுதித்தவண்ணன்மனைகுரவர்மனையானபேரை
நீயவருமிதுநினையார்நினைத்தவர்கடலைபுழுத்துத்திரியும்பொல்லா
நாயினுங்கேடாய்வருந்திமாருதகும்பியிடைநணுகுவாரால். (௩௫)

நாலுரைக்குநீதியெல்லாநீயுரைக்கக்கற்றிருந்துநலஞ்சற்றில்லாக்
காலெனிக்குநிலவாச்சேகமருக்கும்பாலாச்சேகடலிற்கோட்டந்
தாலுரைத்தகதையாச்சேதமர்களுக்கும்வசையாச்சேதலத்தைக்காக்கும் [ன்.
கோலுரைக்குந்தண்டனைக்குளாட்படுத்திப்பின்னெவரைக்கொண்டுவாழ்வே

உள்ளதினற்றீதவராதற்றுலஞ்சற்றுமில்லாதுண்மைவாய்க்குங்
கொள்ளரியபுகழ்படைக்குங்கூறுதபொழுதுலகோர்கூடிநின்று
விள்ளரியவசையுரைப்பாரெனப்பலவுமோயாமல்விளம்பிப்பின்னுந்
தள்ளரியதுயரடைந்தான்வாயடைத்தான்மகன்போலுந்தாதையம்யா. (௩௭)

நன்றுதொட்டமதியுடையோரெத்தனையோபலகோடிநாடித்தேர்ந்து
குன்றுதொட்டமுலையாட்கும்புத்திசிகாமணிதனக்குங்கூறிக்கூறி [னு
மன்றுதொட்டோர்பகன்முழுதமிருந்தும்வகைதோன்றாமல்வருந்திப்பின்
மின்றுதொட்டொளடைவிவரைவினவித்தெரிதலியல்பாமென்றே. (௩௮)

இருவரையுமிருவர்மனைக்கேகவிடுத்தன்றுமுதல்வர்கணித்த
மொருவருக்குப்பின்னொருவரோயாமலூறுறக்கமொன்றுமின்றி
விரவுபகலாகடந்தெத்தனையோதத்தமக்குளோன்றமட்டுங்
கரவுபரியாதுன்னவகைபுகலக்கரைத்துள்ளங்கரைந்தாரன்றே. (௩௯)

எத்தனையோவமைச்சரெல்லாமிருமூன்றுமதியம்வரையெடுத்துச்சொன்ன
தத்தனையுங்கருதாமலண்டரண்டப்புட்கள்சொன்னவரியசாபஞ்
சித்தமிசைவருத்துதல்கொண்டென்மெலிந்துநாவறண்டுதிருடர்போலு
முத்தமர்கணிலைகலங்கியொன்றுமுரையாதுகற்போலுற்றிருந்தார். (௪0)

அரசவையிற்புகுந்தெவருமரசன்மலரடிபரசியரசேயாங்க
ளுரைசெயவேண்டுவவெல்லாமோராறுமதியம்வரையுரைத்தேயப்பாற்
புரிசெயலிலாதுபுலம்படைந்தனமற்றெவராலுமறியப்போகாப்
பொருசெனனந்தவிர்ந்தேழுசெனனமெடுத்தாலுமிவர்புகலாரென்றார். (௪௧)

அரசனுங்கேட்டகமெலிந்தானருங்கண்ணீர்மழைசொரிந்தானயர்ந்தான்வார்
யுரைசெயவுநினைவழிந்தானுயிர்புறம்பாமெனத்திரிந்தேயூசலாடத் [த்தை
திரைசெறிநீர்ஞாலமிசைதெரிவையர்க்குளாடவர்க்குளிவர்போற்றீங்கு
புரிசெயல்கொண்டவர்களுண்டோவம்மம்மவிதுவென்னபுதுமையென்றான்

மந்திரிகள்கைவிடுத்தார்கலைகளினுற்றெரிக்குமொருவகையோவில்லை
யெந்தைபிரான்றிருவருளுமிதற்கன்றுபுறம்போனதெளியேனுற்று
முந்துதவக்குறைவோமற்றிவர்கள்புரிபவச்செயலோமூண்டதிந்தத் [னும்.
தொந்தரையெவ்வாறுகண்டுதொலைவிப்பேனெனத்தளர்ந்ததோன்றல்பின்

செம்மலைநற்றிருநிகரும்மருமகளைமந்திரியின்சிறுவன்றன்னை
நம்முழையிற்றருகவென்றானடிபரவிமுன்னின்றோர்நால்வரோடி
வம்மின்களரசனுரைபணியென்றார்தலையேந்திவல்லையாண்டோ
ரிம்மென்னுமுனம்புகுந்தார்பேரவைக்கணரசனைக்கண்டிறைஞ்சிநின்றார். ()

நின்றதொருமூவருக்குளிருவரையுமுகநோக்கிநிருபன்றானு
மின்றுமக்குணடந்ததுசற்றின்னதெனவறியாமலெளியேன்வாட
னன்றுகொலோவாய்திறந்துநவின்றிடாதுறைவதுவுநியாயந்தானோ
சென்றமனநோகிவரவிலையோவிளையாட்டுச்செய்கின்றீரோ. (௪௫)

உலகமெல்லாமொருங்கழியவுறுங்காலையுற்பாதமாகவும்ப
ரிலகியதாரகையினுக்குளொன்றுமிலாவாலுடுவெந்தெழுந்தாற்போலுங்
கலகவிழிமடந்தையர்கண்மயக்கமெனும்பேசரியகாமக்கோட்டி
விலகறியார்புலம்படைந்துவிலங்கமுடியாநிரையமேவுவாரால். (௪௬)

கள்ளேனுங்களவேனுங்கவரேனும்பொய்யேனுங்கருதிநெஞ்சங்
கொள்ளாமற்பேரறிவுகொண்டவரையென்னுளுங்குறித்துநீங்கா
நள்ளாருநட்பாவார்நாமநெடுநீர்ஞாலநயந்துபேசி
யுள்ளாருமென்பதுநீயுணர்ந்துபிறர்தமக்குரைத்தவுண்மையன்றே. (௪௭)

மறையவரேயுலகமிசைவருந்தெய்வமவர்புகலுமறையேமோட்ச
மிறையவரிங்கவையுணர்வுற்றிறைமாட்சிபுரிவதுவேயினியசெங்கோன்
முறைமைவிலகாதேவன்முயல்வதுவேயமைச்சியல்புமுழுதுங்கண்டாய்
நிறையுமதிவிடுத்திழிவின்குறைவுபடுவதற்கென்னநீர்மைத்தம்மா. (௪௮)

மங்கையின்மேனியாசைவைத்தாலுனின்மீதுமங்கையாசை
தங்கினாலும்முனமேதரியலனாலுயிர்பிரிந்துசவமாயுற்ற
வங்கவனைமீண்டெழுப்பியருஞ்சமாந்தனைமுடித்திக்கடையவேண்டா
மிங்கதனாலுங்களுக்குளிதுநடவாதெனப்புகல்வாரெவருமந்தோ. (௪௧)

அரசர்குருமுன்னவர்களாதியைந்துதந்தையென்றுமவர்கடங்கள்
விரைசெறிமென்குழலியர்கடாயரென்றுஞ்சொலுஞ்சுருதிவினவித்தேர்ந்து
பெருமையடைந்தமையாலோசெயும்பிழையுமதற்கிணங்கப்பெரிதாய்நீயும்
புரியவினைந்தனையோபின்னெதுவினைந்துநானெடுத்துப்புகல்வேனம்மா. ()

தடங்கடலேநெடுங்கழியேதருக்குலமேபொருப்பினமேதரையேவைகு
மடங்கலிலாதூர்வனமேபறவிலங்கேகனன்றெரியுமழலேவெய்ய
கொடுஞ்சுரமேயாதியதாயஃதினையொத்தொருமொழியுக்கூறுதானீர்
படுங்கருமங்கருதகிலீர்பண்டைவிதிவினைவிளைந்தாற்பகர்வதென்னே. ()

நீயதிகட்பாகிநமதுமகனுக்குதவிநேர்ந்ததாலுஞ்
சேயெனவேயுன்னையிதுநாள்வரைக்குநானினைந்தசெய்கையாலும்
பேயகலாப்பெருங்கானம்பிரியாமற்போய்வந்தபெற்றியாலுந்
தாயெனச்சற்றெண்ணுமற்புரிந்தபிழையிதுவரைக்குஞ்சகித்தேனப்பா. ()

அகம்வருந்திமூவிரண்டுமெதியம்வரைகேட்டதிலுமாகுமார்க்கம்
புகலவிலையிவர்வாயாற்சுருதியுத்தியனுபவமும்பொருந்தவில்லை
மகனுரைத்தமொழிமாற்றியெவரேனுங்கரிபுகலவரவுமில்லை
தகவுடையதெய்வபலஞ்சற்றுமில்லையிதற்கினிநான்சமைப்பதென்னே. ()

மந்திரிகண்முகநோக்கிமற்றவர்கடமைநோக்கிவசையைநோக்கிச்
சிந்தைமெழுகெனக்கரைந்துநெடுங்கணீர்மழையெனவேசிந்தவேந்த
னொந்தொருவாய்மையும்புகலநோக்கமிலாதெனினுமனுநூலினீதி
நந்துமெனவமைச்சரொடும்வினவுற்றானக்கவர்கணவில்வதானார். (௪௪)

நீதிசற்றுமில்லாதுநீதியுணர்பவன்புரிந்தசிபக்தானெந்தச்
சாதியர்களுஞ்சமைக்காரதலினாலிவனுயிரைத்தரிப்பதல்லாற்
சேதிமறுத்துரைப்பதற்கேதெனப்புகன்றாரிறைவனடிசெங்கைகூப்பி
மாதிவளைமணிக்குழையுமுலைமூக்குந்துமிப்பதுவேயார்க்கமென்றார். (௪௫)

கேட்டமணிமுடியரசன்கிறுகிறுத்தானுடன்மெலிந்தான்கிளர்ந்ததாரை
நாட்டமிரண்டினுமொழுகநாவுலர்ந்தானகம்புலர்ந்தானடுங்கிமேன்மேற்
கோட்டமுற்றான்மனந்தெளிவுகொண்டுகொலைபுரிவாரைக்கூவிநீவிர்
வாட்டலையாலமைச்சர்சொன்னவாய்மைபுரிவீரெனவும்வழுத்திவிட்டான்.

புத்திசிகாமணி இடையூறுற்றபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-௨௦-க்குத் திருவிருத்தம்-௩௦௧௮.

---

௯

# புத்திசிகாமணிகல்லுருவானபடலம்.

புள்ளேறுமாலயனும்புரந்தரனும்வானவரும்போற்றவொற்றை
வெள்ளேறின்பிடரேறிப்பரவெளியெலாம்விரவிவிளையாட்டேறுங்
கள்ளேறுநறுங்கணியார்சடையானைக்கடையானகாமற்காய்ந்த
தெள்ளேறுந்திருக்கூடலுடையானைமறவாதென்சிந்தைமாதோ. (௧)

வேறு.

சொற்றமொழிதலையேந்திக்கொலைபுரிவார்வெகுண்டிவர்கடுணுக்கமெய்தப்
பற்றியிருகரங்களையும்புறம்பிணித்தன்னெடும்பாசம்பற்றியீர்த்து
வெற்றிவடிவாளேந்திவேத்தவைவிட்டணிநகரவீதிதோறுஞ்
சுற்றிவரக்கண்டளவினகரினுளார்புலம்படைந்துதொழுதுசொல்வார். (௨)

வேறு.

மானேவிரும்பும்விழியதியோமுகங்கமலம்வாயோமலர்ந்தமலரின்
றேனேகரும்புமொழிகளமோவிளங்கமுகுதிருவோவிளைந்தவுருவம்
வானேசுரும்புகுழன்மினலோமருங்குலிருமலையோமடந்தைமுலைக
ளேனேபெரும்பழியுளானுள்விளைந்தவிளைவேதென்றுநின்றுமருள்வார். (௩)

வெண்முத்தரும்புநகைபிறைபெற்றநெற்றியிருவில்வைத்தமைத்தபுருவங்
கண்முத்தநளினமிருகைபத்துவிரல்கெளிறுகான்மற்றிளஞ்சினைவரால்
பண்ணுத்தகுயிலினிசைபயில்சித்திரவன்னநடைபகர்பத்மினிக்குநிகராம்
பெண்ணுத்தமிக்கிதெனவெண்ணத்தகாததுயர்பெருமாறெனப்புகலுவார்.

அரவாலிடைந்துபுருடரிஞல்வரும்பெரியவனுபோகராகமணுகா
தொருவாவியின்கணிவளுறைநாளடைந்தரசனுரகந்தனைச்சிதைவுசெய்
திருவோர்களுந்தனிமையுடன்வாழ்வுகந்துபுகுமிடையூறகன்றுமகிழ்வாய்
வருகாலமன்றிநகர்புகவெய்துகேதமெனவகையோவெனக்கதறுவார். (௫)

கருவாய்புகுந்துலகிலுருவாய்நடந்தருள்செய்கடவுட்பதத்தைமறவா
தொருபோதினும்முறவுபிரியாதுகலைமுழுதுமுறவோதியறிவுசிதரா
திருவோர்களுங்கரவுபுரியாதின்னுளின்வரையெதுவும்பயின்றுமனது
வெருவாதுறைந்தனர்களிதியாவர்செய்தகொடுவினையோவெனக்கலுழுவார்.

திருமாமுடிப்பெரியவரசைப்பணிந்துவிடைசெயவேயெழுந்தசுவமேற்
றருமாவனத்திலுறவகலாதுசுற்றியொருதவறேதுமற்றதிவர்கள்
வருமாறிலித்திருவைவிதியாரிழைத்தசெயல்வகையாலழைத்தணுசலாற்
பெருமாவினைக்கணுயிரறவேயமைத்ததிதுபெரிதேதமென்றுகரைவார். ()

பொல்லாதநீலிகொடுவினைகாரியென்றுமொருபுருடர்க்குளுற்றுநிலையாய்
நில்லாதலைந்துபுகுமிடமெங்கணுங்கொலைகணேரப்புரிந்துபினுநம்
வல்லாளனுக்குமுயிரறவேபடக்கருதுமாதோசிமுண்டையிவளைக்
கொல்லாமல்விடுவித்தவகையேதந்திபுரிகாமானெனப்புகலுவார். (௮)

போனான்வனத்தினகர்புகுநாள்வரைக்குமொருபொருளேதுமற்றுமருளே
யானானடைந்துமதுநிராதுபின்னுமிவனாலேயடைந்ததிதுவென்
றேனோகொலக்கருதிமானாளினுக்குமிடரெய்தக்கொணர்ந்ததிவர்கள்
கோனானவற்குமுறைதானோவறத்தினெறிகொடிதோவெனப்பகருவார். (௯)

நாலத்தினிற்றனையன்மீதுற்றகாதன்மிகுதயையானடந்தநெறியின்
மூலத்தினைக்கருதிமுடிவிக்கமுடியாதுமுடிமன்னன்விட்டதெனினுஞ்
சீலத்தினிற்பெரியமதிமிக்கமுதியவர்கள்சிந்தித்திடாததிவர்கள்
காலத்தினைத்தவிரவருதற்கெனப்புகறல்கடனோவெனக்கழறுவார். (௧௦)

வேறு.

இன்னணம்புலம்பிநகருளாரெவருமெதிரெதிரேங்கிவீழ்ந்தழுது
மன்னனைவைதும்மகன்றனைப்பழித்தும்மந்திரிமார்களைநிந்தை
பன்னியுமிந்தப்பதிதனக்கிவதிபடைத்ததென்றுகுலம்பரித்தே
யன்னவர்தமைப்பின்விலகிடாதேகியகளமடைந்தனரன்றே. (௧௧)

அடுகளம்புகுதுமளவினிலுடன்சென்றடைந்துளகடிநகர்மாக்கள்
கடலெனப்பரியபாற்றுபேரோதைகண்டுகேட்டமைச்சனுங்கலங்கி
விடுமுயிரெனக்காய்க்கரைந்துளம்வருந்திமெலிவதுங்கடனலவென்றே
படுதுயராற்றியவன்றுயர்நீங்காதுள்ளமும்பதைபதைத்தாய்வான். (௧௨)

மங்கையைப்பங்கமாக்கிநம்முயிரைவாங்குதற்குரைத்தனனரச
னிங்கிவர்கொணர்ந்தாரிவரெவரெனினுமினித்தருகாரிறையளவுஞ்
சங்கைநீராதபழியினோடுயிர்போய்ச்சாவதிலுள்ளவைசாற்றிப்
பொங்கர்வாய்ப்புட்கள்புகலும்வாய்மையினாற்கல்லுருப்பொருந்துதல்புகழே.

அரசனுங்கவலைநீங்குவான்பிதாக்களாகியவமைச்சருமின்பம்
பரசுவார்நட்புமறந்திடான்புதல்வன்பழிக்கிலக்காகியிக்குற்ற
புரிகுழலவட்குமிழிவிலையொன்றேபுண்ணியமெத்தனைதேறி
யுரைசெய்வேனெனதுபழவினைவலியாலுணர்வுதீர்ந்தொடுங்கினனம்மா. (௧௪)

கட்டியகயிறும்முளைபடுவாளுங்கைப்பிடித்தெதிரினிற்றலையை
வெட்டிடத்துடிக்கும்வீரரைவிளித்துவீரர்காளென்னுரைவிலங்கா
தட்டியிலேகிவேத்தவைகுறுகியாசனையழைமின்களெனவே
யொட்டியபணிசெய்யுழையர்கள்கேட்டாக்கொல்லையிலோடினருவந்தே. ()

கொலைசெயக்கொண்டுபோனவர்மீண்டுகுறுகியதென்னெனக்குறித்து
நிலைதடுமாறும்வேந்தனைப்பரிசேரினினின்றுவாய்புதைத்துத்
தலைவகேளிதுநாள்வரையிலும்பலருஞ்சாற்றிடவாய்திறவாத
கலைமகனின்னையழைத்திடச்சொற்றானதிசயங்காண்டியென்றுரைத்தார். ()

கொற்றவாள்வீரர்தனதுபொற்சரணங்குளிர்மலர்க்கரங்களாலிறைஞ்சிச்
சொற்றவாகேட்டதோன்றலுமுள்ளத்தின்னெழுமுவகைமேற்றுளும்பப்
பொற்றடம்புயம்பூரித்தனன்புளகப்போர்வையும்வேர்வையும்போர்ப்ப
மற்றவனரியாதனம்விடுத்தெழுந்தான்மதியெதிருவாக்கடன்மான. (௧௭)

மகனோடுமறையோர்புரோகிதர்கணிதர்மரபுளோர்மந்திரக்கிழவர்
புகலுநான்கங்கம்பரவிடநடந்துபொருக்கெனச்சுடுகளம்புகுந்தா
னிகலறுகுணங்கொளமைச்சனுமாதுமிறையவன்வரவறிந்தெதிர்போய்த்
தகவொடுபணிந்தார்பகல்வருமதியந்தனைநிகர்த்தழுங்குதன்மையினார். (௧௮)

தீரனுமமைச்சன்புதல்வனையிரண்டுதிருமலர்க்கரத்தினாலெடுத்து
மார்புறத்தழுவிமுதுகுதைவந்துமழைக்கணீர்மஞ்சனமாட்டி [தான்
யார்வமோடையாவென்னையிங்கழைத்தற்கேதுவெனருண்மினென்றுரைத்
சோர்வினோடரசன்பதமலர்மீண்டுந்தொழுதிவைசொற்றனன்றுணிந்தே.

ஐயகேள்நன்மைநான்செயப்பண்டையருவினைவலியினாற்றீமை
யெய்தினாலெவரைச்சலிப்பதற்காகுமெழிற்புவனேந்திரனோடும்
வெய்யகான்மேவிச்சிலபகலொருவிவிலங்கினேனதுமுதற்றனியாய்
நெய்யழல்நிகர்த்தின்பகஞ்சுடவருந்திநெறியெலாந்துருவிநேடினனால். (௨௦)

கடைசியில்விசையதரன்பதிபுகுந்துகைமையாற்புலனறிந்தரிவை
யுடனெழுந்தவிர்பூம்வாவியுட்புகுந்தாருயிர்துறந்துணங்கியகவளக்
கடகரியனையான்றன்னைமீண்டெழுப்பிக்கருதலனருஞ்சமர்கடந்து
தடமுலைமாதைமறுமணமுடித்துச்சாருநாள்வரும்வழிதன்னில். (௨௧)

இரவிபோயிரவுவருதலும்வலாரியிருக்கையின்றருக்குலமனைய
சாளமென்சோலையொன்றுகண்டதிலேதானையுநீமுதற்பிறரும்
விரவுபோனகமுண்டணிதுயில்பொருந்தும்வேலைவாய்விழிதுயிலாம
லரிவையுநானுமிறைவனைக்காப்புற்றமர்ந்தனநள்ளிரவதனில். (௨௨)

அம்மரப்பொதும்பர்நடுவெணீண்டுயர்ந்தவாலமாமரத்தினுச்சியின்மேற்
செம்மலரயன்வாழுலகினும்வாழுந்தெய்வமென்புட்களோரிரண்டு
தம்மனமுவந்தாங்கொன்றினுக்கொன்றுதனிச்சிறைமூக்கினானீவி
விம்மியகாதற்றழையினாலுருகிப்பேடையுஞ்சேவலைவினவும். (௨௩)

கரிபரிசிவிகைதேர்குடைகவரிகளாசிகேதனமுதற்பிறவோ
டரசர்களிங்குபுகுந்தனரிதிலோரரசிளங்குமரனும்புதிய
தெரிவையுமிவர்கட்குரிமைசெய்நட்பின்றீரனுமொருபுடையாக
விரவினர்வரவேதிவர்செயன்முழுதும்விளம்பெனச்சேவலும்விளம்பும். (௨௪)

திருப்புவனேந்த்ரநகரிவரரசன்சிறுவனுமந்திரிசேயும்
விருப்பினாற்றேசவளங்குறித்ததிலேவிளைவுறுவிளைவெலாங்கடந்து
பொருப்பிளமுலையாளொடும்பதிக்கேகப்புகுந்தனரென்றலும்பேடை
யுருக்கமுற்றிவர்கட்கின்னமுமுருகணுறுமெனிலுரையெனச்சொற்ற. (௨௫)

சேவலுமிவர்கள்புலரியிலெழுந்துசெல்வழிமீதுமண்டபமொன்
றுவதினாற்கேடரசர்கோன்மதலைக்கணுறுமதுகடந்தப்பாற்
போவதுண்டெனினுநகர்வயிற்புகுந்தாற்புனனிறைவாவியின்முன்னம்
மேவுவாளரக்கன்புதல்வனும்பாந்தள்வேடமுற்றிவனுயிர்வீய்க்கும். (௨௬)

இரண்டையுங்கடந்தாலிறுதிநாளன்றியிடையினிலிவன்றனைக்கொல்லத்
திரண்டுவெங்கூற்றம்வரினுமாகாதுதிருவொடும்பொருந்துவானிதனை
மருண்டிடாதெடுத்துத்தெரிந்தவருலகில்வழுத்தினுலவர்கடம்வடிவ
முருண்டகல்லாவாரெனவுரைத்ததுவென்றுரைத்தனன்கல்வடிவுற்றான். ()

சொல்லுறுபொருள்கண்டுமுடிவதோராளவிற்றாயமந்திரிதிருமகனுங்
கல்லுருவானதன்மையைக்கண்டுகோவலன்முதலியபலருஞ்
செல்வனுலிமைத்தநிலைமையிற்றிறம்புஞ்சிந்தையிலெண்மடங்கதிக
மெல்லையிலாததுன்புழந்தக்கல்லுருமிவரெனவேய்ந்தார். (௨௮)

சிரங்களையோதிமுகங்களைப்புடைத்துச்சிந்தையுமங்கமும்வருந்திக்
கரங்களைக்குலைத்துவயிறலைத்திரண்டுகண்களுமழைப்புனல்வார
விரங்கிநண்டுளிபடப்புடவியில்வீழ்ந்தெவர்களுந்தனித்தனியேங்கி
யுரங்கொடுவாய்விட்டழுதனர்வாரியோசையினுகுலித்தொருங்கே. (௨௯)

ஐயநீபுரிந்தநன்மையைக்கருதாதறிவுபோயொருசிறுமதியாற்
செய்வகைதிறம்பிப்பெரும்பழிசுமந்தேன்சிலையினும்வலியசிந்தையினே
னுய்வழியுளவோதெய்வமேயினிநானுனையிழந்தாசினையோம்பி
வையகத்திருக்கநீதியோவென்னவாய்திறந்தழுதனன்மன்னன். (௩௦)

சற்றுநீபுரிந்தநன்மையுஞ்சாபத்தன்மையுந்தனிமையுற்றறியா [தே
தற்றவென்மகன்சொல்வாய்மையைமுழுதுமுறுதியாய்க்கடைப்பிடித்துனக்
குற்றமும்புரிந்தேனிற்றவெற்றுடம்பாய்க்குன்றினேன்மனநிலைகுலைந்தேன்
மற்றினியெந்தவண்ணநானுனைமறந்துயிர்வாழ்குவனந்தோ. (௩௧)

வாவியிற்பிரிவுற்றலைந்துநீவந்தவகைநினைந்தழுவனோமாற்றா
ராவியைப்பிரிக்கமீண்டுநீயுதவுமருணினைந்தழுவனோநகர்க்கு
மேவுநாணெறிக்கண்மண்டபங்கடந்தவிதநினைந்தழுவனோவின்று
பாவியேன்புரிந்ததெதுநினைந்தழுவேனினைந்திடிவிதுபெரும்பாவம். (௩௨)

கற்பினிற்றிறம்பாமங்கைமேற்சங்கைகருதியமனந்தெளியாது
சொற்பிழையாற்றியுனக்குமித்துன்புகுழ்ந்தனன்றாய்மதியிலிநா
னற்பவித்திருநாள்வரையினுமுனைநீத்துயர்புகழெதுபெயரடைந்தே
னற்பினுக்கவதியிதுகொலோவென்னவரசர்கோன்றிருமகனழுதான். (௩௩)

எந்தையேநீசெய்வினைத்திறமறியாதெளியபுன்மதியினுனுங்கள்
முந்தையோர்முறைநீத்தழிந்தனையெனவேமுழுவதுமுறைமுறைகூறி
நிந்தையேபுகன்றேனுமதுகடந்தரியநெடும்புகழ்படைத்தனையென்று
மந்திரிமார்கடனித்தனிபுலம்பிவாட்டமுமகிழ்ச்சியுமடைந்தார். (௩௪)

அரசனுமழுதான்றிருமகனழுதானமைச்சர்கண்முழுவதுமழுதார்
தெரிவையாரழுதாராடவரழுதார்திரைக்கடலுடுத்தபாரகத்தில்
விரவியவிலங்குபறவையூர்வனங்கள்விருக்சமேமுதலியவெல்லாங்
கரையழிந்தழுதவிதுதெரிந்தவரிற்கண்பனித்தழாதபேரிலையால். (௩௫)

விற்பனன்சிலையாயுற்றதுமிவர்கண்மெலிந்துமெய்கரைவதுங்கருதாள்
பொற்புறுமயிலினாளிருவிழிகள்புனலுகுத்துருகிவாய்புலர்ந்து
தற்புகழ்நீக்கியுலகவர்நிந்தைசாற்றுதற்கெனதுநன்னலனுங்
கற்புமின்றகலநிபம்வருவதற்கோர்காரணம்யாதெனக்கவன்றாள். (௩௬)

இன்னணம்புலம்பியாகுலித்திரங்குமிவர்களிற்றிருமுடியரசன்
றன்னுளந்தெளிவுற்றமைச்சனுஞ்சிலையாய்ச்சமைந்ததுபுள்ளுரைசாப
மென்னினுமிரவிற்றனியனாயர்தப்புறந்தனக்கெய்தியேயிந்தக்
கன்னியைமருவிநின்றதற்கென்னகாரணங்கழறினான்கண்டீர். (௩௭)

இங்கிவன்சிலையாயுற்றவாவெண்ணியிரங்குமென்சிந்தையிலிதுவோர்
சங்கையுமுளைத்துவருத்தினதிந்தத்தையலைவினவினாலிவளும்
பங்கமுற்றிதுபோன்முடிந்திடிலென்னபண்ணலாமென்றுபற்பலவா
றங்கவன்புலம்பியாவியோய்வதுகண்டரம்பையுமாகுலம்விடுத்தே. (௩௮)

ஐயநீவருந்தேலிதுவெலாமெளியேனாற்றியபவச்செயல்விளைவா
லெய்தியதல்லால்வேறிலையந்தவிரவினிலிறைவனைக்காத்து
மைவிழிதுயிலாதமைச்சனோடிருந்தேன்மந்திரிபுகன்றமைவழுத்துந்
தெய்வமென்புட்கள்கிருபையுற்றாங்குசெப்பியபொருளுமொன்றுளவால். ()

உற்றவிச்சிலைமேலெற்றுநீருவரியுலகெலாமோம்புறுஞ்செங்கோற்
கொற்றவெண்குடைக்குளாளுமோரரசன்குமரனையீன்றெடுத்தவர்கண்
முற்றிலும்வருந்தாதரும்பலிபுரியின்முன்னையவடிவம்வந்தெய்தும்
மற்றிதுவெளியேபகருவார்க்கந்தச்சாபமும்வராதெனப்புகன்ற. (௪௦)

அரசகேணானுமமைச்சனுமனதிலவாவொடும்புணர்ச்சியேபுரியக்
காவினின்மருவிநின்றதுமுனதுகான்முளைகண்டுகைப்பிடியாய்
வரவிடுத்ததுவும்புள்ளுரைப்படியேவாளராவந்ததுநோக்கி
விரைவினிற்றுணித்தானிரத்தமோர்துள்ளிவீழ்ந்ததுசிந்தியென்முலைமேல்

சோரியாலெனக்குமிறைவநின்மகற்குந்தூயநல்லுயிர்நிலைதிரிந்தே
பாரினிற்கேடுவருமெனும்பயத்தாற்பங்கயச்செழுங்கரவிரலா
னேரினிற்றுடைத்துவிலகுறுமளவினெடுந்துயினீத்துக்கண்விழித்தேன்
காரணம்புகறற்கஞ்சியேமடிந்தகட்செவித்துணியினைக்காட்டி. (௪௨)

பதனமேபடுத்திநின்றபோதிவன்மேற்பதிந்தபோன்பினாலெழுந்து
வதனமேன்முத்தமிட்டுடல்புல்லிமகனெனமுகமனும்வழுத்தி
யெதிரினிற்பளவிற்றுயிலுணர்ந்தெழுந்தவேந்தலுநடந்தவைதோன்றா
திதுபறையடித்தான்றலைவிதிவசமென்றிருந்தனந்தோடம்வேறிலையால். ()

என்றலுங்கேட்டபொன்றிருமுடியானிருகணுமழைப்புனல்வார
நின்றுநெக்குருகித்தழுதழுத்துள்ளநிறைந்தெழுபரவசனாகி
நன்றறியாதுவீண்பழிபுகுந்தோநங்கைநின்பொருட்டினாலெல்லா
மின்றுதாய்வயிற்றின்மீளவுற்பவித்தோமென்குலதெய்வநீயென்றான். (௪௪)

நல்லதுவிறைவிற்செய்வினைநாடிநவிலுதுமெனத்திருவரசன்
சொல்லுமுன்றனதுமகன்புவனேந்த்ரன்றொழுதுநின்றையகேளிவனுக்
கெல்லையில்லாததன்பிழைத்ததனாலிதுபிழைதீரவின்றடைந்த
கல்லுருவதன்மேலென்னையேநீவிர்களப்பலியூட்டுமினென்றான். (௪௫)

என்னையேபலிசெய்திடுவிரேலிவனுமிடைவிடாநட்பினிற்கலந்து
முன்னையேபுரிந்தவுதவியுமின்றுமுடிந்ததோர்பெரும்பழிதானும் [ன்
மின்னையேயனையாட்கிழைத்ததும்விலங்கிவிபுதர்வாழ்பெரும்பதமடைவே
பின்னையேயிதன்மேற்பெரும்புகழ்பெறுமாறிலையெனப்பேசினன்பெம்மான்

நன்றுநன்றிதுவேநியாயமென்றெவருநவில்பொழுதரசனுமுள்ளங்
கன்றினனெனினும்விளைந்ததோர்கருமங்கருதியேநாமினிவேறே
யின்றெதுசெயினும்விலகிடாதிதுவேயியல்பெனப்புரிவதற்கமைந்தான்
மன்றலங்குழலியிதுவெனக்கொடுமைவந்தவாயிடையிலென்றேங்கி. (௪௭)

வியர்த்தனனுடலம்வெதும்பினடதும்பிவிழிகளின்மழைப்புனலொழுக
வயர்த்தனனிதற்கோமருவலனூரிலருந்தவமும்மதியிருந்தே [றே
பெயர்த்திவண்கொணர்ந்தேன்மங்கலமிழந்தபெண்களும்பெரும்பிணமென்
செயிர்த்திடாச்சுருதியான்றவர்வாய்மைதிறம்பிடவிவர்சொன்னதென்னே. ()

அரசநீமுதலிவ்வமைச்சர்களேனோருந்திறற்கணவனைப்பலியே
புரிசெயன்மதித்தீர்நன்றுநன்றலநிற்பூவையர்மங்கலமிழந்து
வரிசைகொண்மனைவாழ்வெதுநலமடைவார்மாதவம்பழுக்குமோமற்று
முறைசெயுஞ்சுபமங்கலங்களுக்கவரேயொதுக்கியகுப்பையென்றுணர்மின். ()

தெய்வமும்பெற்றதந்தையுந்தாயுந்திருவளர்செல்வமும்பிறவும்
மைவிழித்துவர்வாய்மகளிர்கட்கென்றுமணாளனையன்றிவேறிலையென்
றையநான்மறையுமான்றவர்மொழியுமறிந்துளீரதுமறந்தேனோ
நைவகைபுகன்றீரெதுசொலக்கடவேனென்னினுநவில்வதுகேண்மோ. ()

சக்கரவர்த்திநின்றிருத்தனயன்றனக்குமென்றனக்குமேயுதித்த
மிக்கதோர்குழவிதனைப்பலிபுரியில்விளைந்துளபெரும்பழிநீங்கி
யிக்கணத்திவனுமெய்துவான்முக்கணீசனற்றிருவருளாலே
மக்களும்பெறுவேர்நீதிலவென்றாண்மாதருக்கணிகலமனையாள். (௫௧)

ஓதியமாதுவாய்மொழிகேளாவுளநினைந்தரசனுமிதுவோர்
பாதைதானெவர்க்குந்தீதிலையிந்தப்பாவையும்புதல்வனுமிருந்தால்
பூதலம்புரக்கத்தனயனொத்தனையோபுராந்தகனருளினாற்பெறுவா
னாதலாலிதுவேயுறுதியென்றரசனுற்றுதற்கமைந்தனனன்றே. (௫௨)

வாட்டமில்லாதசிறுவனையெடுத்துவம்மினென்றிறைவனும்புகலக்
கேட்டெழுந்தோடிச்செவிலியர்கையாற்கிளர்திருமஞ்சனமாட்டிப்
பூட்டினருடலம்புதைதரக்கலன்கள்புதுமலர்க்குலமெலாஞ்சுமையாய்ச்
சூட்டினர்கொணர்ந்தார்விளைந்துளகருமந்தொலைவதுகருதியேசுருக்கில். ()

புத்திரசிகாமணி கல்லுருவானபடலம் முற்றிற்று.

ஆகப்படலம் - ௨௧-க்குத் திருவிருத்தம். ௩௦௭௧.

---

௨

# புத்திசிகாமணிகல்லுருக்கழிந்தபடலம்.

மாடுகொண்டுபறைச்சியுடன்கலந்தேயந்தவன்பறைச்சிசிற்றிடைச்சிவடிவங்கொள்ள, வாடுகொண்டுகெறிதின்றுபசியாற்றுமவ்வனியெலாம்பலியேற்கவயனார்சென்னி, யோடுகொண்டுதிரிந்தவசையுரைசெயாமலொருமதுரைப்பதிநாப்பணெருளிருஞ்செம்பொன், வீடுகொண்டுமுடிகொண்டுசெங்கோல்கொண்டுவீற்றிருந்தவொருவனையேவிரும்பிவாழ்வாம். (௧)

வேறு.

மைந்தனைவாங்கியரம்பையுமுலைப்பால்வழங்கினளீசனைவணங்கி
யெந்தையேயெளியேனிந்தைபோய்மற்றோரின்பமேகொளவெனத்தனது
சிந்தையுணினைந்துபூசனைபுரிந்துசிலையின்மேலன்புறக்கிடத்தி
மந்திரவாளாற்றுணித்தரும்பலியும்வகுத்தனர்மதிமுகமலர்ந்தே. (௨)

தலைப்புறந்தாதைகாற்புறமாதாதமதுளம்வருத்தமேயின்றிச்
சிலைப்புறநின்றேயுச்சிமேலந்தச்சிறுவனைக்கிடத்திநீள்வாளாற்
கொலைப்புறமறந்துபுரிதலும்பழையகோலமாய்ச்சிலமேவிளைந்து
கலைப்புலமறிந்தமந்திரியெழுந்தானுலகெலாங்கண்டதிசயிக்க. (௩)

எழுதலுமெழுந்தேயாடினார்பாடியெதிரெதிர்முறைமுறைதுதித்துத்
தொழுதனர்முகமன்சொல்லினர்கண்ணீர்துளும்பினர்பாவசமாகி
முழுவதுமுவகைதழைந்தனராசன்முளரியின்றிருமுகமலர்ந்தே
பழுதருமமைச்சன்புதல்வனைப்புல்லிப்பகர்ந்தனன்பலவுபசாரம். (௪)

இழிவிலாதவனுந்தன்சிலைவடிவுக்கிவர்சிறுகுழவியைச்செய்த
பழிநினைந்தங்கங்குலைகுலைந்துள்ளம்பதைபதைத்துயிர்த்துநின்றேங்கி
விழிபுனல்சொரியவழுதுவாய்குழறிமேதினிதன்னிலீதென்ன
வழிவுசெய்துற்றீர்புகல்பெரும்பாவமம்மகோவம்மகோவென்றான். (௫)

ஆவல்கொண்டரசன்மைந்தனைநோக்கியையகோமணிமுடிபுனைந்து
பூவுலகாளும்பதமுனக்கிருக்கப்புன்றொழிலுயினேன்பொருட்டாற்
சாவடைந்தனையேயென்றுமுத்தனையதடங்கணீர்நெடுங்கடல்குளிப்பக்
கோவெனவாய்விட்டரற்றினன்கருணைக்கோருருவாகியகொண்டல். (௬)

மற்றவன்றெளிவுற்றிப்புழிதீரும்வண்ணமுளுடிநின்றரிதிற்
சுற்றிலுமெழினிவளைந்ததினுள்ளேதோமிலாப்புனல்குடைந்தங்க
முற்றிலுந்றுபூசிநல்லீசன்முளரியந்திருப்பதந்துதித்துக்
கற்றமந்திரத்தாலெழுப்பினன்பலருங்கண்டதிசயமடைந்தனரால். (௭)

அற்றதுண்டிரண்டுமொன்றுபட்டங்கமன்றொருவளர்ச்சிமேற்கொண்டு
மற்றுயிர்பொருந்திக்கண்விழித்துள்ளமலர்ந்துவாய்மணிநகையரும்ப
முற்றிலும்வடிவேலெடுத்தபன்னிருகைமுருகனைப்போன்றநுகண்டு
பெற்றவளெடுத்துமுகத்தொடுமோந்துபெருமுலையூட்டியேமகிழ்ந்தாள். ()

மலையெனவந்தபெரும்பழிமுழுதும்வான்சுடர்கண்டமெல்லிமம்போ
லலைகடற்புவியில்விலகிமேற்கடைந்தவருந்திறன்மணியொளிமானு
மிலகினரிவர்தாம்புரிதவமகிமையீறிலாப்பெருந்தவமுடைய
மலையமாதவனும்புகலுமாதவனும்வழுத்துதற்காவதோமண்மேல். (௯)

இறந்தவர்மீண்டுபிறந்திடப்புரியுமியம்புதற்கரியதூய்விஞ்சைத்
திறந்தெரிந்தவனுமிச்செயலியற்றிச்சிறுமையிற்சிக்கியதெவனென்
றறந்தருமதியோரையுறவெய்துமளவினிலறிஞருக்கறிஞன்
சிறந்தவர்கமலப்பதமலர்தனதுசென்னியிற்புனைந்திவைசொல்வான். (௧௦)

மாண்டவர்க்கொருகாலன்றிமற்றிந்தமந்திரம்பலித்திடாதாசன்
மூண்டதீவினையின்முன்முடிந்தெழுந்தமுறைமையாற்பின்னதுபுரிய
வேண்டிடாதியற்றும்விரகினாலிதனைவிளைத்தனனென்றனன்கேட்ட
நீண்டநன்மதியோரகமகிழ்ந்தையநீங்கினாரன்புமேனிரம்பி. (௧௧)

மந்திரிமகனும்மன்னவன்மகனுமாண்டுயிர்வந்தவாநினைந்து
சிந்தையின்புற்றவிறைமுதற்பலருந்திருநகர்செலுஞ்செலவினராய்த்
தந்தியிற்பரியிற்சிவிகையிற்றேரிற்றனித்தனியூர்ந்துபல்லியங்கள்
சிந்துவிலார்ப்பச்சாமரமிரட்டச்செழுமணிக்குடைநிழல்செய்ய. (௧௨)

பூசுராசிமாதர்பல்லாண்டுபுலவர்செம்பனுவன்மேன்முழங்கப்
பேசுநான்கங்கம்பரசிடவுலகம்பெருமைதேர்ந்தார்வமுட்பெருக
வாசறப்புதுக்குந்திருமனைபுகுந்தேவர்தருநிழலிலமர்ந்த
வாசவன்போலுமரசனுமகனும்மகிழ்ந்துவீற்றிருந்தனரன்றே. (௧௩)

புத்திசிகாமணி கல்லுருக்கழிந்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் - ௨௨-க்குத்திருவிருத்தம்-௩௦௮௪.

---

# புவனேந்திரன் முடிசூடுபடலம்.

செய்யானைப்பொய்க்குதவிசெய்யானைத்தேவருக்குந்தேவனை
மெய்யானையுமைக்களித்தமெய்யானைமணிமிடற்றில்விளங்குநஞ்ச
மையானையெனக்கருணன்மையானையடியர்பவமாற்றிவைக்குங்
கையானைமதனையிருக்கையானைகையாமற்கருதிவாழ்வாம். (௧)

வேறு.

மலைநிகர்புயத்தான்றனதுமாமகற்குமாநிலமுழுவதும்புரக்குந் [னே
தலைமைகொண்மகுடம்புனையுநாண்மறையோர்தங்களால்வரையறுத்துட
தொலைகொண்மாவரசர்தமக்கெலாமறியத்தூதரும்முடங்கலும்போக்கி
நிலைபெறநகரையலங்கரித்தழகுநிறைத்திடநிகழ்த்தினனன்றே. (௨)

கொற்றவேன்மன்னனேவலின்படியேசோநகரத்துளமாக்க
ளுற்றிடுந்தத்தங்குமரர்கட்கரசாங்குளுற்றுதலொத்துளக்களிப்பான்
முற்றுமேனிலமுமரமியத்தலமுமுடுக்குநாற்சந்தியுந்தெருவுந்
தெற்றிசெய்குன்றும்மன்றுமம்பலமுந்தேவுறைகோயிலுந்திருத்தி. (௩)

தோரணங்கட்டிவாழைகணட்டுத்தூபமுந்தீபமுமமைத்துப்
பூரணகுடங்கள்வைத்துவான்வெள்ளையைப்பூவினாற்பந்தர்கள்வேய்ந்து
நாரணர்பிரமரிமையவர்முனிவர்நாரதாதியர்முதற்பிறரும்
நோரணவழகுசூட்டினார்வேறுநகரெலாமிதற்கிணைநோரா. (௪)

தெங்கணர்துளுவர்வந்தியர்புலிந்தர்தெஞ்சியர்பப்பரர்சீனர்
கொங்கணர்கொல்லர்சாளுவரீழர்கூச்சரர்கேகயர்மராடர்
சிங்களர்மகதர்குகுதர்பாஞ்சாலர்சேதியர்திரிகத்தர்கௌர
ரங்கரவந்தியார்திரர்குருகர்யவனரொட்டியர்கருநாடரர். (௫)

கோசியர்சோழர்பாண்டியர்சேரர்கோசலர்கொச்சியர்குடகர்
காசியர்காஸ்மீரரர்நிடதத்தர்கௌடர்பூரியர்மலையாளர்
பேசியதேசர்முழுவதும்வந்தார்பேசுதற்கரியகாம்போசம்
வாசவன்பதியுந்தனபதிபதியும்மாலவன்பதியும்போல்வயங்க. (௬)

சிந்துகாவேரிசரஸ்வதியமுனைநருமதைகங்கைமாதீர்த்தந்
தந்தியம்பிடர்மேல்வந்துளகுடங்கடனித்தனிநகர்வலஞ்செய்து
சுந்தரமறையோராட்டுமஞ்சனநீர்தோய்ந்துதோய்ந்தீர்ம்புனலுலர்த்தி
யந்திவானகமொத்தவிருநூண்டுசோர்த்தணிபலவணிதரவணிந்தே. (௭)

சித்திரக்கவிகைநிழற்றிடக்கவரிதிரையெனப்புரளநாற்புறனும்
வித்தகர்வாழ்த்துமாதர்பல்லாண்டுவேதியராசியின்னியங்கண்
மத்தளஞ்சங்குபேரிகையோசைவயிரியர்கீதயாழ்நாத
மெத்திசைமுகத்தும்வளைத்தகார்காலத்தெழுமழையொலியெனமுழங்க. (௮)

வாணர்கள்பாடமடந்தையராடவந்தியர்கட்டியம்போட
சேணவர்களிகூர்ந்தலர்மழைபொழியசிவனயன்மாலருள்வழங்க
வேணநன்னலங்கொண்டவிர்பசுங்கனகம்வேய்ந்துளசிங்கவாதனமேல்
பூணணியரம்பையொடுபுவனேந்த்ரன்புலோமிசைமணாளனொத்திருப்ப. (௯)

மனுமுதலிதுநாள்வழிவழிவந்தமணிதிகழ்மௌலியைப்பிருகு
முனிவனர்ச்சனைசெய்தரசினுக்குரியமுதன்மைவேளாளன்வேணாடன்
றனையழைத்துதவவாங்கியங்கவனுந்தடக்கையாற்புவனேந்திரன்றன்
செனிமிசைபுனைந்துபதமலர்பணிந்தான்றிசைமுழுவதும்பணிசெய்ய. (௧௦)

அரசினுக்குரியவினியசெங்கோலுமரசனூலுதவிமற்றங்கம்
பரசிடப்புத்திசிகாமணிதனையும்பரிவுகொளமைச்சினிலிருத்தி
திரைசெய்நீளாழிசூழ்புவிமுழுதுந்திகிரிகொண்டுருட்டெனமகிழ்வுற்
றுரைசெயப்பாதுகாத்துவீற்றிருந்தானுகந்தொறுமுகந்தொறுமோங்க (௧௧)

வானமேபொழியவிளைவுமேலோங்கவையகமுழுவதுந்தரும
தானமேவிளங்கலத்தருதெய்வதானமுஞ்சைவமுந்தழைக
மோனமாமுனிவோர்வேள்வியுமறிஞர்கேள்வியும்முறைமுறைவளர
யீனமேயின்றிமுகவையம்பதியாளிறைவர்போன்றிருந்தனனென்றும். (௧௨)

வேண்டினர்விருப்பாய்த்துதவுகற்பகம்போன்மேதினிதுதித்திடச்சிறந்த
பாண்டியனுட்டுக்கதிபதிசேதுபதிமுகவைப்பதிபுரக்குங்
காண்டகுருத்திராமலிங்கேந்த்ரர்த்தனையொத்துலகிறைஞ்ச
வாண்டகைபெருக்கியரசுவீற்றிருந்தானணிபுவனேந்திரனம்மா. (௧௩)

மோனமாமறையுமுனிவருமறியாமுதல்வனேபோற்றிமும்முதலா
யானவாபோற்றிவருபெரும்பூதமாகியபௌதிகங்களுக்கோர்
தானமாய்விளங்குமாதியேபோற்றிசதாசிவசம்புவேபோற்றி
ஞானமாய்மதுரைப்பதியுறைசொக்கனாதநின்பதமலர்போற்றி. (௧௪)

வாழிநான்மறைகள்வாழியந்தணர்கள்வாழிநல்லறம்புகழ்முனிவோர்
வாழிவாழ்வேந்தர்வாழிநூலறிஞர்வாழிமன்னுயிர்களும்புவியும்
வாழியிக்கதைபடிப்பவர்கேட்போர்வாழிகாம்போஜமாநாடும்
வாழிபொன்மௌலிபுனைந்தளபுவனேந்திரன்புகழ்வாழிவாழியவே. (௧௫)

புவனேந்திரன் முடிசூடுபடலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௫௩-க்குத் திருவிருத்தம்-௩௦௧௧.

புவனேந்திரகாவியம்,




